விசேஷ நாள் எதுவாகிலும்
அதற்கு உகந்த
பின்னி துணிகள் கிடைக்குமிடம்



தீபாவளி



பிறந்த நாள்



திருமணம்



நவராத்திரி



பொங்கல்



# வெங்கடேஷ் வஸ்திராலயா

ஷோரூம்கள் : மைசூர் பாங்க் பில்டிங்ஸ்
(ஹை கோர்ட்டுக்கு எதிரே) மதராஸ்

S. வெங்கடேஸ்வர அய்யர், V. சிவராமன், பார்ட்னர்கள்

# ஜோடனை செய்யும் கலை முறை



# லினோலியம்

சிறப்பான வாழ்க்கைக்கு

பலவகையிலும் உயர்வான தரை விரிப்பு

இந்தியா லினோலியம் லிட்., 14, ராதாபஜார் லேன், கல்கத்தா-1







கோயமுத்தூர் ஜில்லா விநியோகஸ்தர்கள்

## கவுண்டர் & கோ. (பிரைவேட்) லிட்.

ஜெயில் ரோடு, கோயமுத்தூர்

தந்தி: GOUNDERCO போன்: 3377 and 3378 தபால் பெட்டி 512

மற்றும் ராயல் என்பீல்டு மோட்டார் சைக்கிள்கள், பெண்டாபுலஸ் ஸ்கூட்டர்கள், யுனிவர்ஸல் 'ஓட்டோ' விவசாயக் கருவிகள், 'ஷூப்' மின்விசைக் கருவிகள், 'ஹிம்கோ' பேட்டரிகள்.

நீலகிரி ஜில்லா உப விநியோகஸ்தர்கள்

## என். மகாலிங்கம் & கம்பெனி

பர்ன்சைடு, குன்னூர் ரோடு, ஊட்டி

தந்தி: ENEMCO போன்: 399 தபால் பெட்டி 21

அதிகாரம் பெற்ற விநியோகஸ்தர்கள்

கண்ணனூர், கோழிக்கோடு, பாலக்காடு ஜில்லாக்களுக்கு

## சக்தி ஆட்டோமோபைல்ஸ்

ஜெயில் ரோடு, கோழிக்கோடு-2

தந்தி: SAKTHIAUTO போன்: 3612 தபால் பெட்டி 9

சென்னை: காஸினோ, மகாராஜா (பழைய வண்ணாரப்பேட்டை) உமா மற்றும் தென்னாடெங்கும்

# தீபாவளி வெளியீடு

சிவாஜி கணேசன் அளிக்கும்



கமலா பிக்சர்ஸ்

# அன்னை இல்லம்

டைரக்ஷன்: P. மாதவன் B.A.

தயாரிப்பு M.R. சந்தானம்

பூரண உரிமையாளர்கள் - சிவாஜி பிலிம்ஸ் (பி) லிமிடெட், 3, போக் ரோடு, சென்னை-14.

ELEGANT




தீபாலங்காரம் செய்யுங்கள் **தீபாவளி**யன்று

**மாஸ்டா** பல்புகளினால்

AEI-43 (D) TAM

# தீபாவளியின்போது உங்கள் குடும்பத்தினருக்காக தாராள மனப்பான்மையாய் இருப்பது எப்படி?








உங்கள்
திட்டத்திற்குள்
உங்களுக்கு
இதமளிக்கும்
ஸி.எஸ்.ஸி.
தரமிக்க
காலணிகளை
வாங்குங்கள்.










கரோனா சாஹு கம்பெனி லிட். 221, டாக்டர் தாதாபாய் நௌரோஜி ரோட், போர்ட், பம்பாய்-1




நன்றிக்
குரியது
ஜலக்
....ஒளி வீசும்
திருநாள்



எல்லாம் நல்லபடியாக நிறைவுற, உங்கள் ஆடைகளின் சலவைக்கு ஜலக் சோப்பை உபயோகியுங்கள். விசேஷ செய்முறையால் விரைவில் கொழிக்கும் நுரை உறுதியாகிறது. குறைந்த முயற்சியுடன் அதிகப்படி ஆடைகளை வெளுக்கலாம். ஆடைகளிலிருந்து அழுக்கை அகற்றி, பளிச்சிடும் வெண்மையையூட்டி, அவற்றை மேலும் பிரகாசமாக்குகிறது.

உபயோகியுங்கள் ஜலக் ஒரு Godrej கோத்ரெஜ் தயாரிப்பு

CBGZ-3 TAM

SEKHAR

# தீபாவளி வாழ்த்துக்கள்!



# சுஜனி டெக்ஸ்டைல்ஸ்
## பிரைவேட் லிமிடெட்

சௌரிபாளையம் கோயமுத்தூர்-4

உயர்ந்த ரக நூல் தயாரிப்பவர்கள்

தந்தி: 'தனசாம்'




போன்: 2004 & 2895

மானேஜிங் டைரக்டர்: திருமதி சாவித்திரிசாம்

## பாதுகாக்கும் பணி

ஜான்ஸி ராணி தாய் நாட்டின் சுதந்திரத்தை பாதுகாக்க தன் குழந்தையுடன் போரில் ஈடுபட்டாள்.

தற்பொழுது நம் நாட்டில் ஏற்பட்டிருக்கும் நெருக்கடி சந்தர்பத்தில் ஆண்களுக்கு நிகராக பெண்மணிகளும் சேவை புரிந்து தேசத்தின் பெருமையை ஓங்கச் செய்வார்களாக!









நமது நாட்டிற்கும், அதன் மக்கள் அனைவருக்கும் எமது மனமார்ந்த தீபாவளி நல் வாழ்த்துக்கள்!

**கேசவர்த்தினி பிராடக்ட்ஸ்**

கிராஸ்கட் ரோடு, கோயமுத்தூர்-12.

அனைவருக்கும் எமது தீபாவளி வாழ்த்துக்கள்!

கதிர்கள் : 12,000

★

தயாரிப்புகள் :

நேர்த்தியான பருத்தி நூல்
40s & 60s

ஹேங்க் மற்றும் கோன்களில் கிடைக்கும்!





மில்ஸ் :

A. கலையம்புத்தூர் P.O.
(Via) பழனி

தந்தி : 'RAJIND'
போன் : 333

★

ரிஜிஸ்டர்டு ஆபீஸ் :

திருச்சி ரோடு, சிங்காநல்லூர் P.O.
கோயமுத்தூர் - 5

தந்தி : 'RAJIND'
போன் : 3885

★

முழு விபரங்களுக்கும் கோவை ஆபீஸுடன் தொடர்பு கொள்ளவும்



# பழனி ஸ்ரீ முருகன் டெக்ஸ்டைல்ஸ் லிட்.

மானேஜிங் ஏஜண்டுகள் : K. ராஜகோபால் நாயுடு சன்ஸ் & கம்பெனி

---

## குதூகலமான தீபாவளி வாழ்த்துக்கள்





லிட்டில்ஸ் ஓரியண்டல் பாம்

77 ஆண்டுகளுக்கு மேலாக புகழ்பெற்றது. ஜலதோஷம் வலிகள் முதலியவைகளுக்கு



லிட்டில்ஸ் கிரைப் வாட்டர்

குழந்தைகளின் அஜீரணம் வயிற்றுக் கோளாறுகளுக்கு இணையற்றது




லிட்டில்ஸ் இன்ஹேலர்

மூக்கடைப்பு, தொண்டை ரணம் நீங்க உதவும்.




ஜெர்மெக்ஸ்

(குளோரோபில் கூடியது)

படை, சிரங்கு, பரு, கடி கொப்புளம், புண்கள், சரும நோய்கள் நீங்க

லிட்டில்ஸ் ஓரியண்டல் பாம் & பார்மசூடிகல்ஸ் லிட்., சென்னை-2



# புதிய வெளியீடுகள்

ஈஸ்வரமூர்த்தி

| | |
|---|---|
| லண்டன் முதல் மாஸ்கோ வரை | 2-50 |

என். ஜே. ஆர்.

| | |
|---|---|
| செம்பொன் மாளிகை (சித்திர நவீனம்) | 4-25 |

விமலா ரமணி

| | |
|---|---|
| பாரிஜாதம் | 4-25 |
| சின்னக் கண்ணனும் சிரிக்கும் ரோஜாவும் | 3-00 |

புலவர் அரங்கசாமி

| | |
|---|---|
| பண்பட்ட வாழ்க்கை | 2-00 |

ஆர். எஸ். ஞானம்பாள்

| | |
|---|---|
| முதற் பரிசு | 2-25 |

ம. ரா. போ. குருசாமி

| | |
|---|---|
| இடமதிப்பு | 4-00 |

சீனி. விசுவநாதன்

| | |
|---|---|
| தமிழகம் தந்த மகாகவி | 5-00 |

(பாரதி பற்றி 60க்கும் மேற்பட்ட அறிஞர்களின் கருத்துரைகள் கொண்ட அழகிய நூல்)

சுந்தரம் மீனாட்சி

| | |
|---|---|
| கால்நடை நோய்கள் | 2-00 |
| வீட்டுத் தோட்டம் | 0-50 |

மணிஜி

| | |
|---|---|
| ஜெய் தேரு ! | 1-50 |
| போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து | 1-00 |
| மதிவளர்க்கும் கதைகள் | 1-00 |
| புத்திமான் பலவானவான் | 1-00 |

உங்கள் உள்ளத்திலும் இல்லத்திலும் என்றும் நிலைத்து நிற்கும் அழகு தமிழ் நூல்களுக்கு எங்களுக்கு எழுதுங்கள்

★ வியாபாரிகளுக்கும் நூலகங்களுக்கும் தக்க கழிவு உண்டு. தேவைக்கு எழுதுங்கள்.

★ தனிப் பிரதி வேண்டுவோர் தபால் செலவு 0-75 ஆக சேர்த்து மணியார்டர் செய்யவும்.

## மெர்க்குரி புத்தகக் கம்பெனி

ராஜ வீதி - கோயமுத்தூர் - 1.




## தி ஆரியன் பிரஷ் கோ., லிட்.

வெண்டின் சேம்பர்ஸ், தலால் தெரு

பம்பாய் - 1

★

இந்தியாவின் சிறந்த பல், டாய்லட் மற்றும் தொழில்துறைகளுக்கான பிரஷ்கள் தயாரிப்பவர்கள்

# ருசியின் தராதரத்தை நிறுத்துப் பார்க்க முடியாது

ஆனால்

**சுதா** விளுல்

தயாரிக்கப்பட்ட

சமையலின் தரத்தை

நீங்கள் சுவைத்து

உணரலாம்



சுதா ஒரு உன்னத சமையல் சாதனம். சுத்தமான தாவர எண்ணெகளிலும் தயாரிக்கப் பட்டதும், வைட்டமின்கள் சேர்ந்ததுமான சுதா, பிரத்தியேக வாசனையும், சாப்பாட்டிற்கு ஆர்வமூட்டும் சுவையும் தருகிறது.

சுதா சமையலுக்கு அதிக சுவையும் இல்லத்திற்கு அதிக இன்பமும் தருகிறது.

இப்போழுது 1, 2 & 4 கிலோகிராம் எடைகளில் கவர்ச்சிகரமான டின்களில் கிடைக்கும்.




மூன்று 2 கிலோ டின்கள் அல்லது ஆறு 1 கிலோ டின்கள் வாங்குபவருக்கு ½ லிட்டர் படி இனும் தரப்படும்
இரண்டு 2 கிலோ டின்கள் அல்லது நான்கு 1 கிலோ டின்கள் வாங்குபவருக்கு ஒரு கத்தி இனும் தரப்படும்.
மூன்று 1 கிலோ டின்கள் வாங்குபவருக்கு ஒரு கத்திரிக்கோல் இனுமாகத் தரப்படும்.

## கவர்ன்மெண்ட் ஹைட்ரோஜனேஷன் பாக்டரி

(பொதுத்துறையிலுள்ள ஒரே வனஸ்பதித் தொழிற்சாலை)

கோழிக்கோடு (கேரளம்)



அம்பீஸ்
காண்டிமெண்ட்ஸ்:
சாம்பார் பொடி
ரஸப் பொடி
கறிப் பொடி




அம்பீஸ் ஊறுகாய்கள்:
ஆவக்காய்
வெட்டு மாங்காய்
எலுமிச்சை
மற்றும் பல ஊறுகாய் தினுசுகள்

Sai Studio

★ குளிர்சாதனம் அமைக்கப்பட்ட வரவேற்புக் கூடம்.
★ குளிர்ந்த நீர், வெந்நீர், "ஷவர் பாத்" வசதிகளுடன் கூடிய அறைகள்.
★ டெலிபோன் ரேடியோ 'லிப்ட்' முதலிய நவீன வசதிகள்.
★ சாதாரண அறைகளும் மித மான கட்டணத்தில் உள்ளன.
★ சென்னை ஜார்ஜ் டவுனில் மேற்கண்ட வசதிகளுடன் கூடிய ஒரே ஓட்டல்.



# அம்பீஸ் கபே

6, 7, 8, 9 பிராட்வே, சென்னை-1 • போன்: 21004 (5 லைன்கள்)







**தமிழ் நாடு கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கம் லிமிடெட்.**

34/1-A, பாந்தியன் சாலை,
எழும்பூர், சென்னை-8.

| | | |
|---|---|---|
| பங்கு மூலதனம் ... ... ... | ரூ. | 20 லட்சம் |
| ரிசர்வு நிதிகள் ... ... ... | ரூ. | 29 லட்சம் |
| அலுவல் நிதி ... ... ... | ரூ. | 213 லட்சம் |
| வருடாந்திர நூல் விற்பனை ... | ரூ. | 479 லட்சம் |
| வருடாந்திர துணி விற்பனை . . | ரூ. | 335 லட்சம் |

| | |
|---|---|
| இணைக்கப்பட்ட நெசவாளர் சங்கங்கள் ..... | 1042 |
| தறிகளின் எண்ணிக்கை ... ... ... | 2,21,000 |
| விற்பனை நிலையங்கள் ... ... ... ... | 321 |
| கூட்டு நெசவு நிலையங்களும், மாதிரி நெசவுச்சாலைகளும் ... ... ... ... | 10 |
| சாயச்சாலைகளும், நூல், துணி பதனிடும் சாலையும் | 5 |
| வேலை வாய்ப்புப்பெறும் நெசவாளர்களின் எண்ணிக்கை ... ... ... ... | 11 லட்சம் |



புகைபிடிக்கும் இங்கிதம்

## உதவுவீர் முன்னே, ஊதுவீர் பின்னே




நாலுபேருக்கு நடுவில் புழங்கும் போது, சொந்த சிகரெட்டைப் பற்றவைப்பதற்கு முன்பாக, பிறருக்கு வழங்குவதே ஒழுங்கு. ஒரு பெட்டியைக் கச்சிதமாக நீட்டினீர்களேயானால் அதுவே மெச்சத்தக்குரிய வழி. பிறரிடமிருந்து பெறும் ரகங்களைக் குறைகூறாமலிருத்தல் சிறந்த பண்பாட்டுக்கு அறிகுறி.

உயரிய பண்போடு உபயோகிப்பதற்கும் உதவுவதற்கும் உகந்தது **பனாமா**




விசேஷக் கலவை செய்வோர்:
கோல்டன் டுபாக்கோ கம்., ப்ரைவேட் லிட்.
பம்பாய்-57.

இழுக்க இழுக்க இன்பம் – இறுதிவரை

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

# பொருளடக்கம்






வேலும்
மயிலும்
வேலும் மயிலும் துணையென்றால் — மன
வேதனை ஏது துயரேது
வேலும் மயிலும் துணையென்றால் — ஊழ்
வினைதான் ஏது விதியேது (வேலும்)
ஆலம் விழுது படர்ந்ததுபோல்-எண்ணில்
ஆசை படர்ந்த உள்ளத்தே
வேலும் மயிலும் வந்துநின்றால் — பின்
வேதனை படர இடமேது (வேலும்)
காலம் என்ற காட்டினிலே — துன்பக்
கட்டிருள் சூழ்ந்த பாதையிலே
வேலும் மயிலும் முன்னடந்தால் — பின்
விலங்குகள் ஏது பயமேது (வேலும்)
இன்னல் வாழ்வில் இடிமின்னல்-பின்னி
இதய வானில் துவள்கையிலே
மின்னல் வேக வேல்வருமேல் — இடர்
மின்னலை விழுங்கி ஒளிதருமே(வேலும்)
இதய விசும்பில் இரவாகி — மன
இருளும் மயக்கும் கவிகையிலே
உதயம் ஆகி ஒளிதரவே — அங்கே
ஓங்கும் சேவற் கொடிஉயரும்(வேலும்)
கன்னங் கரிய கடல்மீது — இளங்
கதிரோன் உதித்து வருவதுபோல்
இன்னல் என்ற கடல்மீது — மயில்
எழுந்து வந்து காட்சிதரும் (வேலும்)
வேலும் மயிலும் துணையென்றால் — வடி
வேலை ஏந்திய கையோடு
கோல மயிலின் மீதேறி — எழிற்
குமரன் வந்து துணைநிற்பான்(வேலும்)
சோமு

# ரிஷிகளுக்கும் கதை சொல்லத் தெரியும்



கதைப் பிரியர்களுக்குப் புராதன காலத்து ரிஷிகளுங்கூட எப்படிக் கதை புனைந்தார்கள் என்று பார்ப்பதில் ரஸமிருக்கும். பாரத நாட்டில் கதைக் கலை மிகப் பழைய கலை, மிக நன்றாய்ப் பயின்ற கலை என்பதற்கு ராமாயணமும், மஹாபாரதமுமே போதிய அத்தாட்சி. ஆனால் இவை நெடுங்கதைகள். சிறுகதை விஷயம் என்ன?

நீதிக் கட்டுக் கதைகள் தவிர, இந்த நாளில் காண்கிற சிறு கதைப் பாணி பண்டை நாளிலும் உண்டா என்பது கேள்வி.

சிறுகதை என்பது பெருங் கதையை உடைத்தெடுத்த ஒரு சிறிய துண்டு அல்ல. அது தனிப் பண்பும் முழுமையும் கொண்ட ஓர் இலக்கிய அமைப்பு. சிறிய அமைப்புக்குள்ளேயே அதற்குப் பிரத்தியேகமான ஒரு ஜீவன் உண்டு. ஒரே ஒரு நெருக்கடியை மையமாக வைத்து அதைச் சுற்றிப் புனையப்படும் இலக்கியம் சிறு கதை. ஒரு குறிப்பிட்ட கருத்தை அது பளிச்சென்று விளக்கும். இம்மாதிரியான சிறு கதைப் பாணியில் அமைந்த கட்டங்களை உபநிஷதங்களிலே ஆங்காங்கு காணலாம்.

ரிஷிகளின் சிறுகதை சொல்லும் உத்திக்கு பகவத் கீதையின் முதல் அத்தியாயம் சிறந்த உதாரணம். குருக்ஷேத்திரப் போர்க்களத்தில் இருதரப்பு சேனைகளும் ஒன்றையொன்று அழிப்பதற்காக அணி வகுத்து நிற்கின்றன. இந்தக் காட்சியைப் பார்வையிடுகிறான் அருச்சுனன். பார்த்ததும் மனம் இடிந்து, "எத்தனை பெரிய பாபம் செய்யத் துணிந்தேன்?" என்று திடுக்கிட்டுப் போர் செய்ய மறுக்கிறான். காண்டீபத்தைக் கீழே போட்டு விட்டுத் தேர்த் தட்டில் உட்கார்ந்து விடுகிறான். குழப்பத்தில் ஆழ்ந்து சிந்தனை வசமாகிறான். அப்போதுதான் வாசுதேவன் அவனுடைய குழப்பத்தைப் போக்குகிறான். நன்மை—தீமை என்கிற முடிவில்லாத புதிருக்குள் தனி மனிதன் ஆற்ற வேண்டிய கடமை வட்டத்தை விளக்கி, பார்த்தனைப் போருக்கு எழுப்புகிறான் கண்ணன். பகவத்கீதையின் ஆரம்ப அத்தியாயம் அருச்சுனன் உள்ளத்தில் திடீரென்று ஏற்பட்ட நெருக்கடியையும் அது கலைந்த வழியையும் உணர்த்தும் அற்புதமான உயிரோவியமாக விளங்குகிறது.

**சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்**



கடோபநிஷதத்திலும் இவ்வாறே நசிகேதனுக்குக் குமுறிக் கொண்டு ஓர் உந்தல் ஏற்படுகிறது. தனது தந்தை செய்கிற காரியத்தைக் கண்டவுடன் தான் அதனைச் சரி செய்ய வேண்டும் என்ற ஆர்வம் அவனைச் சடேரென்று பற்றிக் கொள்கிறது.

தந்தை வாஜஸ்ரவஸ் பெரிய வேள்வி முடித்துத் தட்சிணைகள் வழங்கிக் கொண்டிருக்கிறார்.

'இந்தக் கிழட்டுப் பசுக்களையெல்லாம் தானம் தருவதால் பயன் என்ன?' என்று சிந்திக்கிறான் நசிகேதன்.

''உங்களுடைய சொத்துக்களில் மிகவும் உயர்ந்த தான என்னை யாருக்குத் தானம் செய்யப் போகிறீர்கள்?'' என்று கேட்கிறான். அவர் கம்மா இருந்தாலும் மீண்டும் மீண்டும் அப்படியே கேட்டுத் தகப்பனாரைக் கோபம் கொள்ளச் செய்கிறான்.

நிதானம் இழந்த தந்தை, ''உன்னை யமனுக்குத் தந்தேன்'' என்கிறார்.

யாக காலத்தில் வெளிப்பட்ட தந்தையின் வாக்கு சொல்லிவிட்டபடி காப்பாற்றப்பட வேண்டும் என்று குமாரன் வற்புறுத்தி யமாலயம் செல்கிறான்.

நம்முடைய புராணங்களில் மரணத்துக்கு அதிதேவதையாகிய யமன் கிறிஸ்துவ, யூத சம்பிரதாயங்களில் போல் பாபத்துடன் சம்பந்தப்பட்டவன் அல்ல. ஹிந்து மதத்தில் யமன் தர்மராஜன். தர்மத்தின் அதிதேவதை.

நசிகேதன் தர்மராஜனுடைய வீட்டு வாசலில் மூன்று நாள் காத்திருந்த பின் மரியாதையுடன் வரவேற்கப்படுகிறான். யமன் கொடுப்பதாகச் சொன்ன பல பரிசுப் பொருள்களையும் நிராகரித்து, ''அந்தகனே! இவை யெல்லாம் உன்னால் முடிவு அடைபவைதானே? அந்தமடையாத தத்துவ உபதேசத்தையே பரிசாகத் தருவாய்'' எனப் பிரார்த்திக்கிறான். அருச்சுனன் கண்ணனிடமிருந்து பெற்றதைப் போன்ற உபதேசத்தை யமதர்மனிடமிருந்து பெறுகிறான் நசிகேதன். அந்தத் தத்துவ விளக்கமே கடோபநிஷதம்.

இப்படிப் பல சிறுகதைகள் உபநிஷதங்களிலுண்டு. அவற்றில் சாந்தோக்கிய உபநிஷதத்தில் உள்ள சிறுகதைத் துணுக்குகளை வாசகர்களுக்கு என் தீபாவளிச் சிறு பரிசாகத் தருகிறேன். ஸ்படிகத் துணுக்குகளைப் போன்றவை இந்தச் சிறுகதைத் துண்டங்கள். ஞானத்திலும், பக்தியிலும், தவத்திலும் பெரியோராகிய நம்முடைய ரிஷிகள் மனம் வைத்தபோது கதை சொல்கிற நுட்பக் கலையிலும் பெரியவர்கள். சூக்ஷ்மமான, குஹ்யமான தத்துவ சிந்தனைகளுக்கிடையில் இந்தக் கதைத் துணுக்குகள் பட்டை போட்ட ரத்தினங்கள் போல் மின்னுகின்றன.

சாந்தோக்கிய உபநிஷதத்தைக் கெட்டி அஸ்திவாரமாக வைத்து ஸ்ரீ சங்கராசாரியர் தமது அத்வைத தத்துவ மாளிகையை எழுப்பியிருக்கிறார். ஸ்ரீ ராமானுஜாசாரியர் விளக்கிய விசிஷ்டாத்வைதத்துக்கும் சாந்தோக்கியமே பிரதானமான பிரமாணம். சாந்தோக்கியம் நாம் காண்பதையும், சிந்திப்பதையும் எடுத்து சவிஸ்தாரமாக ஆராய்கிறது. மனத் தத்துவம் என்று தற்காலத்தில் கூறப்படும் துறையில் ஆழ்ந்த ஆராய்ச்சி செய்து கண்ட முடிபுகளை அது உள்ளடக்கியிருக்கிறது. ஜட உலகம், ஆத்மிக உலகம் இரண்டையும் தழுவும் வேதாந்த பரிணமக் கருத்தை இந்த உபநிஷதம் தீர்க்கமாக விமரிசிக்கிறது.

இந்தத் தத்துவ விளக்கங்களை இங்கு வாசகர்கள் சுமக்க வேண்டிய தில்லை. நான் எடுத்துக் கொண்ட கதை விஷயத்துக்குப் போகலாம்:




குரு நாட்டில் ஆலங்கட்டி மழையில் பயிர்ப் பச்சைகள் நாசமாகிக் கொடிய பஞ்சம்நேரிட்டது. மக்கள் பெருந் துன்பமடைந்தார்கள். யானைப் பாகர் கிராமத்தில் தமது பாலிய மனைவியுடன் வசித்து வந்த சாக்ராயண உஷஸ்தர் பிச்சை எடுத்து உண்ணும்படியாயிற்று.

பஞ்சக் கொடுமை தாங்க முடியாமல் வாடிப்போன நிலையில் அந்தப் பிராமணர், வெந்த கொள்ளைத் தின்று கொண்டிருந்த யானைப் பாகனை அடைந்தார். அவனிடம் பிச்சை கேட்டார். ''உச்சிஷ்டமான இதைத் தவிர என்னிடம் வேறெதுவும் இல்லையே!'' என்று கூறித் தான் சாப்பிட்டுக் கொண்டிருந்த தட்டை அவருக்குக் காட்டினான் யானைப்பாகன்.

''அதில்தான் கொஞ்சம் தாயேன்'' என்றார் சக்ராயணரின் புதல்வரான உஷஸ்தி.

தட்டை அப்படியே பிராமணனிடம் கொடுத்தான் யானைக்காரன்.

''இதை உண்ணுங்கள். இந்தாருங்கள், தாகத்துக்கு நீர்'' என்று தண்ணீர் இருந்த சொம்பைத் தரப் போனான்.

''நீ குடித்து மிகுந்த நீரை நான் உட்கொள்ள மாட்டேன். அது உச்சிஷ்டம்'' என்றார் உஷஸ்தி.

''நான் தின்று மிகுந்த கொள்ளைத் தின்றீரே அதெப்படி?'' என்றான் பாகன்.

உஷஸ்தி சொன்னார்: ''நீ உண்ட சேஷமாயிருந்தாலும், உன்னுடைய கண்டலை நான் ஏற்றிராவிட்டால் மாண்டு போயிருப்பேன். அது ஆபத்து தருமம். ஆனால் தண்ணீர் அப்படியல்ல. எச்சில் படாத நீர் எனக்கு எங்கும் கிடைக்கும். அதை நான் ஒப்புக் கொள்ளலாகாது'' என்றார்.

உஷஸ்தி மீதி கொள்ளை அருந்தி விட்டு மிகுதியைத் தனது இளம் மனைவியிடம் கொடுத்தார். அவள் முன்பே சிறிது ஆகாரம் உண்டிருந்தாள். ஆனபடியால் கொடுத்த கொள்ளைப் பத்திரப்படுத்தி வைத்தாள்.

மறு நாள் காலையில் எழுந்தவுடன் உஷஸ்தி, ''ஐயோ, ஆகாரம் செய்ய ஏதுமில்லையே! இப்போது எனக்கு ஏதேனும் உண்ணக் கிடைத்தால் உண்டு விட்டு அரசன் நடத்தும் யாகத்துக்குச் சென்றிருப்பேன். வித்வானாகிய என்னை யாகத்துக்குத் தலைமைப் புரோஹிதனாக நியமித்திருப்பான். நல்ல தட்சிணை கிடைத்திருக்கும்'' என்றார்.



''பகவன்! இந்த யக்ஞத்துக்கு ஏற்பாடு செய்த போது தங்களையே தேடினேன். தாங்கள் காணக் கிடைக்கவில்லை. எனவே இவர்களை நியமனம் செய்தேன். பகவன், இப்போது தாங்களே தலைமை தாங்க வேணும்'' என்றான் அரசன்.

''ராஜாவே! நீ சொல்வது சரியே! என்றாலும் இந்தப் பிராமணர்களை வரித்தாகி விட்டபடியால் இவர்களே வேள்வியை நடத்தட்டும். அவர்களுக்குத் தருவதற்குச் சமமாக எனக்கும் நீ தட்சிணை அளிப்பாயாகில் அவர்கள் யக்ஞத்தைத் தொடர அனுமதி தருகிறேன்.''

அரசன் அதற்கு ஒப்புக் கொண்டான்.

முதல் நாள் எடுத்து வைத்திருந்த பழைய கொள்ளை மனைவி அவரிடம் கொடுத்து, ''நாதனே! இதை உண்டு வேள்விக்குச் செல்வீர்!'' என்றாள்.

மனைவியின் சேமிப்பைக் கண்டு பிராமணர் மகிழ்ச்சியும் ஆச்சரியமுமடைந்தார். கொள்ளைச் சாப்பிட்டு விட்டு வேள்விசாலைக்குச் சென்றார்.

யாகத்தைத் தொடங்கப் பிராமணர்களெல்லாம் கூடியிருந்தார்கள்.

வேத மந்திரத் துதிகளுடன் யக்ஞத்தைத் தொடங்கும் உத்காதாவுக்கு அடுத்தாற்போல் அமர்ந்த உஷஸ்தி, ''உமக்கு யக்ஞம் நடத்தத் தகுதியில்லை. நீர் அர்த்த ஞானமில்லாதவர். நீர் யாகத்தில் பங்கு பெறுவது பாபம்'' என்றார். இவ்வாறே மற்ற யக்ஞ கர்த்தாக்களிடமும் கூறினார் உஷஸ்தி.

அப்போது யஜமானனாகிய அரசன், ''யாகத்தில் குறுக்கிடும் தாங்கள் யார்?'' எனக் கேட்டான்.

''சக்ராயணரைப் பற்றி நீ கேள்விப்பட்டிருப்பாய்! அவருடைய புத்திரனான உஷஸ்தி நான்.''

உஷஸ்தி சொன்னபடியே வேள்வி பூர்த்தியாயிற்று.

அதன்பின் உஷஸ்தியால் தகுதியற்றவர் என்று கூறப்பட்ட ரித்விக்குகள் அவரை அடைந்து, ''ஐயனே, எங்களுக்கு மந்திரப் பொருள்களை உபதேசித்திடுவீர்'' எனக் கேட்டுக் கொண்டனர்.

இதைத் தொடர்ந்து பிராணன், ஆதித்தன், அன்னம் இவற்றைப் பற்றிச் சிறந்த விளக்கங்களைக் கூறுகிறார் உஷஸ்தி.

சுவையுடன் ஆரம்பித்த இந்தக் கதை இங்கே நின்று போகிறது. அதன்பின் பாரமார்த்திகத் தத்துவங்கள் தொடருகின்றன. இதைப் போல் அழகான கதைகளை அரும்பிலேயே கிள்ளி விட்டுத் தத்துவார்த்தங்களுக்குச் செல்லும் இடங்கள் பல சாந்தோக்கியத்தில் உண்டு. உஷஸ்திக்கும் அவருடைய குழந்தை மனைவிக்கும் பிற்பாடு என்ன நேர்ந்தது என்று ரிஷி சொல்லியிருக்கக் கூடாதா என்று கதைப்பிரியர்களாகிய நமக்குத் தோன்றுகிறது.



## சுவானங்களின் சாமகானம்

பிரணவத்தை சாம வேத விதிப்படி கானம் செய்வதை உத்கீதம் என்பார்கள். பொருளை உணர்ந்த வித்துவான்களைப்போலவே, பொருள் தெரியாமல் கானம் மட்டும் செய்யத் தெரிந்தவர்களும் உத்கீதமாகக் கோஷிக்கலாம். கோஷிக்கப்பட்ட மந்திரங்கள் கருதிய தேவதைகளை அடையும். அவர்கள் மழையும், அதன்பயனாக உணவும் அளிப்பார்கள். ஆனால் வேத வித்தான பிராமணனிடமிருந்து உபநிஷதங்கள் இதற்கும் மேலான சாதனையை எதிர்பார்க்கின்றன.

ஒரு சமயம் மழையின்மையால் நாடு வறண்டு கிடந்தது. சமூக மட்டத்தில் கீழே செல்லச் செல்லப் பஞ்சத்தின் கொடுமை அதிகமாகும் அல்லவா? இந்த நியதிப்படி பஞ்சத்தினால் நாய்கள் மிகவும் பாதிக்கப்பட்டன.

தால்பியருடைய புத்திரனும், மைத்ரேயர் குடும்பத்தினால் பாத்தியதை கொண்டாடப்பட்டவனுமான பகன் வேதாத்யயனம் செய்ய ஏகாந்தமான இடத்தை நாடிச் சென்றான். அவனை வெள்ளை நிறமான நாய் ஒன்று நெருங்கிற்று. அந்த நாயை மற்றப் பல நாய்கள் தொடர்ந்தன.



''எங்களுக்கு மந்திரங்கள் போதிப்பாய், அந்தணனே! நாங்களும் தேவர்களை நோக்கி ஜபிப்போம். எங்கள் துன்பங்கள் தீரும்'' என்றது நாய் பகனிடம்.

''நாளைக் காலை வாருங்கள்'' என்று நாய்களை அனுப்பி வைத்தான் பகன்.

அப்படியே அவை மறு நாள் வந்தன. பஹிஷ்பவமான மந்திரங்கள் கூறும் பிராமணர்கள் ஒருவர்

கையை ஒருவர் சங்கிலித் தொடராகக் கோத்துக் கொள்வது போலவே, சுவான்கள் ஒன்றின் வாலை மற்றது கவ்வியபடி ஒழுங்காக நின்றன.

பகன் வேத கானம் தொடங்கினான்.

அவன் கற்பித்தபடியே அவை 'ஹிம்' 'ஹிம்' 'ஹிம்' என்று ஓதின.

அவைகளின் சார்பில் வருணன், பிரஜாபதி, ஸவிதா தேவதைகளைக் குறித்து பகன் வேத கானம் செய்தான். மழை பொழிந்தது; வறட்சி தீர்ந்தது.

பொருள் உணராமல் செய்கிற பிரார்த்தனையையும் நாம் இகழலாகாது என்பதே கதையின் உபதேசம். மந்திரத்தின் சக்தியும், இருதயத்தின் ஆர்வமும் பலனளித்தே தீரும். பகதால்பியனுக்கு இருந்த கருணை உள்ளமும், நாய்களுக்கிருந்த சிரத்தையும் நமக்கு இருக்க வேண்டும்.




சாந்தோக்ய உபநிஷதத்தின் மூன்றாவது அத்தியாயத்தின் பதினாறாவது கண்டத்தில் கண்டபடி, இருபத்தி நான்கு பிராயம் ஆகும் அளவுக்கு மனிதன் பாலனாயிருக்கிறான். அதிலிருந்து அறுபத்தெட்டு வயசு வரை அவன் மத்தியம பிராயத்தினன். அதன் பின் சீலத்துடன் இருந்து தேவர்களை உபாசித்து வந்தால் மேலும் நாற்பத்தெட்டு ஆண்டுகள் வாழலாம். ஆக, மனிதனின் ஜீவியதசை இந்தக் கணக்குப்படி நூற்றுப் பதினாறு வருஷங்கள்.

வேதம் விதித்த காலை — பகல் — மாலை வேள்விகளுடன் மனித வாழ்க்கை ஒப்பு நோக்கப்படுகிறது. காயத்ரி என்ற சந்தத்துடன் தொடர்புள்ள காலை ஸவனமே பாலியம். இருபத்து நான்கு அக்ஷரங்கள் கொண்ட காயத்ரிக்குச் சமமாக இருபத்து நான்கு ஆண்டுகள். நடுப்பகல் ஸவனம் திரிஷ்டுப் என்ற சந்தத்துடன் சம்பந்தமுள்ளது. திரிஷ்டுப் சந்தம் நாற்பத்து நாலு அக்ஷரமுள்ளது. அதைப் போலவே இருபத்தைந்தாவது வயது தொடங்கி அறுபத்தெட்டு வயதாகும் வரையில் நாற்பத்து நான்கு ஆண்டுகள் மனிதனின் மத்தியம காலம். அதன் பின் அவன் நாற்பத்தெட்டாண்டுகள் உயிர் வாழ்கிறான். இந்தக் காலம் மாலை ஸவனம் போன்றது. மாலை ஸவனம் ஜகதி என்ற சந்தத்துடன் தொடர்புள்ளது. ஜகதி சந்தஸுக்கு நாற்பத்தெட்டு அக்ஷரங்கள்.

காலை உபாசனைக்கு வசுக்கள் தேவதைகள். நடுப்பகல் உபாஸனை ருத்திரர்களைக் குறித்துச் செய்வது. மாலை ஸவனத்துக்கு ஆதித்யர்கள் அநுகுணமான தேவதைகள். இம் மூன்று காலங்களில் மனிதனுக்கு உடல் உபாதை தரும் பிணிகள் தோன்றினால் முறையே வசுக்களையும், ருத்திரர்களையும், ஆதித்தியர்களையும் பிரார்த்திக்க வேண்டும்.

இதராருடைய புத்திரராகிய ஐதரேய மஹிதாஸர் இதை அறிந்தே தமக்கு நோய் கண்ட போது கூறினார்: "நோயே, என்னைத் துன்புறுத்துவதால் உனக்குப் பயன் என்ன? யக்ஞரூபியாகவுள்ள நான் இந்த நோயால் இறக்க மாட்டேன். நீ செய்யும் உபத்திரவத்தில் பயனில்லை." இப்படித் தைரியமாகச் சொல்லி மன உறுதி கொண்டார்.



தமது சங்கல்பப்படியே மஹிதாஸர் நூற்றுப் பதினாறு ஆண்டுகள் ஜீவித்தார். இந்த ரகசியத்தை எவன் அறிகிறானோ அவனும் மஹிதாஸஐதரேயர் போல் நூற்றுப் பதினாறு வாழ்வான், என்கிறது உபநிஷதம்.

இதிலே சிறுகதையோ பெருங் கதையோ ஏதுமே இல்லையே என்று நீங்கள் சொல்லக் கூடும். ஆனால் கடைசியில் மஹிதாஸ ஐதரேயருடைய பிரவேசத்தின் அழகைப் பாருங்கள்! தினசரி அனுஷ்டானங்களைக் கூறி, அதற்கும் மனித வாழ்வுக்குமுள்ள ஒப்புவமையைக் கூறிய பின் மஹிதாஸர் இறுதியில் நமக்குத் திடீரென்று அறிமுகமாகிறார். சுவை நிரம்பிய ஒரே வரியில் கதை தோன்றி விடுகிறது. இன்னல் செய்கிற நோயை நோக்கி முனிவர், "நோயே! ஏன் நீ இந்த வீண் முயற்சியில் இறங்கினாய்? உனக்கு நான் மசிய மாட்டேன்" என்று கூறி, சொன்னது போலவே நூற்றுப் பதினாறு வயசு வாழ்ந்து காட்டுகிறார்.

ஒரே வாக்கியத்தில் அந்த முழுச் சித்திரமே நம் முன்னால் விரிந்து விடுகிறது. வயது முதிர்ந்த முனிவர், அவருடைய பிணி, பிணியை மறுக்கும் அவரது திடநம்பிக்கை, இவற்றையெல்லாம் நாம் காண்கிறோம்.

பிரகிருதி சக்திகளுக்கு மூன்று வேளைகளிலும் செய்யப்படும் உபாஸனையானது கடவுளின் கண்கூடான தோற்றங்களுக்குச் செலுத்தும் வழிபாடேயாகும் என்பது ஹிந்து மதக் கொள்கை. சர்வ வியாபியாக எங்குமுள்ளவன் ஈசுவரன். அவன் எல்லாப் பொருள்களிலும் இருப்பது போல் எல்லா இயற்கைச் சக்திகளிலும் தன்னைப் பகிர்ந்தளித்துக் கொள்ளுகிறான். என்றாலும் பூரணனாக இருக்கிறான். ஒவ்வொரு பகுதியும் அவனைப் போலவே முழுமை பெற்றிருக்கிறது.

பிரம்மமாகிய அது பூரணம்; உலகமாகிற இதுவும் பூரணம். அந்தப் பூரணத்திலிருந்து இந்தப் பூரணம் உதித்திருக்கிறது. பூரணத்திலிருந்து பூரணத்தைக் கழித்தும் பூரணமே எஞ்சி நிற்கிறது.

**ஓம் பூர்ணமத: பூர்ணமிதம்**
**பூர்ணாத் பூர்ணம் உதச்யதே!**
**பூர்ணஸ்ய பூர்ணம் ஆதாய**
**பூர்ணமேவ அவசிஷ்யதே!**

எனவே, வசுக்கள், ருத்திரர்கள், ஆதித்யர்கள், வாயு, வருணன் ஆகிய எல்லாத் தேவர்களும் தங்களில் ஒவ்வொருவரும் பூரணத்துவம் பெற்றவர்கள். என்றாலும் பூரணத்தின் ஒரு பகுதியாக இருப்பவர்கள்.




ஜானசுருதியின் கொள்ளுப் பேரன் தான தருமத்தில் புகழ்பெற்றவன். சீலம் நிறைந்தவன். ஏழைகளை உபசரித்து உணவளிக்கும் சத்திரம் சாவடிகள் பல வற்றைக் கட்டி வைத்தவன். தன்னுடைய செல்வம் பலருக்கு அன்னமாகப் பயனுவதில் மிகுந்த திருப்தி கொண்டிருந்தான் அவன்.

ஓர் இரவு அவனுடைய அரண்மனைக்கு மேலாகப் பறந்து சென்ற அன்னப் பட்சிகள் தங்களுக்குள் பேசிக்கொண்டன.

"பல்லாக்ஷா, பல்லாக்ஷா! ஜானசுருதியின் கொள்ளுப் பேரனுடைய பெருமை அக்கினி போல் ஓங்கி வளர்ந்திருக்கிறது. பத்திரம்! அந்தப் பெருமையின் ஜ்வாலை உன்னுடைய இறகுகளைத் தீண்டிப் போகக்கி விடும், ஜாக்கிரதை!" என்று ஒரு பட்சியிடம் கூறிற்று இன்னொரு பட்சி.

பல்லாக்ஷன் என்ற பெயர் திருஷ்டிக் குறைவைக் குறிக்கும். இதனாலேயே அந்தப் பெயர் கொண்ட அன்னத்துக்கு எச்சரிக்கை தேவையாயிருந்தது.

"ஏதோ இந்த அரசன் வண்டியடியில் வாழும் ரைக்வருக்கு இணையானவன் போலல்லவா நீ இவனைப் பெருமைப்படுத்திப் பேசுகிறாய்?" என்று பல்லாக்ஷன் தன்னை எச்சரித்த பறவைக்குச் சொல்லிற்று.

"வண்டியடியில் வாழும் ரைக்வரா? அவர் யாரப்பனே? எப்படிப்பட்டவர்?" என்று கேட்டது முதல் பட்சி.

"ஒருவன் பாய்ச்சிகையை வீசும்போது அது நான்கு என்ற விருத்தத்தைக் காட்டினால் அவன் எப்படி மற்றவர் வென்றதையெல்லாம் வெல்கிறானோ, அப்படியே மற்றவர்கள் தங்கள் சத் கருமத்தால் ஈட்டியுள்ள புண்ணியத்தையெல்லாம் தமது ஞானத்தால் பெறுபவர் ரைக்வர். ஆனபடியால்தான் வண்டியடியில் வாழுகிற ரைக்வரை நான் உயர்வாக மதிக்கிறேன்" என்றது இரண்டாவது அன்னம்.

மேல் மாடத்தில் சயனித்திருந்த அரசன் இந்தப் பறவைகளின் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தான். ரைக்வரைப் பற்றிப் பட்சி கூறியது அவன் மனத்தில் பதிந்தது.

மறுநாள் காலையில் அவன் எழுந்திருந்த உடனேயே மந்திரியிடம் ரைக்வரைக் கண்டு வருமாறு உத்தரவிட்டான்.



"தாங்கள் கூறுகிற அந்த மனிதர் யார்?" என்று அரசனைக் கேட்டார் மந்திரி.

"நாலு என்ற விருத்தம் மற்ற தாய வகைகளையெல்லாம் வெல்வது போல் தனது ஞானத்தால் எல்லாப் புண்ணியங்களையும் அடையப் பெற்றவரே ரைக்வர்" என்றான் அரசன்.

ரைக்வரைத் தேடிக்கொண்டு மந்திரி சென்றார். ஊரிலெல்லாம் பார்த்து விட்டுக் கண்டு பிடிக்க முடியவில்லை என்று அரசனிடம் திரும்பி வந்து சொன்னார்.

"ஏன் கண்டவிடங்களிலெல்லாம் தேடவேண்டும்? ஞானி எங்கு வசிப்பானோ அங்கு மட்டும் நன்றாகத் தேடிப் பார்த்து வாரும்" என்று மீண்டும் மந்திரியை ஏவினான் மன்னன்.

கடைசியில் மந்திரி ரைக்வரைக் கண்டார். வண்டிக்கு அடியிலே தரையில் படுத்துத் தமது கண்டு பிடித்த உடலைச் சொறிந்து கொண்டிருந்தார் அவர்.

"பகவன், தாங்கள்தான் வண்டியடி ரைக்வரா?" என்று கேட்டார் மந்திரி.

"ஆமாம், நான்தான்" என்றார் ரைக்வர்.

மந்திரி மன்னனிடம் திரும்பி வந்து, ரைக்வரைக் கண்டதாகக் கூறினார்.

உடனே ஜானசுருதியின் கொள்ளுப் பேரனாகிய அரசன் பல பசுக்களையும், பொன் மாலையையும் கோவேறு கழுதைகள் பூட்டிய ரதத்தையும் உடன் கொண்டு ரைக்வர் இருக்குமிடத்தை அடைந்தான்.

"ஓ, ரைக்வரே! இதோ பசுக்களும், பொன் மாலையும், கோவேறு கழுதைத் தேரும் காணிக்கை தருகிறேன். ஏற்றுக்கொண்டு, தாங்கள் எந்த தேவதையை ஞானத்துக்காக உபாசிக்கிறீர்களோ அந்த உபாசனையை எனக்கு உபதேசித்தருள வேணும்" என்றான் மன்னன்.

பொருளைக் கொடுத்து ஞானம் பெற எண்ணிய அரசனைத் திட்டினார் ரைக்வர். "உன்னுடைய பசுக்களும், பொன் மாலையும், ரதமும் உன்னிடமே இருக்கட்டும். எனக்கு வேண்டியதில்லை" என்று கூறி அவனைத் திருப்பி அனுப்பி விட்டார்.

அரசன் மீண்டும் ரைக்வரிடம் திரும்பினான்—தன் கன்னி மகளோடு.

"ஆயிரம் பசுக்கள், பொன் மாலை, கோவேறு கழுதைகள், தாங்கள் வாழும் இந்தக் கிராமம் இவற்றோடு, என் மகள் இவளை மனைவியாக ஏற்று, எனக்கு உபதேசிப்பீர்" என்று கேட்டுக் கொண்டான் மன்னன்.

பணிவுடன், விடாமல் வேண்டிக்கொண்ட அரசன் பிராமணரை வழிக்குக் கொண்டுவந்தான்.

மணலுக்குள் மறைகிற ஆற்றோட்டம் போல் இங்கே கதை தத்துவோபதேசத்தில் மறைந்துவிடுகிறது. ரைக்வருடைய உபதேசத்தில் நாம் அழுந்தி விடுகிறோம்.

இந்தக் கதை கிரேக்க மன்னன் அலெக்ஸாந்தருக்கும் ஞானி தயோஜினிஸுக்கும் நடந்த சம்வாதத்தை நினைவூட்டுகிறது. ஆனால் இங்கே நாம் முகவுரையாகக் காண்கிற அன்னபட்சிகளின் உரையாடல் ஒரு தனி அழகு படைத்தது.

'ரைக்வருக்குத் தானமாகிய கிராமம் இன்றும் அவர் பெயரிலேயே வழங்கி வருகிறது' என்கிறது உபநிஷதம்.




அந்தக் காலத்தில் சாஸ்திரம் ஓதிய பிராமணர்கள் வறுமையில் வாழ்ந்தாலும் தங்கள் வித்தையினால் பெருமிதம் படைத்திருந்தார்கள். வறுமையும் வித்தைப் பெருமிதமுமே அடுத்த 'சிறு கதை'க்குப் பொருளாகின்றன.

கபியின் வம்சத்தைச் சேர்ந்த சௌனகரின் மகனும் கக்ஷஸேனரின் மகனாகிய அபிப்ரதாரியும் ஒரு நாள் போஜனத்துக்கு அமர்ந்திருக்க, பரிசாரகர்கள் பரி



மாறிக்கொண்டிருந்தார்கள் என்று கதையை ஆரம்பிக்கிறார் ரிஷி. அப்போது ஒரு பிரம்மசாரி அங்கு வந்து அன்னம் யாசித்தான். அவர்கள் அவனைக் கவனிக்கவில்லை.

பிரம்மசாரிப் பிள்ளை தனது பிரம்ம ஞானத்தில் செருக்குக் கொண்டிருந்தான் என்றும், அவனைத் தூண்டிக் கேள்விகள் கேட்கவேண்டுமென்றே அவர்கள் உதாசீனம் செய்தார்கள் என்றும் ஸ்ரீ சங்கரர் பாஷ்யம் செய்கிறார்.

அலட்சியம் செய்யப்பட்ட அந்தணச் சிறுவன் சொன்னான்: ''காபேய! உலகை ரட்சிக்கும் பிரஜாபதியாகிய ஒரே பரம்பொருள் நேரில் வந்து எதிரே நிற்கும் போதும் மனிதர்களால் அவனைக் காண முடிவதில்லை. அபிப்ரதாரின்! அந்த ஒரே பரம்பொருள்தான் எல்லாவற்றிலும் இருக்கிறான். அவனுக்காகத்தான் தினந்தோறும் அன்னம் சமைக்கப்படுகிறது. என்றாலும் அவனுக்கு நீங்கள் அன்னமிட மறுக்கிறீர்கள்.''

இவ்வாறு சொன்னவனைப் பார்த்து, ''பிரம்மசாரியே! அவனை நாங்கள் காணவே செய்கிறோம். தேவர்களுக்கும் எல்லா உயிரினங்களுக்கும் அவனே பிதா. அவனுக்கு எல்லாமே அன்னமாகின்றன. என்றும் பழுதடையாத தங்கப் பற்களை உடைய அவனை நாங்கள் உபாசிக்கிறோம்'' என்றார் சௌனகர்.

அதன் பின் பிரம்மசாரிக்கு உணவு படைக்குமாறு பரிசாரகர்களுக்கு உத்தரவாயிற்று.

இதோடு கதை நின்று விடுகிறது. பிறகு தத்துவார்த்த சம்பாஷணை தொடருகிறது. இரண்டு தத்துவதரிசிகள் போஜனத்துக்கு அமர்ந்திருப்பதும், பரிசாரகர்கள் பணி புரிவதும், செருக்கு மிகுந்த பிரம்மசாரி பிக்ஷை கேட்க வருவதும் — எல்லாமாகச் சேர்ந்து நல்ல சிறுகதை ஆசிரியர்கள் வனைந்து தரும் காட்சிகளுடன் போட்டியிடுகிறது.

வறுமையும், யாசகமும் வித்துவான்களின் விசேஷ உரிமை. தனிகர்களாலும் பெற முடியாத அந்தஸ்தை வித்துவான்களுக்கு அளித்த காலம் அது. உபநிஷதக்கால சமுதாயத்தின் தனித் தன்மை இது.




ச்வேதகேதுவுக்குப் பன்னிரண்டு வயசு.

அந்தப் பிள்ளையிடம் தகப்பனார் உத்தாலகர் ''அன்புக்குரிய மகனே, நம்முடைய வம்சத்தில் யாரும் வேதம் கற்காமல் பெயரால் மட்டும் வேதியராக இருந்ததில்லை. நீயும் ஓர் ஆசாரியனை அடைந்து அத்தியயனம் செய்து வா'' என்றார்.

உத்தாலகர் ஏதேனும் யாத்திரை மேற்கொண்டிருக்கக் கூடும்; ஆனபடியால்தான் புத்திரனை வேறொரு ஆசாரியனிடம் அனுப்ப நேரிட்டது என்று ஸ்ரீ சங்கரர் தமது பாஷ்யத்தில் கூறுகிறார்.

வேறு காரணமும் சொல்லலாம். தந்தையைக் குருவாகக் கருதி, அடங்கிப் படிப்பதை விட, குருவென்றே ஒருவரை வரித்துக் கல்வி பெறுவதுதான் இளைஞர்களின் இயல்புக்கு ஏற்றது. இது இன்று போல் உபநிஷத காலத்திலும் செல்லுபடியாகும்.

ச்வேதகேது புறப்பட்டான். பல ஆசாரியர்களை அடைந்து



பன்னிரண்டு ஆண்டுகள் குருகுல வாசம் செய்தான். வேதங்களைப் பூரணமாகக் கற்று, இருபத்து நாலு வயது வாலிபனாகத் திரும்பினான். தன் சாதனையைப் பற்றி மிகவும் கர்வத்துடன் தந்தையை அடைந்தான்.

''குழந்தாய்! ச்வேதகேது! என்னவெல்லாம் கற்றாய்? இனி கற்க வேண்டியது எதுவுமில்லை என்ற கர்வத்துடன் வந்திருப்பதாகக் காண்கிறேனே! எல்லா விஷயங்களையும் தெளிவுபடுத்தும் உபதேசத்தை ஆசாரியர்களிடம் கேட்டுப் பெற்றாயா?'' என்று வினவினார் உத்தாலகர்.

''பகவன்! அப்படி ஓர் உபதேசம் உண்டா? அந்த ஒரே உபதேசத்தால் தாங்கள் சொல்வது போல் எல்லாவற்றையும் அறியவும், எல்லாச் சிக்கல்களையும் தீர்த்துக் கொள்ளவும் இயலுமா?''

''சௌம்யா! எவ்வாறு ஒரு பிடி மண்ணை அறிவதால்

மண்ணினால் ஆன எல்லாப் பண்டங்களையும் அறிய முடியுமோ, எவ்வாறு ஒரு தங்கக் கட்டியைப் பற்றிய அறிவினால் தங்கத்தினலான எல்லாவற்றையும் அறிந்த தாகுமோ, அவ்வாறே எல்லா ஞானத்தையும் அளிக் கும் ஒரு ஞானோபதேசம் உண்டு.''

''பகவன், எனது ஆசாரியர்களுக்கு அந்தத் தத்து வம் தெரியாது போலும்! தெரிந்திருந்தால் உப தேசிக்காமல் இருந்திருப்பார்களா? தந்தையே! அந்த உபதேசத்தைத் தாங்களே தந்தருளுங்கள்!'' என்றான் சுவேதகேது.

பிரபஞ்சத்தின் பரிணாம ரகசியத்தைப் புத்திர னுக்கு விளக்கத் தொடங்கினார் உத்தாலகர்.

''குழந்தாய்! ஆதியில் 'சத்' ஒன்றே இரண்டற்ற தாக இருந்தது'' என்று ஆரம்பிக்கிறார்.

விசுவாத்மா எப்படித் தனது சங்கல்ப மாத்திரத் தால் நாம் காணுகிற விசாலமும் சிக்கலுமான பிரபஞ்சமாகப் பரிணமித்தது என்பதை விளக்குகிறது சாந்தோக்கியம். டார்வின் கொள்கை போல் சூழ் நிலைகளை மட்டும் பொருத்து, அவற்றுக்கு ஏற்ப எந்த உயிரினம் போராடி வெற்றி காண முடிகிறதோ அதுவே ஜீவராசிகளின் வரிசைக் கிரமத்தில் பிழைத்து உயர் வதாக உபநிஷதம் கூறவில்லை. சின்னஞ் சிறிய வித்து கப்பும் கிளையுமான மகாவிருட்சமாக வளர்வதே உபநிஷதம் கூறும் பரிணாம முறை. நமக்கு அதன் விளக்கம் இங்கே தேவையில்லை. பன்னிரண்டாண் டுகள் வித்தியாப்பியாசம் செய்து வெறும் கர்வமும், விறைப்பான அறிவுமாகத் திரும்பிய சுவேதகேது வும், அவனைக் கண்டித்துத் திருத்தும் தந்தை யுமே நம் கவனத்தைக் கவர வேண்டியவர்கள். இன்றைக்கும் படித்தவர்களிடையே இந்தக் கர்வத் தையும், விறைப்பான மனப்போக்கையும் காண்கிறோம் அல்லவா?




''அன்புத்தாயே, நமஸ்காரம். நான் பிரம்மசாரியாகக் குருகுல வாசம் செய்ய வேண்டிய தருணம் வந்து விட்டது. நான் எந்த கோத்திரம்?'' — இப்படிச் சத்தியகாமன் தன் தாய் ஜபாலையைக் கேட்டான்.

சத்தியகாமனுக்குத் தகப்பன் இல்லை. தாய் மட்டுமே இருந்தாள். ஆசாரியனை அடைந்து பிரம்ம சரியம் அநுஷ்டிக்க விரும்பினான் சத்தியகாமன். அவனை அநுமதிக்குமுன் ஆசாரியர் அவனுடைய கோத்திரத் தைக் கேட்பார். இதற்காகவே அன்னையிடம் மேல் கண்டவாறு வினவினான் சத்தியகாமன்.

ஜபாலை சொன்னாள்: ''அப்பனே! உன் கோத் திரத்தை நான் அறிந்தேனில்லை. யௌவனத்தில் பல இடங்களில் சுற்றுவேலை செய்யும் பரிசாரிணியாக நான் சஞ்சரித்துக் கொண்டிருந்தபோது உன்னைப் பெற்றேன். நீ எந்தக் கோத்திரத்தில் பிறந்தாய் என்பதை நான் அறிந்து கொள்ளவில்லை. நான் ஜபாலை. ஆனபடியால் நீ ஜாபாலன். என் பெயரை வைத்து சத்தியகாம ஜாபாலன் என்பதாக உன்னைக் குருவுக்குத் தெரிவித்துக் கொள்'' என்றாள்.

சத்தியகாமன் ஹரித்ருமரின் புத்திரரான கௌதமரை அடைந்தான்.

''பகவன்! தங்கள் காலடியில் பிரம்மச் சாரியாக வசிக்க விரும்பி வந்திருக்கிறேன். ஏற்றுக் கொள்ளுங்கள்'' என்றான்.

''அன்புக்குரிய குழந்தாய்! நீ எந்தக் கோத்திரத்தில் பிறந்தவன்?'' என்று கேட்டார் கௌதமர்.

''ஐயனே, நான் என்ன கோத்திரமோ அறியேன். என் அன்னையைக் கேட்டேன். 'யௌவனத்தில் பரிசாரிணியாகப் பல இடங்களில் மாறிக் கொண்டிருந்தபோது உன்னைப் பெற்றேன். நீ எந்தக் குடும்பத்தவனென்று அறியேன். நான் ஜபாலை. உன் பெயர், சத்தியகாமன்' என்றாள். இதோ, ஜாபாலனாகிய சத்தியகாமன் உங்களை அடைந்தேன். உபதேசித்தருள்வீர்'' என்றான் இளைஞன்.

பெயருக்கேற்றபடி சத்தியகாமன் கூச்சமின்றி உண்மை விளம்பியதைக் கேட்ட கௌதமர் மனம் மகிழ்ந்தார்.

''இப்படி உண்மையைச் சொன்ன உன்னைப் பிராமணன் அல்ல என்று கருத முடியாது. போய் ஸமித்துத் திரட்டி வா. உனக்கு உபநயனம் செய்து வைக்கிறேன். நீ சத்தியத்திலிருந்து விலகவில்லை'' என்றார் ஆசாரியர்.

சத்தியகாம ஜாபாலனுக்கு அவ்விதமே உபநயனமாயிற்று.



நானூறு பசுக்களைச் சத்தியகாமனிடம் ஒப்புவித்து, ''வனம் சென்று இவற்றை விருத்தி செய்து வா'' என்றார் கௌதமர்.

''இந்த நானூற்றை ஆயிரமாக்காமல் திரும்ப மாட்டேன், ஐயனே!'' என்று கூறிப் புறப்பட்டான் சீடன்.

வனத்தில் பல ஆண்டுகள் சென்றன. பசுக்கள் ஆயிரமாயின. மந்தையைச் சேர்ந்த காளை சத்தியகாமனிடம் பேசிற்று: ''நாங்கள் ஆயிரமானோம். பிரிய நண்பனே, ஆசிரமத்துக்குத் திரும்பச் சமயம் வந்து விட்டது'' என்றது.

ஸ்ரீ சங்கராசாரியர் இங்கு விளக்குகிறார்:

சத்தியகாமனுக்கு இப்போது நல்ல சிரத்தையும் தவமும் கைகூடி விட்டதால், வாயுதேவன் அவனிடம் திருப்தி கொண்டு காளையினுள் புகுந்து அவனுக்கு உதவி புரியத் தொடங்கினான்.

இனி உபநிஷதம் பிரம்ம வித்தையைப் போதிக்கிறது.

ரிஷபத்தின் வாயிலாக வாயு உபதேசித்து முடித்த பின், அக்னி உபதேசமளித்தது. அதன் பிறகு சூரிய தேவன் அன்னபட்சியாக வந்து சத்தியகாமனுக்கு உபதேசித்தான். பிராணன் நீர்க் கோழியாக வந்து உபதேசம் புரிந்தது.

சத்தியகாமன் ஆயிரம் பசுக்களுடன் ஆசிரமத்தை அடைந்தான். "சத்தியகாமா" என்று கௌதமர் அன்போடு வரவேற்க, "பகவானே!" என்று அவரை விளித்து வணங்கி நின்றான் மாணாக்கன்.

"சௌம்யா, ஞான ஒளி பெற்றவன் போல் உன் முகம் பிரகாசிக்கிறதே. உனக்கு உபதேசித்தது யார்?" என்று கேட்டார் குரு.

"ஐயனே! வனத்தில் எனக்குப் போதனை அளித்தது மானுடர் அல்ல. ஆசாரியரிடம் கற்ற வித்தையே உத்தமமானது என்று கேள்விப் பட்டிருக்கிறேன். ஆனபடியால், தாங்களே எனக்கு உபதேசித்து என் ஆசையை நிறைவேற்ற வேணும்" என்றான் சத்தியகாமன்.

கானகத்தில் தேவதைகள் அளித்த உபதேசத்தையே குருவாகிய கௌதமரிடம் பெற்று மகிழ்ந்தான் சத்தியகாமன்.




காமலருடைய மகனான உபகோஸலன் சத்திய காம ஜாபாலியின் சீடனாகிப் பன்னிரண்டு ஆண்டுகள் அவருடைய வேள்வித் தீயைப் பேணி வந்தான். என்றாலும் அவர் உபகோஸலனைத் தவிர்த்து மற்றச் சீடர்களுக்கே குருகுல வாசத்தைப் பூர்த்தியாக்கி சமாவர்த்தனம் செய்து வைத்தார். அவர்கள் வீடு திரும்பினர்.

உபகோஸலன் வித்யாப்பியாசத்தில் தேர்ச்சி பெற்றதாகக் கருதப்படவில்லை. வீட்டுக்குத் திரும்பவும் அவன் அனுமதி பெறவில்லை.

குருபத்தினிக்குக் கணவர் இப்படிச் செய்தது ஏற்கவில்லை. அவள் பர்த்தாவிடம் சென்று, "இந்தப் பிள்ளை நல்ல முறையில் தவம் செய்து, உமது அக்கினிகளையும் போஷித்து வந்திருக்கிறான். அவனுக்கு உபதேசியாவிடில் அக்கினிகள் நம்மை வெறுக்கும்" என்றாள்.

அவளுடைய வார்த்தையைக் குரு வாங்கிக் கொள்ளவில்லை. உபகோஸலனுக்கு உபதேசம் ஏதும் செய்யாமலே வெளியே சென்றார்.

உபகோஸலன் சோக வசமானான். உணவு உண்பதை நிறுத்தினான். உபகோஸலன் சாப்பிடாததைக் கண்ட குருபத்தினி, "பிரம்மசாரியே! சாப்பிடு. ஏன், பட்டினி கிடக்கிறாய்?" என்று கேட்டாள்.



"அம்மையே! என்னுள் பூர்த்தி பெறாத பல விருப்பங்கள் பல திசையில் குழம்பிக் கொண்டிருக்கின்றன. உள்ளே வேதனையாக இருக்கிறது. என்னால் சாப்பிட முடியவில்லையே!" என்றான் உபகோஸலன்.

ஆசிரமத்தில் இருந்த மூன்று அக்கினிகளும் தமக்குள் பேசிக் கொண்டன:

"இந்தப் பிரம்மசாரி நல்ல தவம் செய்து, நம்மையும் நன்றாகப் பேணி வந்தான். இவனுக்கு நாமே உபதேசிப்போம்."

சொன்னபடியே செய்தன அக்கினிகள். பிரபஞ்சத்தின் மர்மங்களை உபகோஸலனுக்குப் போதித்து, "சௌம்யா, மிகுதியைக் குருநாதர் உபதேசிப்பார்" என்று முடித்தன.

வீடு திரும்பிய ஆசாரியர் உபகோஸலனுடைய முகத்தில் வீசிய திவ்விய ஒளியைக் கண்டு அதிசயித்தார்.

"குழந்தாய்! பிரம்ம ஞானம் பெற்றாற் போல் பிரகாசிக்கிறாயே! உனக்கு உபதேசித்தவர் யார்?" என்று கேட்டார்.

"ஐயா! எனக்கு யார் உபதேசிப்பார்கள்?" என்று நடந்ததை மறைப்பது போல் பேசினான் உபகோஸலன். பிறகு அவன் அக்கினிகளின் புறம் திரும்பி, "இந்த அக்கினிகள்தான் எனக்கு உபதேசித்தன. உங்களைக் கண்டவுடன் அவை நடுங்குகின்றன. இப்போது அடங்கியிருக்கும் இவை முன்பு வேறு விதமாயிருந்தன" என்று உண்மையை ஒரு விதமாகச் சொல்லி விட்டான்.

விஷயத்தைப் புரிந்து கொண்ட குரு, "இவற்றிடமிருந்து நீ என்ன கற்றுக் கொண்டாய்?" என்று கேட்டார்.

அக்கினிகள் உபதேசித்ததையெல்லாம் திரும்பக் கூறினான் உபகோஸலன்.

"ஓகோ" என்றார் குரு. "அவை உனக்கு ஏதோ சிறிது போதித்திருக்கின்றன. மிகுதியை நான் உபதேசிப்பேன். எந்த ஞானத்தைப் பெற்றால், தாமரையிலையில் நீர் ஒட்டாதது போல் உன்னிடம் பாபம் ஒட்டாதோ அந்த ஞான போதனையைத் தருகிறேன்" என்றார்.

"உபதேசித்தருள்வீர், ஐயனே!" என்றான் உபகோஸலன். ஆசாரியர் தொடங்கினார்: "கண்ணினுள் எந்தப் புருஷன் காணப்படுகிறானோ அவனே ஆத்மா. அவன் மரணமற்றவன், அச்சம் தீண்டாதவன், அவனே பிரம்மம்......" என்று உபதேசம் தொடர்கிறது.




இது ஒரு நீதிக் கதை. சிறு கதை அல்ல. ஆனால் அழகான நீதிக் கதை.

மூச்சு, பேச்சு, நோக்கு, செவிப் புலன், மனம் ஆகிற ஐந்தும் ஒரு முறை தங்களில் யார் சிறந்தது என்று பூசலிட்டுக் கொண்டன. ஒவ்வொன்றும், 'நானே பெரியவன்', 'நானே பெரியவன்' என்று போட்டியிட்டுச் சொல்லிக் கொண்டன.

பிறகு தங்களது பிதாவாகிய பிரஜாபதியை அடைந்து அவர் முன் விவகாரத்தைக் கூறின. "தந்தையே, எங்களில் யார் சிறந்தவன்?" என்று கேட்டன.

"உங்களில் யார் உடலை விட்டு நீங்குவதால் அதிகமான துன்பம் நேருகிறதோ அவனே சிறந்தவன்" என்றார் பிரஜாபதி.



ஐந்தும் திரும்பின. பிரஜாபதி கூறியதைப் பரீட்சை பார்க்கத் தொடங்கின.

வாக்கு வெளியே சென்று ஓராண்டு வசித்து விட்டுத் திரும்பியது. "உடலே, நான் இல்லாமல் நீ எப்படி வாழ்ந்தாய்?" என்று கேட்டது.

"ஓரளவு நன்றாகவே வாழ்ந்தேன். ஊமையாய்ப் பிறந்தவர்களைப் போல் மூக்கினால் சுவாசித்தும், கண்ணால் கண்டும், காதால் கேட்டும், மனத்தால் சிந்தித்தும் வாழ்ந்தேன்" என்றது உடல்.

வாக்கு உடலுக்குள் புகுந்தது.

பிறகு திருஷ்டி வெளியேகி ஓராண்டுக்குப் பின் திரும்பிற்று.

"நான் இன்றி நீ எப்படி வாழ்ந்தாய்?" என்று உடலைக் கேட்டது.

"குருடர்களைப் போல் வாழ்ந்தேன். பார்வையில்லை. அவ்வளவுதான். மற்றபடி சுவாசித்துக் கொண்டும், பேசிக் கொண்டும், கேட்டுக் கொண்டும் சிந்தித்துக் கொண்டும் சௌகரியமாகவே வாழ்ந்தேன்" என்றது உடல்.

பார்வைதரும் சக்தி உடம்பில் மீண்டும் புகுந்தது.

செவிப்புலன் வெளியேறிற்று. ஓராண்டுக்குப் பின் திரும்பி வந்து, "உடலே, நான் இல்லாமல் நீ எப்படி வாழ இயன்றது?" என்று வினவிற்று.

"ஓ, அதுவா? நீ இல்லாவிடில் என்ன? சுவாசித்தும், பேசியும், கண்டும், சிந்தித்தும் வாழ்ந்தேன். கேட்க மட்டும் முடியவில்லை. செவிடர்கள் போல் ஜீவித்தேன்."

செவிப் புலன் மீண்டும் உட்புகுந்தது. மனசு வெளியே சென்று ஒரு வருடம் வாழ்ந்தது.

அதன் பின் திரும்பி வந்து, மற்றவை கேட்ட கேள்வியையே வினவிற்று.

"குழந்தைபோல் வாழ்ந்தேன். சுவாசித்தேன். கண்ணால் கண்டேன். காதால் கேட்டேன். சிந்திக்கமட்டும் இல்லை" என்றது உடல்.

மனசு உடலுக்குள் பிரவேசித்தது.

போட்டியில் கலந்து கொண்டவர்களில் கடைசியான மூச்சு வெளியேறத் தயாராயிற்று. வெளியேற முயலும் போதே மற்றப் பிராணன்கள் தங்கள் ஸ்தானத்தி_லிருந்து தங்களைக் கிழித்து இழுப்பது போல் துன்பமடைந்தன. கட்டி வைத்த முளைக் கயிற்றின் ஆணிகளைப் பிடுங்கிக் கொண்டு, உத்வேகமுள்ள குதிரை கிளம்புவது போல் மூச்சானது தங்களையும் இழுத்துக் கொண்டு செல்வதாக மற்றப் பிராணன்கள் சகிக்க முடியாத நிலையை அடைந்தன.

"வேண்டாம்! வேண்டாம்! போகாதே! போகாதே!" என்று அவை ஒன்றாக அலறின.

"நீயே சிறந்தவன்; நீயே சிறந்தவன். எங்களுடைய சிறப்புக்களெல்லாம் உன்னுடையனவே" என்றன.







# கைத்தறித்தொழில் வளர்ச்சிக்கு

*நேர்த்தியான உயர் ரக நூல்கள்*

கைத்தறித்தொழில்
அபிவிருத்தி அடைய
உயர் ரக நூல்கள்
மிக அவசியம்.
மிக உன்னதமான நூல்களை
வினியோகிப்பதே
எங்கள் பணி.

## தி பலராமவர்மா டெக்ஸ்டைல்ஸ் லிமிடெட்.

செங்கோட்டை

விபரங்களுக்கு
**பி.எஸ்.ஜி. ரங்கசாமி நாயுடு சன்ஸ்**
சாவித்திரி நிலையம்.
பீளமேடு, கோயம்புத்தூர்



Moulis

# இப்படிச் செய்யலாமா?

## கி. வா. ஜகந்நாதன்

அப்பொழுது கல்கி சிறையில் இருந்தார். தனி நபர் சத்தியாக்கிரகத்தில் சேர்ந்து சிறைப்பட்டார். தமிழ்த் தாத்தாவாகிய டாக்டர் ஐயரவர்களுக்கு அவரிடம் மிக்க அன்பு. அவர் சிறை சென்றதற்காக வருந்தினார்கள். ஆனந்தவிகடனில் ஐயரவர்கள் தம் வரலாற்றை எழுதி வந்த காலம் அது. கல்கி அவர்கள் விகடனை விட்டு விலகிப் பிறகே சத்தியாக்கிரகம் செய்து சிறை சென்றார்.

அக்காலத்தில் ஒரு நாள் மதுரையிலிருந்து ஸ்ரீ வி. ஜி. சீனிவாசன் என்னும் ஆசிரியர் என்னைப் பார்த்துவிட்டு அப்படியே ஐயரவர்களையும் பார்க்கலாம் என்று எண்ணி வந்தார். அவர் பரிதிமாற் கலைஞராகிய அமரர் வி. கோ. சூரிய நாராயண சாஸ்திரியாரின் பெண் வயிற்றுப் பேரர். அவர் கதை, கவிதை, இலக்கியக் கட்டுரைகளையும் எழுதி வந்தார். கடித மூலமாகப் பழக்கம் எங்களுக்குள் இருந்ததே அன்றி, நேரில் ஒருவரை ஒருவர் பார்த்ததேயில்லை. அவர் என்னைத் தேடிக்கொண்டு என் அறைக்கு வந்தார். தம்மை அறிமுகப்படுத்திக்கொண்டார். அவரைப் பார்த்தவுடன் கல்கியின் ஜாடை அவரிடம் இருப்பதாகத் தோன்றியது. குரலும் சிறிது கீச்சுக் குரலாகக் கல்கியின் குரலைப் போலவே இருந்தது. அதைப் பார்த்து ஆச்சரியப்பட்டேன். அவருடன் சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்தேன். அவர் ஐயரவர்களைப் பார்க்க வேண்டுமென்று சொன்னார்.

அப்போது பகல் இரண்டு மணி நேரம் இருக்கும். நாங்கள் ஐயரவர்கள் இல்லமாகிய தியாகராஜ விலாசத்தை அடைந்தோம். அப்போது ஐயரவர்கள் உணவு கொண்டு இளைப்பாறிக் கொண்டிருக்கும் நேரம். மேல் மாடியில் கூடத்தில் படுத்துக்கொண்டிருந்தார்கள். வெளிச்சம் அதிகமாக வராமல் கீழ்ப்பக்கத்தில் உள்ள கதவு இரண்டில் ஒன்றைச் சாத்தியிருந்தார்கள். ஆதலால் அவர்கள் படுத்திருந்த இடம் அதிகம் வெளிச்சம் இல்லாமல் கொஞ்சம் மங்கலாக இருந்தது.

ஐயரவர்கள் வீட்டை நோக்கி வந்துகொண்டிருந்தபோது நான் அன்பர் சீனிவாசனிடம் ஒரு விஷயம் சொல்லியிருந்தேன். "நீங்கள் முதலில் உங்களை இன்னாரென்று சொல்ல வேண்டாம். நானே சொல்கிறேன். தங்களைப் பார்த்துப் போகலாம் என்று வந்திருக்கிறேன் என்று மட்டும் சொல்லுங்கள். ஒரு வேடிக்கை செய்யலாம் என்று நினைக்கிறேன். அது பிறகு தெரியும்" என்று அவருக்குச் சொன்னேன்.

அவரை அழைத்துக் கொண்டு மேல் மாடிக்குச் சென்று ஐயரவர்கள் படுத்திருந்த கூடத்துக்குள்ளும் சென்றேன். அவர்கள் தூக்கம் இல்லாவிட்டால் படுக்கையில் படுத்தபடியே சிவநாமம் சொல்லிக்கொண்டிருப்பார்கள்; அல்லது புதிய பாடல்களைப் பாடிக் கொண்டிருப்பார்கள். தாம் முன்பு சென்று தரிசித்த தலங்களுக்கு மானசிகமாக யாத்திரை செய்தபடியே அவ்வத்தலத்தைப் பற்றிப் பாடிக்கொண்டே வருவார்கள். நாங்கள் உள்ளே நுழைந்தபோது அவர்கள் கண்ணை மூடியபடியே ஏதோ பாடலைச் சொல்லிக் கொண்டு படுத்திருந்தார்கள். நாங்கள் மெத்தென்று உள்ளே சென்று அவர்களுக்கு அருகே நின்றோம். தரையில்தான் ஜமுக்காளம் விரித்துப் படுத்திருந்தார்கள். நான் மெல்லக் கனைத்தேன். அவர்கள் கண்ணைத் திறந்து பார்த்து, "யார்?" என்றார்கள். நான், "நான்தான். இவரை அழைத்து வந்திருக்கிறேன்" என்றேன்.

"யார் அது?" என்று கேட்டபடியே அன்பர் பக்கம் கண்ணைத் திருப்பினார்கள்.

அவர் நான் சொல்லி வைத்திருந்தபடி, "தங்களைப் பார்த்துப் போகலாமென்று வந்தேன்" என்று மட்டும் சொன்னார். தாம் இன்னார் என்று சொல்லவில்லை. நானும் அப்போது சொல்லவில்லை.

சீனிவாசன் குரலைக் கேட்டு அந்த மங்கிய







வெளிச்சத்தில் அவர் உருவத்தையும் பார்த்தார்களோ இல்லையோ, உடனே படுக்கையில் எழுந்து உட்கார்ந்து விட்டார்கள்; ''ஐயா, ஐயா! இப்படிச் செய்யலாமா? ஜெயிலுக்குப் போய் விட்டீர்களாமே! போகிறவர்கள் போகட்டும். நீங்கள் உங்கள் எழுத்துத் தொழிலைச் செய்து கொண்டிருக்கலாமே! எத்தனை பேர் உங்கள் எழுத்தைப் பார்க்காமல் ஏங்குகிறார்கள், தெரியுமா? முதலில் டி. கே. சி.யைச் சொல்லுங்கள். ஜெயிலில் மிகவும் கஷ்டப்பட்டிருப்பீர்களே!'' என்று வேகமாகப் பேசினார்கள். பிரிந்திருந்த குழந்தையைக் கண்டது போலவே வந்தன வார்த்தைகள். அவற்றில் அன்பும் பரிவும் ஆராமையும் தொனித்தன.

நான் இடையிலே, ''இவர் அவர் அல்ல'' என்றேன். அவர்கள் அவரைக் கல்கி யென்று எண்ணிப் பேசினார்கள் என்பது எனக்குத் தெரிந்ததுதானே?

''அப்படியானால் நீங்கள் கல்கி அல்லவா?'' என்று சொல்லிக் கூர்ந்து கவனித்தார்கள்; உட்காரச் சொன்னார்கள்.

''வி. கோ. சூரிய நாராயண சாஸ்திரியாருடைய பெண் வயிற்றுப் பேரர். மதுரையிலிருந்து வந்திருக்கிறார்'' என்று மெல்ல அவரை அறிமுகப் படுத்தினேன்.

''அப்படியா? நான் குரலையும் உருவத்தையும் அசப்பிலே கண்டு கல்கிதான் வந்திருக்கிறார் என்று நினைத்தேன்.''

''நான் இவரை இன்றுதான் முதல் முதலாகப் பார்க்கிறேன். இவரைக் கண்டவுடன் நானும் கல்கி ஜாடை இருக்கிறதென்று எண்ணினேன்'' என்று நான் கூறிச் சிறிதே சிரித்தேன். ஐயரவர்களும் சிரித்துக்கொண்டார்கள்.

பிறகு சீனிவாசன் தம்மைப் பற்றிச் சொல்லிக் கொண்டார். சிறிது நேரம் பேசிவிட்டு அவர் விடை பெற்றுக் கொண்டார்.

நான் அவரை வழியனுப்பிவிட்டு வருவதாகச் சொல்லி அவருடன் வெளியில் வந்தேன். அவர், ''நீங்கள் என்ன வேடிக்கை செய்யப் போகிறீர்களோ என்று எண்ணி யிருந்தேன். ஒரு சின்ன நாடகம் அல்லவா நடத்தி விட்டீர்கள்? நீங்கள் என்னினை மாதிரியே ஐயரவர்கள் முதலில் கல்கியென்றே நினைத்து விட்டார்களே!'' என்றார்.

''இப்படி நடக்கும் என்று நான் ஊகித்தேன். அதுவே நடந்து விட்டது.''

''கல்கியிடம் அவர்களுக்கு எத்தனை அன்பு! அவர் இப்போது இங்கே இருந்து பார்த்திருந்தால் மனம் உருகிப் போவார். அவர் சிறை சென்றிருப்பது ஐயரவர்களுக்குச் சம்மதம் இல்லையோ?''

''அவர்களுக்கு, எதற்காக அவர் சிறை சென்றாரோ அதைப் பற்றிய ஆராய்ச்சி இல்லை. இந்த இளைஞர் தம்முடைய எழுத்தினால் எல்லோரையும் மகிழ்ச்சி அடையும்படி செய்து கொண்டிருப்பவராயிற்றே! இவர் போய்ச் சிறையில் வாடுகிறாரே என்ற தாயன்புதான் காரணம்'' என்றேன்.

கல்கியவர்கள் சிறையிலிருந்து வெளி வந்த பிறகு, இப்படி நிகழ்ந்தது என்று அவருக்கு நான் சொன்னபோது அவர் கேட்டு உண்மையாகவே மனம் உருகினார். இருவரும் ஒருவருடைய அருமையை மற்றவர்கள் அறிந்து கொண்டவர்கள் அல்லவா?

சீனிவாசனைக் கண்டவுடன் கல்கி என்று எண்ணிக்கொண்டு, ''ஐயா! ஐயா! இப்படிச் செய்யலாமா?'' என்று அன்று மனம் குழைந்து அந்தத் தமிழ்த் தெய்வம் கேட்ட கேள்வி இன்னும் என் காதில் ஒலிக்கிறது.








அதிசய நறுமணம்
ஆதியானது—அந்தமில்லாதது
பாரத சுகந்தத்தில்
இணையற்றதை
உங்களுக்குத்
தயாரித்துத் தருகிறது



குனேகா

தேர்ந்து எடுக்க 16 மண மகிழ்வூட்டும் மணங்கள்
இன்றே மணியார்டர் மூலம்
ரூ. 2/-அனுப்பி 4 ரக
சாம்பிள் பாட்டில்களைப் பெறுங்கள்
குனேகா—அடையார்—மதராஸ்-20

மலர் போன்ற மேனி எழிலுக்கும்
அடர்த்தியான கூந்தலுக்கும்.

நீபா

டாய்லெட் பவுடர்
ஹேர் ஆயில்
மணம் மிகுந்தவை
மனமகிழ்வு ஊட்டுபவை

A.K.S.&கம்பெனி
அடையார்—மதராஸ்-20











EP-AKS.3



பழனி



# தமிழ் நாட்டுத் திருக் கோயில்கள்

## கோயில்களின் சிறப்பு

தமிழ் நாடு திருக் கோயில்களுக்கு மிகவும் புகழ்பெற்றது. தமிழ் நாட்டிற் போல இவ்வளவு மிகுதியாக வானளாவி உயர்ந்த மாபெரும் கோயில்களை, நாம் வேறு எங்கணும் காண்டல் இயலாது. ''கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்'' என்பது தமிழ்நாட்டுப் பழமொழி.

''மேலொரு பொருளும் இல்லா மெய்ப்பொருள் வில்லும் தாங்கிக் ]
கால்தரை தோய நின்று கட்புலக் குற்றதம்மா!''

எனக் கம்பர் பாடுவது போல, நம் தமிழ் நாட்டில்தான் ஆழ்வார்களும் நாயன்மார்களும் திருவவதாரம் செய்து கால்தரை தோய நடந்து சென்று எத்துணையோ பலப் பல தலங்களைத் தரிசித்து மகிழ்ந்து, திருமுறைகளையும் திவ்வியப் பிரபந்தங்களையும் அருளிச் செய்தனர். திருக்கோயில் இல்லாதவை ''திருஇல் ஊர்கள்'' என்று திருநாவுக்கரசர் குறிப்பிட்டருளினர். இங்ஙனம் பற்பல எழில்மிகுந்த கோயில்களால் நம் தமிழ்நாடு மிகவும் புகழ்பெற்றுத் திகழ்கின்றது. நமது தமிழ் நாட்டு அரசாங்கச் சின்னம் ''கோபுரம்'' ஆக விளங்குவதும், ஈண்டு நாம் நினைந்து இன்புறுதற்குரியது.

கோயில்கள் நமது பழம் பெரும் நாகரிகத்தையும் பண்பாட்டு நலங்களையும் விளக்கிக் கொண்டு நிற்கும் அடையாளங்கள் ஆகும். பிற நாடுகளிலெல்லாம் இரண்டொரு நூற்றாண்டுகளுக்கு முற்பட்ட கட்டிடங்களும், பொருள்களும் கூட மிகவும் பழைமையும் பெருமையும் வாய்ந்தனவாகக் கருதிப் பெரிதும் போற்றப்படுகின்றன. இதனை

எம். பக்தவத்சலம்



காஞ்சி வரதராஜப் பெருமான் கோயில்சிற்பம்



திருஆனைக்கா



திருநெல்வேலி



மயிலை கபாலீசுவரர்



உணர்ந்தால் ஆயிரம் – இரண்டாயிரம் ஆண்டுகளுக்கும் முற்பட்டு இன்றளவும் தமது சிறப்பும் பெருமையும் சிறிதும் குன்றாமல், நின்று நிலவி ஓங்கி வளர்ந்து வரும் தமிழ் நாட்டுக் கோயில்களின் அருமை பெருமைகளை யாவரும் இனிதுணரப் பெறுவர்.

## சமுதாய நல அமைப்பு நிலையங்கள்

பழந்தமிழ் நாட்டில் கோயில்கள்தான் சமுதாய நல அமைப்பு நிலையங்கள் (Social Welfare Centres) எனப் பலவகைகளிலும் விளங்கின. தமிழ் நாட்டுச் சமயம் – சமுதாயம் – கலையியல் – பொருளியல் – பண்பாட்டியல் முதலிய பல துறைகளில் கோயில்கள் பெரிதும் பங்கு கொண்டு சிறப்புறச் செயலாற்றி வருகின்றன. பல்லவ – சோழ – பாண்டிய வேந்தர்களும், விஜய நகர அரசர்களும், நாயக்க மன்னர்களும் பிறருமெல்லாம் கோயில்களின் வளர்ச்சிக்கும் அமைப்பிற்கும் அளப்பரும் தொண்டுகள் ஆற்றியுள்ளனர். அதனால் தமிழ் நாட்டு வரலாற்றுச் செய்திகளிலும் கூட, கோயில்கள் மையமாகச் சிறப்பிடம் பெற்றுத் திகழ்கின்றன. கோயில்களில் உள்ள பல்லாயிரக் கணக்கான கல்வெட்டுக்கள், வரலாற்று ஆராய்ச்சிக்கு மிகவும் இன்றியமையாத கருவிகளாகப் பயன்பட்டு வருவதும் இங்கு நாம் சிந்தித்துணர்தல் தகும்.

பழங்காலத்தில் கோயில்களே பள்ளிக்கூடங்களாகவும், கலை வளர்ச்சிக் கழகங்களாகவும், அறங் கூறும் அவையங்களாகவும், அறக்கூழ்ச் சாலைகளாகவும், மருத்துவ மனைகளாகவும், மக்களுக்குத் தொழில் தரும் நிறுவனங்களாகவும், பொருள் கொடுத்தும், வாங்கியும் உதவும் நிதிநிலையங்களாகவும், மன்பதை நலம் வளர்க்கும் மன்றங்களாகவும், போர்க் காலங்களில் படைவீடுகளாகவும், இன்ன பிறவாகவும் விளங்கி வந்தன.

## மேலைநாட்டினரும் ஈடுபட்டமை

இத்தகைய பற்பல சிறப்புக்களால் தமிழ்க் கோயில்கள் பல அயல் நாட்டு மக்கள் உள்ளத்தினையும் பெரிதும் கவர்ந்து, ஈடுபாடு கொள்ளச் செய்திருக்கின்றன. காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோயில் மதிலைக் கட்டி முடிக்கக் காரணராக இருந்த ஆட்சன் (Hodgson), மதுராந்தகம் கோயில் திருப்பணியை நடத்திய பிளேக (Place), பவானி சங்கமேசுவரர் கோயிலில் தேவநாயகி அம்மனுக்குப் பள்ளியறை தந்த ஊஞ்சலை அமைத்து நன்கொடையாக வழங்கி மகிழ்ந்த வில்லியம் காரோ (William Garrow) மதுரை மீனாட்சியம்மைக்குத் தங்கத்தாற் செய்த அங்கவடிகளை (Stirrups) அன்பளிப்பாகத் தந்த ரூஸ் பீட்டர் (Rous Peter) முதலிய மேனாட்டுப் பெருமக்கள் நம் நாட்டுக் கோயில்கள்பாற் கொண்டிருந்த அன்பையும், ஆர்வத்தினையும் என்னென்பது!

## போற்றிப் பாதுகாக்கும் பொறுப்பு

இத்தகைய [சிறப்பு மிக்க கோயில்களே நம்முடைய நலங்கருதி நம் முன்னோர்கள் நமக்காக அமைத்து வைத்து அளித்து வைத்துவிட்டுச் சென்ற அரும் பெரும் கலைச் செல்வங்கள் ஆகும்.

சேலே றியவயல் தென்காசி ஆலயம் தெய்வச் செய
லாலே சமைந்தது இங்கு என் செயல் அல்ல: அதனை இன்னும்
மேலே விரிவு செய் தேபுரப்பார் அடிவீழ்ந்து, அவர்தம்
பால், ஏவல் செய்து பணிவேன் பராக்ரம பாண்டியனே



தென்காசிச் சிற்பமும் இடிந்த கோபுரமும்



காஞ்சி ஏகாம்பரர் கோயில்



மதுரை மீனாட்சி அம்மன் கோயில்

எனத் தென்காசிக் கோயிலைக் கட்டிய பராக்கிரம பாண்டிய மன்னன் பாடிய உருக்கம் மிக்க கல்வெட்டுச் செய்யுள் போன்றவை நாம் நம் கோயில்களைத் தம் பண்டைப் பெருமையில் சிறிதும் குன்றாமல் போற்றிக் காத்து வளர்த்து வரவேண்டிய பொறுப்பையும், கடமையையும் நினைவுபடுத்துவன ஆகும்.

சிறந்த அப் பொறுப்பையும், கடமையையும் செவ்விதின் உணர்ந்து, நமது சென்னை அரசாங்கம், தமது அறநிலைய ஆட்சித் துறையின் மூலம் எல்லா வகைகளிலும் நம் தேசத்தின் பழம் பெரும் பண்பாட்டுக் கலைக் கருவூலங்கள் எனத் தக்க கோயில்களையெல்லாம் கண்ணும் கருத்துமாக இருந்து போற்றிப் பாதுகாத்து வளர்த்து வருகின்றது.

## கோயில்களில் நிகழும் பணிகள்

சென்னை அரசாங்க அறநிலைய ஆட்சியின் கீழ் தற்போது 188 மடங்கள், 7613 கோயில்கள் உட்பட 8670 நிறுவனங்கள், சிறந்த [கண்காணிப்புடன் போற்றிக் காத்து வரப் பெறுகின்றன.

"இயற்றலும் ஈட்டலும் காத்தலும், காத்த
வகுத்தலும் வல்ல தரசு"

எனத் திருவள்ளுவர் அருளிச் செய்தபடி, கோயில்கள், அறநிலையங்கள் ஆகியவற்றின் நிதி நிலைமையை ஆராய்ந்து, அவற்றில் காணப்பெற்ற சீர்கேடுகளை நீக்கி, அவற்றின் வருவாய் வளர்வதற்கேற்ற வழி வகைகள் அமைக்கப் பெற்றிருக்கின்றன. இத்தகைய நடவடிக்கைகளின் பயனாக எண்ணிறந்த பல நிறுவனங்களில் நிலைமை திருந்தி, நிதி வருவாய் திருப்திகரமாக விளங்குகிறது. அவற்றின் வரவு செலவுத் திட்டங்களும் ஒழுங்குபடுத்தி, அவ்வப்போது தகுந்த முறைகளில் தணிக்கை செய்யப்பட்டு வருகின்றன.

பழைய சிறந்த கோயில்கள் பலப் பல அறநிலையத் துறை நிதி உதவியினாலும், பொதுமக்களின் நன்கொடைத் தொகைகளினாலும், பழுது பார்த்துத் திருப்பணிகள் செய்து, மகா கும்பாபிஷேகங்களும் சிறப்புற நடத்தப்பட்டிருக்கின்றன. சமீபத்தில் நடைபெற்ற மதுரை மீனாட்சியம்மன் கோயில் மகா கும்பாபிஷேகம், தமிழ் நாட்டு வரலாற்றிலேயே சிறப்பிடம் பெறத் தக்க முறையில் மிகவும் விமரிசையாக நிகழ்ந்தமை, யாவரும் அறிந்ததொன்று. சமீப வரு



மாமல்லபுரம்



திருச்செந்தூர்

ஷங்களில் தமிழ் நாட்டில் இங்ஙனம் நூற்றுக் கணக்கான கோயில்களில் திருப்பணிகளும் கும்பாபிஷேகங்களும் நடைபெற்றிருக்குந் திறம், நாம் பெரிதும் மகிழ்ச்சியுறுவதற்குரிய செய்தியாகும்.

கோயில்களில் சமயச் சொற்பொழிவுகளும், தேவாரத் திருமுறை திவ்வியப் பிரபந்தங்களின் பாராயணங்களும் அவ்வப்போது நடைபெறுகின்றன. ஆழ்வார்கள் நாயன்மார்களின் பாடல்கள், அவ்வத் தலத்துக் கோயில்களில் சலவைக்கல்லில் பொறித்துப் பலரும் காணத் தக்க இடத்தில் பதிக்கப்பட்டு வருகின்றன. அந்தந்தத் தலத்துக்குரிய தல புராணங்கள் சிறு சிறு பிரபந்தங்கள் ஆகிய நூல்களை அச்சிட்டு வழங்கிப் பரப்பிப் பாதுகாக்க ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது. மாவட்டவாரியாகக் கோயில் வரலாறுகள் எழுதி அச்சிடத் திட்டம் வகுக்கப்பட்டு, ''நெல்லை மாவட்டக் கோயில் வரலாறு'' என்னும் நூலும் வெளிவந்திருக்கிறது. ஏனைய மாவட்டக் கோயில் வரலாறுகளும் விரைவில் வெளிவர விருக்கின்றன. பல கோயில்களில் பொதுமக்களுக்குப் பயன்படும் பொருட்டு, நூல் நிலையங்களும் இலவச வாசகசாலைகளும் அமைக்கப்பட்டிருப்பதும் பாராட்டுதற்குரிய செய்தியாகும்.

வழிபடும் பக்தர்களுக்கும் யாத்திரிகர்களுக்கும் பலப் பல வசதிகள் கோயில்களில் செய்யப்பட்டுள்ளன. பழநி, திருச்செந்தூர் முதலிய தலங்களில் பல லட்சம் ரூபாய் செலவில் நூற்றுக்கும் மேற்பட்ட அறைகளையுடைய விடுதிகள் கட்டப்பெற்றிருக்கின்றன. கோயில் இடங்களில் தூய்மையும் துப்புரவும் நிலைபெறச்செய்து, பக்தியுணர்வுச் சூழ்நிலைகள் நிலவுமாறு கண்காணிக்கப் பெறுகின்றது. இதனால் கோயில்களுக்குச் சென்று வழிபடுவோர் தொகை நாளுக்கு நாள் பெருகி வருகின்றது. திருச்செந்தூர், பழநி, திருத்தணி, கோடம்பாக்கம் முதலிய ஒரு சில கோயில்களுக்குச் சென்று பார்த்தாலே, இவ்வுண்மையை யாவரும் இனிதுணர்ந்து கொள்ளலாம்.

கோயில் அருச்சகர்களுக்கும் குருக்கள்மார்களுக்கும், சிவாகமங்களிலும் பாஞ்சராத்திரம், வைகானசம் என்னும் வைஷ்ணவ ஆகமங்களிலும் சென்னை, திருப்புகலூர், நாச்சியார் கோயில், மன்னார்குடி முதலிய இடங்களில் பயிற்சி வகுப்புக்கள் நடத்தப் பெற்றன. இறை பணியாளர்களுக்கும் மதுரை, திருக்குற்றாலம் ஆகிய இடங்களில் பயிற்சி வகுப்புக்கள் நடத்தப் பெற்றிருக்கின்றன. இவற்றால் கோயில் நடைமுறைகளும் உற்சவம் முதலிய விசேடங்களும், சாஸ்திரோக்தமாக நடப்பதற்கு வாய்ப்பு மிகுதிப்பட்டிருக்கிறது.

மயிலாப்பூர், நாச்சியார்கோயில், சிக்கல், தருமபுரம், மதுரை, பழநி, திருச்செந்தூர், திருநெல்வேலி ஆகிய இடங்களில் கோயில்களின் சார்பில் அநாதை இல்லங்கள் பல நடந்து வருகின்றன. சென்னை அரசாங்கக் கல்வித் துறையின் மூலம் பள்ளிச் சிறுவர்களுக்குரிய பகலுணவுத் திட்டத்துக்குப் பல கோயில்கள் பேராதரவு புரிந்து வருதல் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கது. திருநெல்வேலி, மதுரை முதலிய இடங்களில் பெண்கள் உயர்நிலைப் பள்ளிகளும் கோயில்களால் நடத்தப்படுகின்றன.

சீன நெருக்கடியின் போது கோயில்கள் தேசியப் பாதுகாப்பு நிதிக்குஏராளமானநன்கொடைகள் வழங்கியதுடன், மிகுதியான அணியில் தங்கப் பத்திரங்களும் வாங்கி, பேருதவி புரிந்திருக்கின்றன.

சிற்பக் கலை வளர்ச்சிக்காக மாமல்லபுரம், சுவாமிமலை ஆகிய இடங்களில் வசதி செய்யப்பட்டிருக்கின்றது. தமிழ் நாட்டுக்கே தனிச் சிறப்பாக உரிய நாதசுர இசைக் கலை வளர்ச்சி குறித்துப் பழநி தேவஸ்தானத்தின் ஆதரவில் ''நாதசுரப் பயிற்சி நிலையம்'' ஒன்றும் நடந்து வருகிறது. பழநியாண்டவர் கீழ்த் திசைக் கலைப் பண்பாட்டுக் கல்லூரி ஒன்றும் 1960–61ம் ஆண்டு தோன்றி, மூன்றாண்டு பி. ஏ. பட்டப் படிப்புக்காகச் சென்னைப் பல்கலைக் கழகத்தின் இணைப்பாக இயங்கி வருகின்றது. சமய அறிவையும் உணர்வையும் வளர்ப்பதில் இது மிகச் சீரிய ஒரு நடவடிக்கையாகும்.

சமீபத்தில் தஞ்சாவூரில் ஹரிகதா காலக்ஷேபப் பயிற்சிப் பள்ளி ஒன்றும் தொடங்கப் பெற்றுள்ளது. நமது பழம் பெரும் இந்து மதத்தின் கோட்பாடுகளையும் தத்துவங்களையும் புராண இதிகாசக் கதைகளையும் மக்களிடையில் இசை நலத்துடன் கலை அமையப் பரப்பிப் பக்தி உணர்வைப் பெருக்கி வளர்க்கும் துறையில் இப் பயிற்சிப் பள்ளி பெரிதும் பயன்படும் என்பது சொல்லாமலே அமையும்.

தமிழ் நாட்டுக்கே உரிய சித்த மருத்துவக் கலை வளர்ச்சியினைக் குறித்துத் தஞ்சை மாவட்டத்தில் திருப்புகலூரிலும், திருநெல்வேலி மாவட்டத்தில் பண்பொழிலிலும், சித்த மருத்துவசாலைகள் தோன்றி இயங்கிப் பொதுமக்களுக்கும் பெரிதும் பயன்பட்டு வருகின்றன.

சமய வளர்ச்சியும் விளக்கமும் கருதித் ''திருக்கோயில்'' என்னும் திங்கள் இதழும் 1958 அக்டோபர் முதல் தொடங்கி நடைபெற்று வருகின்றது. சமயத் துறையில் புகழ் பெற்று விளங்கும் அறிஞர்கள் பலரின் கட்டுரைகள் அதன்கண் வெளிவருகின்றன.

## பொதுமக்கள் கடமை

ஒரு நாட்டின் செழிப்புக்கும் வளர்ச்சிக்கும், அதன்கண் விளங்கும் கோயில்கள் சிறப்புற விளங்குதல் இன்றியமையாதது.

> முன்னவ னார்கோயிற் பூசைகள் முட்டிடின்
> மன்னர்க்குத் தீங்குள வாரி வளங்குன்றும்
> கன்னங் களவுகள் காசினி மிகுத்திடும்
> என்னரும் நந்தி எடுத்துரைத்தானே

என்பது திருமூலர் திருமந்திரம். நம் தமிழ் நாட்டுத் திருக் கோயில்கள் செவ்விதின் விளங்கி வருவது, நம் நாட்டின் செழிப்புக்கும் வளர்ச்சிக்கும் பெருந்துணை புரியும் என்பதில் ஐயமில்லை. சமீபத்தில்தான், திருவானைக்காவல் ஜம்புகேசுவரர் கோயிலையும், காஞ்சிபுரம் வரதராஜப் பெருமாள் கோயிலையும் பழுது பார்த்துத் திருப்பணி செய்வதன் பொருட்டு, முறையே பத்துப் பத்து லட்ச ரூபாய் அளவில் திட்டம் வகுக்கப்பட்டுத் திருப்பணிக் குழுவும் நியமிக்கப்பட்டிருக்கின்றது. எனவே, தமிழ் நாட்டுப் பொதுமக்களும் நம் கோயில்களின் சிறப்பிலும் வளர்ச்சியிலும் கருத்தூன்றி நம் தேசத்தின் புராதனச் சொத்தும் சின்னமும் ஆக விளங்கும் கோயில்களின் சிறப்பைப் பெருக்கிப் போற்றி வளர்க்க முற்பட வேண்டுவது கடமையாகும்.









# திருமூர்த்தி

## மில்ஸ் லிமிடெட்

உடுமலைப்பேட்டை, கோயம்புத்தூர் ஜில்லா.

ELEGANT


அரசியல் சினிமா
PK
வரிகள்
சுமைதாங்கி!
பணம் பந்தியிலே!
புனர் ஜன்மம்
பெரிய இடத்துப் பெண்
1955
1958
அவனா இவன்?
செல்லப் பிள்ளை
பாகப்பிரிவினை?
நாடோடி மன்னன்



கூடி வாழ்ந்தால் கோடி நன்மை!
நாட்டுக்காக உயிர் துறந்த உத்தமர்கள் ஞாபகார்த்தம்
தியாக பூமி
மணம்போல் மாங்கல்யம்
இனி தடை இல்லை
மேல்நாடுகள்
திட்டக் கமிஷனர்
கடன் வாங்கி கல்யாணம்!
5 ஆண்டுத் திட்டங்கள்
"பார்த்தால் பசி தீரும்"
பாதை தெரியுது பார்!
சுதந்திரா

# மறை பொருள்

மு. வரதராசன்

வாழ்க்கையைப் பற்றிய தெளிவு இல்லாத காரணத்தாலேயே இன்று மக்களில் பலர் துன்புறுகிறார்கள்; தனி மனிதர் பலர் சேர்ந்ததே சமுதாயம் ஆகவால், சமுதாயம் அமைதியும் மகிழ்ச்சியும் உடையதாக இல்லை. கல்விக் கூடங்களிலும் எத்தனை எத்தனையோ பாடங்கள் கற்பிக்கப்பட்டாலும் இந்த அடிப்படைக் கல்விக்குப் போதுமான இடம் இல்லை. அதனால், கற்றவர்களின் வாழ்க்கையிலும் ஏக்கமும் அல்லலும் இருக்கக் காண்கிறோம்.

வாழ்க்கை இரு வகையானதாக இருத்தலைப் பலர் உணர்ந்து தெளிவதில்லை. உள்ளத்தின் எண்ணங்களாலும் நினைவுகளாலும் வாழும் வாழ்க்கை ஒருவகை; புறத்தே பொருட்களின் குறைவாலும் நிறைவாலும் அமையும் வாழ்க்கை ஒருவகை. புறத்தில் வாழும் வாழ்க்கையைப் பற்றி மட்டும் கவலைப்பட்டு ஏங்கித் துன்புறுகிறவர்களே பெரும்பாலோராக இருக்கிறார்கள். உள்ளத்தின் வாழ்வு என்று ஒரு பகுதி இருப்பதே பலருக்குத் தெரியாததாக உள்ளது.

உணவு, உடை முதலியவை போதுமான அளவு இல்லாத காரணத்தால் ஏங்கிக் கவலைப்படுகிறவர்கள் பலர். பலவகையான சுவையான உணவும், பலவகையான பகட்டான உடையும் வீடு நிறைந்து இருக்கும் போது இன்றைக்கு எதை உண்ணுவது, இந்த வேளைக்கு எதை உடுப்பது என்று ஆராயும் ஆராய்ச்சியிலும், இருப்பவற்றை விட்டு இல்லாத வெவற்றை நினைந்து ஏங்குவதிலும் வருந்துகிறவர்கள் சிலர். பல பொருள்கள் இருந்தும், இது இல்லையே, அது இல்லையே என்று கவலைப்படும் செல்வர்கள் உண்டு. மழைக்கும் வெயிலுக்கும் நல்ல குடிசை இல்லையே என்று ஏங்கும் ஏழைகள் ஒரு புறம்; நம் வீடு அவர்களின் வீட்டைப்போல் அவ்வளவு அழகாக, புதுமையாக இல்லையே என்று கவலைப்படும் பெரிய வீட்டுக்காரர்கள் மற்றொரு புறம். அடுத்த ஆண்டுக்கென்று ஒரு சிறு தொகையும் சேர்த்து வைக்க முடியவில்லையே என்று வாடுகின்ற ஏழைகள் ஒரு புறம்; நம்மிடம் சில லட்சங்கள் மட்டுமே இருக்கின்றன, அவர்களைப் போல் சில கோடிகள் இருந்தால் நன்றாக இருக்குமே என்று வாடுகின்ற செல்வர்கள் மற்றொரு புறம்.

ஆகவே, பொருள் குறைவாக உள்ள நிலையில் கவலைப்படுகிறவர்களும் உண்டு; கவலைப்படாதவர்களும் உண்டு. பொருள் மிகுதியாக உள்ள நிலையில் மகிழ்கிறவர்களும் உண்டு; மகிழாதவர்களும் உண்டு என்பதை உணர்கிறோம். அவ்வாறானால், பொருள்கள் அடங்கிய புற வாழ்க்கை மட்டும் முழு வாழ்க்கை அல்ல என்பது தெளிவாகிறது. உள்ளத்தில் அவற்றைப் பற்றியும் மற்றவற்றைப் பற்றியும் உணர்ந்து இன்பமும் துன்பமும் உணரும் வாழ்க்கை மற்றொரு பகுதியாக உள்ளது.

உள்ளத்தில் பொருள்களின் தேவையைப் பற்றிய சிறு குறையைப் பெரிதாகக் கொள்வதும் உண்டு. பெருங் குறையையும் சிறிதாகக் கொள்வதும் உண்டு. அது போலவே உற்றார் உறவினருடன் உள்ள தொடர்பு, அக்கம் பக்கத்தாரின் தொடர்பு முதலியவற்றில் காணும் சிறு துன்பத்தையும் இடர்ப்பாட்டையும் மிகப் பெரியதாகக் கொண்டு வருந்தும் மனமும் உண்டு. அந்தத் தொடர்பில் காணும் பெரிய இடர்களையும் துன்பங்களையும் மிகச் சிறியனவாகக்கொண்டு கடந்து செல்லும் மனமும் உண்டு. மற்றவர்களால் நேரும் நன்மையையும் துன்பமாக அஞ்சிக் கவலைப்படும் மனமும் உண்டு. மற்றவர்கள் செய்யும் தீமையையும் பொருட்படுத்தாமல் விட்டு வெல்லும் மனமும் உண்டு. இவை எல்லாம் உள்ளத்தில் உணரும் பான்மையை ஒட்டி ஏற்படுபவை. இந்த உள்ளத்து வாழ்க்கையே புற வாழ்க்கையையும் ஓரளவு மாற்றி யமைக்கக் கூடியதாய், இன்ப துன்பத்தை அளவுபடுத்தக் கூடியதாய் இருப்பதைக் காணலாம்.

இதனால் புறத்தே பொருள் தேடும் முயற்சியோ, சீர்ப்படுத்தும் முயற்சியோ வேண்டாம் என்பது கருத்தல்ல. அந்த முயற்சி வேண்டும். ஆனால் புறத்தில் பொருள் முதலியவை மட்டுமே போதும் என்று இருந்தால் அது தவறாக முடியும். நிரம்பாத பாதி வாழ்க்கையாக இருந்து, பல குறைகளுக்கு இடமாகும். கீழ்வாய்ப் பற்கள் மட்டும் போதும், அல்லது மேல்வாய்ப் பற்கள் மட்டும் போதும் என்று கருதினால் என்ன ஆகும்? அந்தப் பற்கள் இருந்தும் பயன் இல்லாத நிலையே ஏற்படும். அது போன்ற குறையே இந்தப் பாதி வாழ்க்கையால் ஏற்படும். இன்று உலகமெங்கும் இந்தக் குறையே காணப்படுகிறது. ஒருசில ஞானிகள் – அறிவோர் – சான்றோர் தவிர மற்றவர்கள் வாழ்க்கையில் துன்புற்று நலிவதற்கு இதுவே காரணம்.

புறத்தே பார்ப்பவரின் கண்ணுக்கு அழகாக விளங்க வேண்டும் என்கிற ஆசை எல்லாருக்கும் உள்ளது. ஆனால் அந்தப் புற அழகு மட்டும் போதும் என்று எண்ணிவிடல் ஆகாது. இன்றைய இளைஞர் பலர் திருவள்ளுவரை அணுகிக் கேட்பார்களானால், அவர், ''இந்தப் புற அழகு மட்டும் போதுமா? புறத்தே அணியும் அணிகலன்கள் மட்டும் போதுமா? உள்ளத்தே வாழும் வாழ்வுக்கும் அழகு வேண்டும். உள்ளத்துக்கும் அணிகலன்கள் வேண்டும். அந்த அணிகலன்கள் இல்லாதபோது, கண்ணுக்குப் புலப்படும் இந்த அழகு அணிகலன்களால் பயனே இல்லை; இவை அணிகலன்களே அல்ல'' என்று எடுத்துரைப்பார்.

பணிவுடையன் இன்சொல னாதல் ஒருவற்கு
அணிஅல்ல மற்றுப் பிற.

இந்தக் குறள் அலங்கார நயம் கருதி மட்டும் சொல்லப்பட்டது அல்ல. மக்களின்





திருபுவனம் கோயில் கும்பாபிஷேக தினத்தன்று அதிகாலையில் கோபுரக் கலசங்களுக்கு அபிஷேகம் நடக்கும் அருமையான காட்சி. – போட்டோ: ராமகிருஷ்ணு

நெஞ்சில் ஓர் உண்மை பதிய வேண்டும் என்பதற்காகவே சொல்லப்பட்டது.

பட்டப் படிப்புப் பெற்று நல்ல தொழிலும் செல்வமும் அமையப்பெற்ற சிலர் திருமணமான பிறகு கணவன் மனைவியாய் அன்பாக வாழத் தெரியாமல் அல்லல்படுகிறார்கள். அவர்கள் பெரும்பாலும் அழகில் குறைந்தவர்கள் அல்ல; அணிகலனும் ஆடம்பர உடையும் இல்லாதவர்கள் அல்ல; அழகாகத் தோன்றுவதை விரும்பாதவர்கள் அல்ல. ஆனால் அவர்கள் பெற்ற அழகும், அணிகலனும் பகட்டான உடை முதலானவைகளும் கீழ்வாய்ப் பற்கள் மட்டுமே. மற்றொரு பகுதியாகிய மேல்வாய்ப் பற்கள் நன்கு அமையாத நிலை அவர்களிடம் உள்ளது. அதனால் வாய் இருந்தும், பற்கள் இருந்தும், பயன்படாமை காண்கிறோம். இவர்கள் புறத்தே அழகு அணிகலன் பெற்றது போல், உள்ளத்திலும் அழகு அணிகலன் பெற்றிருந்தால் வாழ்க்கை நிரம்பியிருக்கும். பணிவுடையவர்களாக நடத்தலும் இன்சொல் பேசுதலும் அத்தகைய அணிகலன்கள். அவை இருந்திருந்தால் வாழத் தெரியாதவர்களாகக் கலங்கித் துன்பப்படும் நிலை ஏற்பட்டிருக்காது. ஆனால் இளமையில் கல்வி கற்கும்போது உள்ளத்து வாழ்க்கை பற்றி இந்தத் தெளிவு அவர்களுக்கு ஏற்படவில்லையே! பொருளும் ஆடம்பரமும் பதவியுமே எல்லாம் என்பதுதான் அவர்கள் கற்ற சிறுமைக் கல்வி.

புறத்தே பாதுகாப்பு — நல்ல வலிமையான காவல் - இருந்தால் போதும் என்றும், அதன் துணையால், பெண்கள் தூய்மையான வாழ்க்கை நடத்த முடியும் என்றும் பலர் நம்புகிறார்கள். அப்படி நம்புகிற பெண்கள் சிலவேளைகளில் நெஞ்சம் நெகிழ்ந்தோ, இரிந்தோ, கற்பு இழந்து பிறகு துன்பப்படுகிறார்கள். இப்படிப்பட்ட காவல் மட்டுமே போதுமென்று, அன்பை வலுப்படுத்தாமல் காவலை மட்டும் வலுப்படுத்தும் ஆண்களும் ஏமாந்து போகிறார்கள். இதை உணர்ந்தே திருவள்ளுவர், ''சிறை காக்கும் அந்தக் காவல் மட்டும் இருந்து பயன் என்ன? பெண்கள் தம் உள்ளத்தைத் தாமே காத்துக்கொள்ளும் காவல் — நிறை என்னும் பண்புதான்—சிறப்பானது'' என்கிறார்.

**சிறைகாக்கும் காப்பெவன் செய்யும் மகளிர்**
**நிறைகாக்கும் காப்பே தலை.**

இங்கும் புற வாழ்க்கைப் பகுதி மட்டும் போதாது. உள்ளத்து வாழ்க்கைப் பகுதியும் தேவையானது என்று வற்புறுத்தும் நோக்கம் காணலாம். இது குடும்ப வாழ்க்கை பற்றிய அறிவுரை.

சமுதாய அமைப்பை நோக்கியே கூறுவது போல் அமைந்துள்ள அறிவுரையும் ஒன்று உள்ளது. எல்லார்க்கும் செல்வம் வேண்டும்; ஆனால் செல்வம் என்று பண வேட்டையே நோக்கமாய், பொருள்களை மேன்மேலும் படைத்துப் பெருக்குவதே நாட்டமாய் எல்லாரும் இயங்குவார்களானால் அந்தச் சமுதாயம் பாழ்படும். இதை நம் காலத்து யந்திர நாகரிகத்தில் தெளிவாகக் கண்டு வருகிறோம். வேகமாக இயங்குவதும், பரபரப்பாக வாழ்வதும் அமைதி இல்லாமல் அலைவதும், துன்பங்களையும் கவலைகளையும் மறக்கக் குடித்து மயங்குவதுமே இந்நாளைய சமுதாயத்தின் போக்காக உள்ளது. இதில் பலருக்குச் சலிப்பும் வெறுப்பும் ஏற்பட்ட போதிலும், சேற்றில் சிக்கிய எருமை போல் இந்த வாழ்க்கையிலேயே சிக்கிக் குழம்பி மடிவதாக உள்ளது. இதற்குக் காரணம் ஒரு பகுதியில் செல்வத்தைப் போற்றி, மற்றொரு பகுதியான வாழ்க்கையில் வறுமையில் வாடுவதே ஆகும். புற வாழ்க்கையில் வளமும், உள்ளத்து வாழ்க்கையில் வறட்சியும் இருந்தால், பயன் என்ன? புறத்தே உள்ள செல்வம் போல் உள்ளத்தே ஒருவகைச் செல்வம் உள்ளது. அதுதான் அருள். அந்த அருட் செல்வத்தைத் தேடாத வாழ்க்கை குறை உடைய வாழ்க்கையே என்பதை,

**அருட்செல்வம் செல்வத்துட் செல்வம் பொருட் செல்வம்**
**பூரியார் கண்ணும் உள.**

என்னும் வாய்மொழி விளக்குகிறது. இந்த அருட் செல்வத்தை— உள்ளத்தின் செல்வத்தை — நாடிய பெரியோர்கள் பலர். அவர்கள் பொருட் செல்வத்தை — புறத்தே திரட்டும் செல்வத்தை அவ்வளவாக நாடுவதும் இல்லை. உள்ள அரச செல்வத்தையும் துறந்து சென்ற புத்தர் பெருமான், பரலோக ராச்சியம் உங்களுடையதாக வேண்டும் என்று அறிவுறுத்திய ஏசு பெருமான், ஓடும் செம்பொன்னும் ஒன்றாகக் கண்ட அடியார்கள், தமக்கென ஒன்றும் வேண்டாமல் மிக எளிய வாழ்க்கை மேற்கொண்ட உலகத் தலைவர் காந்தியடிகள் முதலானோர், அருட் செல்வத்தின் பெருமையை உணர்ந்து பொருட் செல்வத்தைப் பொருட்படுத்தாதவர்கள். அவர்களைப் போல் எல்லோரும் துறக்க வேண்டியதில்லை; வெறுக்க வேண்டியதில்லை. அரை வாழ்க்கை குறையானது என்று உணர்ந்து, அதை முழு வாழ்க்கையாக நிறைவுடையதாக்கிக்கொள்ளும் முயற்சி வேண்டும். அந்த முயற்சியை நல்கும் நல்ல கல்வி வேண்டும்.

நீதி நூல்கள் எழுதிய ஆசிரியர்கள் பலரும் இத்தகைய கருத்துக்களைத் தெளிவுபடுத்தியுள்ளனர். காவியம் எழுதிய பெரும் புலவர்களும் இந்த உண்மையை ஆங்காங்கே விளக்கியுள்ளனர்.

**ப**ல ஆண்டுகள் தொடர்ந்து ஒரு பெரிய நாட்டை ஆண்ட மன்னன் ஒருவன் முதுமை அணுகுவதை உணர்ந்தான். ஒரு வகையிலும் குறை இல்லாத புற வாழ்க்கை பெற்றுச் சீரும் சிறப்புமாக இருந்த அவனுக்கு அந்த முதுமை ஒரு நல்ல அறிவுறுத்தலாக

அமைந்தது. நெடுங்காலம் குழந்தை இல்லாத ஒரு குறை இருந்தது. அதுவும் தீர்ந்தது. ஆகவே, தனக்குப் பின் தன் அரசை யாரிடம் ஒப்படைத்துச் செல்வது என்ற கவலைக்கும் இடம் இல்லை. பெரும் போர்களை யெல்லாம் நடத்திப் பகைவர் பலரை வென்ற வீரம் அவனுடைய வாழ்க்கையின் ஏடுகளில் நிறைந்திருந்தது. ஆயினும் எல்லாம் புறவாழ்க்கைப் பகுதியே. உள்ளத்து வாழ்க்கையை உணராத வரையில், அந்தப் புற வாழ்க்கை உயர்ந்த ஒன்றாகவே தோன்றியது. முதுமை அணுகியதாக உணர்ந்தவுடன், அந்தப் பெருமன்னனின் மனத்திலே ஒரு விழிப்புணர்ச்சி ஏற்பட்டது. முதுமை அந்தப் புற வாழ்க்கைச் சிறப்பை யெல்லாம் மங்கச் செய்வதை உணர்ந்தான். முதுமையின் முடிவு, அந்தச் சிறப்பை மாய்க்கும் மரணமாக இருத்தலையும் உணர்ந்தான். இவ்வளவுதானா வாழ்க்கை என்ற எண்ணத்துக்கு இடையே பேரொளி வீசியது. புற வாழ்க்கையின் சிறப்பின் மறு பக்கமாக, உள்ளத்து வாழ்க்கையில் சிறுமை இருப்பதைக் கண்டான். "அவுணர் பொல்லாதவர்கள்; கொடியவர்கள்; அழிக்க முடியாத ஆற்றல் பெற்றவர்கள். அவர்களுடைய எதிர்ப்பை ஏற்றேன். போர் செய்தேன். அவர்களின் பத்துத் தேரையும் தாக்கினேன். வென்றுவிட்டேன். ஆனால் இன்று என் மனம் கலங்குகிறது. ஐம்புலன்கள் கலங்குகின்றன. திகைக்கிறேன். அன்று பெற்ற பெரிய வெற்றி என்ன? இன்று காணும் தோல்வி என்ன? அந்தப் பத்துத் தேரை வென்ற வீரனாகிய நான் இந்த மனத்தின் தேர்களை-ஐம்புலன்களாகிய ஐந்து தேர்களை எதிர்த்து வெல்ல முடியாமல் கோழையாய்க் கிடப்பதா?" என்று உணர்ந்தான்.

பஞ்சிமென் தளிரடிப் பாவை கோல்கொள
வெஞ்சின அவுணர்தேர் பத்தும் வென்றுளேற்கு
எஞ்சலின் மனமெனும் இழுதை ஏறிய
அஞ்சுதேர் வெல்லுமீது அருமை ஆவதோ?

(கம்பர், அயோத்தியா.)

வாழ்க்கையில் இவ்வாறு கண்ணுக்குத் தோன்றாமல், பலர் கருத்துக்கும் எட்டாமல், மறைந்து கிடக்கும் உண்மைகளைப் பெரும் புலவர்கள் தக்க இடங்களில் விளக்கிச் சொல்வது போற்றிக் கற்கத் தக்கதாகும். அவ்வாறு கற்றால்தான், தனி மனிதர் வாழ்க்கை, குடும்ப வாழ்க்கை, சமுதாய வாழ்க்கை ஆகியவற்றில் உள்ள குறைகளும் புலப்படும், குறைகளின் காரணங்களும் புலப்படும். மறைபொருள் தெளிபொருளாகும்.



## அட்டைச் சித்திரம் : வலை வீசிய திருவிளையாடல்

புலவர்கள் சங்கமிருந்து தமிழ் ஆராய்ந்த பெருமையையும், சோமசுந்தரப் பெருமான் அறுபத்து நான்கு திருவிளையாடல்களைப் புரிந்த பெருமையையும் தமிழ் மதுரைப் பெருமக்கள் கொண்டாடி வருகிறார்கள். சோமசுந்தரப் பெருமானின் திருவிளையாடல்களில் ஒன்று வலை வீசிய திருவிளையாடல். கோபத்திலும், சாபத்திலும் ஆரம்பமாகி மணநாளத்தோடு திருமணத்தில் முடிகிற திருவிளையாடல் இது. பெருமான் ஒரு நாள் மீனாட்சியம்மையை அழைத்துச் சென்று வேதங்களின் உட்பொருளை அந்த அம்மைக்கு உபதேசிக்கத் தொடங்கினார். மீனாட்சியம்மையார் பயத்தோடும் கவலையோடும் உபதேசத்தை அசுவாரஸ்யமாகக் கேட்டுக்கொண்டிருந்தார். தேவியின் அலட்சியத்தைக் கண்டு சினங்கொண்ட பெருமான், "அருமறைப் பொருளை அலட்சியம் செய்த நீ மீன் பிடித்து வாழும் வலைஞர் மகளாய்ப் பிறக்க வேண்டும்" என்று சாபம் கொடுத்தார். தெய்வநாயகனைப் பிரிந்து கடற்கரை வலைஞர் கன்னியாகப் பிறக்க நேர்வதை எண்ணி மனம் வாடிக் கண் கலங்கினாள் மீனாட்சி.

"கவலைப்படாதே! நீ செய்த குற்றத்திற்கான தண்டனைதான் இந்தச் சாபம்! இதிலிருந்து விரைவில் விலகி நன்மை பெறுவாய் நீ. கடற்கரை வலைஞர் தலைவன் மகளாக நீ வளரும் காலையில் நானே இளம் பருவத்து வலைஞனாக வந்து கடற்கரையோர் வியக்கும் வீரச் செயலைப் புரிந்து உன்னை மணம் புரிந்து கொள்வேன்" என்று சாப விமோசனத்தையும் கூறினார்.

மீனாட்சியம்மையார் பாண்டி நாட்டின் கிழக் கடற்கரையிலே உப்பங்கழிகள் சூழ்ந்த பாக்கம் என்ற ஊரில் வலைஞர் மகளாக அவதரித்தார். நந்தி ஒரு மீனாகச் சாபம் பெற்று அதே பாக்கத்துக் கடலில் வளர்ந்தார். நாட்கள் பெருகி ஓடின. வலைஞர் தலைவன் தன் தெய்வத் திருமகளுக்கு மணம் புரிய நினைத்து ஒரு நிபந்தனை விதித்தான். "எங்கள் பாக்கத்துக் கடலிலே அலைந்து திரிந்து எவருடைய வலையிலும் சிக்காமல் கொடுமைப்படுத்துகிற சுறாமீனை வலை போட்டுப் பிடிக்கிற தீரன் யாரோ அவனுக்கு என் மகள் மாலை சூட்டுவாள்" என்று அறிவித்தான் வலைஞர் தலைவன். சோமசுந்தரப் பெருமான் வலைஞர் மகளாக வளர்ந்து வரும் மீனாட்சியை மணம் புரிய வலைஞர் குலத்துக் காளையாக வடிவெடுத்துப் பாக்கத்துக்கு வந்தார். வலை வீசி நந்தியாகிய சுறாமீனையும் பிடித்து வென்று மீனாட்சியின் மண மாலையைச் சூடிக் கொள்ளும் காட்சியையே இந்த ஆண்டு கல்கி தீபாவளி மலரின் அட்டையில் காண்கிறோம். புராதனமான மதுரை மாநகரத்தின் இந்தத் தெய்விகத் தம்பதிகளைத் தீபாவளி நாளில் கல்கி அட்டையில் வண்ண ஒவியமாகக் காணக் கொடுத்து வைத்திருக்கிற நமது வாசகர்கள் எல்லாரும் அதிர்ஷ்டம் செய்தவர்கள் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

பூமுதுலகீன்ற செங்கண் முதல்வியை அருளிலார் போல்
இழி தொழில் வலை மாதராகச் சபித்தவா றென்னே என்னும்
பழி படு சாப மேநூர் பரதராய் வரவும் வேண்டித்
தழுவதே நன்று நன்றே ஆலவாயழகர் செய்கை!

என்று இந்தச் சாப வரலாற்றைத் தேவாதி தேவர்களும், பூவுலக மக்களும் அந்த நாளில் வியந்ததாகப் பரஞ்சோதி முனி கூறுகிறார். நாமோ தெய்விகக் கைத் திறன் ஒளிர ஓவியர் 'சில்பி' வரைந்துள்ள இந்தச் சிறந்த வண்ணச் சித்திரத்தைப் பார்த்துத் திருவிளையாடலின் புனித நினைவுகளில் மூழ்கி விடுகிறோம்.

# உப்புக் கட்டி

பெ. தூரன்

உப்புக் கட்டியைக் கொண்டு பொம்மைகள் செய்தார்கள். எத்தனையோவிதமான பொம்மைகள்.

ஒன்றல்ல, இரண்டல்ல, ஆயிரக்கணக்கான பொம்மைகள்! மீனைப்போல ஒரு பொம்மை, புழுவைப் போல ஒரு பொம்மை.

ஒளுவைப் போல ஒன்று, புலியைப் போல ஒன்று, பறவையைப் போல ஒன்று, குரங்கைப் போல ஒன்று.

இவ்வாறு எல்லா வகையான பொம்மைகளும் செய்தார்கள். இவைகளுக்கெல்லாம் எப்படியோ ஆச்சரியமாக உயிர் வந்து விட்டது.

இவை ஆடிக் குதித்து மகிழ்ந்து விளையாடிக் கொண்டிருந்தன. இவற்றோடு பொம்மை செய்வது நின்று விடவில்லை.

பொம்மை செய்து கைதேர்ந்த நிலையில் மனிதனைப் போல ஒன்று செய்தார்கள். அதற்கும் உயிர் வந்தது.

இந்த மனிதப் பொம்மை ''நான்தான் பெரியவன்'' என்று அகம்பாவத்தோடு கூறிக்கொண்டே யிருந்தது.

''சமுத்திரப் பொருளாகிய உப்பைக் கொண்டுதானே நான் செய்யப்பட்டிருக்கிறேன்? அந்தச் சமுத்திரத்தையே நான் அளந்து அதன் மேலே ஆதிக்கம் செலுத்தப் போகிறேன்'' என்று அந்த மனிதப் பொம்மை மார் தட்டிக் கொண்டு கூறிற்று.

சமுத்திரத்தின் நீளம், அகலம், ஆழம் என்றெல்லாம் அது கணக்கெடுத்துப் பார்த்தது. ஓடங்களும் கப்பல்களும் கட்டிச் சமுத்திரத்தின் மீது விட்டு விளையாடியது.

மனிதப் பொம்மை இத்துடன் நின்று விடவில்லை.

''இந்தச் சமுத்திரத்தில் உள்ள தண்ணீரையே ஆவியாக்கப் போகிறேன். இந்தத் தண்ணீர் மேலே எழுந்து குமுறிக் கொண்டு ஆகாயத்திலே உயர்ந்து சிதறிப் போகும்படி செய்வேன். இதோ பார்! என்னுடைய பலத்தை எல்லோரும் கண்டு கொள்ளலாம்'' என்று இடி போல் கர்ஜனை செய்து கொண்டே அது சமுத்திரத்துக்குள்ளே 'தடால்' என்று குதித்தது.

அவ்வளவுதான்.

அந்தப் பொம்மை காண முடியாமல் மாயமாக மறைந்து விட்டது!

# போர்ஹான்ஸ் பற்பசையின் மூலம் ஈறு உபாதைகள் பற்சிதைவு போன்ற கோளாறுகளிலிருந்து கிடைக்கும் வியக்கத்தக்க பலன்கள்



தாமாகவே விரும்பி எழுதப்பட்ட கடிதங்கள் *
இவற்றை நிரூபிக்கின்றன.

* இத் நற்சாட்சிக் கடிதங்களை ஜாப்ரே மானேர்ஸ் & கோ. லிட். கம்பெனியாரின் எந்த ஆபீஸிலும் காணலாம்.

எனக்கு விபரம் தெரிந்த காளி
லிருந்தே போர்ஹான்ஸ் பற்
பசையை உபயோகித்து வரு
கிறேன். உண்மையாகவே,
இதன் கற்பலனை - மன்னிக்க
வும், இதன் மிகச் சிறந்த தரத்
தைப்பற்றி இதைத் தவறாமல்
உபயோகித்து வந்த என் பெற்
றோர்களிடமிருந்து அறிந்து
கொண்டேன். என்னுடைய
பற்களின் ஒளியைக் காண்பிப்
பதற்கும் பெருமைப்படுகி
றேன். ஏனெனில், கிரந்தமா
கவும், வழக்கமாகவும், தொ
டர்ந்தும் போர்ஹான்ஸ் உப
யோகிப்பதால்தான் அவை
அவ்வாறிருக்கின்றன என்று
நிச்சயமாகக் கூறுவேன்.

ஜே. எம். கல்கத்தா.

உங்களுடைய போர்ஹான்ஸ்
பற்பசையை உபயோகித்த
தால் எனக்கிருந்த கடுமை
யான ஈறு உபாதையிலிருந்து
ஏற்பட்ட குணத்தைப்பற்றி
உங்களுக்குத் தெரிவிப்பதை
என் கடமையெனக் கருதுகி
றேன். இப்பொழுது நான் தங்
களுடைய போர்ஹான்ஸைத்
தவறாமல் உபயோகித்து வரு
கிறேன். ஈறுகளில் வேதனை,
வீக்கமடைந்த ஈறுப் புண்கள்,
வாய்நாற்றம் முதலியவைகளி
லிருந்து முன்பு மிகவும் அவ
திப்பட்டது போலில்லாமல்
நல்ல குணமாகியிருக்கிறேன்.
ஆண்டவன் போர்ஹான்ஸை
என்றும் ஆசீர்வதிப்பாராக
எனக் கூற விரும்புகிறேன்.

ஹெச். ஆர். எஸ். பம்பாய்.

பலரகமான பற்பசைகளை உப
யோகித்த பின்னர் எனது 50
-வது வயதில் போர்ஹான்ஸ்
பற்பசையை உபயோகிக்கத்
தொடங்கினேன். கடந்த 20
வருடங்களுக்கு மேலாக
அதை உபயோகித்து நல்ல
பலனடைந்துள்ளேன். ஒரு
வேளை, என் 72-வது வயதில்
என்னுடைய பற்கள் இயற்கை
யானபடி வலுவாகவும், சீரா
கவும் இருப்பதற்குக் காரணம்
போர்ஹான்ஸின் மாய வித்
தையாகவும் இருக்கலாம்.

ஜி. என். மதராஸ்.

## போர்ஹான்ஸ்

ஒரு பல் வைத்தியரால் உருவாக்கப்பட்ட பற்பசை.

இதற்கு உகந்த, சிறந்த சேர்க்கைக்கு,

**போர்ஹான்ஸ்**

**டபிள் ஆக்ஷன்**

டூத்பிரஷ்
உபயோகியுங்கள்.








## இலங்கை வெற்றியும் கலிங்க வெற்றியும்

சோழ நாட்டு மக்கள் இராம காதையைப் பௌராணிகர்கள் வாயிலாகக் கேட்கும்போதெல்லாம் இலங்கையை வென்ற இராமன் வில் வலிமையைச் செவிமடுத்துப் பெரு மகிழ்ச்சி அடைந்திருக்கிறார்கள். அத்தகையவர்கள் குலோத்துங்க சோழனின் பிரதிநிதியாகச் சென்று கலிங்கத்தை வெற்றி கொண்ட கருணாகரத் தொண்டைமானின் போர்த் திறமையையும் கேட்டுப் புகழ்வதாகப் புனைந்துரைப்பதில் கவிச் சக்கரவர்த்தி ஜெயங் கொண்டார் பெருமைப்படுகிறார். கலிங்கத்துப் போரிலிருந்து திரும்பிய வெற்றி வீரன் ஒருவன் தன் காதலியின் மனைக் கதவைத் திறக்கும்படி வேண்டிக் கொள்ளும் போது, "இராம பிரான் இலங்கையை வென்ற வில் வலிமையைக் கேட்டுப் பெருமைப்படுகிறவர்களே! நான் இப்போது கருணாகரனின் கலிங்கத்து வெற்றியைப் பற்றி உங்களுக்குக் கூறப் போகிறேன். கதவைத் திறவுங்கள்" என்று வேண்டுவதாக இந்தப் பாடல் பாடப்பட்டுள்ளது.

இலங்கை எறிந்த கருணா கரன்தன்
இகல்வெஞ் சிலையின் வலிகேட்பீர்
கலிங்கம் எறிந்த கருணா கரன்தன்
களப்போர் பாடத் திறமினோ!

கலிங்கத்துப் பரணியின் கடை திறப்புப் பகுதியில் உள்ள இந்த அழகிய பாடற் காட்சியையும் மற்றும் அடுத்த பக்கங்களிலுள்ள பாடற் காட்சிகளையும் தமது ஓவியத் திறமையால் நன்கு வரைந்தளித்திருக்கிறார் வினு. கவியின் கற்பனைகளுக்கு ஏற்ப ஓவியரின் கற்பனையும் இணைந்து அழகுக்கு அழகு செய்வது போல் இக்காட்சிகள் சிறப்பாக அமைந்துள்ளன.



# சூடுவது மலரோ மனமோ?

அவள் தன்னுடைய கூந்தலில் செங்கழுநீர்ப் பூவை மட்டும் சூடிக் கொள்வதாக அவன் நினைக்கவில்லை. கவியின் கற்பனையும் அந்த இளைஞனின் எண்ணமும் ஒன்று கூடி இன்னும் சிறப்பாகவே நினைக்க முடிகிறது.

'அழகைப் பார்த்து நெஞ்சு முடியாமலும் நினைவு மயங்க முடியாமலும் தங்களைக் கட்டுப்படுத்திக் கொள்ளத் தெரியாத முதிர்ச்சியற்ற என் போன்ற இளைஞர்களின் மனத்தையும் உயிரையும் கூட அவள் தன் கூந்தலிலே பறித்துச் சூடிக் கொள்கிறாள் என்றே தோன்றுகிறது' என்பதாகவும் எண்ணி உருகுகின்றான் அவன். பார்க்கின்ற இளைஞர்களின் மனத்தையும் உயிரையுமே தன் கூந்தலில் பறித்துச் சூடிக்கொள்ள முடிகிற அவ்வளவு பேரழகியாம் அவள். மலரோடு இதயத்தையும் உயிரையும் கவர்ந்து சூடுகிற அவள் அழகைக் கவி இவ்வாறு பாடுகிறார்:

முருகிற் சிவந்த
கழுநீரும்
முதிரா இளைஞர்
ஆருயிரும்
இருகிச் செருகும்
குழல் மடவீர்!
செம் பொற்
கபாடம் திறமினோ!

என்று 'பரணிக்கோர் செயங்கொண்டான்' எனப் புகழ்பெற்ற கவிச் சக்கரவர்த்தி செயங்கொண்டார் கலிங்கத்துப் பரணியின் கடை திறப்புப் பகுதியில் பாடியுள்ள அழகிய சொல் வடிவக் கற்பனையை இங்கே ஓவிய வடிவமாகக் காண்கிறோம். தன்னுடைய காதலனின் மனத்தைச் சூடுவதோடு மட்டும் திருப்திப்படாமல் கல்கி தீபாவளி மலர் வாசகர்களின் பல்லாயிரக்கணக்கான மனங்களையும் சேர்த்து அல்லவா கவர்ந்து சூடிக் கொண்டு விடுகிறாள் இந்த அழகி!



# கிளி சொல்லும் இரகசியம்!

விளையாட்டாக அந்தக் காரியத்தை எப்போதோ செய்திருந்தாள் அவள். அது இப்போது வினையாக முடிந்தது.

அவளும் அவளுடைய தோழியும் பிறர் பேசுவதை அப்படியே திருப்பிப் பேசும் பழக்கத்தை அந்தக் கிளிக்கு உண்டாக்கியிருந்தார்கள். அந்த அபூர்வமான பழக்கத்தை வளர்த்துப் பெருக்கிக் கொண்டு தேர்ந்து விட்ட குறும்புக்காரக் கிளி ஒரு நாள் தலைவியின் காதல் இரகசியங்களையே தன்னுடைய 'சொல் திருந்தாத மழலைப் பேச்சால்' பகிரங்கமாகச் சொல்லி அவளை நாணித் தலை குனிய வைத்துவிட்டது.

அவளும் அவளுடைய காதலனும் தனிமையில் 'கண்ணே — முத்தே — அன்பே— அமுதே' என்றெல்லாம் கொஞ்சிப் பேசிக் கொண்டிருந்த வார்த்தைகளைக் கவனமாகக் கேட்டு வைத்துக் கொண்டு தோழியும் அருகில் இருக்கிற சமயமாகப் பார்த்து அப்படியே திரும்பச் சொல்லி ஒப்பித்தது அந்தக் கிளி. கிளி வெளியிட்ட இந்த இரகசியத்தைக் கேட்டுத் தலைவி கோபத்தையும் மகிழ்ச்சியையும் ஒருங்கே அடைந்தாள்.

"……………………மயக்கத்தே
நிகழ்ந்த மொழியைக்
கிளி உரைப்ப
வாயைப் புதைக்கும்
மட நல் வீர்!
வனைபொற் கபாடம் திறமினோ!"

கலிங்கத்துப் பரணி — கடை திறப்பில்— வரும் கவிச் சக்கரவர்த்தி செயங் கொண்டாரின் இந்தக் கற்பனையையே இங்கு ஓவியமாகக் கண்டு மகிழ்கிறோம். கல்கி வாசகர்கள் இரண்டு விதத்தில் பாக்கியசாலிகள். கவியின் கற்பனையோடு ஓவியரின் கற்பனையையும் சேர்த்து அல்லவா அநுபவிக்கக் கொடுத்து வைத்திருக்கிறார்கள்?



## நினைத்ததும் நிகழ்ந்ததும்

போரிலிருந்து தன் காதலன் திரும்பிவந்ததும் இத்தனை நாட்கள் தன்னைப் பிரிந்து போனதற்காக அவனை எப்படி எப்படியெல்லாமோ கோபித்துக் கொள்ள வேண்டுமென்று நினைந்து வைத்திருந்தாள் அவள். ஆனால் அந்த நினைப்பெல்லாம் அவனை நேரில் பார்க்கிற வரையில்தான். நேரில் பார்த்ததுமோ எல்லாக் கோபமும் பறந்தே போய் விட்டது. அவன் வந்து கதவைத் தட்டினால் திறக்கவே கூடாது என்று அவள் நினைந்து வைத்திருந்த பிடிவாதமும் தளர்ந்து போய் விட்டது. வாயிற் கதவையும் திறந்து விடுகிறாள். அவளது மனக் கதவும் தானே திறந்து கொள்கின்றது. இது கலிங்கத்துப் பரணி கடை திறப்புப் பகுதியில் வருகிற ஓர் அழகிய பாடல் ஆகும்.

பேணுங் கொழுநர் பிழைகளெலாம்
பிரிந்த பொழுது நினைந்து அவரைக்
காணும் பொழுது மறந்திருப்பீர்
கனப்பொற் கபாடந் திறமினோ!

நேரில் பார்க்கும் முன்பு காதலன் மேல் அவளுக்கு இருந்த கோபத்தையும், பார்த்த பின்பு அவள் தன்னை அறியாமலே அடைந்து விடுகிற மகிழ்ச்சியையும் செயங்கொண்டாரின் சொல்லோவியத்திலும் இங்கு வரையப் பெற்றிருக்கும் இந்த வண்ண ஓவியத்திலும் ஒருங்கே கண்டு களிக்கிறோம். கோபமும் மகிழ்ச்சியும் மாறுகிற உணர்ச்சியைச் சொற்சித்திரத்திலும் சித்திரச் சொல்லிலும் நன்கு காண முடிகிறது.




டன்லபில்லோ
மெத்தைகள் தலையணைகள் குஷன்கள்
எல்லா
சந்தர்ப்பத்திற்கும்
மகிழ்ச்சி அளிக்கும்
உகந்த
பரிசு


DPC-127 TM

# சிவானந்த ஜோதி

வி. ஆர். ஏகாம்பரம்







பரணியில் பிறந்தவர் தரணி ஆள்வர் என்பது சோதிட சாஸ்திர வழக்கு. ஆனால் ஸ்வாமி சிவானந்த சரஸ்வதி ஆண்டது சாதாரண வையகம் அல்ல, உலகம் முழுவதிலும் வாழும் பல்லாயிரக் கணக்கான மக்களது மனத்தையும் உள்ளத்தையும் தமது ஆட்சி பீடமாகக் கொண்டு செங்கோல் செலுத்தினர். அவருடைய செல்வாக்கும் ஆதிக்கமும் மந்திரத்தினுலோ தந்திரத்தினுலோ ஏற்பட்டவை அல்ல. பிரசாரத்தின் வலிமையால் ஏற்படுத்திக் கொண்டதும் அன்று. மானிட உள்ளத்தின் தன்மையை உள்ளபடி உணர்ந்து அன்பின் வழியே வளர்ந்தது அவருடைய ஆன்மீக சக்தி. இந்து சமயத் தத்துவங்களைப் பற்றிய அவரது விளக்கங்களில் புரிந்து கொள்ளக் கூடாதது எதுவுமே இல்லை; புதுமையும் இல்லை. ரகசிய அம்சங்களும் கிடையா. எந்தத் தனிப் பாதையும் அவர் வகுத்துத் தரவில்லை. தனிச் சமயமும் ஸ்தாபிக்கவில்லை. இயக்கமும் உண்டாக்க அவர் முற்படவில்லை. குறுக்கு வழிகளிலும் புதுப் புது வழிகளிலும் அவர் அக்கறை கொள்ளவில்லை. எனினும் பல்வேறு தேசங்களிலிருந்து வெவ்வேறு மொழிகள் பேசும் ஆயிரக் கணக்கான மக்கள் அவருடைய அருளையும் ஆசியையும் நாடி, அவரை நோக்கி வந்தனர். அவருடைய உபதேசத்துக்காக வந்தவர்கள் பலர். அவருடைய முன்னிலையில் அமர்ந்து அவர் பரப்பிய ஆன்மீக ஒளியின் சக்தியை அனுபவிக்க வந்தவர்கள் பலர்.

ரிஷிகேசத்தைத் தமது ஆதார ஸ்தானமாகக் கொண்டு சுமார் முப்பது ஆண்டுகள் ஆன்மீக ஒளியை வையம் முழுதும் அவர் பரப்பி வந்தார். இமயத்தில் இந்துக்களுக்கு மிகவும் புனிதமான பதரி, கேதாரம், கங்கோத்ரி, யமுனோத்ரி, மானஸ ஸரஸ், கைலாயம் போன்ற ஸ்தலங்களும், தீர்த்தங்களும் நிரம்பியுள்ள உத்தரகண்ட யாத்திரையை மேற்கொள்ளும் எவரும் ரிஷிகேசத்தைத் தாண்டியே செல்ல வேண்டும். அப்படிச் சென்றவர்கள் யாரும் ஸ்வாமி சிவானந்தரின் அன்பையும் ஆசியையும் அனுபவிக்காமல் இருந்திருக்க மாட்டார்கள். யாத்திரிகர்களுக்கு ஆதரவளித்து, அவர்களிடம் அன்பு செலுத்துவதில் சிவானந்தர் களிப்பெய்தினர். அவர்களுடைய தேவைகளுக்கு வகை செய்து கொடுத்ததுடன், அவர்களுடைய கடினமான யாத்திரையைத் தடையின்றி இனிது முடிக்க உள்ளத்துக்கு உறுதியையும் உற்சாகத்தையும் ஊட்டிப் பக்தியை நிலைக்கச் செய்து மகிழ்வார்.

பேரொளியைப் பெற நாடு முழுவதும் சுற்றித் திரிந்த பின்னரே ஸ்வாமி சிவானந்தர் ரிஷிகேசத்தைத் தமது ஆதார ஸ்தானமாகக் கொண்டார். இமயத்துச் சாரலின் வனப்பும், புனித கங்கையின் கம்பீரமும், அமைதியான சூழ்நிலையும் ரிஷிகளும் சான்றோர்களும் தவம் செய்து நிலைத்துப் புனிதமாக்கிய பெருமையும், ஒருங்கே கூடின இந்த இடம் அவருடைய உள்ளத்தைக் கவர்ந்தது. பிரம்மசாக்ஷாத்காரத்துக்காக எல்லாவற்றையும் துறந்து, தவத்தை மேற்கொண்ட சாதுக்கள் பலர் இந்தப் பிரதேசத்தில் இன்றும் உலவி வருகின்றனர். இவர்களில் ஒருவராக ஸ்வாமி சிவானந்தர் இருந்தார். என்றாலும், பல விதங்களில் பல வகைகளில் அவர்களிலிருந்து மாறுபட்டுத் தனிச் சுடராகப் பிரகாசித்தார்.

ஸ்வாமி சிவானந்தர் தமிழ் நாட்டைச் சேர்ந்தவர் என்பது தமிழ் மக்களுக்கு ஒரு பெருமை. 1887ம் ஆண்டில் செப்டம்பர் 8-ம் தேதியன்று திருநெல்வேலி தாம்பிரவருணி தீரத்திலுள்ள பத்தமடையில், அத்வைத சாஸ்திரத்தைப் போதித்த மகான் அப்பய்ய தீக்ஷிதர் வம்சத்தில் வந்த வெங்குவய்யரின் கடைசிப் புதல்வராகத் தோன்றினர் ஸ்வாமி சிவானந்தர். குப்புஸ்வாமி என்ற பெயருடன் தமது பூர்வாசிரமத்தில் விளங்கினர்.

ஐந்தாவது வயதிலேயே தமது பெற்றோர்களுடன் எட்டயபுரத்துக்குப் பாலகன் குப்புஸ்வாமி சென்றான். தமிழ் நாட்டுச் செல்வங்களான மகா கவி பாரதி, சங்கீத வாக்கேயகாரர் சுப்பராமபாகவதர் போன்றவர்கள் பெருமை அளித்த இந்த ஸ்தலம், குப்புஸ்வாமியின் உள்ளத்தையும் உயர்த்தி வளப்படுத்தியது. தமிழ் சரித்திரத்திலே தனி இடம் பெற்று விட்ட பாஞ்சாலங்குறிச்சியும் எட்டையபுரத்துக்குச் சமீபத்திலேதான் இருக்கிறது என்பதையும் சேர்த்துப் பார்த்தால், எத்தனை விதமான மனவெழுச்சிகளுக்கு அவை காரணமாக இருந்திருக்க வேண்டும் என்பதை ஊகிக்கலாம்.

பிற்காலத்தில் வளர விருக்கும் பெருமைகளுக்கான அறிகுறிகள் குப்புஸ்வாமியிடம் இள வயதிலேயே காணப்பட்டன. நல்ல வலிமையும் தேகக் கட்டும் அமைந்த வனப்பான உடல். படிப்பில் அசாதாரண ஊக்கம். இனிமையான குரல். பாடும் ஆற்றல்; இசைக்கு இன்றியமையாத ரஸிகத் தன்மை—இவையெல்லாம் குப்புஸ்வாமியை மாணவர்களிடையே சிறந்தவனாகச் செய்தன. வகுப்பில் முதல்வனாக முன்னேறினான். உண்மையும், நேர்மையும், நன்னெறியும் இணங்கி வளர்ந்தன.

மெட்ரிகுலேஷன் படிப்பை 1903ல் முடித்து, உயர் படிப்பைத் திருச்சி எஸ். பி. ஜி. கல்லூரியில் தொடங்கினான் குப்புஸ்வாமி. பல துறைகளில் வேகமாக முன்னேறிக் கொண்டிருந்த இவ்விளைஞனுக்கு எதிர்பாராது இடையூறு குறுக்கிட்டது. அவருடைய தந்தை காலமானார். எப். ஏ. பரீட்சைக்கு உட்காராமலே இவர் படிப்புக்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டி வந்தது. குடும்பத்தை நிர்வகிக்கும் பொறுப்பும் தம் மீது சுமந்துவிட்டதால் தொழிலில் ஈடுபடுவதற்கு ஏற்றவாறு படிப்பையும் மாற்றிக் கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இயற்கையாகவே வேரூன்றி யிருந்த சேவா உணர்ச்சி குப்புஸ்வாமியை வைத்தியத்தொழிலில் ஈடுபடத் தூண்டிற்று. தஞ்சையில் வைத்தியக் கல்லூரியில் சேர்ந்து மூன்று ஆண்டுகள் படித்துப்பட்டம் பெற்று டாக்டரானார்.

பட்டம் பெற்று விட்டாலும் தொழிலில் வெற்றி பெறுவது எல்லோருக்கும் கை கூடுவதில்லை. இதைக் குப்புஸ்வாமி விரைவிலேயே உணர்ந்தார். இதைச் சமாளிக்க அந்தக் காலத்தில் வாழ்க்கையில் முன்னேற விரும்புபவர்கள் என்ன செய்தார்களோ, அதையே குப்புஸ்வாமியும் செய்தார். தமிழ் நாட்டை விட்டு 1908-ம் ஆண்டில் மலாய் நாடு சென்றவர், நகரி செம்பிலான், ஜோஹோர், சிங்கப்பூர் முதலிய நகரங்களில் அரசாங்க வைத்தியராகப் பணியாற்றினார். குப்புஸ்வாமி அளித்த சுயநலமற்ற சேவைக்கு அந்நாட்டில் நல்ல வாய்ப்பு இருந்தது: ஆதரவும் கிடைத்தது. குப்புஸ்வாமி வைத்திய சேவையுடன் பொருளாலும் நாடியவர்களுக்கு எல்லாம் தாராளமாகவே உதவி புரிந்து சீக்கிரத்திலேயே, 'ஏழைகளின் வைத்தியர்' என்று புகழு அடைந்துவிட்டார். ''அம்ப்ரோஸியா'' (அமிருதம்) என்ற பெயரில் ஒரு சஞ்சிகை ஆரம்பித்து அதன் மூலம் சுகாதாரம், ஆரோக்கிய வாழ்வு, உடல் நலம் போன்ற விஷயங்களைப் போதித்து வந்தார். ஹிந்து மத நூல்களையும் கூடவே படித்துத் தமது அறிவைப் பெருக்கிக் கொண்டது மன்றி ஹார்மோனியம் வாசிக்கவும் பழகிக் கொண்டார். மணிக்கணக்கில் பகவத் தியானத்தில் மூழ்கியிருப்பதும் உண்டு. நண்பர்களுடன் திவ்விய நாம சங்கீர்த்தனங்களும், பஜனைகளும் செய்து மகிழ்வார். அவர்களைக் கொண்டு ராமாயணம், மஹாபாரதம் போன்ற காவிய இதிகாசங்களிலிருந்து சுவையான பகுதிகளை நாடகங்களாக நடிக்கச் செய்து வந்தார்.

உடற் பணிக்குச் சிகிச்சை செய்வதுடன் மனப்பிணிக்கும் சிகிச்சை அளிக்கக் குப்புஸ்வாமி முற்பட்டார். ஒவ்வொரு ஜீவனுக்கும் பேரானந்தத்தை அடைய



வேண்டும் என்று இயல்பாக உள்ள ஆர்வத்தைத் தீர்த்து வைக்க ஆவல் கொண்டார். அத்தகைய மனோநிலையில் குப்புஸ்வாமிக்குத் தன்னலமற்ற சேவையிலிருந்து துறவறம் பூண்டு நிவர்த்தி மார்க்கத்துக்குத் தாவுதல் மிக எளிதாகவே இருந்தது.

அவருடைய மனம் ஆத்மானுபவத்தைப் பெறத் தீவிரமாகத் திரும்பிவிட்டது. பட்டினத்தார் துறவு பூண்டு பாடிய பாடல்கள் அவருடைய அப்போதைய மன நிலையையும் உள்ளத்திலுள்ளே கிளர்ந்தெழுந்த உணர்ச்சிகளையும் ஒருவாறு எடுத்துக் காட்டுவதாக உள்ளன.

**பிறவாதிருக்க வரம்பெறல் வேண்டும்;**
**பிறந்து விட்டால்,**
**இறவாதிருக்க மருந்துண்டு காண்;**
**இது எப்படியோ;**
**அறமார் புகழ்த்தில்லை அம்பல வாணர்**
**அடிக்கமலம்**
**மறவாதிரு மனமே அது காண்**
**நன்மருந் துனக்கே!**

பேரின்பப் பெருவாழ்வு வாழக் குப்புஸ்வாமி உறுதி கொண்டு விட்டார். உடனே செயலிலும் ஈடுபட்டு விட்டார். தாம் சம்பாதித்து வைத்திருந்த பணத்தை யெல்லாம் ஏழைகளுக்கும், எளியவர்களுக்கும் வாரி வழங்கி விட்டு, நண்பர்களுடைய வேண்டுகோள்களையும், அன்புத் தளைகளையும் புறக்கணித்து மலாய் நாட்டை விட்டுத் தாயகம் நோக்கிக் கப்பல் ஏறி விட்டார்.

சென்னையில் இறங்கியதுமே தீர்த்தங்களுக்கெல்லாம் புண்ணிய யாத்திரையின் லட்சியமாக விளங்கும் காசி க்ஷேத்திரத்தை நோக்கிப் புறப்பட்டார். சில காலம் அங்கே தங்கி, பின் பரிவிராஜகராகக் கவலையற்றுத் தீர்த்த யாத்திரை செய்யக் கிளம்பினார். காவேரி, கிருஷ்ணா, கோதாவரி முதலிய புண்ணிய நதிகளில் நீராடி, பண்டரிபுரத்தை அடைந்து, சாதுக்கள் கோஷ்டியில் சேர்ந்து பஜனையிலும், பக்தியிலும் காலம் கழித்தார். பின்னர் விந்தியமலைச் சாரலில் வயது முதிர்ந்த ஒரு தபால் நிலையத் தலைவரின் சிஷ்யராகச் சில காலம் வசித்தார். இவர்தான் குப்புஸ்வாமியை ரிஷிகேசத்துக்குச் செல்லும்படி அனுப்பி வைத்தார். இது நிகழ்ந்தது 1924ம் ஆண்டில். ரிஷிகேசம் இவருடைய மனத்தைக் கொள்ளை கொண்டது. சிவ தியானமும், பஜனையும், சாது சங்கமும் இவருக்கு நிம்மதி அளித்தன. இங்கேதான் ஒரு நாள் கங்கையில் நீராடிக் கொண்டிருக்கையில் சிருங்கேரி மடத்தைச் சேர்ந்த ஸ்வாமி விச்வானந்தர், குப்புஸ்வாமியைத் தமது சீடராக ஏற்றுக் கொண்டு, சன்யாசம் அருளிச் சிவானந்தா என்ற தீக்ஷா நாமமும் வழங்கினார்.

ஸத்குருவின் அருளினால் கிடைக்கப்பெற்ற பாக்கியத்தைப் போஷித்துக்கொண்டு ஏழு ஆண்டுகள் தபஸிலும், தியானத்திலும் கழித்தார் ஸ்வாமி சிவானந்தர். இவருக்குச் சோதனைகளும் ஏற்பட்டதுண்டு. ஒரு சமயம் ஒரு ராஜகுமாரி அவரைப் பார்க்க விரும்பி அவரது ஆசிரமத்துக்கு வந்ததை அறிந்தார் ஸ்வாமி சிவானந்தர். உடனே ஒரு பாழடைந்த குடிசைக்குள் சென்று கதவைத் தாளிட்டுக் கொண்டு, சிஷ்யர்களைக் கொண்டு வெளிப்புறத்திலும் பூட்டுப் போடச் சொல்லித் தமது மன உறுதியை நிலைநாட்டிக்கொண்டார். மனத்தூய்மையை மாசுபடாது காப்பாற்றிக் கொண்டு,

பிக்ஷைவாங்கியே காலம்கழித்தார். அவருடைய கம்பீரமான தோற்றத்தாலும், வசீகரிக்கும் குணங்களாலும் தேவைக்கு அதிகமாகவே வேண்டிய பொருள்கள் வரத் தொடங்கின. அவற்றையெல்லாம் அண்டியிருந்த சாதுக்களுக்கு அளித்து விடுவார். தமது ஆரம்பத் தொழிலாகிய வைத்தியத்தைக் கைவிடாமல் மருந்துப் பெட்டி ஒன்றைக் கையுடன் தாம் போகும் இடங்களுக்கெல்லாம் எடுத்துச் சென்று சிகிச்சைகள் செய்து வந்தார். நாளாவட்டத்தில் தம்மிடம் சேர்ந்திருந்த பொருளைக் கொண்டு சிறியதொரு வைத்திய சாலையை ஏற்படுத்தினர். வெளியூர் சென்றபோதெல்லாம் உலக சமயங்களின் சமரசத்தைப் பற்றிப் பிரசாரம் செய்வதிலும் யோகாசனங்களைப் பயிலுவிப்பதிலும், யோக முறைகளைப்போதிப்பதிலும்ஈடுபட்டார்.

1930ம் ஆண்டில் பாதசாரியாகவே கைலாஸ யாத்திரையைத் தொடங்கினர். மானஸ ஸரஸில் நீராடி, யாத்திரையை முடித்துக் கொண்டு திரும்பிய பின்னர், நாடு முழுவதிலும் பிரயாணம் செய்து நான்கு ஆண்டுகள் ஹிந்து மத சாரம் பற்றியும், யோக ரகசியங்கள் பற்றியும், உபநிஷத உயர் உண்மைகள் பற்றியும் மக்களுக்கு உபதேசித்து வந்தார். தைத்திரீய உபநிஷத வாக்கியங்களையே தமது லட்சியங்களாகக் கொண்டு சென்ற இடங்களிலெல்லாம் அவற்றையே போதித்து வந்தார்.

ரிஷிகேசத்துக்குத் திரும்பியதும் 'ஆனந்த குடீர்' என்ற ஆசிரமத்தை அமைத்துக் கொண்டார். இதுதான் பின்னர் சிவானந்த ஆசிரமமாக—சிவம் வசிக்கும் ஸ்தலமாக—மாறியது. கங்கை நதியின் சலசலப்பினூடே கேட்கும் ஓங்கார ஒலியும், கண்ணுக்கெட்டிய வரை பரந்துள்ள பசும் புல்வெளிகளும் இமயமலைச் சாரலின் அமைதியான ஆரண்ய சூழலும், யோக வேதாந்த மார்க்கங்களைப் போதிக்க இதைத் தகுந்த இடமாக்கின. ஆன்மிய அறிவை வளர்க்கவும், யோக முறைகளில் பயிற்சி அளிக்கவும் 1948ல் இங்கே யோக வேதாந்த ஆரண்ய சர்வகலாசாலை ஸ்தாபிக்கப்பட்டது.

ஸ்வாமி சிவானந்தரின் வாழ்க்கையில் ஒளிவு மறைவு கிடையாது. யார் வேண்டுமானாலும், எப்போது வேண்டுமானாலும் அவரைக் காணலாம். உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்ற வித்தியாசம் சிறிதும் பாராட்டாதவர். அவருடன் வாதங்கள் கூடப் புரியலாம். அவருடைய உழைக்கும் சக்தி அபாரம். காந்திஜி, ரவீந்திர நாத தாகூர் போல் எக் காலத்திலும் சத்திய சோதனை, உண்மையறிதல் இவற்றை மேற்கொண்டு வாழ்க்கை நடத்தினர். கட்டுப்பாட்டிலும் நெறியிலும் தவறாதவர். மற்றவர்களும் கட்டுப்பாட்டுக்குட்பட்டுச் செயல் புரியவே விரும்புவர். தியானத்திலும், யோகத்திலும், கட்டுரை எழுதுவதிலும் ஓர் ஒழுங்கு ஏற்படுத்திக் கொண்டார். தமக்கு வரும் ஒவ்வொரு கடிதத்துக்கும் தாமே பதில் எழுதுவார். ஆசிரமப் பராமரிப்பையும் தாமே நேரில் கவனிப்பார். அதற்காகக் காரியாலயத்துக்குக் குறிப்பிட்ட நேரத்தில் தினம் தவறாது வருவார். தம்மிடம் உபதேசத்துக்காக வருபவர்களுக்கு நிபந்தனை ஒன்றும்



கிடையாது. ஆசியும், அன்பும் நிச்சயமாக ஒவ்வொருவருக்கும் கிடைக்கும்.

சந்நியாசத்தின் உண்மைப் பொருளை ஸ்வாமி சிவானந்தரிடம் பூரணமாகக் காண முடிந்தது.

ஸ்வாமிகள் தனிகர்களிடம் விசேஷ மதிப்புடன் நடந்து கொண்டார் என்றும் அறியாமையால் சிலர் சொல்லுவதுண்டு. செல்வந்தர்களை ஸ்வாமிகள் சில சமயம் தட்டிக் கொடுப்பது உண்டுதான். அவர்களிடமுள்ள செல்வத்தைத் தார்மீகத் துறைகளில் செலவிட அவர்களைத் தூண்டுவதற்காகவே அவர் அவ்வாறு செய்வார். செல்வத்தை வெறுப்பதனால் மட்டும் எளியவர்களிடம் அன்பு செலுத்தினதாக ஆகும் என்ற தவறான கருத்தை அவர் ஒப்புக் கொள்வதில்லை.

ஸ்வாமி சிவானந்தரின் வசீகரம் எல்லையில்லாதது. பண்டிதர்களையும், பாமரர்களையும் ஆகர்ஷிக்கும் சக்தி அவரிடம் பூரணமாக இருந்தது. குழந்தையை நிகர்த்த தூய்மையும் எளிமையும் மற்ற மகான்களிடம் நாம் கண்டது போலவே ஸ்வாமிகளிடமும் பார்த்திருக்கிறேன்.

அவருடைய தாராளத்துக்கு எல்லையே இல்லை. பொருளை மட்டும்தான் கொடுத்தார் என்பதில்லை. ஈசுவர கருணையை அமோகமாகப் பெற்றிருந்த அவர் அதையும் குறைவின்றி வழங்கினர். கொடுக்கக் கொடுக்கக் குறையாத செல்வமாகையால் அவர் அள்ளிக் கொடுத்தார்.

அவருடைய சந்நியாசத்தில் அச்சுறுத்துவதாகவோ, கடுமையாகவோ ஒன்றும் இல்லை. அன்பர்கள் பக்தியுடன் அளிக்கும் எதையும் மற்றவர்களுடன் உண்டு மகிழ்வார். பலதரப்பட்டவர்கள் மத்தியிலும் பல காலம் சரளமாகப்



பழகினவர் போலவே இருப்பார். சத்திய ஞான போதனை மட்டுமின்றி இனிய கானமும், நாமசங்கீர்த்தனமுமாக விளங்கிற்று அவரது ஆசிரமம்.

எல்லா மதங்களும் ஒரே உண்மையைத்தான் உணர்த்துகின்றன என்பதை உலகினருக்கு எடுத்துக்காட்ட 1953ம் ஆண்டில் அகில உலக மத சம்மேளனத்தை (Parliament of Religions) கூட்டினர். ஹிந்து தர்மம் அகில உலகத்துக்கும் ஏற்றது என்பதை விளக்கப் பலவிதங்களில் அவர் பாடுபட்டார். 1936ம் ஆண்டில் தெய்வீக வாழ்க்கை சங்கத்தை (Divine Life Society) ஸ்தாபித்தார். இதன் மூலம் மக்களிடம், அன்பு, சேவை உணர்ச்சி, பகவத் தியானம், ஈசுவரசாக்ஷாத்காரம் ஆகியவற்றை இடைவிடாது போதித்து வந்தார். இச் சங்கத்தின் முந்நூறு கிளைகளிலிருந்தும் ஸ்வாமி சிவானந்தரின் உபதேசங்கள் அடங்கிய பிரசுரங்களும், புத்தகங்களும், சஞ்சிகைகளும் இன்றும் விநியோகிக்கப் படுகின்றன. வெவ்வேறு நாட்டைச் சேர்ந்தவர்களெல்லாம் இச் சங்கத்தில் சிஷ்யர்களாகச் சேர்ந்திருக்கின்றனர்.

சுமார் இருநூற்றுக்கு மேற்பட்ட புத்தகங்களை ஸ்வாமி சிவானந்தா வெளியிட்டிருக்கிறார். இவற்றில் முக்கியமானவை; யோக சாதனை; கர்ம யோகம்; பக்தி யோகம்; ஞான யோகம்; ராஜயோகம்; லயாதி யோகம்; ஹடயோகம்; பகவத் கீதை விளக்கம்; உபநிஷத் விளக்கங்கள் முதலியன. சிறுவர்களுக்கென்று தனியாகப் பல புத்தகங்கள் அவர் எழுதியிருக்கிறார். அவருடைய நூல்கள் பல மொழிகளில் பெயர்க்கப்பட்டிருக்கின்றன.

உலகத்தையும், உலக மக்களையும் வெறுத்துத் தனித்து வாழ்ந்த சம்பிரதாயமான ஸந்நியாசியைப் போல் இராமல் மக்கள் மத்தியிலேயே, மக்களுடன் பழகிக் கலந்த அசாதாரண சந்நியாசி ஸ்வாமி சிவானந்தா. தாமும் பங்கு கொண்டு ஹிந்து தர்மத்தைப்போஷிக்கவும், மனித சமுதாயத்தை உயர்த்தவும் அவர் கொண்டிருந்த ஆழ்ந்த ஆர்வமே அவருடைய ஸந்நியாஸமாக உருப்பெற்றது எனலாம். உண்மையிலேயே அவர் சிறந்த வைத்தியர். உடலுக்கு மட்டுமின்றி ஆன்மாவுக்கும் சிகிச்சை செய்தவர். அவருடைய உபதேசத்தின் சாரம் எல்லா உண்மைகளைப் போல மிகவும் எளிமையானது. ''தெய்வங்களில் ஏற்றத் தாழ்வு கிடையாது; பிரம்ம வித்தையே விஞ்ஞானத்துக்கெல்லாம் உயர் விஞ்ஞானமாகத் திகழ்வது; பிரம்மத்தை அறிந்தவன், எல்லாவற்றையும் அறிகிறான்'' என்பதே அவரின் உபதேசஸாரம்.

சென்ற ஆண்டு ஜூலை 14ந் தேதி அவர் விதேக கைவல்யத்தை அடைந்தபோது நமது புராதனமான மதத்தை ஏழையாக்கி விட்டார் அவர்.

**உள்ளுருகி உயிருருகி**
**ஊனுருகிச் சித்தம்**
**உள்ளடங்கி உரையடங்கி**
**உள்ளுணர்வில் ஊன்றும்**
**தெள்ளறிவால் எய்து மந்தத்**
**திருவருட் பேரின்பம்**
**தெவிட்டாமல் எனக்கருள்வாய்**
**சின்மயனே சரணம்!**

# எந்த விழாவுக்கும் ஏற்ற இன்பப் பரிசு

## கேவாபாக்ஸ்

### மிமி பிளாஷுடன் கூடியது

நீங்கள் கேவாபாக்ஸ் காமிராவை வாங்கினால்—
பின் வருத்தப்படவே நேராது.
அது எந்தச் சந்தர்ப்பத்துக்கும் ஏற்ற சிறந்த பரிசு
மிக நேர்த்தியான அமைப்பைக் கொண்டது.
இயக்குவதற்கு மிகச் சுலபமானது. மிக நேர்த்தியாகப்
படமெடுக்கிறது. அதன் தரம் பிரசித்தி பெற்றது.

மிமி பிளாஷ் நல்ல போட்டோக்கள் எடுப்பதற்குச்
சிறந்த சாதனம். சுலபமாக யாரும் படம்
எடுக்கலாம். நீடித்து உழைக்கக் கூடியது.
கையடக்கமானது. பிளாஷ் பொருத்தும் பொத்தான்
வசதியுள்ள எல்லாக் காமிராக்களிலும் இதை
உபயோகிக்கலாம். அது மிக அழகாக செய்யப்
பட்டிருக்கிறது. விலையும் மிகக் குறைவு.



**ALLIED PHOTOGRAPHICS LIMITED**

அலைட் போட்டோகிராபிக்ஸ் லிமிடெட்
கஸ்தூரி பில்டிங்ஸ், ஜாம்ஷெட்ஜி டாடா ரோடு, பம்பாய்-1
படங்களுடன் கூடிய குறிப்புப் புத்தகம் தங்களுக்குத்
தேவையானால் எங்களுக்கு எழுதுங்கள்.



கேவாபாக்ஸ்
ரூ. 38.00
மிமி பிளாஷ்
ரூ. 18.00

# சிலை சொல்லாத கதை



"அம்மா!"

ஆறு வயதுப் பாலகன் ஆனந்தன் அழைத்தான். அப்பொழுது அவன் வீட்டுச் சாளரத்தின் மேடையில் அமர்ந்திருந்தான். அவனது விழிகள் தொலைவில் தெரிந்த ஒரு சிலையையே இமை கொட்டாமல் கவலிப்புடன் வைத்திருந்தன.

"என்னடா, கண்ணு!" என்று கேட்ட வண்ணம் அவனது தாயார் அருகில் வந்தாள்.

"அம்மா! அதோ, ஒரு பொம்மை தெரிகிறதே, அது எவ்வளவு அழகா யிருக்கிறது? நீ பார்த்தாயோ?" என்று கேட்டான் ஆனந்தன்.

"ஆமாம், ரொம்ப அற்புதமான சிலை! முகத்தில்தான் என்ன களை, என்ன களை! அமைதியே உருவாகக் காட்டி தரும் அந்தச் சிலை உயிர்ச் சித்திரமாக அல்லவா தோன்றுகிறது? அதன் முகத்தைப் பார், அது அன்பைச் சொரியவில்லை? பார்க்கப் பார்க்கப் பார்த்துக் கொண்டே இருக்க வேண்டும் என்று தோன்றவில்லை? என்ன பணிக்கு, என்ன பணிக்கு!"— தாயார் சிலையின் அழகை வர்ணிக்கத் தொடங்கி விட்டாள்.

"நான் தினமும் பார்த்துக் கொண்டேதான் இருக்கிறேன், அம்மா! அது யாருடைய பொம்மை? யார் செய்தது?"

"யார் செய்த பொம்மை, எப்பொழுது செய்த பொம்மை என்ற விவரம் யாருக்கும் தெரியாது. பல நூறு ஆண்டுகளாக இந்தச் சிலை இங்கு இருக்கிறதாம். எப்பொழுதோ வந்த 'ஒரு தெய்வச் சிற்பி இச்சிலையைச் செதுக்கிச் சென்றாராம். இச்சிலையின் முகத் தோற்றத்தோடு பிறக்கும் மனிதன் ஊருக்கும் உலகத்துக்கும் நல்லது செய்வான் என்று சொல்லிப் போயிருக்கிறாரும்!" என்றாள் தாயார்.

"உனக்கு இதை யார் சொன்னது, அம்மா?"

"உன் தாத்தா!"

"அவருக்கு?"

"அவர் தாத்தா."

"அவருக்கு?"

"அவர் தாத்தா!"

"நான் கேட்கக்கேட்க நீ இந்தப் பதிலேதான் சொல்லிக்கொண்டு போவாய், எனக்குத் தெரியும். அப்படி யாராவது பிறந்தார்களாமா அம்மா?" என்றான் ஆனந்தன்.

"இன்று வரையில் அப்படி யாரும் பிறக்கக் காணோம். என்றைக்குப் பிறப்பானோ, ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம்! யார் செதுக்கிய சிலையோ, இந்தச் சிலை காலங்காலமாகத் தெய்வமெனவே போற் பூசிக்கப்பட்டு வருகிறது."

தாயாரின் சொல் பாலகனின் மனத்தில் அப்படியே பசுமரத்தாணி போல் பதிந்து விட்டது. சிலையின் உருவத்தைத் தாங்கிய மனிதன் எப்பொழுது வருவானோ என்று எதிர்பார்க்கலானான். சிலையின் வடிவத்தைக் கண் முன் நிறுத்தி, வரக் கூடிய மனிதனின் உருவத்தைக் கற்பனையில் காண முயன்றான். நாட்கள் ஓடி, மாதம், வருடங்களாகவும் மாறின. ஒரு நாள் இளம் பாலகன் இருபது வயது இளைஞனாக உருப்பெற்றான்.

ஒரு சோமகவரான் வந்தான் அவ்வூருக்கு. அந்நாட்களில் அந்த ஊரில் வளர்ந்தவன்தான் அவன். திரைகடலோடியும் திரவியம் தேடும் பணியை மேற்கொண்டு கடல் கடந்து சென்று 'சாமர்த்தியம்' செய்து சம்பாத்தியம் செய்து வந்தவன் அவன்.

வந்தவன் மக்களிடையே பணத்தை அள்ளி வீசினான். ஏழை எளிய மக்களுக்கு, பட்டினியால் வாடிய பாட்டாளி மக்களுக்கு அவன் அளித்த தொகை பெரும் வரப்பிரசாதமாக அமைந்தது. 'ஆகா! இந்தக் கொடை வள்ளல்தான் நாம் காலம் காலமாக எதிர்நோக்கி வந்த மகானுயிருக்க வேண்டும்' என்று முடிவு கட்டிச் சிலையையும் அவனையும் மனத்தில் இருத்திப் பொருத்திப் பார்த்தனர் மக்கள். உறுதி ஏற்படவே அவனையே அர்ச்சையாகக் கருதிப் பூசித்துப் போற்றலாயினர்.

இந்தச் சமயம்தான் அவன் தன் வலையை விரித்தான். ஏழை எளியவர்களுக்குப் பணத்தைக் கொடுத்து அவர்களுக்குச் சொந்தமான நிலங்களைத் தனது உடைமையாக்கிக் கொண்டான். உணவுப் பொருள்கள் தருவதாகக் கூறிக் கொடுத்த பணத்தைத் திரும்பவும் பெற்றுக் கொண்டான். இப்படி அகட விகட சாமர்த்தியம் செய்து, பணத்தைக் கொடுத்தும் பணத்தைப் பெற்று அவர்களையே அடிமையாக்கித் தன் உடைமைப் பொருளாக்கிக் கொண்டான். கருணையை ஒழித்துக் கடுமையை மேற்கொண்டு அவர்களிடம் நிர்த்தாட்சிண்யமாக வேலை வாங்கலானான்.

அப்புறம்தான் அவர்களுக்கு அவன் சுய உருவம் புலனாயிற்று. இப்படி மக்களை வாட்டிவதைப்பவன் மகானாயிருக்க முடியாது. நாம்தான் இவனைப் புரிந்து கொள்வதில் தவறு இழைத்து விட்டோம். இவனை நம்பி மோசம் போனோம். இவனிடமிருந்து எப்படி விமோசனம் கிடைக்குமோ என்று ஏங்கலாயினர்; மனம் நொந்து வாழ்க்கையையே வெறுக்கலாயினர்.

'நாம் செய்த தவறுக்காக வாழ்க்கையை வெறுத்து என்ன பயன்? பொறுத்தார் பூமியாள்வார். காலம் மாறும், பொறுத்திருப்போம்' என்று உபதேசித்து நாட்டு மக்களைத் தேற்றி வந்தான் ஆனந்தன். என்ன கஷ்டம் வந்தாலும்,





ரா. வீழிநாதன்

ஆண்டவன் அளித்த வாழ்க்கையை வெறுக்கக் கூடாது என்று கூறி அந்தக் கஷ்டத்திலும் வாழ்க்கை நடத்தக் கற்றுக் கொடுத்தான் அவன்.

இப்படி யிருக்கும் பொழுது, 'நாட்டுக்கு நல்லது கூறுவேன்' என்று கூறிக் கொண்டு ஒருவன் அவ்வூரைத் தேடி வந்தான். அவனது பேச்சிலும் உருவத்திலும் கம்பீரம் குழைந்தது. அவனைக் காணவும் அவன் பேச்சைக் கேட்கவும் ஊரே கூடியது. தெய்வச் சிலையிருந்த மைதானத்தில் அவன் ஒரு கூட்டம் போட்டான். அந்தச் சிலைக்குக் கீழே நின்று பணக்காரனின் அட்டூழியங்களைப் பற்றி ஒரு பாட்டம் பாடித் தீர்த்தான். அவனது உடும்புப் பிடியிலிருந்து விடுதலை பெற வழி கூறுவதாகச் சொன்னான். மக்களின் உரிமை என்றால் என்ன என்பதைப் பற்றி அளந்து விட்டான்.

பாழ்பட்டு நின்ற மக்களின் மனத்திலே அந்த நேரத்துக்கு அவன் பேச்சு தெய்வ வாக்காகப் பட்டது. அவனே தடுத்தாட்கொள்ள வந்த தெய்வமாகத் தோன்றினான். சிலையையும் அவனையும் மாறி மாறிப் பார்த்தார்கள். 'ஆகா! என்ன ஒற்றுமை! என்ன ஒற்றுமை! இவன்தான் நெடுங்காலமாக நாம் எதிர்பார்த்து ஏங்கி வந்த தெய்வ புருஷனாயிருக்க வேண்டும்' என்று தீர்மானித்தார்கள்; அதோடு அவன் சொற்படி கேட்கவும் சித்தமானார்கள்.

பணக்காரன் பார்த்தான். இவனால் தனக்குத் தீங்கு நேருமோ எனப் பயந்தான். இரவுக்கிரவே, அந்தத் தலைவனைத் தன் வீட்டுக்கு அழைத்து விருந்து வைத்தான். தனக்கு இடையூறாக இல்லாமல் இந்தப் பிராந்தியத்தை விட்டே ஓடி விடுவதாயிருந்தால், கணிசமான தொகை தருவதாக ஆசை வார்த்தைகள் காட்டினான்.

தலைவனின் கண்களைப் பணம் மறைத்தது; பெற்றுக் கொண்டான். மக்கள் கஷ்டப்பட்டுச் சம்பாதித்த தொகையிலிருந்து சந்தா சேர்த்து அவனுக்கு நிதி வேறு வழங்கியிருந்தார்கள், அவன் தங்களுக்குப் பெரும் உதவி செய்யப் போகிறான் என்ற நம்பிக்கையில். இரண்டையும் சுருட்டிக் கொண்டு சொல்லாமல் ஊரை விட்டே ஓடிப் போனான். பக்தர்களுக்கு வரம் நல்கக் காட்சி தரும் பகவானைப் போல் வந்தவன், பணத்தைச் சுருட்டிக் கொண்டு ஓடவே, மக்கள் அவன் உண்மைச் சொரூபத்தைக் கண்டனர். 'என்ன உலகமடா, ஏமாற்றிப் பிழைக்கும் இந்த உலகம்' என்று அவர்கள் மனம் நொந்த பொழுது, 'பொய்யும் புனைசுருட்டும் இன்றி வாழ்ந்தால்தான் உலகம் சொர்க்கமாகும். இதை உணர்த்திப் போகவே ஒருவன் வந்தான். அன்பும், அருளும் உண்மையும் பூண்டு வாழுங்கள். இவ்வுலக வாழ்க்கை ஆனந்தமாகும்' என்று கூறி அத்தகைய வாழ்க்கையை வாழ்ந்து காட்டினான் ஆனந்தன். அப்பொழுது அவனுக்கு வயது இருபது. கொடுமை புரிபவன் மக்களுக்குத் தலைவனாக முடியாது. அன்பும் அருளும் கொண்ட பணியே உண்மையான பணி — இதனை உலக அநுபவம் அவனுக்குக் கற்றுக் கொடுத்திருந்தது. ஆயினும் அந்தத் தெய்வ மனிதன் நம் ஊருக்கு வர மாட்டானா, நாம் படும் துயரம் தீராதா என்று ஏங்கி அவனும் நாள்தோறும் ஆண்டவனைப் பிரார்த்தித்து வந்தான்.

இப்படி அவன் பிரார்த்தனை செய்து வந்த காலத்தில்தான், அவ்வூருக்கு ஒரு புலவன் வந்தான். புலவனின் பாடல்களிலே உண்மை ஒளிர்ந்தது. எழில் மிளிர்ந்தது. அருள் கொஞ்சியது. அன்பு புரண்டது. உழவும் தொழிலும் வளம் பெற்று நாட்டைச் சொர்க்கமாக்கின. சொல்லழகும் பொருளழகும் கொண்ட அவன் பாடல்களிலே மனத்தைப் பறிகொடுத்த மக்கள் துயரம் தீர்ந்து தாங்கள் இன்ப வாழ்வு வாழ்வதாகவே கனவு காணலாயினர். ஏழை — பணக்காரன் என்னும் வேற்றுமை ஒழிந்து மனித சமுதாயம் வாழும் வகையை அவன் பாடல்கள் படம் பிடித்துக் காட்டின.

தங்கள் மனத்தில் உள்ளதைச் சொற்களால் வடித்துக் களிப்புற வாழ வகை காட்டும் இப்புலவனே அந்தத் தெய்வச் சிலை காட்டும் மனிதனாயிருக்க வேண்டும் என்ற முடிவுடன் அவனை வழிபடலாயினர். அவன் கூற்றுப்படி வாழ்க்கையை வாழக் கற்றுக் கொண்டனர்.

ஆண்டுகள் பல ஓடின. புலவனின் சொற் சிலம்பங்களுக்கு ஏற்ப மக்கள் வாழ முயன்றனரே தவிர, அவன் தன் கூற்றுப்படி வாழ முயலவில்லை. தான் தோன்றித்தனமாக வாழ்க்கை நடத்தித் தன்னைத் தாழ்த்திக் கொண்டான். சொல்லும் செயலும் அவனைப் பொறுத்த வரை ஊடல் கொண்ட மனைவிபோலத் தனித்திருந்தன. எந்தத் தீமைகளை யெல்லாம் அகற்றி வாழ வேண்டும் என்று அவன் மக்களுக்கு உபதேசித்தானோ, அவையெல்லாம் அவனை அண்டி வாழ்ந்தன.

ஆனந்தனுக்கு அப்பொழுது வயது எழுபது. அநுபவம் அவனுக்கு எடுத்துக் கூறியது: சொல்லும் செயலும் வேறான மனிதன் மகானாயிருக்க முடியாது. பணம் இருப்பவன் பண்பைக் கற்க வேண்டும். அறிவு இருப்பவன் அன்பைப் பயில வேண்டும். இதயம் இருப்பவன் இரக்கம் காட்ட வேண்டும். ஒவ்வொரு மனிதனும் இக்கொள்கையைப் பின்பற்றினால், உலகம் மேன்மையுறும். வையகம் துயர் தீர்ந்து வானகத்துடன் போட்டிபோடும்.

ஆனந்தன் இக்கொள்கையைப் பின்பற்றித் தானும் வாழ்ந்து காட்டி மக்களையும் வாழ வைக்கப் பாடுபட்டான். ஆனந்தனது அடிச்சுவட்டைப் பின்பற்றி மக்கள் வாழ முற்படவே, அவ்வூர் சொர்க்கமாகத் திகழ்ந்தது. பகையை மறந்து பூசலை மறந்து வாழ்ந்த மக்கள் சிலையை நோக்கினர். சிலை சிரித்தது. 'உங்கள் காலடியிலேயே ஒரு மனிதனை மகானாக வைத்துக் கொண்டு உலகம் முழுதும் தேடித் திரிந்தீர்களே!' என்று கேட்பது போலிருந்தது அதன் சிரிப்பு!

திரும்பிப் பார்த்தனர். ஆனந்தனுக்கும் அந்தச் சிலைக்கும் இம்மிகூட வேற்றுமை இருப்பதாகத் தோன்றவில்லை. அன்பும், அமைதியும் அருளும் குடிகொண்ட அந்தச் சிலையே ஆனந்தனின் உருவத்தில் சச்சிதானந்த சொரூபமாக இளநகையாடியவண்ணம் நின்றது.

என்னதான் காற்று அடித்தாலும், கடு மழை பொழிந்தாலும், கடு வெயில் எரித்தாலும், உலகத்தில் ஆனந்தச் சிலையின் கொள்கையை யாராலுமே அழித்தொழிக்க முடியாது. கவடு மாறிச் செல்பவர்கள் என்றைக்காவது ஒரு நாள் இந்தக் கொள்கையைப் பின்பற்றியே ஆகவேண்டும் என்று அன்று முதல் ஆனந்த அநுபவம் உலகத்துக்கு என்றென்றும் உணர்த்தி வருகிறது.

## சர்க்கரைத் தட்டுத் தீர்ந்தது!



# ஆஹா...

**என்னே ஆரோக்கியமளிக்கும் புத்துணர்ச்சி, கோலினுஸின் பாதுகாக்கும் நுரையிலே**

சுறுசுறுப்பாக வாழ்பவர்கள் கோலினுஸைத் தேர்ந்தெடுக்கிறார்கள்... ஏனெனில், நுரைக்கும் தன்மையுள்ள கோலினுஸ் மட்டுமே பற்சிதைவு மற்றும் வாய்நாற்றத்திலிருந்து இரவும் பகலும் பாதுகாப்பளிக்கிறது. ஆகையால் கோலினுஸ் சூப்பர் ஒயிட்டை உங்களுடைய பற்பசையென்று நிச்சயப்படுத்திக்கொள்ளுங்கள்.



**தலைநிமிர்ந்த புன்சிரிப்பு—அது கோலினுஸின் புன்சிரிப்பு**

அல்லது, வீரியமுள்ள குளோரோ பில்லின் களிப்பூட்டும் புத்துணர்ச்சியை நீங்கள் விரும்பினால், புதிய சேர்க்கை கோலினுஸ் குளோரோபில் வேண்டுமென்று கேளுங்கள்.




பற்சிதைவைத் தடுக்கிறது. உங்கள் மூச்சிலே மணம்கமழச் செய்கிறது. உங்கள் பற்களை வெண்மையாக்குகிறது.

Registered User: GEOFFREY MANNERS & CO. LIMITED




1. நம் காவியம்

ஆயிரம் அலைகள்
பாயிரம் பாடிட-அலை
ஓல மிடுங்கடல்
ஏழும் துணையாக-நம்
காலம் வகுத்தநல்
காவியக் கூத்திலுள்ளே
கனவும் நனவும்-கூடிக்
கலந்தநல் வேளையிலே-ஒரு
காவியமெழுந்தது காணேடி!

2. சப்த சமுத்திரம்

எட்டுத் திசையும் புகழ்பாட
ஏழுகடல்கள் அலைபாட-இடை
விட்டுவிட்டுக் குயில்கூவ
வீதி மரங்கள் அசைந்தாடச்-சிறு
பட்டுச் செவ்விதழ்
முத்தும் புன்னகையால்
பார்த்த பார்வை சொல்லாத-உன்
கட்டுக் குலையா மேனியுடன்-நீ
கனவில் வந்து தழுவியதும்

விட்டுப் பிரிந்துபின் தழுவியதும்
வீதிவழியே நடக்கையிலே
பாதிக் கண்கள் பார்த்ததுவும்
பார்த்த கண்கள் பேசியதும்
கோதி முடித்த குழற்காட்டில்-உன்
கோல மதிமுகம் மலர்ந்ததுவும்
சீத முகத்திற் சிறுமுறுவல்
தெய்வ நலங்கள் காட்டியதும்

பேதை வளர்ந்து பெண்ணாகிக்
காதல் வளர்ந்து மணமாகி-நீ
மாதர் நடுவே தாயாகி-
ஏழு பருவக் கடல்கடந்து
இருந்த இடத்தே நடை தளர்ந்து
வாழும் நாளில் நினைத்தாலும்....,
நினைவின் நடுவே மலராகும்-உன்
ஞாபக மென்னுள் மணமாகும்.

3. நடை

சின்னத் தாமரைப் பாதங்கள்
சிவக்கச் சிவக்க நடந்து வந்தே-நீ
கன்னக் குழியச் சிரித்ததுவும்-உன்
கைகள் நீட்டித் தழுவியதும்
மின்னல் இடைநடு நெளிய
மெல்லப் பதம் பெயர்த்தே-நல்
அன்ன நடை நடந்த-நீ
அகன்று பெயர்ந்து திரும்பியதும்

மெட்டி விரல்கள் தாளமிட-நல்ல
முன்கை வளைகள் ஓலமிடப்
பட்டுச் சிறடி கோலமிட-நீ
மச்சப் படிமேல் நடந்ததுவும்
எட்டி யிருந்து சிரித்ததுவும்-பின்
இணைந்து வந்து குலவியதும்
கட்டுக் கதையாய்ப் போயிற்றே-பெருங்
காற்றில் கலந்த சுடராச்சோ?

### 4. கழிவிரக்கம்

காலக் கவரில் ஓவியமாய்-என்றும்
 கரையா நினைவிற் காவியமாய்
நீலக் கடலிற் பேரலையாய்-மனம்
 நீந்தித் திராப் பெருவெளியாய்
கோலமுகத்திற் சுழன்றுவரும்-இரு
 குவளைக் கண்ணி செவ்விதழில்
சாலப் பதிந்த சிந்தனைகள்-இங்கு
 தயங்கித் தயங்கி அழவைக்கும்.

மனிதர் நினைப்பவை பலிப்பதில்லை
மனத்தில் நினைப்பவை நடப்பதில்லை
கணிதம் பார்த்துக் கணக்கிட்டும்
காலம் பொறுத்துப் பிழையாச்சு
புனித நினைவுகள் பொய்யாச்சு
பூசல் செய்பவர் மெய்யாச்சு
மனிதர் வாழ்க்கை இதுகண்ணே
மண்ணில் வாழ்க்கை இதுகண்ணே!

### 5. உலக நியாயம்

வாழப் பிறந்தவர் சாவதுவும்
சாகப் பிறந்தவர் வாழ்வதுவும்
ஈனக் கொடியவர் சிரிப்பதுவும்
இங்கிதம் தெரிந்தவர் அழுவதுவும்
மான முள்ளவர் மடிவதுவும்
மானங் கெட்டவர் பெருகுவதும்
ஞானிகள் வெறுத்த மண்ணினின்மேல்
ஞாய மிருப்பது தெரியவில்லை !

### 6. அழியா நினைவு

காலிற் கொலுசு கலகலக்க-இளங்
 கையில் வளைகள் சலசலக்கப்
பாலும் தேனும் போல்மொழிகள்-அவை
 பலப்பல பேசி நீசிரித்துக்
காலம் மறைந்த கனவாலும்-ஒரு
 காவியம் நிறைந்த நினைவாலும்
நாளும் நினைவில் மலராலும்-உன்
 ஞாபக மென்னுள் மணமாகும்.

தெருவில் திரிந்து விளையாடும்
 சிறுபேதைப் பருவம் முதலாகக்
கருவிற் பிறந்து வளர்ந்திருந்த
 காதல் ஆணைவர் நாமெனவே
இருவர் நினைவும் ஒன்றாகி
 இங்கும் அங்கும் சொல்லாகி
முடிவிற் பெரிய பொய்யாகி
 மூண்ட விதியை என்னென்பேன்?

### 7. அழிந்த கற்பனை

ஏழுபருவக் க ல் கடந்து-நீ
 இருந்த பருவம் மூப்பாகிக்
காலம் தேய்த்த சந்தனமாய்க்
 கனவில் மணக்கும் சண்பகமாய்
நீலம் தோய்ந்த கண்ணிரண்டும்
 நினைவில் வந்து அழுதாலும்
காலம் குலைத்த கற்பனையே-நீயென்
 கனவில் மலர்ந்த மலராவாய்!



# எழுத்தாளர் கலெக்டர்!

முப்பத்தைந்து வருஷங்களுக்கு முன் நான் திருநெல்வேலி ஜில்லாவில் ரெவினியூ இன்ஸ்பெக்டராக வேலை ஏற்றிருந்தேன். அந்த உத்தியோகத்தில் நல்ல பெயர் எடுப்பதும் அதன் மூலம் உத்தியோக உயர்வு பெறுவதும் மேலதிகாரிகள் முகாம் வருகிற போது அவர்களுக்குச் 'சப்ளை' செய்வதைப் பொறுத்ததுதான் என்பதையும் அறிந்திருந்தேன். தாசில்தார் முகாம் வந்தால் அவரது உணவு விஷயமான காரியங்களை யெல்லாம் கிராம முன்சீப்களே கவனித்துக் கொள்வார்கள். டிப்டி கலெக்டர் முகாம் வந்தால் அவருக்கும் அவருடைய 'பட்டாள'த்துக்கும் உணவருந்துவது முதலிய செலவுகளை ரிவின்யூ இன்ஸ்பெக்டர்தான் கவனித்துக் கொள்ள வேண்டும். கலெக்டர் முகாம் வந்தால்தான் கஷ்டம். ஒரு சிறு தவறுகூட ஏற்பட்டு விடாமல் பார்த்துக் கொள்ள வேணும். தப்பித் தவறி ஏதாவது தவறு நேர்ந்துவிட்டால், தொலைந்தார் ரிவின்யூ இன்ஸ்பெக்டர்.

இந்த நிலையில் அப்போதைய ஜில்லா கலெக்டர் என்னுடைய 'பிர்க்கா'வுக்கு முகாம் வருவதாகத் தகவல் வந்தது. கலெக்டர் வருவதற்கு மூன்று நாட்களுக்கு முன்பே அவரது குதிரை வந்தது. குதிரைக்காரனும் வந்தான். குதிரையையும் குதிரைக்காரனையும் பராமரிப்பதில் அக்கறை செலுத்திச் சரியாகக் கவனித்துக் கொண்டேன். கடைசியில் கலெக்டர் வந்தார். அவரோடு ஒரு பரிவாரமும் வந்தது. எல்லோருக்கும் வேண்டுவன எல்லாம் தேடிக் கொடுத்து அவர்கள் மனம் கோணாதபடி நடந்து கொண்டேன். மூன்று நாள் முகாம் முடிந்து கலெக்டர் மற்றொரு முகாமுக்குப் புறப்பட்டார். மூன்று நாள் வாங்கிக் கொடுத்த பால், முட்டை முதலிய சாமான்களுக்குப் பில் கேட்டார் கலெக்டர். கிராம முன்சீப்பும் செலவு ரூபாய் **ஒன்றரை** என்று விவரமாகப் பில் எழுதிக் கொண்டு வந்து கொடுத்தார். கலெக்டர் முன்னிலையிலேயே கலெக்டரின் காம்ப் கிளார்க் அந்தப் பணத்தைக் கிராம முன்சீப்பிடம் கொடுத்து விட்டார்.

புறப்படும் கலெக்டரை அனுப்பி வைக்க நான் அவர் முன் வந்து நின்றேன். 'கிராம முன்சீப் கொடுத்த பில்லில் குதிரைக்கு என்று செய்த செலவு காட்டப்படவில்லையே?' என்றார் கலெக்டர் என்னிடம். நான் கொஞ்சம் அஜாக்கிரதையாய், 'அப்படிச் செலவு ஒன்றும் ஆகிவிடவில்லை' என்றேன். அவ்வளவுதான்; கலெக்டர், 'அப்போது என் குதிரையை மூன்று நாள் பட்டினி போட்டு விட்டீரா?' என்று என் மேல் பாய்ந்தார். நடுநடுங்கி விட்டேன். புல்லுக்கும் கொள்ளுக்கும் அதிகம் செலவாகவில்லை என்பதைக் குறிப்பிட்டே பதில் சொன்னேன். ''என்ன செலவு ஆயிற்றே



தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

அதையும் வாங்கிக் கொள்ளும்'' என்று கூறி விட்டுக் குதிரையின் மீது ஏறிப் புறப்பட்டு விட்டார் கலெக்டர். மற்றவர்களும் புறப்பட்டுப் போய்ச் சேர்ந்தார்கள். தலை தப்பியது தம்பிரான் புண்ணியம் என்று நானும் வீட்டுக்குத் திரும்பினேன், கொஞ்சம் மனத் தாங்கலோடேயே.

என்னுடைய கவலையை அறிந்த கிராம முன்சீப், 'இதற்கென்ன சார் இவ்வளவு வருத்தப்படுகிறீர்கள், இதற்கு முன் என்ன என்ன நடந்திருக்கிறது என்று தெரியுமா? சொல்கிறேன், கேட்கிறீர்களா?' என்று ஒரு கதை சொல்ல ஆரம்பித்தார்.



கலெக்டர் முகாம் வந்தால் அவருக்கு வேண்டிய சப்ளை எல்லாம் செய்ய வேண்டியது ரெவினியூ இன்ஸ்பெக்டர் பொறுப்புத்தான். கலெக்டரை விடக் கலெக்டருடன் வரும் பட்லரைத் திருப்தி செய்யத் தெரிந்திருக்க வேண்டும் முதலில். ஒரு அப்பாவி ரெவினியூ இன்ஸ்பெக்டர் சப்ளை விஷயத்தில் எல்லாம் கண்ணும் கருத்துமாகவே இருந்தார். ஆனால் அவர் கலெக்டரது பட்லரைக் கவனிக்கத் தவறி விட்டார். மூன்று நாட்கள் கலெக்டர் முகாம் செய்திருந்தார். எல்லாம் ஒழுங்காய் நடந்தன. மூன்றும் நாள் காலை கலெக்டருக்குக் காப்பி கொடுக்கவில்லை பட்லர். கலெக்டர் முகத்திலே எள்ளும் கொள்ளும் வெடித்தன. 'ஏன் பெட்-காப்பி வரவில்லை?' என்று கேட்ட கலெக்டரிடம் 'ரெவினியூ இன்ஸ்பெக்டர் திரிந்த பாலையே கொண்டு வந்திருக்கிறார்' என்று புகார் செய்து விட்டார் பட்லர். கலெக்டர் கோபம் எல்லை கடந்து விட்டது. ரெவினியூ இன்ஸ்பெக்டரை அழைத்தார். அவர் கொண்டு வந்ததாகப் பட்லர் காட்டிய திரிந்த பால் உள்ள செம்பை ரெவினியூ இன்ஸ்பெக்டர் தலையில் கவிழ்த்து, 'போ, போ' என்று விரட்டி விட்டார். இந்த ரெவினியூ இன்ஸ்பெக்டர் கொஞ்சம் மானியாகவும் இருந்திருக்கிறார். பாலாபிஷேகம் பெற்ற கோபத்துடனே தாசில்தார் வீட்டுக்குச் சென்றார்; நடந்ததைச் சொன்னார். அத்துடன் தம் வேலையையும் ராஜினாமாச் செய்து 'கால் கடுதாசி'யையும் நீட்டி விட்டார்.



இதற்குள் கலெக்டரின் கோபம் தணிந்து விட்டது. தாம் செய்த காரியம் தவறு என்பதை உணர்ந்திருக்கிறார். தாசில்தாருக்கு ஆள் அனுப்பி அழைத்து, தாம் ரெவினியூ இன்ஸ்பெக்டரிடம் மன்னிப்பு கோரத் தயாராக இருப்பதாக அறிவித்திருக்கிறார். ஆம், ஆங்கிலேயக் கலெக்டரின் இனத்துக்கே உரிய பெருந்தன்மையோடு நடந்து கொள்ள விரைந்திருக்கிறார். தாசில்தாரோ தயங்கித் தயங்கி ரெவினியூ இன்ஸ்பெக்டர் தம் வேலையை ராஜினாமாச் செய்த விவரத்தைக் கூறியிருக்கிறார். கலெக்டரும் வருத்தப்பட்டு ரெவினியூ இன்ஸ்பெக்டரை அழைத்துத் தாம் செய்த காரியத்துக்கு மன்னிப்புக் கேட்டதுடன், அவர் ராஜினாமாவை வாபஸ் பெற்றுக் கொண்டால், அவரை ஹெட் அக்கவுண்டெண்டாக உயர்த்துவதாகச் சொல்லியிருக்கிறார். ரெவினியூ இன்ஸ்பெக்டரும் உத்தியோக உயர்வு என்றவுடனேயே பல்லை இளித்துத் தம் ராஜினாமாவை வாபஸ் பெற்றுக் கொண்டார்.

''இப்படியெல்லாம் நடந்திருக்கும் போது குதிரையைப் பட்டினியாகப் போட்டு விட்டாயா என்று கலெக்டர் கேட்டது ஒன்றும் பிரமாதமில்லை'' என்று கிராம முன்சீப் எனக்கு ஆறுதல் கூறினார். பின்னர் சில வருஷங்கள் ரெவினியூ இன்ஸ்பெக்டராக இருந்தும் எனக்கு ஒரு கலெக்டரும் பாலாபிஷேகம் செய்யவுமில்லை; அதனால் உத்தியோக உயர்வு கொடுக்கவும் இல்லை.

ரெவினியூ இலாகாவில் வேலை பார்த்த எனக்குப் படிப்படியாக உத்தியோக உயர்வு கிடைத்தது. ரெவினியூ இன்ஸ்பெக்டராக வேலை பார்த்து முப்பது வருஷங்கள் கழிந்தபின்னரே கலெக்டர் வேலையும் கிடைத்தது. இந்த முப்பது வருஷ காலத்தில்

எத்தனை கலெக்டர்களை நான் பார்த்திருப்பேன். அவர்களது வேலைத் திறமை, குணங்கள், குறைகள் எல்லாவற்றையும் உணர்ந்திருப்பேன். அன்னியர் ஆட்சியில் சர்க்கார் சேவகனாக வேலையேற்ற நான் பதினைந்து வருஷ காலம் அநேகமாக வெள்ளைக்காரக் கலெக்டர்களிடமே வேலை பார்த்திருக்கிறேன். இன்னும் பதினைந்து வருஷம் சுதந்திர இந்தியாவில் டிப்டி கலெக்டராகவும் கலெக்டராகவும் பணியாற்றியிருக்கிறேன்.

இன்று அதிகாரிகள் முகாம் போவது குறைந்துவிட்டது. என்றாலும் 'சப்ளை' வாங்குவது குறையவில்லைதான். இதற்குக் காரணம் கீழேயுள்ள உத்தியோகஸ்தர்கள் 'சப்ளை' மூலமே மேலதிகாரிகளைத் திருப்தி செய்தல் கூடும் என்று எண்ணுகிறார்கள். அதிகாரிகளும் அதற்கேற்றாற் போலவே நடந்து கொள்கிறார்கள். என் கீழ் வேலை செய்த டிப்டி கலெக்டர் ஒருவர் வேலை செய்வதில் திறமை மிக்கவர். அவர் வேலையில் குறையே காண முடியாது. இவரிடம் இருந்த குறையெல்லாம், இவர் அரசியல்வாதிகளின் தயவை நாடி அவர்களுக்கு வால் பிடிப்பதுதான். இவர் சப்ளையும் அதிகம் வாங்குகிறார் என்று புகார். அவரைப் பற்றி ஒரு மொட்டை மனு சர்க்காருக்குப் போய் அது என்னிடம் விசாரணைக்கு வந்தது. நான் அந்த டிப்டி கலெக்டரை அழைத்து, 'இப்படி உம் பேரில் புகார் வந்திருக்கிறது. கொஞ்சம் கவனமாக நடந்து கொள்ளும்' என்று எச்சரித்தேன். மூன்று வருஷ காலமாக டிப்டி கலெக்டர் வேலை பார்த்தவர் அவர். அந்த மூன்று வருஷ காலத்திலும் முகாம்களிலெல்லாம் என்ன என்ன சப்ளை வாங்கினார், அந்த சப்ளைகளுக்கெல்லாம் அவர் வாங்கிய பில்கள், அந்தப் பில்லுக்குப் பணம் கொடுத்துப் பெற்றுக் கொண்டதாகக் கிராம முனிசீப் சர்டிபிகேட்டுடன் வாங்கிய சீட்டுகள் அத்தனையையும் ஒரு நோட்டுப் புத்தகத்தில் ஒட்டி ஒழுங்காக வைத்திருந்தார். இப்படி அதி அக்கறையோடு அவர் செய்திருப்பதிலிருந்தே அவர் பேரில் இருந்த சந்தேகம் வலுப் பெற்றது. அவருக்கு எழுதினேன். 'சமீப காலத்தில் பெரிய அதிகாரிகள் முகாம்களில் தங்கள் சட்டிகளைத் தாங்களே கவனித்துக் கொள்ள வேண்டும். தங்கள் கீழ் வேலை செய்பவர்களிடம் சப்ளை எதிர்பார்க்கக் கூடாது என்று சர்க்கார் உத்தரவிட்டிருப்பது உமக்குத் தெரியாதா? இனி சப்ளை பெறுவதையும் அதற்காகப் பில்கள் வாங்கி அவற்றை அதிகக் கவனத்துடன் ஒட்டி வைப்பதையும் நிறுத்தி விடும்' என்று எழுதினேன். அவ்வளவுதான் அந்த டிப்டி கலெக்டர் இடிந்தே போய் விட்டார். சப்ளை பெறுவதையும் நிறுத்தி விட்டார் என்றே கேள்வி.

இத்தகைய அநுபவங்களெல்லாம் பெற்ற நான் எனக்கு வேண்டியவைகளை என் காம்ப் கிளார்க்கு மூலமே பெற்றுக் கொண்டேன். ஒவ்வொரு தடவையும் ரூபாய் நூறுக்கு அவர் பெயருக்கு செக் கொடுத்து அதற்குக் கணக்கு வைத்துக் கொள்ளச் சொல்வேன். அத்தொகை செலவானதும் மேலும் ஒரு நூறு ரூபாய்க்கு செக் கொடுக்கும் வழக்கம் வைத்திருந்தேன். 'பில்' வாங்குவது என்ற பழக்கமே வைத்துக் கொள்ளாதவனாக வாழ்ந்து ஓய்வுபெற்று விட்டேன்.

ரெவின்யூ இலாகாவில் எது எடுத்தாலும் தாமதம்; எல்லாம் சிவப்பு நாடா செய்கிற காரியம் என்றெல்லாம் புகார் செய்பவர்கள் இருக்கிறார்கள். உண்மைதான். விஷயங்களை மனிதத் தன்மையோடு அணுகத் தெரியாதவர்களே இந்தச் சிவப்பு நாடாவைச் சுவைத்துச் சுவைத்து இன்பம் காணுகிறவர்களாயிருப்பார்கள். அவிழ்க்க முடியாத முடிச்சுடன் போராடுவதை விடுத்து அதை வெட்டி எறியத் தெரிந்தவர்களே உத்தியோகத்தில் வெற்றி காணத் தெரிந்தவர்கள் என்று கூறுவேன் நான். ஒரு கிராமத்தில் பிள்ளைகளுக்குப் பள்ளிக்கூடம் இல்லை. ஒன்றரை மைல் தூரத்திலுள்ள அடுத்த கிராமத்தில் உள்ள பள்ளிக்கூடத்துக்கே பிள்ளைகளெல்லாம் சென்று வரவேணும். ஊருக்கு மேல்புறம் ஒரு பெரிய ஏரி. அந்த ஏரியின் மறுகால் ஊரை அடுத்திருக்கிறது. இதில் வருஷத்தில் எட்டு மாதங்கள் முட்டளவு தண்ணீர் இருக்கும். இந்தத் தண்ணீருக்குள் இறங்கியே சிறு குழந்தைகள் அடுத்த கிராமத்திலுள்ள பள்ளிக்குச் செல்லவேணும். இந்த மறுகாலில் ஒரு சிறு பாலம் கட்டக் கிராமத்தார் பத்து வருஷ காலமாக முயல்கிறார்கள். ஜில்லா போர்டில் அந்தக் கிராமத்திலுள்ளவர்கள் செல்வாக்குடையவர்களாக இல்லாத காரணத்தால் பாலம் கட்டப்படவில்லை. பின்னர் வட்டார அபிவிருத்தித் திட்டத்தின் கீழும் இப் பாலம் கட்ட முயன்றிருக்கிறார்கள். வட்டார அபிவிருத்தி அதிகாரி பாலத்தின் அவசியத்தை உணர்ந்திருக்கிறார். ஆனால் அதற்கு வட்டார அபிவிருத்திப் பணத்தில் ஐம்பது சதவிகிதம் தான் செலவு செய்தல் கூடும், மீதிப் பாதியைக் கிராமத்தார் இருபத்து ஐந்து சதவிகிதமும் ஜில்லா போர்ட் இருபத்து ஐந்து சதவிகிதமும் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பது சட்டம். அந்த ஜில்லாபோர்டிலோ வரவுக்கு மேல் செலவு ஆதலால், எந்த வேலைக்கும் ஜில்லா போர்டார் உதவித் தொகை கொடுத்தல் கூடாது என்பது சர்க்கார் உத்தரவு. இது காரணமாக எனக்கு முன்னிருந்த கலெக்டர் ஜில்லாபோர்டாரிடம் உதவித் தொகை கேட்டு கலெக்டர் ஹோதாவில் கடிதம் எழுதுவார். பின்னும் அவரே ஜில்லார் போர்ட் விசேஷ அதிகாரி ஹோதாவில் — சர்க்கார் உத்தரவைக் குறிப்பிட்டு உதவித் தொகை கொடுத்தல் இயலாது என்று கலெக்டருக்குப் பதில் எழுதுவார். இப்படியே சிவப்பு நாடா வேலை செய்து கொண்டிருந்தது இந்த விவகாரத்தில்.

நான் வேலை ஏற்றபின் ஒரு நாள் இந்தக் கிராமத்துக்குச் சென்றிருந்தேன். பாலம் கட்ட வேண்டிய அவசியத்தை உணர்ந்தேன். ஆபீஸ் கட்டுகளைப் புரட்டி இது வரை நடந்திருந்த விவரங்களையும் படித்துப் பார்த்தேன். வட்டார அபிவிருத்தி அதிகாரியும், மற்றவர்களும் 'ஜில்லா போர்ட் உதவித் தொகை இல்லாமல் ஒன்றும் செய்ய முடியாது' என்றனர். அந்தத் தொகையையும் சேர்த்துக் கிராமத்தார்களே கொடுத்தல் இயலாது என்பதையும் கண்டேன். ஓர் இரவு முழுதும் யோசித்தேன். மறு நாள் காலையில் எஞ்சினியரைக் கூப்பிட்டு அனுப்பினேன். 'ஆமாம், இந்த வேலையை வட்டார அபிருவித்தி வேலையாகச் செய்ய வேண்டாம். ஜில்லா போர்ட் வேலையாகச் செய்ய ஏதாவது ஆட்சேபனை உண்டா?' என்றேன். 'ஆட்சேபனை இல்லை. ஆனால் அதற்குரிய எட்டாயிரம் ரூபாயை ஜில்லா போர்டிலிருந்து கொடுத்தல் இயலாதே' என்றார். 'சரி, எஸ்டிமேட்டை என்னிடம் கொடுங்கள்' என்றேன். கிராமத்துக்காரரில் ஒரு பெரிய பிரமுகரைக் கூப்பிட்டனுப்பினேன். அவரிடம் கன்டிராக்டை ஒப்புவிப்பதாகச் சொன்னேன். 'கிராமத்தார் சேர்த்து வைத்திருக்கும் இரண்டாயிரம் ரூபாய் பெறுமான கற்களையும் எடுத்துக் கொண்டு ஜில்லா போர்டிலிருந்து நாலாயிரம் ரூபாயும் பெற்றுக் கொண்டு வேலையை முடியும்' என்றேன். அப்படியே வேலையும் இரண்டு மாத காலத்தில் முடிந்து விட்டது. பாலத்தின் திறப்பு விழாவையும் 'ஜாம் ஜாம்' என்று நானே முன்னின்று நடத்தி விட்டேன். இதையெல்லாம் பார்த்த எஞ்சினீயர் சொன்னார்: 'சார்! நாங்கள் எல்லாம் காலுக்குத் தக்கபடி செருப்பைத் தறி என்றோம். தாங்களோ செருப்புக்குத் தக்கபடி காலைத் தறி என்று சொல்லிக் காரியத்தை முடித்து விட்டீர்கள்'

# இந்திய சாலைப் போக்குவரத்தில் இன்று உருள்பவை

## WIL சக்கரங்களே

இப்போது முழு உற்பத்திக் கட்டத்தை அடைந்துள்ள வீல்ஸ் இந்தியா லிமிடெட் நிறுவனம், பெட்போர்டு, டாட்ஜ், பார்கோ, லேலண்ட் காமெட், டாடா மெர்ஸிடெஸ்-பென்ஸ், சக்திமான் ஆகிய டிரக்குகளுக்கான சக்கரங்களை முதல் உறுப்புகளாகவே செய்து அளித்து வருகின்றது.

வியாபாரப் போக்குவரத்து வாகனங்களான பஸ்களும், லாரிகளும் இதுவரை வெளிநாட்டிலிருந்து இறக்குமதியான சக்கரங்களையே நம்பியிருந்தன. ஆனால், இன்று அவ்வாகனங்கள் வீல்ஸ் இந்தியா தயாரித்தளிக்கும் சக்கரங்களில் ஓடுகின்றன. பிரிட்டனைச் சேர்ந்த டன்லப் ரிம் அண்டு வீல் கம்பெனி லிமிடெட்டின் தொழில் நுட்பக் கூட்டுறவுடன் தயாரிக்கப்படும் இந்த WIL சக்கரங்கள். அமைப்பிலே புதியதாய், உழைப்பிலே சிறந்ததாய், உறுதியிலே நிகரற்றதாய் விளங்குகின்றன.




எச்சுமைக்கும்
எச்சாலைக்கும்
ஏற்ற சக்கரங்கள்

**வீல்ஸ் இந்தியா லிமிடெட்**
பாடி, சென்னை - 50

FDS/WIL/314A/TH



உன் மாமனார் கெட்டிக்காரர்! தலை தீபாவளிக்கு வரவேணும்னு நேரடியா எழுதறத்துக்குப் பதிலா சுத்தி வளைச்சு வரும்போது ஒரு கிலோ சர்க்கரை வாங்கிக் கொண்டு வான்னு எழுதி இருக்கார்!

★

''என்னப்பா கடைக்காரரே! உன் கடையிலே வாங்கின அனுகுண்டு வெடிக்கவே இல்லையே!''

''வல்லரசுகள்தான் சமாதான ஒப்பந்தத்திலே கையெழுத்துப் போட்டு விட்டார்களே, அதனால்தான் அனுகுண்டு வெடிக்கல்லே! என்னப்பா கடைக்காரரே! சொல்லத் தெரியல்லியே உமக்கு?''




என்று குறைப்பட்டுக் கொண்டார். 'சரிதான் ஐயா! சிவப்பு நாடாவை வெட்டித் தள்ளத் தெரிய வேண்டும். அதற்கு மனிதாபிமானம் வேண்டும். அந்த மனிதாபிமானம் உடையவர்களாய் அதிகாரிகள் வாழ வேண்டும். அதுவே வெற்றியின் ரகசியம்' என்றேன். ஒரு நல்ல காரியத்தை எப்படியோ செய்து முடித்தோம் என்ற திருப்தி யிருந்தது எனக்கு. அது போதாதா?

மோட்டார் ரூட்டுக்குப் பெர்மிட் வழங்குதல், சினிமாக் கொட்டகைக்கு லைசென்ஸ் வழங்குதல், ரைஸ்மில்களுக்கு லைசென்ஸ் வழங்குதல் எல்லாம் கலெக்டர்களுக்கு இப்போது எவ்வளவு தலைவலியைக் கொடுக்கின்றன; அவற்றில் அரசியல்வாதிகள் தலையீடு எவ்வளவு தூரம் நியாயம் வழங்குவதைப் பாதிக்கிறது என்பதைப் பற்றி யெல்லாம் விரிவாகவே நான் கூறுதல் கூடும். என்றாலும் அவைகளைப் பற்றி இக்கட்டுரையில் ஒன்றும் கூறுவதாக இல்லை. நான் ஓய்வு பெறுவதற்கு ஒன்றிரண்டு மாதங்களுக்கு முன்னே நான் நடத்திய ஒரு நாடகத்தைப் பற்றி மட்டும் ஒரு சில வார்த்தைகள் சொல்லி விட்டு நிறுத்திக் கொள்கிறேன்.

ஆண்டுக்கொரு முறை சர்க்கார் சேவகத்தில் உள்ளவர்களுக்கெல்லாம் ஒரு விளையாட்டு விழா நடக்கிறதுண்டு. அந்த விழாவுடன் சேர்ந்து ஒரு கலை நிகழ்ச்சியும் நடத்துவது உண்டு. நான் கலெக்டராக இருந்த காலத்தில் ஒரு நாடகம் நடக்க ஏற்பாடு செய்தேன். நாடகத்துக்குத் தலைமை தாங்க முதலமைச்சரை அழைத்தேன். நாடகத்தை நானே எழுதினேன். 'சர்க்கார் சேவகம் — அன்றும் இன்றும்' என்று நாடகத்துக்குப் பெயர் சூட்டினேன். அன்று அதிகாரிகளெல்லாம் மக்கள் பேரில் அதிகாரம் செலுத்தி ஆண்டார்கள் என்பதை விளக்கியதோடு இன்று மக்கள் எப்படி அதிகாரிகள் பேரில் குதிரை ஏறுகிறார்கள், அதற்கு அரசியல்வாதிகள் எப்படி எப்படி யெல்லாம் உதவுகிறார்கள், நிர்வாகத்தில் அவர்கள் தலையிட்டு எப்படிக் குட்டையைக் குழப்புகிறார்கள் என்றெல்லாம் காட்டினேன். ஏன்? சொல்லப் போனால், நானே ஒரு ரிட்டயர்டு தாசில்தார் வேடம் தாங்கி அந்த நாடகத்தில் நடித்தேன்.

நாடகம் இரண்டு மணி நேரம் நடந்தது. வந்திருந்த மக்கள் எல்லாம் சிரித்துச் சிரித்து வயிறு புண்ணாயினர். கடைசியில் நான் பேசும் போது, ''நாங்கள் எல்லாம் வருஷம் முந்நூற்றி அறுபத்தைந்து நாளும் ஆபீஸ் பேப்பர்களையே கட்டிக் கொண்டு அழுகிறவர்கள். அப்படி அழப் பிறந்தவர்கள் ஒரு நாளாவது சிரித்து மகிழலாமே என்று எண்ணினோம். நாங்கள் சிரிப்புடன் உங்களையும் சிரிக்க வைக்கலாமே என்றுதான் விரும்பினோம். எங்கள் எண்ணம் எவ்வளவு தூரம் நிறைவேறி யிருக்கிறது என்பதை நீங்கள் சிரித்துச் சிரித்து எங்களுக்கு உற்சாகமூட்டியதிலிருந்து தெரிந்து கொண்டேன். நாடகத்தில் நல்ல நடிப்பு இருந்தது என்றால் பாராட்டுக்களை நடித்த நண்பர்களுக்குக் கொடுத்து விடுங்கள். ஏதாவது குறையிருந்தால் அதை எனக்குத் தள்ளுங்கள். நான்தான் இந்த நாடகம் எழுதியவன்'' என்று கூறினேன். தலைமை வகித்த முதலமைச்சர் நடிகர்களையெல்லாம் பாராட்டி விட்டுச் சொன்னார்: ''தொண்டைமான் சிறந்த ஓர் எழுத்தாளர், பேச்சாளர் என்பதை எல்லாரும் அறிவோம். ஆனால் அவர் ஒரு சிறந்த நடிகருங்கூட என்பது எனக்குத் தெரியாது. மிகவும் நன்றாக நடிக்கிறார். மற்றவர்களையும் நடிக்கப் பழக்கியிருக்கிறார். இப்படி ஒரு நாடகத்தை எழுதி அதை நடிக்க வெறும் திறமை மட்டும் போதாது. மிக்க துணிச்சலும் வேண்டும். அது அவரிடத்தில் நிறைய இருக்கிறது. இந்த 'எழுத்தாளர் கலெக்டரை' நான் பாராட்டுகிறேன்'' என்று முடித்தார்.

கலெக்டர் போன்ற அதிகாரிகள் தங்கள் பணியைச் சிறப்பாகச் செய்ய வேணுமானால் அவர் நேர்மையானவராகவும் திறமை மிக்கவராகவும் மட்டும் இருந்தால் போதாது; மனிதாபிமானமும் தைரியமும் உள்ளவராய் விளங்க வேண்டும். இந்த மனிதாபிமானத்தையும் தைரியத்தையும் பெற எனக்கு ரொம்பவும் உதவியது எழுத்துத் துறை. ஆகவேதான் 'எழுத்தாளர் கலெக்டர்' என்று பாராட்டப்பட்டதை நான் பெரிதாக மதிக்கிறேன்.

# உள்ளமும் உவகையும்

ஸோமாஸ்

விமலாவின் உள்ளம் மகிழ்ச்சியால் பொங்கியது. நிமிஷத்துக்கு நூறு தடவை கண்ணாடியின் எதிரில் நின்று அழகு பார்த்துக் கொண்டாள்.

இன்று 'அவர்' வருகிறார், தலைதீபாவளிப் பண்டிகைக்காக. விமலாவுக்குக் கல்யாணமாகி, பல மாதங்களாகியும் அவள் இன்னும் தன் கல்யாணத்துக்குப் பிறகு 'அவ'ரைப் பார்க்கவில்லை. 'அவ'ரைப் பார்க்கவில்லையே என்ற குறை அவள் உள்ளத்தை உறுத்திக் கொண்டிருந்தாலும், இந்தப் பிரிவிலும் தனியானதோர் இன்பம் இருந்தது. 'அவர்' சென்னையிலும், அவள் சுசீந்திரமாக இருந்ததனால்தானே நினைந்தோறும் கடிதம் எழுதிக் கொள்ள முடிந்தது!

விமலாவின் கணவன் விசுவம் சென்னையில் ஒரு பெரிய வாரப் பத்திரிகையில் உதவி ஆசிரியனாயிருந்தான். விமலாவைக் கைப் பிடித்ததிலிருந்து தன் அன்பை யெல்லாம் கடிதத்தின் மூலம் வெள்ளமாய்ப் பொழிந்து வந்தான்.

விமலாவும் பத்தாவது வகுப்பு வரையில் படித்தவள். அத்துடன் தமிழ்ப் பத்திரிகைகளில் ஒன்றுகூட விடாமல் படிப்பவள். பேனாவில் மைக்குப் பதிலாகத் தன் உள்ளத்து ஆசையையெல்லாம் கொட்டிக் கணவனுக்குக் கடிதம் எழுதுவாள். ஒன்று விட்டு ஒரு நாள் விமலாவுக்கு விசுவத்திடமிருந்து கடிதம் வரும். விமலாவும் விடாமல் பதில் எழுதுவாள்.

விசுவம் சென்னையில் அப்பா, அம்மா, அண்ணா, மன்னி, தங்கைமார்கள் இருவர் எல்லோருடனும் ஒரே குடும்பமாக இருந்து வந்தான்.

விமலாவும் பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவள்தான். அப்பா, அம்மா, இரண்டு தம்பிமார்கள், நான்கு தங்கைமார்கள் ஆகியவர்களுடன் கூரில் அவர்கள் குடும்பம் நடந்து வந்தது.

விமலா — விசுவம் திருமணத்தைக் காதல் திருமணம் என்றுதான் கூற வேண்டும். பத்திரிகைகளில் அவன் கதைகளைப் படித்துப் பைத்தியமாகியிருந்த விமலாவை விசுவம் பெண் பார்க்க வந்த போது அவன் மலைத்துப் போய் விட்டான். அவ்வளவு கம்பீரமாயிருந்தான் விசுவம்.

விமலாவின் தந்தை பெரிய சம்சாரியானாலும் நிலபுலன்கள் இருந்தன. ஏதோ உத்தியோகத்திலும் இருந்தார். விசுவத்துக்குத் தனிக்குடித்தனம் போட்டு விட வேண்டும் என்று ஆசை. அதற்கு அவன் பெற்றோர்கள் சம்மதிக்கவில்லை. சென்னையில் வீடும் கிடைக்கவில்லை. இவ்விடைஞ்சல்களினால் அவர்கள் இருவருடைய அன்பும் அதிகமாக வளர்ந்தது.

'அவர்' வந்தால் எப்படி நடந்து கொள்ள வேண்டும், என்ன பேச வேண்டும், என்றெல்லாம் தீபாவளிக்குப் பதினைந்து நாட்கள் இருக்கும்போதே விமலா மானசீகமாக ஒத்திகை நடத்திப்பார்த்துக் கொண்டு தயாராயிருந்தும் 'அவர்' வந்ததும் அந்தப் பாழும் வெட்கம் வந்து எல்லாவற்றையும் பாழாக்கி விட்டது. விசுவம் தன் மாமனார் வீட்டின் வாசல் புறத்து அறையில் விமலாவுக்காகக் காத்துக் கொண்டிருந்தான். அது பெரிய அறை; தனி அறைதான் என்றாலும், அந்தப் பெரிய குடும்பத்தின் அங்கத்தினர் ஒவ்வொருவருக்கும் அது பொது அறையாக இருந்தது. விமலாவின் தங்கைமார்களின் உடைகள் அங்கேதான் இருந்தன. வீட்டு வெள்ளிப் பாத்திரங்கள் வைக்கும் பெட்டி அங்குதான் வைக்கப் பட்டிருந்தது. அவள் அப்பாவின் பெட்டியும் அங்குதான் இருந்தது.

மனக் கண்ணால் விமலாவையே தரிசித்துக் கொண்டிருந்த விசுவம் வளையல் ஒலி கேட்டு நிமிர்ந்து உட்கார்ந்தான். விமலா டிபன் தட்டை வைத்தாள். விசுவம் 'பைக்'கென்று பாய்ந்து அவள் கையைப் பற்றினான். விமலாவின் முகம் நாணத்தால் சிவந்தது. அந்தச் சுவாரசியமான தருணத்தில், "அக்கா! என் பாவாடையையும், தாவணியையும் எடுத்துக் கொடேன். என் பெட்டியில் வைத்திருக்கிறேன்....!" என்று கூறிக் கொண்டே விமலாவின் தங்கை மீரு ஒருக்களித்திருந்த கதவின் வழியாகக் கையை நீட்டினாள். உள்ளே சட்டென்று காட்சி மாறியது. விசுவத்திடமிருந்து விமலா விடுபட்டு ஓடிவிட்டாள்.

அதற்குப் பிறகு விமலாவின் தம்பி புத்தகங்களை எடுக்க வந்தான். அவனுக்கு அடுத்தபடியாக விமலாவின் இரண்டாவது தங்கை சரோஜா வந்தாள். அப்புறம் பிரேமா. இனி ஓர் இடைஞ்சலும் இராது எனப் பெரு முயற்சி செய்து விமலாவுக்குத் தூது அனுப்பி வைத்துப் பேச முயன்ற சமயம் பார்த்து விசுவத்தின் மாமியார், நாணிக் கோணிக் கொண்டு கதவோரத்தில் நின்றுகொண்டு "......விமலா! வெள்ளிப் பாத்திரங்கள் கொஞ்சம் எடுக்கணும்...! ' என்று ரகசியம் பேசுவது போன்ற குரலில் கூறினாள். உள்ளே மீண்டும் காட்சி மாறியது!

விடாமுயற்சியாக விமலாவுடன் பேச ஆரம்பித்தபோது "என்ன மாப்பிள்ளே, சாப்பிட நாழியாகிறதே..!" என்று கூறியபடியே உள்ளே மாமனார் நுழைந்தார். அவ்வளவுதான்; காட்சிக்குத் திரை விழுந்தது. விமலா உள்ளே ஓடிவிட்டாள்.

ஸ்நானம் முடிந்து, சாப்பாடும் முடிந்தது. ஆனால் விமலாவின் பேட்டிதான் அவனுக்குக் கிடைக்கவில்லை.

விடிந்தால் தலை தீபாவளி.

இரவு மூன்று மணிக்கே விமலாவின் தம்பிமார்கள் பட்டாசு வெடிக்க ஆரம்பித்து விட்டார்கள். எதிர்பார்த்தபடியே தூக்கம் வராமல் படுக்கையில் புரண்டு கொண்டிருந்த விசுவத்துக்குக் கொஞ்ச நஞ்சம் இருந்த தூக்கக் கலக்கமும் போய் விட்டது. பத்திரிகைக் காரியாலயத்தில் வேலைபார்ப்பவனாதலால் நிம்மதியாக ஒரு வாரம் கூட லீவு எடுத்துக் கொள்ள முடியாது. இப்பொழுதுகூட அவனுக்கு நான்கு நாட்கள் தான் லீவு கிடைத்தது. கிடைத்த லீவில் விமலாவுடன் நாலு வார்த்தைகள் கூடப் பேச முடியவில்லையே!

தீபாவளிக்கு மறுநாள் காலை விடிந்ததும் விசுவத்துக்குக் கொஞ்சம் நம்பிக்கை பிறந்தது. மைத்துனன்மார்களும், மைத்துனிமார்களும் பள்ளிக்கூடம் போய் விடுவார்கள். அப்புறம் விமலாவுடன் தனித்துப் பேச நிச்சயம் 'சான்ஸ்' கிடைக்கும் என்று நினைத்து அறையில் அவளுக்காகக் காத்திருந்தான்.

அப்பொழுது வாசலில் ஒரு குதிரை வண்டி வந்து நின்றது. அதிலிருந்து இறங்கியது வேறு யாருமில்லை. விமலாவின் அக்காளும் அத்திம்பேருந்தான். நெல்லிக் குப்பத்திலிருந்து வருகிறார்கள். விமலாவின் தம்பிகளும், தங்கைகளும் 'அக்கா, அக்கா!' என்று குரல் எழுப்பிக் கொண்டு வாசலுக்கு ஓடினார்கள்.

வாசற்புறத்து அறையில் வண்டியிலிருந்து பெட்டிகளும், படுக்கை, மூட்டைகளும் இறக்கப்பட்டன. மறு நிமிஷம் விமலாவின் அக்காவும் அவள் கணவனும் உள்ளே நுழைந்தனர். திடீரென்று லீவு கிடைத்ததாம். புறப்பட்டு வந்து விட்டார்களாம்.

விசுவத்தின் முகம் களை இழந்து போய் விட்டது. அன்றைக்கு இராத்திரி வண்டிக்கே சென்னைக்குப் புறப்பட்டு விட்டான்.

ஊருக்குப் புறப்படும்போது விசுவம் விமலாவிடம் பிரியாவிடை பெற்றுக் கொண்டு, "....விமலா....! கடிதம் எழுது. நானும் எழுதுகிறேன்....!" என்று கூறினான்.

விமலா கண்கலங்கத் தலையசைத்தாள்.

இரண்டு நாட்களுக்கெல்லாம் விமலாவுக்கு ஒரு கடிதம் வந்தது. இரட்டிப்புத் தபால் தலைகள் ஒட்டப்பட்டுப் பெரிய கடிதமாயிருந்தது. விமலா அதை வாங்கிக் கொண்டு உள்ளே ஓடினாள். மறு நாள் விமலாவின் அன்பை யெல்லாம் சுமந்து கொண்டு ஒரு பெரிய கடிதம் விசுவத்தை நாடிச் சென்றது.





# வாழப் பிறந்தவன்

காலை ஒன்பது மணி. நடிப்புக் கலைஞன் செல்லப்பா சுறுசுறுப்பாகத் தனது 'மேக்கப்'பில் ஈடுபட்டிருந்தான். படப் பிடிப்புக்கோ, நாடக மேடைக்கோ தேவையான 'மேக்கப்' அல்ல அது. வாழ்க்கை என்ற பெரிய நாடக மேடைக்கு, பிழைப்புத் தேடி அலைவதற்காக அவன் செய்துகொள்ளும் வழக்கமான முன்னேற்பாடு.

மேக்கப் சாமான்களைச் சுற்றிப் பார்த்து ஒரு முறை அவன் முகத்தைக் கவனித்துக் கொண்டான். எதிரிலிருந்த நிலைக் கண்ணாடி புத்தம் புதிதாக இருந்தபோது, அதன் எதிரில் அமர்ந்து கொண்டு அவன் முகத்தில் நவரச பாவங்களையும் வரவழைத்துப் பயிற்சி செய்திருக்கிறான். முதல் தரமான குணச்சித்திர நடிகன் அவன்.

சுருள் சுருளான கிராப்பு, கவர்ச்சி கலந்த விழிகள், எடுப்பான மூக்கு, அழகிய வட்ட முகம் இவையனைத்தும் சேர்ந்து அவனுக்கு நாடக மேடையில் பெரும் புகழ் தேடித் தந்தன. நடிப்புக் கலை அவனுடன் பிறந்து வளர்ந்த கலை. வயதும் முப்பதுக்குள்தான் இருக்கும்.

செல்லப்பா தன் நிலைக் கண்ணாடியை உற்றுப் பார்த்தான். ஓர் ஓரத்தில் பாதரசம் கரைந்து போய், மறு ஓரத்தில் விரிசலும் கண்டிருந்தது. ஆறு மாதங்களாகவே ஒரு புதுக் கண்ணாடி வாங்க வேண்டும் என்ற ஆவல் அவனுக்கு.

வாசனைத் தைலம் இருந்த சீசாவில் இப்போது தேங்காய் எண்ணெய் இருந்தது. அதை எடுத்துக் கையில் சாய்த்துப் பார்த்தான். ஒரு சொட்டு எண்ணெய் பாட்டிலை விட்டு வெளியில் வராமலே கண்ணாமூச்சி காட்டி விளையாடியது. அதைக் கோபமாகக் கீழே வைத்து விட்டு, பச்சைத் தண்ணீரில் தன்னுடைய சுருட்டைத் தலைக்குப் பதம் போட்டுக் கொண்டான்.

பிளாஸ்டிக் சீப்பின் மத்தியில் நாலு பற்களைக் காண வில்லை. தன்னுடைய பற்களை நறநற வென்று கடித்துக்கொண்டான். அருகில் கிடந்த கந்தல் துணி 'டர்க்கி டவலாக' அவன் முகம் துடைக்க உபயோகப் பட்டது. முகத்தில் பூசுவதற்குப் பௌடர் இருக்கிறதா என்று



ஆராய்ந்தான். தகர டப்பாவின் மூலையில் ஒரு சிறிது ஒட்டிக் கொண்டிருந்தது. அதை எடுத்துத் தன் முகத்தில் தேய்த்துக் கொண்டான்.

சலவை மடிப்புக் கலையாத ஓரே ஒரு சில்க் சட்டை அவனிடம் உண்டு. வெளியிலிருந்து வந்தவுடன் அவன் அதைப் பெட்டிக்கடியில் மடித்து வைத்து விடுவது வழக்கம். இப்போது அதை எடுத்துப் போட்டுக் கொண்டு தன் பனியனின் கிழிசலை மறைத்தான். மருக்கொழுந்து 'செண்ட்' மட்டிலும் ஒரு குப்பி நிறைய இருந்தது. அதை ஒரு விரலால் இலேசாகத் தொட்டு நாசூக்காகச் சட்டை முழுதும் தடவிக் கொண்டான்.

ஆயிற்று: 'மேக்கப்' முடிந்து மருக்கொழுந்து மணமும் கமகமவென்று எழுந்தது. கண்ணாடியில் தெரிந்த தன் முகத்தைப் பார்த்து ஒரு புன்முறுவலும் பூத்துக் கொண்டான். முக்கியமான மனிதர்களைப் பார்க்கும்போது உதிர்க்க வேண்டிய புன்னகைக்கு ஒத்திகை இது.

அடுத்த அறையில் கதாநாயகி காந்தம் தன் குடிபடைகளான நான்கு குழந்தைகளும் ஒரே சமயத்தில் புரட்சி செய்யவே, அவைகளின் மீது கடுமையான அடக்குமுறைப் பிரயோகம் செய்து கொண்டிருந்தாள். பத்து வீடுகளுக்குக் கேட்கும்படியான குரலை அவர்கள் எழுப்பியும், செல்லப்பாவின் செவிகளில் மட்டும் எதுவுமே விழவில்லை.

அடிக்கடி முணுமுணுக்கும் பாடலை, அவன் முணு முணுத்துக் கொண்டே தனது அலங்காரத்தை முடிக்கத் தொடங்கினான்.

**"துன்பம் நேர்கையில் யாழெடுத்து - நீ இன்பம் சேர்க்க மாட்டாயா? - கண்ணே இன்பம் சேர்க்க மாட்டாயா?"**

கவிஞர் பாரதிதாசனின் இந்தப் பாடலை அவன் மேடையில் பல முறை திரும்பத் திரும்பப் பாடி ரசிகர்களின் பாராட்டுக்களைப் பெற்றிருக்கிறான். கொட்டகை அதிர்வது போல் கை தட்டுவார்கள். இதே பாடல்தான் நடிகை காந்தத்தையும் அவனுக்கு மனைவியாக்கியது. இந்தப் பாட்டையும் இதற்கான நடிப்பையும் பார்த்து விட்டுத்தான் ஒரு பட முதலாளி அவனைத் தமது படம் ஒன்றுக்கு ஒப்பந்தம் செய்து கொண்டார்.

நாடக மேடையை விட்டு நட்சத்திரமாகத் திரையில் ஜொலிப்பதற்கென்றே சென்னைக்கு வந்தவன் அவன்.

தன்னை மறந்து பாடிக் கொண்டிருந்த செல்லப்பா, கைக் கடிகாரத்தில் மணியைப் பார்க்கும் நினைவில் மணிக்கட்டைத் தன் கண்ணெதிரே உயர்த்தினான். மணிக்கட்டில் கடிகாரமில்லை. கடிகாரம் கட்டியிருந்த வடு மட்டிலும் கையில் வெள்ளையாகத் தெரிந்தது. ஆமாம், கடிகாரம் மார்வாடிக் கடைக்குப் போய் வெள்ளிப் பணமாக மாறி, பிறகு மளிகைக் கடைக்குள் புகுந்து கொண்டு இரண்டு நாட்களாகி விட்டன.

பாட்டும் பாதியில் அறுபட்டு நின்றது. கண்ணாடிக்குள் மற்றொரு உருவம் தெரியவே அதைக் கவனித்தான். அவனுடைய மனைவி காந்தம் கதவோரமாக நின்று கொண்டிருந்தாள்.

"வாங்க சாப்பிடலாம்; குழந்தைகளைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பிச்சிட்டேன்" என்றாள் அவள்.

அவள் பேச்சு செல்லப்பாவின் செவிகளில் விழவில்லை. அவள் உருவம் அவன் மனத்தில் பதிந்து நின்றது. நாடக மேடையில் கதாநாயகியாகத் தோன்றி ஆயிரக்கணக்கான ரசிகர்களைத் தன் அழகால் அலைக்கழித்தாளே, அதே காந்தம் தானா இவள்?

அவளுடைய இளமை இப்போது அவளிடமில்லை; அழகில்லை; நகை நட்டு, துணி மணி, உற்றார் உறவினர், உடல் தெம்பு எதுவுமே இல்லை. எல்லோரையும் எல்லாவற்றையும் உதறி விட்டு அவனையே தஞ்சம் என்று அடைந்தவள் அவள். பலன்? நான்கு குழந்தைகள்; வாரத்தில் நான்கு நாள் அரைப் பட்டினி!

"காதிலே விழுகலியா? சாப்பிட வாங்க!"

"என்ன? என்ன சொன்னே?...."

திரும்பவும் அவனைச் சாப்பிடக் கூப்பிட்டாள் அவள்.

"சாப்பாடு கூட இருக்கா?"

காந்தம் பொங்கி வந்த தன் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, அவனுடைய கரத்தை இறுகப் பற்றிச் சமையலறைக்கு அவனை அழைத்துக் கொண்டு சென்றாள். உட்கார வைத்து உணவைப் பரிமாறினாள்.

வேலை வேட்டைக்காக,—தயாரிப்பாளர்கள், டைரக்டர்கள், பெரிய நடிகர்கள் முதலியோரைச் சந்தித்து,



# இதயத்தில் எழுதிவிடு

இளம்பாரதி

இதயமெனும் பேரேட்டில்
இயன்றவரை கவியெழுது.
துதிப்பாடல் கேட்டாலும்,
தூற்றுமொழி கேட்டாலும்
விதப்படுத்தி ஒதுக்காமல்
வேண்டாமை விரும்பாமல்
எதையெழுத நேர்ந்தாலும்
இதயத்தில் எழுதிவிடு!

புதுமைக்கு வித்திட்டுப்
புகழுக்குப் பாதையிடும்
இதயத்தின் பரப்பளவோ
எழுதுமட்டும் விரிவடையும்!
உதிக்கின்ற கருத்துக்கள்
உலகறிய வெளிவருமுன்
இதயத்துப் பேரரங்கில்
ஒத்திகையாய் இயக்கிவிடு!

உலகுறவின் அனுபவத்தை
உள்ளத்தில் ஏற்றுவதால்
புலமைக்கும் தேறாத
புதுக்கவிதை பிறப்பெடுக்கும்.
சிலகாலம் கருப்பைக்குள்
சிறையடங்கி வளரும்புள்
வலிமையினைப் பெற்றுயிர்த்து
வானறியப் பறக்காதோ?

நெஞ்சக்குள் கனவெரிய
நெடுமூச்சுத் தொடர்ந்துவரக்
கொஞ்சிவரும் சொற்களுடன்
கூடிநின்று முயங்குவதால்
பிஞ்சுமனச் சிறகடித்துப்
பிறந்துவரும் கவிச்செல்வம்
புன்சிரிப்பால் உணர்த்தழுவும்;
புகழுடம்பில் உயிர்சேர்க்கும்!

வேலை கேட்பதற்காக — வெளியில் கிளம்பினான் செல்லப்பா.

* * *

நாடக மேடையில் கதாநாயகனாக விளங்கிய செல்லப்பா இப்போது 'துணை நடிகன்' என்ற பெயரோடு திரையில் வராமல் நிற்பதற்குக் காரணம் என்ன?

மேடையில் அவனுடைய நடிப்பையும் புகழையும் கண்ட ஒரு தயாரிப்பாளர் அவனுக்கு ஆசை வார்த்தைகள் கூறி அவனைச் சென்னைக்கு அழைத்து வந்தார். தம்முடைய படத்தில் கதாநாயகனாகவும் நடிக்கச் செய்து படமும் எடுத்தார். பத்திரிகையாளர்களை அழைத்து வந்து செல்லப்பாவைப் பற்றிப் பக்கம் பக்கமாக எழுத வைத்தார். படமும் பாதிக்கு மேல் வளர்ந்தது. திரையுலகெங்கும் அவனுடைய நடிப்புத் திறமையைப் பற்றிய பேச்சு.

இன்னும் பல தயாரிப்பாளர்கள் விழுந்தடித்துக் கொண்டு அவனை நாடி வந்தார்கள். முன் பணத்தை மூட்டை கட்டி வைத்துக் கொண்டு அவனிடம் பேச்சு வார்த்தைகள் நடத்தினார்கள். பங்களா விற்பனைத் தரகர்களும், கார் விற்பனைத் தரகர்களும், கடன் வாங்கித் தரும் தரகர்களும் அவனைச் சூழ்ந்து கொண்டார்கள். பேச்செல்லாம் ஆயிரக்கணக்கிலும் லட்சக் கணக்கிலுமே இருந்தன.

"இந்த ஒரு படம் முடியட்டும். இது முடியும் வரையில் வேறெதையும் ஒப்புக் கொள்வதில்லை என்று என் தயாரிப்பாளருக்கு வாக்களித்திருக்கிறேன்" என்று அடக்கமாகக் கூறி வந்தவர்களைத் திருப்பினான் செல்லப்பா.

"படம் முடிந்தால் நீங்கள் ரெண்டு லட்சம் கேட்பீங்க! பிறகு உங்களைக் கண்ணுலே பார்க்கறது கடவுளைப் பார்க்கிறப்பிலே ஆயிடும்" என்று குறைப்பட்டுக் கொண்டார் ஒரு தயாரிப்பாளர்.

"அப்படியெல்லாம் ஏதும் நடக்காது; எனக்குப் பேராசை கிடையாது" என்று கூறினான் செல்லப்பா.

திடீரென்று அவனைப் பற்றி வேறு விதமாகப் பேச்சுக் கிளம்பத் தொடங்கியது: ஒரே படத்தில் நட்சத்திரமாகி வானத்தின் உச்சிக்குப் போய், எல்லோரையும் ஆட்டி வைக்கத் திட்டமிடுகிறான் என்று!

பலன்?

அவனுடைய தயாரிப்பாளர் ஒரு நாள் அவனிடம் வந்து இந்த அதிர்ச்சி தரும் செய்தியை வெளியிட்டார். படத்தை முடிப்பதற்கு அவரிடம் பணம் இல்லையாம். திரையிடுகிறவர்களும் நட்சத்திரங்களையே கேட்கிறார்களாம். கடன் கொடுக்கத் தயாராயுள்ள சௌகார்ப்பேட்டை சேட்ஜீகூட, நட்சத்திரங்களுக்காகத்தான் கடன் கொடுப்பாராம்.

"சேட்ஜீ கதையை மாத்தச் சொல்றார்; கதாநாயகனை மாத்தச் சொல்றார்; இந்த நிலையிலே படத்தை என்னாலே முடிக்க முடியாது. நீங்க வேணும்னு, நான் இதுவரையில் கொடுத்திருக்கிற பணத்துக்காக இதிலே துணை நடிகரா நடிக்கலாம்."

ஒரு மனிதரிடம் கொடுத்த வாக்கை நிறைவேற்ற முயன்றதற்காக இவ்வளவு பெரிய தண்டனையா! எந்த மனிதருக்காக அவன் வாக்குக் கொடுத்தானோ, அவரே வந்து படத்தை அவனை வைத்து முடிக்க முடியாது என்கிறார்.

செல்லப்பாவின் தலை சுற்றியது.

பங்களாத் தரகர்கள் பதுங்கினார்கள். கார்த் தரகர்கள் காத வழி போனார்கள். பண மூட்டையுடன் படையெடுத்த பிரமுகர்கள் பராமுகமானார்கள்.

அவன் அந்தப் படத்தில் துணை நடிகனாக நடித்தான். ஆனால், படம் முடிந்து வெளியில் வரும் சமயம் அவன் நடித்த பகுதிகளும் வெட்டியெடுக்கப்பட்டு விட்டன. சில காட்சிகளில் வந்தாலும், அவனுடைய நடிப்புத் திறன் வெளிப்பட்டு விட்டால் என்ன ஆவது என்ற கவலை!

"நடிக்கிறாங்க! எல்லாருமே இங்கே நடிக்கிறாங்க!" என்று தனக்குள் புழுங்கினான் செல்லப்பா.

கார்களின் கூட்டம் அவனைச் சூழ்ந்து கொண்ட நாட்கள் கனவென மறைந்தன. அவன் கால் நடை நடந்து, முன்பு அவனை நாடி வந்தவர்களிடம் படையெடுத்தான். பல படங்களில் துணை நடிகனாக நடித்தான். ஒரு சிலர் ஒப்புக்கும் பணம் கொடுத்தார்கள். சிலர் வாக்குறுதியோடு நிறுத்திக் கொண்டார்கள். சிலரைப் படம் வெளி வந்த மறு நாளே சென்னையில் காணவில்லை!

* * *

மாலை ஐந்து மணி.

செல்லப்பா வரவேண்டிய பாக்கிப் பணத்தைக் கேட்டு வாயிழந்து விட்டு, புதிய முயற்சிகளில் நிராசை பெற்று, தன்னுடைய 'மேக்கப்'பெல்லாம் கலைய வீடு நோக்கி நடந்து கொண்டிருந்தான்.

தெருவோரங்களில் அங்கங்கே நூற்றுக்கணக்கான துணை நடிகர்கள் அவன் கண்களில் பட்டார்கள். நாடகக் கம்பெனிகள் முறிந்ததால், திரையை நாடி வந்தவர்கள், செல்லப்பாவைப் போல் வந்தவர்கள், பத்திரிகையில் வரும் சினிமாப் புரளிகளை நம்பி நட்சத்திரங்களாக வந்தவர்கள் இப்படிப் பலப்பலர்.

ஒரு பக்கம் வேலையற்ற பெருங் கூட்டம்; தொழிலும் பிழைப்புமற்ற பெருங் கூட்டம். மற்றொரு பக்கம் காயும் வெயிலில் படங்களைப் பார்க்க முண்டியடித்துக்கொண்டு நிற்கும் ரசிகர் கூட்டம். கையிலிருக்கும் பணத்தை விருப்பத்தோடு கொடுக்கத் துடிக்கும் பெருங் கூட்டம்.

'விசித்திரமான உலகம் இது! இவ்வளவு பணமும் எங்கே போகிறது?' என்று எண்ணினான் செல்லப்பா.

"வாங்க, அண்ணாச்சி! வாங்க! வாங்க!" என்ற குரல் கேட்டுத் திரும்பினான் செல்லப்பா.

அங்கே நடிகர்கள் பலருக்கு மத்தியில் 'வில்லன் வீராசாமி' நின்று கொண்டிருந்தான். அவன் நடிப்பில்தான் வில்லனே தவிரக் குணத்தில் தங்கக்கம்பி!

"அண்ணே! உங்களோட நடிப்பிலே குறைச்சலா? இல்லே, உங்களோட உருவத்திலே ஏதும் கோளாறா? நீங்களும் என்னே, இப்ப எங்களோடு சேர்ந்து கஷ்டப் படறீங்க?"

"விட்டுத்தள்ளு தம்பி!" என்றான் செல்லப்பா. "வேறே பேச்சுப் பேசு!"

"நாடக மேடைகளும் மறைஞ்சு போயிகிட்டிருக்கு. அதோட குரல்வளையைப் புடிக்க தெருக்கூத்து. அது குத்துயிரும் குலை உயிருமாகக் கிடக்குது.

ஆசைப்பட்டு வந்தோம்; அவதிப்பட்டறோம்'' என்றான் அவன்.

செல்லப்பாவுக்கு ஏதும் பதில் சொல்லத் தோன்றவில்லை. கூட்டத்தில் நின்ற மற்றொரு இளைஞன், ''அப்படின்னு நமக்கு வேறே என்னதான் வழி?'' என்று கேட்டான்.

இந்தக் கேள்வியைத்தான் அந்தக் கூட்டத்திலிருந்த ஒவ்வொருவரும் தங்கள் தங்களுக்குள் கேட்டுக் கொண்டிருந்தார்கள். இதைக் கேட்டு யாரோ கேலிச் சிரிப்பு சிரிக்கும் சத்தம் கேட்டது. சிரித்தவன் நகைச்சுவை நடிகன் சிங்காரம். அவன் நன்கு படித்தவன். உலகத்தை நன்றிக் கவனித்தவன். மேடைக்கு அவன் வந்து பேசினால் கேட்பவர்கள் விழுந்து விழுந்து சிரிப்பார்கள். சிந்தனைப் பேச்சுக்கும் பஞ்சமில்லை. அவனுடைய திறமையும் தகுதியும் நாணயமுந்தான் அவனை இப்படித் தெருவில் அலையச் செய்தன.

''என்னே சிரிக்கிறீங்க?'' என்றான் வீராசாமி.

''நாம வாழ்ந்தா யாருக்கு லாபம்? வாழாட்டி யாருக்கு நஷ்டம்? நம்மைப் பத்தி யார் எதுக்குக் கவலைப்படணும்?''

''நம்மோட கலை அப்புறம் என்ன ஆகும்?''

''கலையாவது கத்திரிக்காயாவது! இதெல்லாம் நம்மை நாமே ஏமாத்திக்கிற வித்தை! உண்மையா இப்போ நடந்துக்கிட்டிருக்கிறது என்ன தெரியுமா? கொலை!... மனுஷனை அடிச்சுக் கொன்றாலோ, சுட்டுக் கொன்றாலோ தான் அது சட்டப்படி குற்றம்! பட்டினி போட்டுத் தாராளமாகச் சிறுகச் சிறுகக் கொலை பண்ணலாம்! எந்தச் சட்டமும் அதைப் பத்திக் கவலைப்படாது!''

செல்லப்பாவின் நாடி நரம்புகளில் மின்சாரத்தின் அதிர்ச்சி ஏற்பட்டது. சுற்றியிருந்த எல்லோரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள்.

சிங்காரம் தொடர்ந்தான்:

''மனுஷனுக்கு நியாயம், தர்மம், கலை, இலக்கியம் இந்த மாதிரி விஷயங்களைப் பத்தி நினைக்கவே இப்ப நேரமில்லை. சாமர்த்தியமுள்ளவன் திமிறு குறுக்கு வழியிலே மகாராஜனாகப் பார்க்கிறான்..... நாமெல்லாம் மனுஷனோட மனசை உயர்த்தி உல்லாசமா வைச்சிருக்கிற கலையைக் கத்துக்கிட்டவங்க. மனசை உயர்த்துற வேலைக்கு இனி நம்ப நாட்டிலே இடமே இல்லை. மனத்தைக் கெடுத்துப் போதையூட்டினால் திமிர்ப் பணக்காரனாகலாம். ஏமாற்றினால், பொய் சொன்னால், திருடினால் பிழைக்கலாம்.''

''போங்கண்ணாச்சி! உங்களுக்கு வாழ்க்கையிலே வெறுப்பு ஏற்பட்டுப் போச்சு!'' என்றான் வீராசாமி.

''இதோ பாரு! அன்னப் பறவையின்னு ஒரு பறவை உலகத்திலே இருந்திச்சாம். இப்போ அது எங்கே இருக்கு? மயிலுக்கும் குயிலுக்கும் கூட இனிமே இங்கே இடமிருக்காது! நடிக்கிறவன், சிலை செதுக்குகிறவன், சித்திரம் வடிக்கிறவன், ஆடுறவன், பாடுறவன், கவி எழுதுறவன், கதை கட்டுறவன் இவனெல்லாம் 'அழிக்கப்படுகிற இனம்' என்கிற



''வெறி நாய்ன்னு ரீங்க ஒரு ஸ்டண்ட் படம் எடுத்துக்கிட்டு இருந்தீங்களே, அது என்ன ஆச்சு?''
''கையைக் கடிச்சிட்டதுங்க, கம்பெனியை மூடிட்டேன்!''

பட்டியலிலே சேர்க்க வேண்டியதுதான். பெரிய பெரிய யந்திரங்களுக்குத் தீனி போடறதுக்கு நாம இரையாகக் கிடைச்சிருக்கோம்! தொழில் புரட்சி நடக்குதாம்! நம்ப தேசம் உலகத்திலே படம் பிடிப்பிலே ரெண்டாவதா நிக்குதாம்! கதையைக் கேட்டீங்களா?''

செல்லப்பாவுக்கு அதற்குமேல் அங்கு நிற்கப் பிடிக்கவில்லை. வீட்டுக்கு வந்தான். வரும் வழியெங்கும் திரும்பிய பக்கமெல்லாம் ஐந்தடி உயரமுள்ள மனிதர்களை ஐம்பதடி உயரத்துக்கு இயந்திரங்களின் உதவியால் படம் போட்டு நிறுத்தியிருந்தார்கள்.

இரவு பன்னிரண்டு மணி:

செல்லப்பா உண்ணவில்லை; உறங்கவில்லை; காந்தத்துக்கு அவன் முகத்தைப் பார்ப்பதற்கே பயமாக இருந்தது. அவனிடம் ஏதும் பேசக் கொடுக்காமல் குழந்தைகளை ஒருவிதமாகச் சமாளித்து உறங்க வைத்தாள். நான்காவது பையன் பிறந்து ஐந்து ஆண்டுகளாகின்றன. அதற்குப் பிறகு செல்லப்பா அங்கு துறவியைப் போலவே வாழ்ந்தான்.

இரவின் மங்கலான ஒளியில் அச்சத்தோடு மெதுவாக வந்து அவனருகில் உட்கார்ந்தாள் காந்தம். மெல்ல அவன் கரங்களிரண்டையும் பற்றித் தன் மார்பகத்தில் புதைத்துக் கொண்டாள். பல ஆண்டுகளுக்குப் பிறகு ஏற்படும் இப்பந்த உணர்ச்சி அவள் கண்களில் நீரைப் பெருக்கெடுத்தோடச் செய்தது.

''கவலைப்படாதீங்க! பிச்சை எடுத்தாவது நம்ப பிழைச்சுக்கலாம். நம்ப குழந்தைகளைக் காப்பாத்தலாம்!''

''பிச்சைக்காரனாட்டம் எனக்கு நடிக்கத்தான் தெரியும். அதுவும் உண்மையிலேயே செய்யத் தெரியாது!''

காந்தத்துக்கு எப்படி அவனுக்கு மன அமைதி தேடித் தருவது என்று தெரியவில்லை. நாடக மேடையில் தானும் அவனும் ஒன்றாக நடித்த காலத்தில் கழித்த இன்பமான நாட்களை நினைத்துக் கொண்டாள். சின்னஞ் சிறு பூஞ்சிட்டுகளாக ஆடிப் பாடிக் களித்தவர்கள் அவர்கள்.

'' 'இன்ப வாழ்க்கை' என்கிற நாடகத்திலே வருமே அந்த ஒரு காட்சி.... அது உங்களுக்கு நினைவிருக்கா?''

காந்தம் அவன் மடியில் சுருண்டு விழுந்தாள்.

**'' துன்பம் நேர்கையில் யாழெடுத்து நீ**
**இன்பம் சேர்க்க மாட்டாயா?-கண்ணே!**
**இன்பம் சேர்க்கமாட்டாயா?''**

காந்தத்தின் இனிய குரல் கனிவோடு, குழைவோடு, ஏக்கத்தோடு அந்த அறைக்குள்ளே சுழன்றது. அவன் செவிக்குள் சுழன்று, இதயத்தில் சுழன்று, உணர்வில் சுழன்று, உள்ளுணர்வில் சுழன்று ஆத்மாவின் ஆணி வேரையே பற்றிக் கொண்டது.

கலைஞன் கலை உணர்வு பற்றிய ஆவேசத்தால் தன்னை மறந்து, தானும் அவளுடன் ஒன்றிப் பாடலானான்.

பழைய நாடக அரங்காக மாறியது அவர்களுடைய அந்தச் சின்னஞ்சிறு அறை. இந்த உலகத்தில் எல்லாக் கவலைகளையும், எல்லாத் துன்பங்களையும் அவர்கள் மறந்தார்கள்.

யாழ் என்னும் இசைக் கருவிகூட இப்போது இல்லாத ஒன்றுதான். ஆனால் காந்தம் அந்தக் கலைஞனின் கை யாழாக மாறினாள்.

பகல் பொழுது விடிந்து பதினைந்து நாட்கள் சென்றன. ஒருநாள் மேக்கப் சாமான்களைச் செல்லப்பா தேடிக் கொண்டிருக்கும்போது, காந்தம் தன் இரு கைகளாலும் தலையைப் பற்றிக் கொண்டே சோர்வுடன் ஒரு மூலையில் வந்து உட்கார்ந்தாள்.

அவளை உற்றுப் பார்த்தான் செல்லப்பா; காந்தம் முகத்தைக் கவிழ்த்துக் கொண்டாள்.

''காந்தம்!''

அவனுடைய கண்கள் கலக்கமுற்றன.

''நாடகத்திலேதான் அந்தப் பாட்டை நாம பாடலாம்; வாழ்க்கைக்கு.... வாழ்க்கைக்கு......'' அவள் விம்மினாள்.

''கவலைப்படாதே! நமக்கு இன்னொரு மகன் பிறக்கப் போகிறான். அவ்வளவுதானே!'' மெல்ல அவளருகில் சென்று அவளுக்கு ஆறுதல் கூற முற்பட்டான் செல்லப்பா.

இப்போது அவன் வாழ்க்கையை வெறுக்கவில்லை. அதனுடன் போராடப் புதிய தெம்போடு புறப்பட்டான்.



காணாத கண் என்ன கண்ணே?

# ஒளி நகரம்

இருள் கவிந்து கொண்டு வந்தது. குளிரினால் பற்கள் தந்தியடித்துக் கொண்டிருந்தன. கடல் மட்டத்துக்கு மேல் இரண்டாயிரம் அடி உயரத்தில் நின்று கொண்டிருந்தால் பின் எப்படி இருக்குமாம்? நகரத்துக்குச் செல்லும் பஸ்ஸோ இன்னும் வரவில்லை. 'சில நாள் வராமலேகூட இருக்கும்' என்று யாரோ கூறிய தவறான செய்தி எங்கள் உள்ளத்தில் கவலையாகக் குழம்பிக் கொண்டிருந்தது. நகரத்துக்கு வெளியே பத்து மைல் தொலைவில் சாமுண்டி மலையின் மீது இருந்தோம் நாங்கள். திடீரென்று சைத்ரிகர் 'விஜு' குளிரினால் நானமிடும் குரலில் என்னைக் கூவி அழைத்தார். அவர் சுட்டிக் காட்டிய திசையில் பார்த்தேன். என் உடல் புல்லரித்தது. குளிரை மறந்தோம். பஸ் வருமா வராதா என்ற கவலையை மறந்தோம். காணாததைக் கண்ட களிப்பிலே மூழ்கிப் போனோம்.

நாங்கள் கண்டது ஜகஜ்ஜோதியாக ஜொலிக்கும் மைசூர் நகரின் இரவுத் தோற்றத்தை. கறுப்பு வெல்வெட்டிலே நவரத்தினங்களை வாரி இறைத்தாற் போன்று வண்ண விளக்குகள் மின்னிக் கொண்டிருந்தன. அத்தனை உயரத்திலிருந்தும் நகரின் விளக்குகள் அற்புதமான எழிலுடன் கண்கொள்ளாக் காட்சியாகத் தெரிந்தன. காரணம், மைசூரில் மின்சார விளக்குகள் விளக்குகளாக ஒளிர்ந்தன.

யானைத் தந்தத்துக்கும் பட்டுக்கும் பெயர் பெற்ற மைசூர் சுந்தர நகரம் மட்டுமல்ல, சுகந்த நகரமும்கூட! சந்தன மரம் விளையும் பூமி அல்லவா அது! சரித்திரப் பிரசித்திபெற்ற மைசூர்வாசிகளான கன்னடியர் வலிவும் வனப்பும் அறிவும் ஆரோக்கியமும் கொண்டவர்கள். அன்னை சாமுண்டி, மலை மீது இருந்தவாறு தம் மக்களைக் காத்து வருகிறாள். 'பஸவப்பா' என்று அன்புடன் கொண்டாடும் நந்தியும் கூட இந் நாட்டுக்குக் காவலாக இருக்கிறது. தமிழ் நாட்டில் தஞ்சாவூர் நந்திதான் பெரியது என்கிறோமே. அதைவிடப் பெரியதாகத் தோன்றுகிறது, சாமுண்டி மலையில் இருக்கும் நந்தி. கம்பீரமான தோற்றத்துடனும் நேர்த்தியான வேலைப்பாடுடனும் கூடிய இது ஒரே கல்லினால் ஆனது.

சந்திரகுப்த மௌரியன் தனது கடைசிக் காலத்தை மைசூருக்கு அருகில் இருக்கும் சிரவண பெலகொலாவில் கழித்தானாம். சங்கரர் தமது பிரதான மடங்களில் ஒன்றை இங்குள்ள சிருங்கேரியில் ஸ்தாபித்திருக்கிறார். ராமானுஜர் பன்னிரண்டு ஆண்டுகள் மைசூரில் தங்கி விருந்திருக்கிறார். மத்வர் பிறந்த மண் இது. கதம்பர்கள், ஹொய்சாளர்கள் விஜயநகரத்து மன்னர்களெல்லாம் ஆண்ட நாடு இது. நாட்டின் விடுதலைக்காக வெள்ளையருடன் போராடிய புகழ் பெற்ற ஹைதரும் திப்புவும் தோன்றியது இந்த ஒளி நகரத்தில்தான். 'மைசூர் நகரின் அழகிய தோற்றத்தைச் சாமுண்டி மலையின் மேலிருந்து காணாத கண் என்ன கண்ணோ?' என்று கூறுபவர்களுக்காக 'விஜு' அந்தக் காட்சியை உங்கள் கண் முன்னால் கொண்டு வந்து நிறுத்தி யிருக்கிறார், பாருங்கள்.

காணாத கண் என்ன கண்ணே?

# நீர் நாகு

"உப்பங்கழிகள் அதை முத்தமிடுவது போல வளர்ந்திருக்கும் தென்னஞ் சோலைகள், படகுகள் இப்படியாக உள்ள இடத்துக்கு எங்களை அழைத்துப் போக வேணும்'' என்று டாக்ஸிக்காரரிடம் சொன்னோம். நீங்கள் படிக்கும் இந்த மொழியிலா சொன்னோம்? அதுதானில்லை. தமிழையும் மலையாளத்தையும் கொலை செய்து ஏதோ ஒருமாதிரியாக அவனுக்கு எங்கள் விருப்பத்தைப் புரிய வைத்தோம். அவன் விழுந்து விழுந்து சிரித்தான். பிறகுதான் அதன் காரணம் எங்களுக்குப் புரிந்தது. அம்மாதிரியான காட்சியைக் கேரள நாடு முழுவதும் காணலாமே என்று கூறினான் அவன். ஐரோப்பாவில் உள்ள ஹாலந்து நாட்டில் வீதிகளே கிடையாது. போக்குவரத்தெல்லாம் நீர் வீதிகளிலே மிதக்கும் படகுகள் மூலம்தான். கேரள நாட்டில் வீதிகள் இருந்தாலும் மக்கள் அதிகமாகப் பயன்படுத்துவது உப்பங்கழிகளையும் படகுகளையும் தான். எங்கு திரும்பினாலும் நீர், நீர், நீர்! நீர் வளத்தினால் நிலவளம் மிக்க தாய், எங்கும் பசுமையாய், மண்ணைப் பொன்னாக்கப் பாடுபடும் மக்களைக் கொண்டதொரு நாடு கேரள நாடு. தேக்கு விளையும் நாடான இதன் மக்களும் தேக பலத்தில் தேக்கு மரத்தை நிகர்த்தவர்கள். ஆண்களோடு பெண்களும் சரி நிகர் சமானமாக வாழ மட்டுமல்ல, உழைக்கவும் செய்கிறார்கள் இங்கே. உள்ளத்தாலும், உடையாலும் எளிமையின் இருப்பிடமாகத் திகழுபவர்கள் கேரள மக்கள். யானைகளை அடக்கியாளும் ஆற்றல் படைத்தவர்களானாலும் கள்ளமில்லாத குழந்தை மனம் படைத்தவர்கள்.

யானையின் தந்தத்தைக் குடைந்தும், தேங்காயின் நாரைத் திரித்தும் வனப்புமிக்க கலைப் பொருள்களை உருவாக்கும் கைத் திறம் படைத்தவர்கள். இயற்கை அன்னை எத்தனையோ கனி வகைகளையும் காய்கறிகளையும் வாரி வழங்கினாலும் கேரள நாட்டுச் சந்தையிலே தனியாட்சி புரிவது நேந்திரம் காய்கள்தான்! இந்நாட்டுக்கே உரித்தான உப்பங்கழிகளில் மிதந்துவரும் தேக்கு மரங்களைக் கரையோரத்தில் உள்ள மரம் அறுக்கும் தொழிற்சாலைக்கு இழுத்துக் கொண்டு போகும் போது உழைப்பின் களைப்புத் தோன்றுமலிருக்கத் தமிழ் நாட்டு 'ஐலசா'வைப் போல மலையாள மொழியில் இவர்கள் எழுப்பும் ஒலி கேட்க இனிமையாக இருக்கிறது. யானைகளைக் கொண்டும் இந்த மரங்களைத் தொழிற்சாலைகளுக்குள் அப்புறப்படுத்துகிறார்கள்.

சூரிய ஒளிபட்டு ஜ்வலிக்கும் அமைதியான உப்பங்கழிகளில் நீரைக் கிழித்துக் கொண்டு செல்லும் படகுகளையும், சலசலத்துச் சிரிக்கும் தென்னஞ்சோலைகளின் அழகையும் காணாத கண் என்ன கண்ணே என்றுதான் கேரளநாட்டின் அழகை அனுபவித்தவர்கள் கூறுவார்கள். எர்ணாகுளத்தில் உள்ள தேவரை என்ற இடத்தின் எழில்மிக்க தோற்றத்தையே இங்கு விநுவின் கைவண்ணத்தில் காண்கிறீர்கள்.



காணாத கண் என்ன கண்ணோ?

# கோட்டை நகரம்

மொகலாயப் பேரரசின் பெரும் படைகள் அந்தக் கோட்டையை முற்றுகையிட்டிருந்தன. சாகஸங்கள் புரிவதிலே வல்லவரான ஔரங்கசீப்பே முன்னின்று முற்றுகையை நடத்தினார். அப்படி இருந்தும் அந்தக் கோட்டை நிலை குலையவில்லை. எட்டு மாதங்களாயின. மொகலாயப் பீரங்கிகளினால் கோட்டையின் ஒரு கல்லைக்கூடப் பெயர்க்க முடியவில்லை. வீரத்தினால் முடியாததை வஞ்சகத்தினால் சாதித்துக் கொண்டார் ஔரங்கசீப்.

இன்றைய ஹைதராபாத் நகரிலிருந்து பத்தாவது மைலில் இருக்கும் கோல்கொண்டா ஒரு காலத்தில் வாரங்கலை ஆண்ட காகதீய மன்னர்களின் வசம் இருந்தது. முதலாம் பிரதாப ருத்ர தேவராஜாவின் ஆட்சிக் காலத்தில் ஓர் ஆட்டிடையன் இங்குள்ள ஒரு மலை மீது இந்தக் கோட்டையைக் கட்டும்படி மன்னரிடம் தெரிவித்தானாம். அவன் விருப்பப்படி கோட்டையைக் கட்டி அதற்கு அவன் நினைவாகவே அவன் பெயரை வைத்திருக்கிறார். 'கொல்ல' என்றால் ஆட்டிடையன், 'கொண்டா' என்றால் மலை. ஆட்டு இடையன் மலை என்பதே பிற்காலத்தில் கோல்கொண்டாவாகி யிருக்கிறது.

1363ல் இந்தக் கோட்டை பாமினி சுல்தான்களின் கைக்கு மாறியது. பிறகு இதன் அளவும் அமைப்பும் வியக்கத் தக்க வகையில் விரிவடைந்து முதல் தரமான கோட்டையாக உருப் பெற்றிருக்கிறது. இன்றைக்கு இந்தக் கோட்டையின் சுற்றளவு ஐந்து மைல்கள். இதற்கு ஒன்பது வாயில்களும் நாற்பத்தி எட்டு பீரங்கி மேடைகளும் உள்ளன. கோட்டையைச் சுற்றி அகழியும் இருக்கிறது. முழுக்க முழுக்க உறுதியான கருங் கற்களைக் கொண்டு கட்டப்பட்ட இந்தக் கோட்டையின் நேர்த்தியை நேரில் பார்த்துத்தான் வியக்க முடியும். பத்ராசலத்தில் ராமபிரானுக்குக் கோயில் கட்டியதற்காகச் சிறையில் வாடினாரே ராமதாஸ், அவர் சிறை இருந்த இடம் இந்தக் கோட்டையில் இருக்கிறது. இதை ஆண்ட கடைசி சுல்தானுன அப்துல் ஹஸன்தான் அந்தப் பிரசித்தி பெற்ற தானீஷா. கோட்டையின் உச்சிக்குக் குடி தண்ணீரைக் கீழிருந்து களி மண் குழாய்கள் மூலம் கொண்டு சென்றிருக்கும் விந்தையையும் தானீஷா தர்பாரில் உட்காரும் இடத்துக்கு மட்டும் குளு குளு என்று குளிர்ந்த காற்று வீசும்படியாகச் சுவர்களைப் பக்குவமாக அமைத்துக் கட்டியிருக்கும் அந்தக் காலத்துக் கட்டடக் கலை விற்பன்னர்களின் திறமையையும், கோட்டையின் உச்சியிலிருந்து கை தட்டினால் கீழே உள்ள வாசிலுக்கு ஒலி கேட்கும்படியாக எதிரொலியைப் பயன்படுத்திக்கொண்டிருக்கும் அதிசயத்தையும் எண்ணி விம்மிதமடையலாம்.

கோட்டையின் பொதுத் தோற்றத்தை மேலேயும், துரோகி அப்துல்லாபனி மொகலாயர்களுக்காகத் திறந்து விட்டபாட்ட 'பாதே தர் வாஜா' என்ற கோட்டை வாயிலைக் கீழேயும் நேரில் பார்த்து எழுதி வந்திருக்கிறார் நமது ஓவியர் வினு.



# காணாத கண் என்ன கண்ணே?

## வெற்றி நகரம்

குன்றுதோறாடும் தமிழ்க் கடவுளான குமரன், தென்னகத்தின் நீலத் திரை கடல் ஓரத்திலே நின்று தம் பக்தர்களுக்கு நித்தம் தரிசனம் தருகிறான் ஒரு பதியிலே.

அதுவே திருச்செந்தூர். செந்தூர் வடிவேலன் புகழ் மிகப்பெற்றவன். சூரபதுமனைக் கொன்று வெற்றிவாகை சூடியபின் உக்கிரம் தணிய உட்கார்ந்த இடம் இது. ஜெயக்கொடி நாட்டிய இடமாதலால் இதற்கு ஜயந்திபுரம் — வெற்றி நகரம் — என்றே ஒரு பெயராம். வெற்றியடைந்த பின் வேலிலில்லாத வேலாயுதத்தைக் கீழே குத்திட்டுப் பாய்ச்சினாராம் சரவணபவன். வேல்பாய்ந்த இடத்திலிருந்து புதுப் புனல் பொங்கி வழிந்தது. இன்றும் இந்த நாழிக் கிணற்றின் அற்புதத்தை வியக்காதவரில்லை. அருள் பெற்ற அடியார்கள் பலர் பொருள் நிறைந்த பாக்களால் பால முருகனைப் பாடிப் பரவிய பழம்பதி என்பதோடு மட்டுமல்ல; ஆதி சங்கரரால் பாடப்பெற்ற ஓரே சுப்பிரமணிய ஸ்தலம் இதுதான். முருகனின் பிரசாதமான விபூதியைப் பன்னீர் இலையில் வைத்துக் கொடுப்பது இந்தத் தலத்தில்தான். நாட்டின் மூலை முடுக்குகளிலிருந்தெல்லாம் பக்தர்கள் பிரார்த்தனை செலுத்திக் கந்தனின் கருணையைப் பெற ஓடிவருகிறார்கள் இங்கே.

பால முருகனின் விபூதி அபிஷேக அலங்காரமும், ஆறுமுகனின் ராஜகம்பீரக் கோலமும், சந்தனம், பன்னீர் இவற்றின் மணமும், இடைவிடாது ஆர்ப்பரிக்கும் அலைகடலின் ஆரவாரமும், அதற்குப் போட்டியிடுவது போல் பக்தர்களின் 'முருகா, முருகா' என்ற பரவசத்தையும் காணாத கண் என்ன கண்ணே?

திருச்செந்தூரின் கடற் கரையிலே உங்களைக் கொண்டு போய் நிறுத்தி, நீல மயில் வாகனனின் கோயிலைத் தரிசிக்கும் வாய்ப்பை அளித்திருக்கிறார் ஓவியர் விஜு. அவர் நேரில் சென்று மலருக்காகப் பிரத்தியேகமாக வரைந்து வந்த படம் இது.

# டிபன்பாக்ஸ்

வழக்கம் போலவே மாலை ஆறு மணிக்கு வாத்தியார் வேதாந்தம் வீடு திரும்பினார்.

"மீனு!" என்று மென்மையாகப் பாசம் இழையக் குரல் கொடுத்தார் வேதாந்தம்.

மீனைக் கண்களாகவும், முகிலைக் கூந்தலாகவும் பெற்றிருந்த அவருடைய பதினெட்டு வயது மகள் மீனு, "இதோ வந்துட்டேம்பா!" என்று ஆசை வழிய அடக்கமாக நடந்து வந்தாள்.

தகப்பனாரின் கோட்டைக் கழற்றி ஸ்டாண்டில் மாட்டி விட்டு, டிபன் பாக்சை வாங்கிக் கொண்டு உள்ளே போனாள் மீனு.

அவள் டிபன் பாக்சைக் கழுவி வைக்க அதைத் திறந்ததும், அதில் குப்பென்று வாசம் வீசித் ததும்பி நின்றது கூழ்.

"கொடுத்தனுப்பிச்ச கூழ் அப்படியே இருக்கேப்பா? மத்தியானம் சாப்பிடலில்லையா?" என்று கவலையுடன் கேட்டாள் மீனு.

"சொல்ல மறந்து விட்டேன், பாத்தியாம்மா! இன்னைக்கு நான் எவ்வளவு அவமானப்பட்டதுக்கு இருந்தேன், தெரியுமா?" இதைச் சொல்லி விட்டு வேதாந்தம் கொஞ்ச நேரம் கண்களை மூடிக் கொண்டு யோசனையில் மூழ்கிப் போனார்.

மீனு புருவ வில்லை உயர்த்தி அப்பாவைப் பரிதாபமாகப் பார்த்தாள்.

"இன்னைக்கு மத்தியானம் என்னமோ சிந்தனை செய்தபடியே ஆசிரியர்கள் அறையிலே உட்கார்ந்துவிட்டேன். சாப்பாட்டு நேரமாச்சா, எல்லாரும் சுத்தி உட்கார்ந்து அவங்க அவங்க டிபன் பொட்டலங்களைப் பிரிக்க ஆரம்பிச்சட்டாங்க. பலகாரங்களின் மணம் என் மூக்கைத் துளைத்ததும் தான், நான் செய்த தவறு எனக்குப் புரிந்தது. எழுந்து நழுவ முயன்ற போது, என்னையும் இழுத்து உட்கார வைத்து, 'ஒங்க டிபனையும் இங்கேயே கொண்டாரச் சொல்லிடுவோம்'னு பிடிவாதக் கூப்பிட்டார்கள். எம் பாடு திணறிப் போச்சு. நான் துணிந்து, 'இன்னைக்கு ஒண்ணும் கொண்டாரலே'ன்னு பொய் சொன்னேன். அப்புறம் அவங்ககூட உட்கார்ந்து அவங்க கொடுத்த பலகாரங்களைச் சாப்பிட்டேன். ஆஹா, அவனவன் எப்படி வாழ்கிறான்!"

"நீங்க ஏம்பா, பொய் சொல்லணும்? நம்ப வீட்டிலே உள்ளது கூழ். அதைக் குடிக்கிறதிலே என்ன கௌரவக் குறைச்சல்....?"

"உனக்கு ஒண்ணும் தெரியாதும்மா. நீ அப்படித்தான் பேசுவே. இப்பவே என் ஏழைமைக் கோலத்தைப் பார்த்து என்னை யாரும் திரும்பிப் பார்க்கத் தயங்கறாங்க. இன்னும் நாம கூழ் குடிச்சி உடம்பை வளர்க்கிறது தெரிஞ்சா, அவ்வளவுதான்!"

"வெளிவேஷத்தைக் கண்டு மயங்கறவங்களோட நமக்கு எதுக்கப்பா சகவாசம்? போலி வாழ்க்கை நமக்கு வேண்டாம்பா!"

"உனக்கு உலகத்தைப் பற்றித் தெரியாதும்மா......." — வேதாந்தத்தின் தொண்டை கரகரத்தது.

* * *

மறு நாள் காலை வெகு நேரம் வரை படுக்கையிலேயே கிடந்தார் வேதாந்தம். மீனு பல தடவை அவரை எழுப்பியும், "இதோ எழுந்திருக்கிறேம்மா!" என்று கூறிவிட்டுப் புரண்டு புரண்டு படுத்துக் கொண்டிருந்தார்.

நெருஞ்சி முள்ளில் படுத்திருப்பது போல் இரவெல்லாம் தூக்கமே வராமல் கஷ்டப்பட்டார் வேதாந்தம். 'எவ்வளவு கடன் ஏறிப் போச்சு! வயிற்றை வாயைக் கட்டிப் பார்த்தாலும் கடனை அடைக்க முடியாது போல்

காளத்திநாதன்

செல்லம்

இருக்கே? அப்பா! எப்படிக் கழுத்தை இறுக்குது! எல்லாம் காமாட்சிக்கு வைத்தியம் பார்த்ததிலேயே செலவாயிடுச்சி. அப்படியாவது அவள் பிழைத்து விட்டிருந்தால், எவ்வளவோ நிம்மதியா யிருந்திருக்கும்.... என்ன நிம்மதியோ? மீனுவுக்கு இன்னும் கலியாணம் ஆகாததைப் பார்த்து என்னைப் போல் அவளும் துரும்பாகி விட்டிருப்பாள். போயிட்டதேகூட நல்லதுதான்....'

எட்டு மணிக்கு, "அப்பா, தண்ணி ஊற்றி வைத்திருக்கேன். போய்க் குளிச்சிட்டு வாங்க...." என்று குரல் கொடுத்தாள் மீனு.

வேதாந்தம் எழுந்து பாயைச் சுருட்டி வைத்தார். காலைக் கடன்களை முடித்துக் கொண்டு குளித்து விட்டு வந்தபோது மணி ஒன்பதாகி விட்டது. "அடாடா! இன்னைக்கு இவ்வளவு நேரமாய்ப் போச்சா? சீக்கிரம் இலையைப் போடு, அம்மா. இன்னைக்குத் தலைமை ஆசிரியர் பள்ளிக் கூடத்தைச் சுற்றி வரப் போவதாகச் சொல்லியிருக்கிறார். திடீரென்று வகுப்புக்குள் நுழைந்தாலும் நுழைந்துவிடுவார்" என்று பரபரப்புக் காட்டினார்.

மீனு இலையைப் போட்டு அதில் கேழ்வரகுக் களியை வைத்துப் பருப்பு, கீரைக் குழம்பை ஊற்றினாள். அதைத் தேவாமிருதமாகக் கலைத்துச் சாப்பிட்டார் வேதாந்தம். காலையும் மத்தியானமும் கேழ்வரகு உபயோகந்தான்.

வேதாந்தம் பள்ளிக் கூடத்துக்குத் தயாரானதும், அலுமினிய டிபன்பாக்ஸில் களியைப் போட்டு வந்து கொடுத்தாள் மீனு.

"நான் வரேம்மா...." என்று படியிறங்கிய வேதாந்தம் திரும்பி வந்தார். "தலைமை ஆசிரியரைப் பற்றித்தான் உனக்குத் தெரியுமே! திடீரென்று வகுப்புக்குள் வந்து விட்டால், இந்தக் கிழிசல் அவர் கண்ணில் பட்டு விடும். கொஞ்சம் இப்படியே தைத்து விடேன்..." அவர் நின்ற கோலத்திலேயே இருக்கக் கோட்டில் இருந்த கிழிசலை மீனு ஊசியால் தைத்தாள்.

வயசாகி விட்டது அல்லவா? வேதாந்தம் என்ன வேகமாக நடந்தாலும் நடை மாளவில்லை.

"என்ன சார், இன்னைக்கு லேட்டாயிடுமிங்க போல் இருக்கே?" சைக்கிளில் வந்த கைலாசம்தான் இப்படிக் கேட்டார். பி. டி. இளைஞர், பணக்கார வீட்டு மாப்பிள்ளை! நேற்றுப் பாதம் அல்வாவும் காஞ்சீபுரம் இட்லியும் கொண்டு வந்திருந்தவர்!

"ஓ, வணக்கம்...இன்னைக்குக் கொஞ்சம் லேட்டாயிடும்னுதான் தோணுது."

"நடந்து வந்தீங்கன்னு லேட்டாயிடும். ஒரு சைக்கிள் ரிக்ஷா பாருங்க."

"அதான் பார்க்கிறேன்...." இதயம் சின்னது என்கிறார்களே. அது இப்படிச் சமுத்திரம் போல் கூட இரையுமா? வேதாந்தம் நெஞ்சக் கூட்டை அழுத்திக் கொண்டு புழுவாய்த் துடித்தார். 'பச்சைப் பொய்தான்! ஆனாலும் சொல்லாமல் இருக்க முடியவில்லை. கையில் ஒரு காசு இல்லை யென்பது கடவுளே, உனக்கு நன்றாகத் தெரியும். என்னைக் காப்பாற்றப்பா...' என்று வேண்டிக் கொண்டார்.

அதற்கு இறைவன் செவி சாய்த்துத்தான் இருக்க வேண்டும். கைலாசம் பேசிக் கொண்டிருக்கும் வரை தட்டுப்படாத சைக்கிள் ரிக்ஷாக்கள், அவர் போனதும் ஒவ்வொரு சந்திலிருந்தும் இரண்டுமூன்றாக ஓடி வந்தன.

வேதாந்தம் பள்ளிக்கூடத்தை அடையும் போது முதல் மணி அடித்துப் 'பிரேயர்' நடந்து கொண்டிருந்தது. பள்ளிக்கூடத்துக்கு 'லேட்'டாக வரும் மாணவர்களைப் பிடித்துத் தண்டிப்பதற்காக மெயின் கேட்டை மூடி வைத்திருந்தார். இருபது முப்பது மாணவர்கள் அங்கே கலவரத்துடன் நின்று கொண்டிருந்தார்கள்.

தமது வகுப்பு மாணவன் எவனாவது அங்கு இருக்கிறானா என்று பயத்துடன் பார்த்தபடி பியூனைக் கூப்பிட்டுக் கதவைத் திறக்கச் சொல்லி நைசாக உள்ளே நழுவினார் வேதாந்தம்.

முதல் காரியமாக அலமாரியைத் திறந்து டிபன்பாக்ஸை வைத்து விட்டுத்தான் வேதாந்தம் மறு வேலை பார்ப்பார். அந்தப்படி அவர் கோட்டுப் பாக்கெட்டில் சாவியைத் தேடியபோது அது காணவில்லை. 'அவசரத்தில் சாவியை மறந்து விட்டேனோ?' என்று அலுத்துக் கொண்டிருக்கும் போது இரண்டாவது மணி





படித்து மாணவர்கள் வகுப்புக்களுக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தார்கள்.

வேதாந்தம் தணுக்குற்றார். அந்தப் பீரியட் அவருடையதுதான். தமிழ் எடுக்க வேண்டும். ஒரு நிமிடம் ஒன்றும் தோன்றாமல் திகைத்தார். சரசரவென்று மாணவர்கள் ஓடி வந்து கொண்டிருந்தார்கள். வேதாந்தம் சட்டென்று டிபன் பாக்ஸை ஜன்னல் ஓரத்தில் வைத்துவிட்டு நிமிர்ந்தார்.

வகுப்புத் தலைவன் அட்டெண்டன்ஸ் ரிஜிஸ்தர் கொண்டு வந்து வைத்தான். அதில் மாணவர்களின் வருகையைக் குறித்து விட்டுத் தமிழ்ப் புத்தகத்தை எடுத்தார் வேதாந்தம்.

"தன்னெஞ்சு அறிவது
பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்."

விளக்கம் கூறுவதற்காக இந்தக் குறளை ஒரு முறை உரக்கப் படித்தார் வேதாந்தம். அப்புறம் அவருடைய உதடுகள் அசைந்தனவேதவிர, வார்த்தை யொன்றும் ஒலி வடிவம் பெறவில்லை. 'நெஞ்சறிந்து பொய் சொன்னால் தன் நெஞ்சே தன்னைச் சுட்டு விடும்' என்பது எவ்வளவு சத்தியமான வார்த்தை!— நேற்று டிபன் கொண்டு வரவில்லை என்று பொய் சொன்னேன். இன்று சைக்கிள் ரிக்ஷாவைப் பார்ப்பதாகப் பொய் சொன்னேன். இப்பொழுது என் நெஞ்சே என்னைச் சுடுகிறதே! இதெல்லாம் எதற்காகச் சொன்னேன்? உலகத்தார் முன் ஏளனப்படக் கூடாது என்பதற்காக! அப்படியானால், நான் பிறத்தியாருக்காகத் தான் வாழ்கிறேனா?'

கசமுசவென்று மாணவர்கள் ஒருவரோடு ஒருவர் பேசிக் கொண்டார்கள். 'உஸ் உஸ்' என்று சத்தம் போட ஆரம்பித்தார்கள். அப்பொழுதுதான் நனவுலகுக்குத் திரும்பிய வேதாந்தம், "சத்தம் போடாதீங்க. பாடத்தைக் கவனிங்க!" என்றார்.

அந்த நேரம் பார்த்து, "என்ன இது காட்டுக் கூச்சல்?" என்று வகுப்புக்குள் நுழைந்து விட்டார் தலைமையாசிரியர். வேதாந்தம் திக்பிரமை பிடித்தவர்போல் ஒரு விநாடி செயலற்று நின்று விட்டார்.

தலைமையாசிரியர் பெரிய 'டிஸிப்ளினேரியன்'. எடுத்ததற்கெல்லாம் 'ஒழுங்கு, ஒழுங்கு' என்று பேசுகிறவர். அவர் பள்ளிக் கூடத்தைச் சுற்றி வரும் போது பாவிப் பயல்கள் இப்படிச் சலசலத்து விட்டார்களே என்று வேதாந்தத்துக்குப் பற்றிக் கொண்டு வந்தது. வயிற்றில் புளியைக் கரைத்தது.

"மிஸ்டர் வேதாந்தம்! வெறும் படிப்பைச் சொல்லிக் கொடுத்துப் பிரயோசனம் இல்லே. மாணவர்களை அதன்படி நடக்க வைக்கணும். அதுதான் முக்கியம். இவர்கள் இப்படிக் கூச்சல் போடுகிறார்களே, இவர்களுக்குத்தான் படிப்பு ஏறுமா, இல்லே, மற்ற வகுப்பில் உள்ளவர்கள்தான் படிக்க முடியுமா? யோசித்துப் பாருங்கள்...."

"இன்னைக்கு ஏதோ இப்படி நடந்து போச்சு. நான் ரொம்ப வருத்தப்படறேன் சார்...." என்று வேதாந்தம் தடுமாறினார்.

"அது சரி, ஏன் இப்படிக் கூச்சல் போட்டார்கள்?"

## தந்திக்குத் தந்தார் !



"மாப்பிள்ளை வரல்லேன்னு தந்தி கொடுத்தா இந்த மாதிரிதான் கண்ணைக் கசக்குகிறதா? அசடு!"

"அதுக்கில்லேம்மா! தந்தியைப் படிக்க வரல்லேன்னு தெரிஞ்சண்டு மறுபடியும் அப்பா தந்தி சேவகனைக் கூப்பிட்டு மறுபடியும் ஒரு ரூபா தீபாவளி இனாம் கொடுத்தார்!"

வேதாந்தம் திரு திரு வென்று விழிக்க, மாணவர்களின் பார்வை நடுக்கத்துடன் நீண்ட திசையில் தம் கண்களைச் சுழலவிட்டார் தலைமையாசிரியர். அவரது கண்களில் கோபம் மின்னிக் கனல் பறந்தது.

வேதாந்தத்துக்குப் பொறி கலங்கி விட்டது....

அவசரத்தில் அவர் ஜன்னலோரத்தில் வைத்து விட்ட டிபன் பாக்ஸைச் சாய்த்து விட்டு, அதிலிருந்து கசிந்த கூழை — இரண்டு மூன்று அணில்கள் சுவைத்துக் கொண்டிருந்தன.

வேதாந்தம் வெலவெலத்துப் போனார். நெஞ்சுலர்ந்து நாக்கு மேலண்ணத்தில் ஒட்டிக் கொண்டது. பிரித்துப் பேச முடியுமா? 'என்னுடையதுதான். கூழ்....கூழ்....' என்று இளிக்க முடியுமா? அத்துடன் பள்ளிக்கூடம் முழுதும் அவர் கூழ் குடித்து உடம்பை வளர்க்கும் ரகசியம் அம்பலமாகி விடும். ஒரு நயா பைசாவுக்கு மதிக்க மாட்டார்கள். அதனால் இதயத்தின் கதவுகளை இறுக்கிச் சாத்தத் தொடங்கி விட்டார் ஏழை வேதாந்தம்!

"இதை இங்கே எந்தப் பையன் வைத்தது?" என்று மாணவர்களைப் பார்த்துக் கர்ஜித்தார் தலைமை ஆசிரியர்.

'ஆண்டவனே! உன் புண்ணியத்தில் இப்பொழுதும் நான் தப்பித்துக் கொள்கிறேன். தலைமையாசிரியருக்கும் பையன்களின் மேல்தான் சந்தேகம்.... பின்னே நான் போய்க் கூழ் குடிப்பேன் என்று அவர் நினைக்க முடியுமா? யாரும் அப்படி நினைக்கக் கூடாது என்பதற்காகத்தானே இப்படியெல்லாம் ஒளிந்து வாழ்கிறேன்? இந்த வெளி வேஷமெல்லாம் மீனுவுக்குக் கலியாணம் ஆகிற வரைக்கும்தான்.... அப்புறம் நான் தைரியமாக வாழ்வேன். சொல்லப் போனால் என் சம்பாத்தியத்தில் மூன்று வேளை சோறே சாப்பிடுவேன். எல்லாம் உன் கருணை!' வேதாந்தம் கண்ணை மூடிக் கண்களில் அரும்பெடுத்த நீரை இமைகளில் ஒட்டிக் கொண்டார்.

"ம், யாருடையது இந்த டிபன் பாக்ஸ்? சொல்ல மாட்டீங்க?" தலைமை ஆசிரியர் சீறினார்.

'பாவம் குழந்தைகளை மிரட்டாதீங்க சார்.... வைத்தவன் நான். ஆனால் நான் ஒத்துக் கொள்ளப் போவதில்லை. அதற்காகக் குழந்தைகளை வாட்ட வேண்டாம். வேறு யாரோ வைத்ததாக நினைத்துக் கொள்ளுங்களேன். வேண்டுமானால் பியூனை விட்டுத் தூக்கிக் குப்பையிலே எறியச் சொல்லுங்கள். பரவாயில்லை. டிபன்பாக்ஸ் போனால் போகட்டும். என்னால் சீக்கிரத்தில் இன்னொன்று வாங்கிக் கொள்ள முடியாதுதான்.... ஆனால் இப்பொழுது மானம்தான் சார், பெரிசு....' — தலைமை ஆசிரியரையும் பார்க்க முடியாமல் தலையைக் குனிந்து கொண்டு தவித்தார் வேதாந்தம்.

"சொல்ல மாட்டீங்க? நான் ஒன்றும் செய்ய மாட்டேன். பயப்படாதீங்க.... ஏதோ தவறி வைச்சுட்டீங்க. இனிமேல் இப்படிச் செய்யாமல் இருந்தால் போதும். இதை வைத்தவன் தைரியமாக எழுந்து வரலாம்...." தலைமை ஆசிரியர் கூர்மையாக ஒவ்வொரு மாணவனையும் அளந்து பார்த்தார்.

'ஏன் சார், இப்படிக் குழந்தைகளை வாட்டறீங்க? அவங்க எப்படித் துணிந்து பொய் சொல்லிப் பழியை ஏற்றுக்கொள்வாங்க? நான்தான் வாயை இறுக்கி மூடிக் கொண்டிருக்கிறேனே....'

சுப்பிரமணியம் திடீரென்று எழுந்து நின்றான்.

'சுப்பிரமணியா? நீயா? என்ன தியாகமடா! படிப்பில் கெட்டிக்காரனாக இருக்கிறே, உனக்கு எதற்கு இந்த அவப் பெயர்?'

"உன்னுடையதா ?" — உக்கிரம் குறைந்த குரலில் கேட்டார் தலைமை ஆசிரியர். அவன் வகுப்பில் முதல் மாணவன் என்பதும், இலக்கியப் போட்டிகளில் முதல் பரிசு பெறுகிறவன் என்பதுமே அவருடைய உள்ளம் இளகுவதற்குரிய காரணம்.

"படிப்பில் இருக்கிற கெட்டிக்காரத் தனத்தை நடந்து கொள்கிற விதத்திலும் காட்டணும். தெரிகிறதா? அப்பொழுது தான் நீ வாழ்க்கையில் முன்னேற முடியும். சரி, இப்பொழுது அந்த டிபன் பாக்ஸை உன்னுடைய இடத்தில் கொண்டு போய் வைத்துக் கொள். இனி மேல் இப்படி வைக்காதே. உன்னால் பார், பத்து நிமிடம் வகுப்பு கெட்டு விட்டது!" என்று இதமாகக் கூறி விட்டு நகர்ந்து சென்றார் தலைமை ஆசிரியர்.

தயங்கித் தயங்கி நடந்து வந்து டிபன் பாக்ஸை எடுத்துக் கொண்டு போனான் சுப்பிரமணியன். வாத்தியார் வேதாந்தம் தலையைத் தொங்கப் போட்டவர் தொங்கப் போட்டவர்தான்!

* * *

அன்று முழுக்க வேதாந்தத்தால் ஒரு வகுப்புக்கும் பாடம் சொல்ல முடியவில்லை. திக்கித் திணறிக் கொண்டிருந்தார். வயிற்றில் வேதனை குமுறியது.

கரும் பலகையில் கணக்குப் போடும் போது கை என்னமாய் நடுங்கியது! சாக்குக் கட்டி உடைந்து உடைந்து போயிற்று, அவரது உள்ளத்தைப் போல.

ஒரு வழியாகக் கடைசிப் பீரியடும் முடிந்தது. மாணவர்கள் குஷியாகக் குதித்தோடினார்கள். வேதாந்தம் அயர்ந்து போய் அப்படியே நாற்காலியில் சாய்ந்து விட்டார். எல்லாரும் போய் வகுப்பு காலியாகி விட்டாலும், இன்னும் ஒரே ஒருவன் மட்டும் இருப்புக் கொள்ளாமல் உடம்பைப் பிடித்து உட்கார வைத்திருக்கிறான் என்பது, நேர்மையோடு நிமிர்ந்து நிற்க முடியாமல் சாய்ந்து போய் விட்ட அவருடைய கண்களுக்குப் புலப்பட்ட போதிலும், அது அவன்தானா என்பதைத் தெரிந்து கொள்ளத் தலையைத் தூக்கிப் பார்க்கத் துணிவின்றித் துவண்டார்.

' என்ன அநியாயம்! எவ்வளவு கொடுமை! என்னுடைய வறட்டுக் கௌரவத்துக்காக இந்தச் சின்னஞ் சிறுவனைப் பலி கொடுத்து விட்டேனே? நானா பலி கொடுத்தேன்? அவனாக வந்து மாட்டிக் கொண்டான். முப்பத்தொன்பது பேர் என்னைப் போல வாயை மூடிக் கொண்டிருக்க வில்லே? இப்பொழுதும் இங்கே ஏன் உட்கார்ந்து என் பிராணனை வாங்குகிறான்? அவனுடைய இடத்தில் என் டிபன்பாக்ஸ் இருக்கிறதே. இவன் தொலைந்தால் சத்தடி பண்ணாமல் எடுத்துக் கொண்டு போய் விடுவேன். இனிமேல் அலமாரி சாவியை ஜென்மத்துக்கும் மறக்க மாட்டேன். பட்டது போதும். புத்தி வந்து விட்டது! அவன் குனிந்து அந்த டிபன் பாக்சை எடுக்கிறானே.... ஐயோ! எழுந்து வருகிறான்.... என் முகத்தில் விட்டெறியப் போகிறானா? கடவுளே என்னைக் காப்பாற்று....'

தலையைத் தூக்காமலே வேதாந்தம் ஓரக் கண்களால் சுப்பிரமணியனைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

அவன் மெதுவாக எழுந்து அவருடைய அருகில் வந்தான். "சார், என்னை மன்னிக்கணும். உங்க எதிரிலேயே தெரிஞ்சே பொய் சொல்லி விட்டேன் சார்."

' நீ வாயைத் திறந்து பொய் சொன்னே. நான் வாயை மூடிக்கொண்டு பொய் சொன்னேன். இரண்டு பேரும் பொய்யர்கள்தாம். உன்னை நான் எப்படி மன்னிக்கிறது?'

" இந்த டிபன் பாக்ஸ் என்னுடையது இல்லே சார். யாருதுன்னு நீங்க எப்படியாவது ரகசியமா விசாரிச்சு, சொந்தக்காரங்ககிட்டே கொடுத்திடுங்க சார். இனி மேல் இப்படிச் செய்ய மாட்டேன் சார். இந்தத் தடவை மன்னிச்சிடுங்க.."

"உம்.... உம்...." என்று முனகினார் வேதாந்தம். "இதுதான் உன்னுடையது இல்லேன்னு சொல்றியே, அப்ப மட்டும் ஏன் அப்படிச் சொன்னே? மற்றப் பசங்களெல்லாம் பேசாமல் இல்லே?"

"பசி பொறுக்க முடியாமல் நான் அப்படிச் சொன்னேன் சார், சாப்பிட்டு ரெண்டு நாள் ஆகிறது. டிபன் பாக்சை ஒருவரும் கேட்காமல் இருக்கவே, கூழுக்கு ஆசைப்பட்டுப் பொய் சொன்னேன். மத்தியானம் வயிறு குளிரத் திருப்தியா குடிச்சேன். நான் கூழுக்காகத்தான் பொய் சொன்னேன் சார்.... டிபன் பாக்சுக்காக இல்லே. இதை எப்படியாவது சொந்தக்காரங்ககிட்டே கொடுத்திடுங்க சார். இல்லேன்னு எனக்குப் பாவம் வந்து சேரும்!"

'நான் கூழ் குடிக்கிறது தெரியக் கூடாது என்பதற்காக வாயை மூடிப் பொய் சொன்னேன். உனக்கும் எனக்கும் எவ்வளவு வித்தியாசம்.. '

"உன் நிலைமை இவ்வளவு மோசமா? நான் என்னைப் பற்றியே அழுது கொண்டிருந்தேனே தவிர, உன்னைப் போன்றவர்களைப் பற்றி யோசிக்கக் கூட இல்லேயே!" என்று கதறி விட்டார் ஆசிரியர் வேதாந்தம்.

சுப்பிரமணியனை மார்போடு இறுக அணைத்துக் கொண்டு "இந்த டிபன் பாக்ஸ் என்னுடையதுதான்டா! வீண் ஜம்பத்துக்குப் பயந்து நான் கூழ் குடிப்பது வெளியே தெரியக் கூடாது என்பதற்காக வாயை மூடிக் கொண்டிருந்தேன். நீ கூழும் இல்லாமல் கஷ்டப்படும் போது, கூழாவது கிடைக்கும் நான் சந்தோஷப் பட வேண்டாமா? இனி மேல் கவலைப் படாதே. நாளையிலிருந்து டிபன் பாக்ஸ் நிறைய உனக்கும் சேர்த்துக் கூழ் கொண்டு வருகிறேன். இரண்டு பேருமே சேர்ந்து இவ்வியமாகக் குடிப்போம்!" என்று பெருமிதத்தில் பொரிந்து தள்ளினார் வாத்தியார் வேதாந்தம்.

## அற்புதம் நிகழ்ந்தது!



# எந்நாளும் மறவோம்

இப்புனித நன்னாளில் நம் சுதந்திரத்தைக் காக்கப்
போர்புரியும் வீரர்களை மறவாதிருப்போம்.




**மபத்லால் க்ரூப்** தீபாவளி வாழ்த்துக்கள்

Alyars MG. 371-TM.

# ஹாஸ்ய மலர்கள்

மனைவி:
சரி, ஊருக்குப் போயிட்டு
வாங்க. அடிக்கடி விவரமாகக் கடிதாசி எழு
திக்கிட்டிருங்க. உங்க எழுத்தைப் பார்த்தால்
தான் எனக்கு ஆறுதலா இருக்கும். கடிதாசி
எழுத நேரமில்லேன்னு நீங்க அனுப்பற புடவை
பார்சல் மேலே எழுதின உங்கள் கையெழுத்
தைப் பார்த்தேனும் சந்தோஷப்பட
றேன். வேறு என்ன செய்ய?

சாமா

"இது என் மகள்.
நாட்டியம் கத்துக்கணும்னு
ஒத்தைக் காலில் நின்றாள்."

"அது தான் கத்துக்கொடுத்து
விட்டீரே, இன்னும் ஏன் ஒத்தைக்
காலில் நிற்கிறாள்?"





வந்தவர்: என்ன, மாப்பிள்ளே,
தீபாவளிக்கு மாமனார் வீட்டுக்குப்
போகல்லியா?
மாப்பிள்ளை: என்னவோ யோசனை
பண்ணிண்டிருக்கிறோம். அங்கு போய்க்
கோபித்துக் கொள்ள எங்களுக்கு
ஒன்றும் அகப்படவில்லை. அதனால்
அங்கு போக வேண்டாமோ என்று
இருக்கிறோம்.



# புண்ணிய பாங்க்

ராயப்பேட்டை ஆஸ்பத்திரி வாசலில் ஒரு புன்சிரிப்புடன் நின்று கொண்டிருந்தான் சிதம்பரம். தன் முகமே அழகாகத் தெரிந்தது அவனுக்கு. அவன் சிரிக்கிறது அழகாக இருக்கும்; புன்சிரிப்பும் அழகாக இருக்கும். கண்ணாடியில் பார்க்கும்போது அதை நன்றாகப் பார்த்திருக்கிறான். லேவாறு வேறு அடிக்கடி சொல்லுவாள்: ''நீங்க எப்பவும் சிரிச்சுண்டே இருங்கோ, நான் பார்த்துண்டே இருக்கேன். கஷ்டமெல்லாம் மறந்து போயிடறது அப்ப.'' இன்னொரு தடவை என்ன சொன்னாள்? ''நீங்க கறுப்புத்தான். தலையும் நன்னா நரை கண்டுத்து. உங்க மூஞ்சியும் சாதாரண மூஞ்சிதான். லக்ஷணம் இல்லே. ஆனா நீங்க சிரிச்சா என்ன அழகாயிருக்கு, தெரியுமா? அதுவும் அப்ப கண்ணுக்கிட்ட கன்னச் சதை நெருங்கிக்கிறதே — அப்ப எங்கிருந்தோ ஒரு களை வந்துடறது.'' ரசம் போன கண்ணாடியைக் கையில் வைத்துக் கொண்டு அவள் சொன்னது சரிதானா என்று பார்த்திருக்கிறான் சிதம்பரம். 'ரொம்ப சரி! எத்தனை கருக்காகச் சொல்லுகிறாள்! என் மூஞ்சி சாதாரணம்தான். கறுப்புத்தான். ஆனால் சிரிக்கிறபோது அவள் சொல்லுகிறாற் போல எங்கிருந்தோ இந்த அழகு, இந்தக் களை வந்துதான் விடுகிறது. இது யாருடைய அழகு? சிரிப்பின் அழகா? அந்தச் சிரிப்புக் கூட நான் சிரிக்கிறது தானே? எப்படி இந்த அழகு வந்தது அதற்கு? என்று குழம்புவான். இப்போது ஆஸ்பத்திரி வாசலில் நிற்கும்போது கண்ணாடி முன் பார்க்கிறாற் போல்தானிருந்தது அவனுக்கு.

கிரீச் என்று நெருக்கின பன்றி அலறுவது போல் ஒரு சத்தம். சட்டென்று திரும்பிப் பார்த்தான். இன்னும் பல போக்குவரத்துக்களும் திரும்பிப் பார்த்தன. ஒரு டாக்ஸி 'பிரேக்' போட்டு நின்றது ஒரு பயல் அரைபடாமல் தப்பிவிட்டான். முகத்தில் கோபம்.

''என்யா, ஓசைப்படாம வந்து ஏத்தப் பாத்தியே. இந்த ஹாரனே எதுக்காக வச்சிருக்கே? அழகு பார்க்கவா?''

''ஏ முண்டம்! இது ஆஸ்பத்திரி — இங்கே ஹாரன் அடிக்கப் படாதுன்னு தெரியாது? ஒரு மயிரிழை தப்பி யிருந்தா இப்ப உன் உடம்பை அள்ளு பாத்திட்டிருப்பாங்க எல்லாரும். தெரியுமா?''

அசடு வழிய நடந்தான் பிழைத்தவன். டாக்ஸி போயிற்று.

சிதம்பரத்துக்கு மறுபடியும் சிரிப்பு வந்தது. ''யாரு என்ன சொல்ல முடியும்! ஒரு இம்மி — பகவானும் யமனுக்கு ஒரு பிரேக் போட்டான். அவனுக்கா தெரியாது?'' என்று சொல்லிக் கொண்டே நடந்தான். பைகிராப்ட்ஸ் சாலையைக் கடக்கும் போது சீதாராமண்ணா வந்து கொண்டிருந்தார்.

''அண்ணா, நமஸ்காரம்!'' என்று கத்தினான் சிதம்பரம்.

''சிதம்பரமா?''

''ஆமாண்ணா—எங்கே இப்படி? மார்க்கெட்டுக்குப் போய்ட்டு வராப்பலே இருக்கு.''

''ஆமா — எங்கே இப்ப கார்த்தாலே கிளம்பினே!''

''பொண்ணுக்கு டிப்திரியாண்ணா. ராயப்பேட்டை ஆஸ்பத்திரியிலே 'அட்மிட்' பண்ணியிருக்கேன்.''

''டிப்திரியாவா?'' மனிதன் மண்டையில் அடித்தாற்போல் நின்றார்.

''ஆமாண்ணா.''

''இப்ப எப்படி இருக்கு?''

''சரியாயிடும்கறார் டாக்டர்.''

''இப்ப எங்கே போறே?''

''சென்ட்ரலுக்குப் போறேண்ணா. அரக்கோணத்திலேந்து எங்க அக்கா வரா. அழைச்சிண்டு வரணும். வரட்டுமாண்ணா?''

''சரிப்பா!''

செலவுக்கு ஏதாவது வேண்டுமோ என்று இன்னொருவராக இருந்தால் கேட்பார்கள். சீதாராமண்ணா கேட்கவில்லை. திருப்பதிக்கு முடியிறக்கப் போகிறேனென்று மூன்று வருஷம் எதையோ சொல்லி அவரிடம் வாங்கின ஏழு ரூபாயைத் திருப்பித் தரவில்லை. அவர் கேட்டாரா? ''நீங்க பேசாமப் போறது தப்பில்லேண்ணா'' என்று நினைத்துக் கொண்டே நடந்தான் சிதம்பரம்.

சட்டென்று நெஞ்சில் சிலாம்பு குத்திற்று. என்ன சொன்னேன்? அரக்கோணத்திலிருந்து அக்கா வருகிறாள் என்று? தங்கை வருகிறாள் என்று சொல்லித் தொலைத்திருக்கக் கூடாதோ? போயும் போயும் பொழுதுவிடிந்ததும் விடியாததுமாக அக்காளையா கூப்பிடவேண்டும்? கடைசியில் ஒன்றும் உண்மை இல்லை. அக்காளும்வரவில்லை, தங்கையும் வரவில்லை. சென்ட்ரலுக்கு அவன் போகிறதே வேறு காரியத்துக்காக.

''டிப்திரியா, உடனே ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போ'' என்று டாக்டர் முந்தாநாள் சொன்னார். உடனே கொண்டு போய்ச் சேர்த்தாயி விட்டது. டாக்ஸி, வீட்டில் உள்ள குழந்தைகளுக்குப்

S. Balu

தி. ஜானகிராமன்

பகோடா, காரா பூந்தி, மாறுக்கள்— என்று பத்து நாள் செலவுக்கு வைத்திருந்த பணம் ஒரு போதில் கரைந்து விட்டது. அவளானும் ஆஸ்பத்திரியில் இருக்கிறாள். காலையில் குழந்தைகளுக்குப் பழையது போட்டு டீ போட்டுக் கொடுத்துவிடலாம். மத்தியானச் சாப்பாட்டுக்கு அரிசி?

முழங்காலைக் கட்டிக் கொண்டு, இருட்டில் குழந்தைகளின் இரு குறட்டைகளுக்கு நடுவில் உட்கார்ந்து இருந்தான். மூன்றாவது பெண் சற்றைக்கொரு தரம் தூக்கத்தில் காலைத் தூக்கித் தூக்கி அவன் மீது போட்டது. குதிரை எலும்பைத் தூக்கிப் பட்பட்டென்று போட்டால் வலி எடுக்காமல் என்ன செய்யும்? சற்று நகர்ந்தாற் போல உட்கார்ந்தான். இனிமேல் நகர இடமில்லை. கண்டால் முண்டான் போடும் மரப் பெட்டி அதன் அடியில் இடைவெளி. அந்த இடைவெளியிலிருந்த கொசுக்கள் அவன் நெருங்கி உட்கார்ந்ததும் என்னமோ பாதாம் அல்வா, போண்டாவெல்லாம் விடு தேடி வந்தாற் போல மொய்த்துப் பாடத் தொடங்கி விட்டன.

வெகு நேரம் வரையில் அந்த இருட்டில் சினிமாப் பார்த்தான் சிதம்பரம். நிஜ சினிமா இல்லை. அது மாதிரி. மனக் கண் முன் நண்பர்கள் எல்லாம் வந்துவிட்டுப் போனார்கள். தூரத்து நண்பர்கள், உறவுகள், நெருங்கினவர்கள், பழைய முதலாளிகள், இலேசாகப் பழகினவர்கள் எல்லாரும் நடமாடிவிட்டுப் போனார்கள். ம்...ம்! ஒருத்தர் மிச்சமில்லை. எல்லாரிடமும் அவன் வாங்கி விட்டான். அரை, ஒன்று, ஐந்து.... அவன் பேச்சைக் கேட்டு ஐம்பது ரூபாய் கொடுத்தவர்கள் கூட இருக்கிறார்கள். இப்போதுகூடக் கேட்டால் கொடுப்பார்கள். ஆனால் பழையதை மறக்கும் வழக்கம் இல்லையே இவர்களுக்கு. ஏதாவது நாட்டியமாகப் பேச ஆரம்பித்தால்?

சிதம்பரத்துக்கு ஒரு கெட்ட பழக்கம்: முன் கோபம். கொஞ்சம் ஏடாகோடமாகச் சொன்னால், "சும்மா இரு. பல்லை உடைச்சுப்பிடுவேன்" என்று தான் சொல்லுவான். பலபேர் பின் வாங்கியுமிருக்கிறார்கள். பலபேர் அதைக் கேட்டுப் பயந்தே போயிருக்கிறார்கள். அந்த மாதிரி ஏதாவது நாளைக்கு வாயில் வந்துவிட்டால்!

திவசம், முடியிறக்குவது, பூணூல் கலியாணம், அக்ஷராப்யாசம், மனைவிக்குக் குறைப் பிரசவம், பெரிய பிள்ளைக்குச் சம்பளம் — இப்படி மரபு பிறழாத பல காரணங்கள் சொல்லி எத்தனையோ ஐந்தும் பத்தும் வாங்கியாகி விட்டது. சைக்கிள் பஞ்சராகி விட்டது. நடுத் தெருவில் நிற்கிறது: பர்ஸை அடிச்சிண்டு போயிட்டான்னு — ரண்டு ரூவா மருந்துக்குன்னு வச்சிருந்தேன். இப்படி மரபு பிறழ்ந்த பொய்களையும் சொல்லி இரண்டு, மூன்று ஒன்று எல்லாம் வாங்கிவிட்டான்.

இனிமேல் சொல்ல ஒன்றும் இல்லை. சொல்லிக் கேட்கிற ஆளும் இல்லை. நடுநிசியில் பார்த்த இந்தச் சினிமாவில் ஒரு முகம்கூட அவனை ஆதரிக்கிற முகமாக இல்லை.

மாசச் சம்பளம் என்று எங்காவது அமர்ந்திருந்தால் இந்தக் கவலை எல்லாம் இராதுதான். ஆனால் மாசச் சம்பள வேலை அவனுக்கு ஒத்து வருவதில்லை. இருந்துதான் பார்த்தான். ஐந்தாவது மட்டும்தான் படிப்பு. அதனால் ஆள்கார வேலைதான் கிடைத்தது. பாங்குக்குப் போய்ப் பணம் கட்டி வருகிறது; குழந்தைகளைப் பள்ளிக்கூடம் கொண்டு விடுகிறது: லாரியில் ஏற்றின சாமான்களைச் சேருமிடத்தில் சேர்த்துவிட்டுக் கையொப்பம் வாங்கிக் கொண்டு திரும்புகிறது — இந்த மாதிரி எத்தனையோ பார்த்தாகி விட்டது. மாசச் சம்பளம் கொடுக்கிறவர்களுக்கு என்னமோ ஆளையே விலைக்கு வாங்கி விட்டதாகப் பாத்தியம். இவனுடைய இருபத்து நான்கு மணி நேரமும் தன் கையில் ஒப்படைக்கப்பட்டு விட்டதாக ஒரு பேராசை. வேறு காரணங்களும் இருக்கலாம். பொதுவாக ஒத்து வரவில்லை.

அதனால்தான் எடுப்பானாகப் போனது. வேலை செய்தால் கூலி. வேண்டாம் என்றால் இல்லை. எங்காவது விருந்து நடந்தால் தண்ணீர் நிரப்புகிறது — எடுத்து சப்ளை செய்கிறது. எது வேண்டுமானாலும் எங்கே வேண்டுமானாலும் போய் வாங்கித் தருகிறது. 'ஒரு தடவை காசிக்குப் போகிற ஒரு கிழவிக்கும் கிழவருக்கும் ஒத்தாசையாகப் போனான். நாசிக் என்ன, ஹரித்வாரம் என்ன, ரிஷிகேசம் என்ன, காசி என்ன, பிரயாகை என்ன, கயை என்ன — இப்படி மூன்று மாசம் நிம்மதியாகப் போயிற்று. புண்ணியம், பாவம், உபகாரம் செய்த திருப்தி, நாலு ஊர் பார்த்த அநுபவம் — இப்படி அந்த யாத்திரையில் கிடைத்த லாபம் சொல்லித் தரமில்லை. ஒரு சினிமாவில் ஆள் வேண்டும் என்றார்கள். ஒரு ஹோட்டலில் கொடுத்த தோசையைப் பார்த்து ஒருவன் "வரட்டியா தோசையா?- பெரட்டிப் போட்டு மறந்து போயி பயணம் போன வயணத்தாலே ரொட்டி வேஷம் கட்டிச்சா, தொரட்டி போட்டுத் தூக்கும்படி முரட்டுக் குணம் வந்ததேன்? இதுக்கு வரட்டுத் தோது வந்ததேன்?" என்று பாடுகிறான். அதைப் பார்த்து எல்லாரும் சிரிக்கிறார்கள். ஒரு ஓரத்தில் உட்கார்ந்து சிதம்பரமும் வாய் வலிக்கச் சிரித்தான். படம் பிடித்து முடிந்ததும் நாலு ரூபாய் கொடுத்தார்கள். இதே மாதிரி நாடகங்களில் நோயாளியாகவும், சபையோராகவும் துவாரபாலகனாகவும் அவன் நடித்ததுண்டு. ஆனால் எதிலும் ஒட்டிக் கொள்வதில்லை. குணம் அதற்கு இடம் கொடுத்ததில்லை. பல்லை உடைப்பதாகக் கூறிவிட்டு வெளியேறிய இடம் எத்தனையோ? போன மாசம் ஒரு நண்பனைத் திருநெல்வேலி எக்ஸ்பிரஸில் ஏற்றி விடப் போனபோது வண்டியில் அவ்வளவு கூட்டமில்லை. ஆடி மாதத் தளர்ச்சி. சும்மா ஒரு துண்டை எதிர்த்த மேலடுக்கில் போட்டு விரித்து வைத்தான். அரை மணி கழித்து "சார்! சார்! டில்லியிலேருந்து வர்றேன், சார். ரண்டு நாளாத் தூக்கமில்லே. கொஞ்சம் நீட்டிப் படுத்தால் தேவலே போலிருக்கு" என்று ஒரு பைஜாமா ஓடிவந்து காலில் விழாத தோஷமாகக் கெஞ்சினார். துண்டை எடுத்ததற்கு ஒரு ரூபாய் சன்மானம் கிடைத்தது. இப்படி எதிர் பார்க்காமல் வலிய வந்து அவனைச் சீதேவி அலையவில்லையா என்ன? அதனால் எடுப்பானாக இருப்பது அப்படி மோசமான வேலையில்லை. ஆண்டவன் நினைப்பது, கருணாமூர்த்தி என்கிறார்களே, அதை ஒவ்வொரு நிமிஷமும் உரைத்துப் பார்த்து. மாற்றுச் சொல்ல எடுப்பான் வேலையை விட ஒரு சோதனை இருக்க முடியுமா, என்ன? ஆனால் தான் அர்த்தம், தெய்வம் என்று மலையாளி சொல்கிறது போல நாமும் முயற்சி செய்தால் தெய்வமும் கை கொடுக்கும். அந்த



முயற்சி என்ன என்று காணத்தான் இருள் எல்லாம் விழித்துக் கிடந்தான். உண்மையாகவே இரவு முழுதும் இருட்டாகவே போய்விட்டது.

விடியற்காலையில் எழுந்து, டீ போட்டுப் பழையதைப் பிசைந்து குழந்தைகளுக்குப் போட்டுவிட்டு அவளுக்கும் கொஞ்சம் டீயை எடுத்துச் சின்ன கூஜாவில் எடுத்துக் கொண்டு கிளம்பும்போது டாக்ஸிக்காரன் ஒருவன் வழியோடு போகிறவன், நிறுத்தி, "வண்டி வேணுமா சார்?" என்று கேட்டான்.

"அடெடே! எனக்கெதுக்கப்பா..... எவனாவனை ஏத்திக்கிட்டுப்போ. ராயப் பேட்டை ஆஸ்பத்திரிக்குப் போகணும்."

"நான் எக்மோர் போறேன் சாமி."

போய்விட்டான் அவன். அவன் போன பிறகு சடாரென்று ஒரு மின்னல் அடித்தது. நாமும் எழும்பூர் போனாலென்ன? போய்?.... போர்ட்டருக்குப் போட்டியாக முடியாது. நீலச்சட்டை, லைசென்ஸ் எல்லாம் வேணும். அப்புறம்! பேஷ்! பேஷ்!

வழி பிறந்துவிட்டது. எத்தனை பேர் புதிது! ஊர் சுற்றிக் காண்பிக்கலாமே! டாக்ஸி பிடித்துக்கொடுக்கலாமே! ஆகா!

டீயைக் கொடுத்துவிட்டு ஆஸ்பத்திரியிலிருந்து வெளியே வந்தான் சிதம்பரம். எழும்பூர் போக முடியாது. எழும்பூரில் வந்து இறங்குகிறவர்களில் பாதிப்பேர் நம்ம ஊர்க்காரர்கள். சென்டிரலுக்குத்தான் அதிர்ஷ்டம் அடித்தது.

பையில் இருக்கும் ஏழு பைசாவைப் பல்லாக்குச் செலவழித்து விட்டால் பசிக்கு? ரவுண்ட் டாணாவில் வெற்றிலை பாக்கு வாங்கி, மென்று, புகையிலையை அதக்கி மீதியைப் பைக்குள் வைத்துக் கொண்டு நடந்தான்.

பசிக்கு வெற்றிலையைப் போன்ற பரிகாரம் உலகத்தில் வேறு எங்கே இருக்கிறது? கொஞ்சம் புகையிலையும் போட்டுவிட்டால் சோறு எதற்கு? பசிக்கிறபோது கொஞ்சம் புகையிலை. இன்னும் ஒரு மணி நேரத்துக்குக் கவலையில்லை. சென்ட்ரல் வந்துவிட்டது.

எந்த வண்டி வந்ததோ, மெயின் கேட் வாசலில் சாரி சாரியாக வந்தது ஜன வெள்ளம். பார்த்துக் கொண்டே நின்றான். பல்லாவும் காரும் போக விட்டுச் சாலையைக் கடந்தார்கள். எதிர்ச் சாரிக்குப் போனார்கள். அதையும் பார்த்தான். சிலையாக நின்ற டாக்டர் ரங்காச்சாரியைப் பார்த்தான்.

"ஆகா!" என்று மனசு ஒரு துள்ளுத் துள்ளிற்று. பலகையில் கண்ட வெட்டு எழுத்துக்கள் அவனை அபயம் தந்து 'வா, வா' என்று சைகை செய்தபோது மயிர்க் கால்களெல்லாம் பரபரத்தன.

"பகவானே வழி காட்டினியே! எனக்காக இது தோணலே. நீதான் இங்கே கொண்டு விட்டே என்னை" என்று மனசுக்குள்ளேயே நெடுஞ்சாண்கிடையாக விழுந்து சாலையைக் கடந்தான். ஆஸ்பத்திரிக்குள் நுழைந்தான்.

"என்னா! ரத்தம் எடுத்துக்கறுங்களாமே... எப்படிப் போறது அதுக்கு?"

"என்ன சாமி – ரத்தம் குடுக்கப் போறியா? இஞ்ச வா. நான் அனுப்பிட்டுப் போறேன். கும்பல்லே போய் நின்னா ரொம்ப நேரமாகும்...."

"நான் பாத்துக்கறேன்பா. எங்கேன்னு சொல்லு."




"பரவாயில்லே சாமி... ரத்தம் குடுக்கப் போறே...உனக்குச் சம்பாரிச்ச ரத்தம். நான் இதுகூடச் செய்யக் கூடாதா? வா, சாமி!"

பெயரைப் பதிவு செய்து கொண்டார்கள். அங்கே நிற்கச் சொன்னார்கள். இங்கே நிற்கச் சொன்னார்கள்.

"ரொம்ப எடுத்திடுவாங்களாய்யா ரத்தத்தை!"

"அதெல்லாம் இல்லே சாமி கொஞ்சம்தான். எகிறி எகிறிப் போனா அஞ்சு அவுன்ஸ், எட்டு அவுன்ஸ் – பயப்படாதே சாமி."

ரத்தம் கொடுக்க ஒரு வரிசை நின்று கொண்டிருந்தது.

மணி எட்டு, ஒன்பது, ஒன்பதரை!

அப்பாடா! ஒரு பாடாக வந்து சேர்த்தார்கள். ஊசியை வைத்தார்கள்.

"திரும்பிக்க அய்யா அப்பாலே."

"ம்...ஜமாய்ங்க – எத்தினி வேணும் னாலும் எடுத்துக்குங்க." சிரித்தான் சிதம்பரம்.

ஊசி குத்திற்று.

கண்ணை மூடி அப்பால் திரும்பிக் கொண்டான். எத்தனை நேரமாயிற்றோ? எந்த உயிர் பிழைக்கப் போகிறதோ, இதைக் குடித்துவிட்டு... பகவானே! இந்தப் புண்ணியமாவது சம்பாதித்துக் கொடுத்தியே! வெறும் புண்ணியம் இல்லே. பணம் பெற்றுச் சம்பாதிக்கிற புண்ணியம். ரத்தத்தை ரொம்ப எடுத்திட மாட்டானே....

என்னமோ ஒரு யுகம் மாதிரி இருந்தது. எத்தனை நேரம். உடம்பையே காலி செய்து விடுவானோ?

என்னமோ இழுத்த மாதிரி இருந்தது.

"கையை மடக்கி இப்படி உட்காரு அய்யா!"

சற்றுக் கழித்து, "எல்லோரும் இந்த ரூம்லே வந்து உட்காருங்க!" என்று ஓர் உத்தரவு பிறந்தது. இன்னும் ஏழு எட்டுப் பேர் இருந்தார்கள். சிதம்பரம் உட்கார்ந்து விட்டான். அப்படி ஒன்றும் களைப்பாக இல்லை. கிறுகிறுப்பு, மயக்கம் என்று என்னென்னவெல்லாமோ நினைத்தோமே, ஒன்றுமே யில்லை.

திமர் என்று பூட்ஸ் ஒலிகள் கேட்டன. ஆஸ்பத்திரியில் பூட்ஸ் ஒலிக்குப் பஞ்சமில்லை. ஆனால் இவர்கள் டாக்டர்களைப் போல இல்லை. கையில் ஆளுக்கொரு நோட்டுப் புத்தகம் எடுத்து வந்தார்கள். எல்லோரும் இங்கிலீஷிலேயே பேசிக் கொண்டார்கள். ஒரு வெள்ளைக்காரன் கூட வந்திருந்தான்.

கண்ணாடி போட்ட ஆசாமி ஒருவர் அருகில் வந்தார். சிதம்பரத்துக்குப் பக்கத்தில் இருக்கிறவனைப் பார்த்துக் கேட்டார்: "நீ எதுக்கு ரத்தம் கொடுத்தே?"

"எதுக்குன்னா? ஏழு ரூபா கொடுக்கிறாங்க சாமி.... இன்னும் நாலு நாள் போது கவலையில்லாமல் ஓடுமே."

"நீ அடிக்கடி ரத்தம் கொடுக்கிறியா?"

"ஓ! இத்தோட ஒன்பது தடவை!"

இன்னும் மூன்று பேரிடம் இதே கேள்வியைக் கேட்டனர் வேறு இருவர்.

"நான் ஹார்பர்லே வேலை செய்யறேனுங்க. தள்ளு வண்டி வச்சிருக்கேன். நாலு மாசத்துக்கொரு தடவை ரத்தம் குடுப்பேன். அப்புறம் ரண்டு நாள் ஓய்வெடுத்துக்கிட்டுத்தான் வண்டியைத் தொடுவேன்."

''நான் பூ விக்கிறேனுங்க. இந்த மாதிரி வந்து ரத்தம் கொடுத்தா, கூடக் கூலிக்குக் கிடைக்கப் போகுங்க.''

''இந்த ரத்தத்திலேலே என்ன பிரயோசனம், தெரியுமா? இது யாருக்குப் போறது, தெரியுமா?''

''தெரியுங்களே. பிரசவப் பெரம் பளிங்களுக்குக் கொடுப்பாங்க. கூடல் ஆபரேஷன், வயித்து ஆபரேஷன் இதுங்களை ரத்தம் தேதமாகும்ல;- அதுக்குக் கொடுப்பாங்களாம். கார்லே கீர்லே அடிபட்டு ஆளு வந்திச்சின்னு அவங்களுக்கும் கொடுப்பாங்க.''

''ரொம்ப சரி.''

''அது மாத்திரம் இல்லே!'' என்று இன்னொரு சட்டைக்காரர் சொன்னார். ''இப்ப சீனுக்காரன் நம்ப தேசத்து மேலே படையெடுத்திருக்கான்ல ?''

''ஆமாங்க. நான் கூடச் சேரப் போனேன். பார்வை ரொம்பப் பலு நாருக்குன்னு ஒதுக்கிப்பிட்டாங்க.''

''போனுப் போகுது. நீ இங்கே இருந்தேதான் சண்டை போட்டிருக்கிலே. அவங்க போய் ரத்தம் சிந்தறத்துக்குப் பர்த்தியா இங்கேயே அதைக் கொடுத்துப்பிட்டே...இந்த ரத்தமெல்லாம் நம்ப பிப்பாய்ங்க சீனுக்காரனே எதிர்த்துப் போராடறுங்கள்ள. அவங்களுக்குக் காயம் பட்டாக் கொடுப்பாங்கய்யா.''

''அப்படீங்களா! ரொம்பச் சந்தோசங்க.''

''அதனுலே நீ ரத்தம் கொடுக்கிறது உன் வயித்துக்காக இல்லே. உயிர்களைக் காப்பாத்த. நம்ம பிப்பாய்ங்களோட உயிரைக் காப்பாத்த.''

''நல்லதுங்க.''

எல்லோரும் வேகமாக நோட்டுப் புத்தகங்களில் எழுதிக் கொண்டிருந்தார்கள். வெள்ளைக்காரப் பையன்கூட எழுதிக் கொண்டிருந்தான். கடைசியில் ஒருவன் மின்னல் போட்டோ எடுத்துக் கண்ணைக் கூச அடித்தான். வெள்ளைக்காரன் எல்லோரிடமும் வந்து கை குலுக்கினுன். நமஸ்தே என்று கையைக் கூப்பி விட்டு ப்போனுன். பூட்ஸ் எல்லாம் டொக் டொக்கென்று வெளியே நடந்து போய்க் காதை விட்டு மறைந்தன.

அப்புறம் இந்தச் சீட்டை அங்கே கொண்டுபோகச் சொன்னுர்கள். ஒவ்வொரு இடத்திலும் ஒரு கியூ வரிசை. கடைசியில் பணம் வாங்கும்போது மணி ஒன்றுகி விட்டது. ஏழரை மணிக்குப் போட்ட வெற்றிலேதான். அப்புறம் என்னமோ ரொத்தத்துக்குக் கெடக்கிறுப் போலப் பட்டினி. பசியைப் பற்றிக் கவலே இல்லே. அதைப் பொறுத்துக் கொள்ள முடியும். ஆனுல் புகையிலே போடாமல் சுறெல்லாம் கடுத்து நமைச்சல் எடுத்துவிட்டது. ரத்தம் கசிகிறுற் போல ஓர் அசட்டு இனிப்பு. அக்கு அக்கு என்று மேல் கடைவாயும் கீழ்க் கடைவாயும் அடித்துக் கொண்டான். வெளியே வந்தான்.

''என்ன சார் — புறப்பட்டாச்சா?'' என்றுன் உதவிக்கு வந்த ஆசாமி.

''ம்...''

''போட்டுக் குடு சார்.''

தூக்கி வாரிப் போட்டது சிதம்பரத்துக்கு. எதைப் போட்டுக் கொடுக்கிறது?

''என்னுத்துக்கப்பா?''

## கும்பலில் கோவிந்தா !

''அடியே! தெருவிலே போகிறவன் எவனுவது இந்தக் கும்பல்லே உக்கார்ந்து சாப்பிட்டாலும் தெரியாது. எல்லாம் நம்ம மாப்பிள்ளேகள்தானுன்னு தெரிஞ்சுண்டு பரிமாறு!''

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''நான்தானே சார் தள்ளிவிட்டேன் உன்னே? இல்லாட்டி நீ இப்ப ஜெயிச்சு வர முடியுமா?''

அவன் என்ன செய்தான்? ஒவ்வொரு க்யூவிலும் அவனுக்குப் பக்கத்தில் வந்து நிற்பான். முதல் ஆள் நகர்ந்து, இவன் வேறு எங்காவது கவனமாக இருந்தால், ''போ சார், போ... அப்புறம் பின்னுலே இருக்கிறவங்க வந்து நிப்பாங்க. இடம் போயிடும். மறுபடியும் கடைசிலே நிக்கணும். போ, சார்'' என்று சொல்லிக்கொண்டே விரும்பான். சீட்டைக் குமாஸ்தா கொடுக்கும்போது ''வாங்கிக்க, சார்'' என்பான். பிறகு ''இப்படி வா'' என்பான்.

''நீ என்னய்யா செய்தே! கூடக் கூட வந்து நின்னியே, அதுக்காகவா? மணி ஒன்னரை ஆகப் போறது. வந்தவுடனே பணத்தை வாங்கிக் கொடுத்துப் பத்து நிமிஷத்துலே அனுப்பிக்கப் போறுப்பலே பேசினியே?''

''சார்! நான் என்ன செஞ்சிருக்கேன்னு உனக்குத் தெரியாது. இந்தக் கன்னுலே அத்தினி வேலே செஞ்சிருக்கேன். தெரியுமா, சார்! இல்லாட்டி நீ அந்த மணிக்குத்தான் வெளியே போயிருப்பே.''

பேசாமல் நடந்தான் சிதம்பரம்.

''சார், நான் வேற யாருக்காவது செஞ்சிருந்தா ரெண்டு ரூபாயைக் கொடுத்து அப்பவே அனுப்பிச்சிருப்பாங்க சார்.''

அவன் வயிறு எக்கிக் கொண்டு நின்றது. பார்த்தான் சிதம்பரம். ஒரு ரூபாயைக் கொடுத்து ''இன்னமே தெய்வத்துக்கு அடுக்கிற காரியமாப் பண்ணுய்யா. இந்த நாய் பொழைப்பு பொழைக்காதே'' என்று வீசிவிட்டு அவசரம் அவசரமாக நடந்தான். சென்ட்ரல் ஸ்டேஷனில் நுழைந்து ஒரு சாம்பார், தயிர் சாதம் சாப்பிட்டுவிட்டு அதே மாதிரி நாலு நுழைப் பொட்டலங்களே வாங்கி, வெளியே வந்து வெற்றிலே பாக்கைப் போட்டு, ஓர் ஆட்டோவைப் பிடித்து ஏறினுன்.

ஆஸ்பத்திரிக்கு வந்து அவளிடம் ஒரு நுழைப் பொட்டலத்தை நீட்டினுன். ''இன்னிக்கும் சமைக்கலே'' என்று கருக்கமாகச் சொல்லிவிட்டு மீதிப் பொட்டலங்களே எடுத்துக் கொண்டு வீட்டுக்கு வந்தான்.

''ஏன்யா! குழந்தைகளேப் பட்டினியாப் போட்டுட்டு எங்கேய்யா போயிட்டே?'' என்றுள் அவல் விக்கிற அகிலாப் பாட்டி.

மூன்றுவது பெண் அவனேப் பார்த்ததும் 'ஏக் ஏக்' கென்று விசித்து விசித்து அழத் தொடங்கிற்று.

''ஏண்டா கண்ணு அழறே! அழப்படாது. அழப்படாது. சாப்பிட்டுட்டு அழலாம். வா. வா.... வாங்கடா சந்துரு, பேபி, பட்டு.''

எல்லாம் ஓடிவந்தன.

''நான் இப்பத்தான் மொருஞ்சாத மாவது பிசைஞ்சு போடலாம்னு நெனேச்சிண்டே, விருந்தேன் எங்கேய்யா போயிட்டே?'' என்றுகேட்டுக்கொண்டே வந்தாள் பாட்டி.

''என்ன பண்றது பாட்டி! நம்ம குழந்தைகளே பெரிசுன்னு நெனேச்சிண்டிருந்தா முடியுமோ? தேசத்துக்கே இப்ப ஆபத்து வந்திருக்கு. சீனுக்காரன் இமய மலையை முழுங்கிண்டு வரான். இந்த மலே முழுங்கி மகாதேவன்களேப் பார்த்துக் கைலாசத்து மகாதேவன் மூணுவது கண்ணேத் திறந்தான்னுப் போதும். எல்லாரும் பஸ்மம் ஆயிடுவான். ஆனு செய்ய மாட்டேங்கறுனே. நம்ம பிப்பாயெல்லாம் அங்கே போய்க் குளிரிலேயும், பனியிலேயும் சண்டை போட்டுக் காயம் படறுங்க. ஒரு குண்டு பட்டு துன்னு ஒரு படி ரத்தம் போயிடும். அதுக்காக இங்கேந்து நம்மை யெல்லாம் ரத்தம் கொடுக்கச் சொல்லிக் கேக்கறு. நாம் என்ன செய்ய முடியும்? காசு எங்கிருக்கு நம்ம கிட்டே? இந்தாடாய்யா இதையாவது எடுத்துக்கோன்னு ரத்தம் கொடுத்திட்டு வந்தேன். நாழியா விடுத்து. குழந்தை, குழந்தைன்னு அவாளும் நம்ம குழந்தைகள் தானே?'' என்று மறையாத சிரிப்பைச் சிரித்தான் சிதம்பரம்.

''ரத்தம் கொடுத்திரா? ரத்த பாங்காமே, அதிலேயா?''

''ஏன், கொடுத்தா என்ன? ரத்த பாங்கா? புண்ணிய பாங்குன்னு அது?''

பாட்டி பிரமித்துப் போய் அவனேயே பார்த்துக் கொண்டிருந்தாள். ''நீர் சமத்தா, அசடான்னே புரியலேயே காணும்'' என்றுள்.

பதிலுக்கு ஒரு வேட்டுச் சிரிப்பைச் சிரித்துவிட்டுக் குழந்தைகளேச் சாப்பிடச் சொல்லி மூன்றுவது குழந்தைக்குச் சாதத்தை ஊட்டினுன் அவன். கையலம்பி விட்ட பிறகு இலேசாகக் கைகால் உதறுவது போலிருந்தது. ''அப்பாடா'' என்று நீட்டிப் படுத்து இளேப்பாற ஆரம்பித்தான்.




இப்பொழுதெல்லாம்
விசேஷ நாட்களில்
அன்பளிப்பாக ஏன் தையல் மிஷின்களைக் கொடுக்கிறார்கள் ?

உங்கள் குடும்பத்தினர் தையல் மிஷினை விரும்பிப் போற்றுவார்களென்று ! உங்களன்புக்குப் பாத்திரமானவர்கள் அத் தையல் மிஷினை மிகவும் மதித்து, புகழ்ந்து, எந்நாளும் அதனை உபயோகிப்பார்களென்று !

ஆம். அதுதான் உண்மை. மேலும், தையல் மிஷின் மங்களகரமான, உயர்ந்தோர் வாழ்க்கையின் சின்னம். உங்கள் குடும்பத்திற்கேற்ற, விசேஷ தினத்திற்குகந்த ஒரு உயரிய அன்பளிப்பு.

"உஷா ஸ்ட்ரீம்லைண்ட் மாடலை" அளித்து இவ்வருடம் உங்கள் குடும்பத்தினரை வியப்படையச் செய்யுங்கள். மிக சேர்த்தியான தோற்றத்திற்கும், உன்னத உழைப்பிற்கும், 40க்கும் மேலான அயல் நாடுகளில் புகழ்ப்படும் இந்த "உஷா ஸ்ட்ரீம்லைண்ட் மாடல்" இந்தியாவில் இப்பொழுதே முதல் தடவையாக விற்கப்படுகிறது.

**உஷா**
தையல் மிஷின்

ஜே இஞ்சினீரிங் ஒர்க்ஸ் லிமிடெட், கல்கத்தா-31



தியாகராஜயோகம்
கல்கி தீபாவளி மலர். 1963


தியாகராஜயோகம்
கல்கி தீபாவளி மலர். 1963

தேய்ந்துபோன
டயர்
மேலும்
40,000
மைல்
உழைக்கலாம்

பஸ் அல்லது லாரி டயர் தேய்ந்து போனால், அதனை மேலும் எவ்வளவு அதிக மைலுக்கு உபயோகிக்கலாம் என்பது, ரீடிரெடிங் செய்யும் முறையைப் பொறுத்தது. விஞ்ஞான முறையில் டிவிஎஸ் ரீடிரெட் செய்வதால், ஒரே டயரை மீண்டும் மீண்டும் ரீடிரெட் செய்ய முடியும். இதனால் 40,000 மைல் வரை அதிகமாக ஓட்டலாம்.

**டிவிஎஸ் ரீடிரெடிங் அதிக மைல்கள் உழைப்பானேன்?**

சிறு கண்ணாடித் துண்டுகளும், ஆணிகளும் ரீடிரெட் செய்வதற்காக வந்த டயர்களிலிருந்து டிவிஎஸ் அகற்றியவை. இவை தான் உண்மையான அபாயம். ஏனெனில் இவை கேஸிங்குடன் ஒன்றிவிடுகின்றன. மிக நுண்ணிய அன்னியப் பொருள்களையும் கண்டுபிடித்து அகற்றுவதில் டிவிஎஸ் முழு கவனம் செலுத்துகிறது.



**கேஸிங்கை டி.வி.எஸ். வலுப்படுத்துகிறது**

பழுதுகள் சீர் செய்யப் பெறுகின்றன; கேஸிங் வலுப்பெறுகிறது. எனவே டயரை மீண்டும் மீண்டும் ரீடிரெட் செய்யலாம். ஒவ்வோர் ஆண்டிலும் டிவிஎஸ்ஸின் சதர்ன் ரோட்வேஸ் பஸ், லாரி ஓடும் மூன்று கோடியே இருபது லக்ஷம் மைல் தூரத்தில், ரீடிரெட் செய்த டயர்கள் மீண்டும் மீண்டும் உழைப்பிற்கு சோதிக்கப் பெறுகின்றன.



டிவிஎஸ் ரீடிரெடிங், ஒரு டயருக்கு அதிக மைல்களைக் கொடுக்கிறது. அதனால் ஒரு ரூபாய்க்கு அதிக டயர் மைல்களைக் கொடுத்து, செலவைக் குறைக்கும்.

**இந்தியாவிலேயே ரீடிரெடிங் செய்வதில் மிகப் பெரிய ஸ்தாபனம் டிவிஎஸ்.**




**சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்** (டிவிஎஸ் ஸ்தாபனம்)

புதுக்கோட்டை — மதுரை — கோயமுத்தூர் — திருநெல்வேலி

JWT-SI-63-1268/A




ஸ்ரீவேணுகோபாலன்

''எனக்கு உங்கள் மீது நம்பிக்கை யில்லை...!''

அவள் ஒரு நொடியில் கூறி விட்டாள். இதற்கு இவ்வளவு வருடங்களா காத்திருந்தாள்? இருபது வருடங்கள் ஆகி விட்டன. கல்யாணம் பண்ணிக்கொண்ட நிகழ்ச்சியே மறந்து விட்டது. இப்போது வாழ்ந்து கொண்டு வருவது ஒன்றுதான் மெய்யாகத் தோன்றியது. எப்படிச் சேர்ந்தோம், எப்படி வாழ்ந்தோம் என்பதுகூட மறந்தாகி விட்டது. இப்போது அவளுக்குத் திடீரென்று என்ன வந்து விட்டது?

சத்து சற்று நேரம் நின்று பார்த்தார். அதற்கு மேல் லோகு விளக்கம் கொடுக்க மாட்டாள் என்று தெரிந்தது. மெள்ள வெளியே வந்து நின்றார். ரயில் நிலையத்தில் 'டிங் டிங்' என்று பிளாட் மணி அடித்துக் கொள்வது கேட்டது. 7–20 வண்டி வந்து கொண்டிருந்தது. உடன் விரைவாக நடைவிட்டுப் போனார்.

''ஹலோ! 303 அரைவலா?.... ம்... ஏன் லேட்டு?.... மழையா? இங்கே மழை யில்லையே.... ரைட்!''

சத்து பேசி முடித்து விட்டு வெளியே வந்தார். இதற்கு இவ்வளவு வருடங்களா? நம்பிக்கையில்லை என்று சொல்வதற்கு இவ்வளவு நீண்ட கால ஆராய்ச்சியோ....?

பிளாட்பாரத்தைக் கடைசி வரையில் பார்த்தார். இந்த நீலு எங்கே போனாள்? ''ஏ, நீலு.... நீலு!''

தூரத்து நாவல் மரத்தடியில் நீலு ஆயிரம் கால் பாண்டி ஆடிக் கொண்டிருந்தாள். அவள் ஒருத்தியே ஒருத்திதான்! சிநேகிதி ஒருவரும் கிடையாது! அவளுக்கு மாத்திரம் என்ன? இங்கேயுள்ள யாருக்குமே எவரும் நண்பர் கிடையாது. எல்லாரும் தனித் தனி நபர்கள் தான்! அவரவர் தனித் தனி உலகங்கள்!

இந்த ரயில் நிலையம்கூட அனாதைதான்! அருகிலுள்ள பெரிய ரயில் சந்திப்பிலிருந்து கிழக்கே ஒரு யாத்திரை ஸ்தலத்தை இணைக்கும் நாற்பத்திரண்டுமைல் கிளைப் பாதை இது. இந்தப் பாதையின் நடுவில்தான் இந்த ரயில் நிலையம் இருக்கிறது. இந் நிலையத்துக்கு மகத்துவமோ, விமரிசையோ கிடையாது. தொடர்ந்தாற்போல் பதினைந்து மைல்களுக்கு ரயில் நிலையமே இல்லை என்று எதிர் வண்டிகளை வாங்குவதற்காக இந்த நிலையத்தை ஏற்படுத்தியிருந்தார்கள். மற்றப்படி விசேஷம் ஏதுமில்லை.

நிலையத்தை விட்டு வெளி வர வேண்டியதுதான். வெட்டவெளி! ஒரே வெட்ட வெளி! எங்கும் பாதை பிரிந்து பாவதும் இல்லை. நடந்து அவரவர்கள் பாதை உண்டுபண்ணிக் கொள்ள வேண்டியதுதான். வெட்ட வெளி சிறிது தூரம் சென்றவுடன் 'ஜோ' என்று பேயாய்ப் படர்ந்திருக்கும் பனைத் தோப்புகள் விளிம்பு கட்டி விடுகின்றன.

இந்த லோகுவுக்கு என்ன வந்தது? இப்படிச் சொல்லி விட்டாள் பார்த்தாயா? அவளது மனத்தை ஏதோ அரித்துக் கொண்டிருக்கிறது. அதை வெளிப்படையாகச் சொல்லுகிறாளோ?

''கப்பிட் மர்ச்சனா அப்பா?''

நீலு வந்து நின்றாள். வட்டமாகச் செதுக்கிய பாண்டிச் சில் அவள் கையில் சுழன்று கொண்டிருந்தது. அவள் கால்கள், நிலையில்லாது துள்ளிக்கொண்டிருந்தன.

''சாப்பிட வில்லையா?''

''இதோ, போகிறேன் அப்பா!''

அவள் குதித்து நடந்தாள். அவளது கவுன் குடையாய் விரிந்து அமிழ்ந்து கொண்டது. சற்றுத் தூரம் போனவள் நின்று விட்டாள்.

''அப்பா, ரயில் வருகிறதா?''

''இன்னும் பதினைந்து நிமிஷங்கள் ஆகும்! அதற்குள் சாப்பிட்டு விட்டு வந்து விடு!''

நீலு ஓடத் தொடங்கினாள்.

லோகுவைப் பற்றி இன்றைக்கு என்ன? ஆதி நாட்களிலிருந்தே இவளைப் புரிந்துகொள்ள முடிந்ததா என்ன? எப்போதும் அவள் ஒரு மூடு திரை! பேசுவது எவ்வளவு கச்சிதமாயிருக்கும்? அதிலேயே நிறைய அர்த்தங்களை அவர்தான் தோண்டி எடுக்க வேண்டும்!

சிறு வயதிலிருந்தே லோகு அப்படித்தான் இருப்பாளாம். அவள் அப்பா கூடச் சொல்லி யிருக்கிறார்: ''எங்கள் லோகு ரொம்ப அழுத்தம்! எதையும் சட்டுனு சொல்ல மாட்டாள்!'' என்று.

அதுவும் உண்மைதான்! நல்ல அழுத்தக்காரிதான்! தன் அழுத்தத்திலேயே மற்றவர் மனங்களில் பெரிய சுமையை ஏற்றி வைத்து விடுகிறாள்.

கல்யாணம்கூடப் பண்ணிக் கொள்ள மாட்டேன் என்றாளாம். எஸ். எஸ். எல். ஸி. படித்த பிறகு அவளது அப்பா அவள் படிப்பை நிறுத்தி விட்டாராம். அவள் ஒரே பிடிவாதம் பிடித்தாளாம், மேலே படிக்க வேண்டும் என்று. அதற்கு வீட்டில் ஒருவரும் இணங்க வில்லையாம். இரண்டு மூன்று வரன்கள் வேறு அவளைப் பார்த்துச் சென்றார்களாம். ஒருவரையும் பண்ணிக்கொள்ள அவள் சம்மதப்பட வில்லையாம். அவள் அப்பாவும் மூன்று வருடங்கள் சும்மா இருந்து விட்டாராம். பிறகு சத்துவை அவள் மணக்கச் சம்மதித்தது ஆச்சரியம் இல்லையா?

சத்துவின் தந்தையும், லோகுவின் தந்தையும் பள்ளி நண்பர்கள். எங்கேயோ போகும் வழியில் சத்துவும் அவன் தந்தையும் இரண்டே இரண்டு நாட்கள் லோகுவின் வீட்டில் தங்கிப் போனார்கள். அவர்கள் போன பிறகு லோகுவின் தந்தை அவளிடம் மீண்டும் கலியாணப் பேச்சைத் தொடங்கினாராம்.

''ஏன், லோகு? சத்துவைக் கல்யாணம் பண்ணிக் கொள்கிறாயா? அவன் லக்ஷணமாக இருக்கிறானே!''

சத்துவின் லக்ஷணத்துக்கு ஈடு ஏது? ஒரே சிவப்பு! கன்னங்கள் குமிழ்த்துப் பன்னீர்ச் செம்புபோல் பக்கங்களில் பூரித்திருக்கும். தூண்டில் போல் நீண்டு வளைந்த புருவமும், அதன் கீழ் கருமை பொதிந்திருக்கும் விழிகளும் கொள்ளை அழகுதான்! திருமால் நிற்பதுபோல் அவன் நிற்கும் உயரமும், ஒயிலாய் அவன் நடந்து வரும் நடையும் பார்ப்பதற்கு என்ன நளினமாய்த் தோன்றின.

லோகு பதில் சொல்லவே வில்லையாம்! அவள் தந்தைக்கு அவள் மனசு புரிந்து விட்டதாம்! உடனே கலியாணத்துக்கு ஏற்பாடு பண்ணிவிட்டாராம்.

கல்யாணம் பண்ணிக் கொள்ள விருப்பம் இல்லாதவள் சத்துவைக் கண்டதும் ஏன் மனத்தை மாற்றிக் கொள்ள வேண்டும்? திருமணமான புதிதில் அவள் அவ

சிடம் குழைந்து குழைந்து பேசிய பேச்செல்லாம்....

இப்போது எல்லாம் பகற்கனவாகத் தோன்றுகிறது. இருவரும் ஒருவரை யொருவர் பார்த்து, பேசி, உணர்ந்து சலிப்புத் தட்டியதாகி விட்டது. இருவரிடையேயும் ஒரு மௌனம் மெள்ளப் படர்ந்து இப்போது கடல் போல் பெருகியாகி விட்டது....

7–20 வண்டி வந்து கொண்டிருந்தது. இப்போது மணி 8–20! வண்டி ஒரு மணி நேரம் தாமதம்! நீலு சாப்பிட்டு விட்டு ஓடி வந்துவிட்டாள். சந்து டர்பனை மாட்டிக் கொண்டு, கொடிகளைக் கையில் தூக்கிய வண்ணம் வெளியிலே வந்தார். ரயில் கனைப்போடு வந்து நின்றது. வண்டியின் கார்டும் சந்துவும் 'க்ஷேமம்' விசாரித்துக் கொண்டார்கள்.

வழக்கப்படியே இங்கே இரு வண்டிகள் சந்திப்பு. சந்து என்ஜினை நோக்கி நடந்து கொண்டிருந்தார்.

''ஸலாம் ஆபேஜும்!'' டிரைவர் பாச்சா வணக்கம் தெரிவித்தார்.

''என்ன, பாய்? வண்டியை லேட்டாக்கி விட்டீர்களே!'' என்றார் சந்து.

''நான் என்ன பண்ணுவேன், ஸார்! நம்ப பீவிக்கு வயசாகிப் போச்சு! மெள்ளத்தான் இழுக்கிறாள்!'' என்றார் பாச்சா. அவர் தம் என்ஜினைப் 'பீவி' என்று அழைப்பது வழக்கம்!

என்ஜினிலிருந்து சந்துவின் வீட்டுக்கு நீர் பிடித்துக் கொண்டிருந்தார்கள்.

நீலு பாச்சாவிடம் வம்பு அளந்து கொண்டிருந்தாள். ''பாச்சா மாமா! எனக்கு விசில் அடிக்கக் காட்டுங்களேன்!'' என்று ஆர்ப்பரித்தாள்.

பாச்சா நீலுவை என்ஜின் மேல் தூக்கி, விசில் விசையைக் காட்டி, அதை இழுக்கச் சொன்னார். நீலுவின் கைக்கு வலு இல்லை. பலமாக இழுத்துப் பார்த்து விட்டுப் பயனில்லாமல் போகவே, தானாகவே ''ஊ'' வென்று வாய் விட்டு ஊதிக் கொண்டாள்.

வண்டிகள் போன பிறகு சந்து நீலுவுடன் வீட்டுக்குப் புறப்பட்டார். ''பாச்சா மாமா! டாடா'' என்று வண்டி வெகு தூரம் போகும் வரை நீலு கையைவீசிக் கொண்டிருந்தாள்.

வீட்டில் லோகு கட்டிலில் படுத்திருந்தாள்.

''லோகு!''

மெள்ள உலையும் பூமாலை போல் அவள் கட்டிலில் புரண்டாள். கண்ணாடி நாகம் விரிவது போல் அவள் மேனியெல்லாம் ஒரு ஜொலிப்பு. மாங்கல்யமும், சங்கிலிகளும் 'கல கல'வெனச் சிரித்துச் சரிந்தன.

''உங்க பெண் இன்னும் சாப்பிடவில்லை தெரியுமா?''

சந்து திடுக்கிட்டார்.

''ஏன்மா, நீலு! நீ சாப்பிடாமல் ஸ்டேஷனுக்கு வந்து விட்டாயா?''

நீலு பேசவில்லை.

''அவளுக்கு நான் போட்டால் சாப்பாடு எங்கே பிடிக்கிறது? நீங்கள் ஊட்டி விட்டால்தான் சாப்பிடுவாள் ராணி!''

சந்துவுக்கு அவள் வார்த்தைகளைக் கேட்க மனம் ஓட வில்லை. காலை மணி பத்து ஆகியும் நீலு சாப்பிடாமல் இருக்கிறாள் என்பதுதான் நினைவில் ஓடியது. ''வா நீலு'' என்று நீலுவை உள்ளே இழுத்துப் போய்விட்டார்.

அவர்கள் சாப்பிடும்போது சமையலறையில் நிழல் தட்டியது! லோகுவா?

லோகு நிலையடைத்து நின்றாள். ஒரு கையால் நிலையின் சட்டத்தைப் பிடித்திருந்தாள். மற்றொரு கையைத் தொங்க விட்டு ஆடாமல் அசையாமல் நின்றாள்.

''ஏன், நிற்கிறாய், லோகு? உட்கார்ந்து கொள்ளேன்!''

லோகு அவரை விழித்துப் பார்த்தாள்.

''எனக்கு உட்கார்ந்திருக்கப் பிடிக்காது. நான் படுத்துக் கொள்ளப் போகிறேன்!''

பின்னும் முகத்தைச் சொடுக்கித் திருப்பி விட்டு லோகு போய் விட்டாள். அவள் திரும்பியபோது அவர்களை நோக்கி எறிந்த பார்வையில் உண்மையில் தீயே எரிந்து கொண்டிருந்தது.

எதற்கு வந்தாள்? எதற்குப் போகிறாள்? அவள் வந்ததற்கும் போனதற்கும் பொருளே கிடையாது! அவள் ரூடு நிறை உள்ளத்தில் இருளை இட்டு நிரப்பியிருக்கிறாள். நீ கூட விள்ள முடியாத இருள்!

இவள் உள்ளத்தில் எதை வைத்துக் கொள்வதால்தான் என்ன பயன்? இனிமேல் ஒருவர் மேல் ஒருவர் வெறுப்பு கொள்வதாலோ, அன்பு கொள்வதாலோ என்ன ஆகி விடப் போகிறது? இருபது வருடங்கள் ஓடி விட்டன. இத்தனை நாட்களில் புலராத கவர்க்கமா இனிமேல் உதயமாகி விடப் போகிறது?

முதல் பிரசவத்துக்கு லோகு பிறந்தகம் போய் விட்டாள். அங்கிருந்து இரண்டு தினங்களுக்கு ஒரு முறை கடிதம் வந்து விடும்.

அப்போதெல்லாம் எப்படித் தேனைக் குழைத்துக் கடிதங்கள் வரைந்தாள்? சந்துவைப் பிரிந்து வாழ்கிறோமே என்று எவ்வளவு துடித்து வருந்தினாள்? அந்தக் கடிதங்களில் மிதந்த அன்பை அவர் எவ்வளவு பெரிதாக மதித்தார்.

முதற் பிரசவம் குறைப் பிரசவம்!

சந்து அவளை முதன் முதலில் பார்க்கச் சென்ற போது அவள் கட்டிலில் படுத்திருந்தாள். ஆள் இரண்டாக விண்டிருந்தாள். அவரது கைகளைப் பிடித்துக் கொண்டு, தன் உடலைக் கொடி போல் தொங்க விட்டுக் கொண்டு வெகு நேரம் விக்கினாள். பிறகு குழந்தை போல், ''என்னை



விட்டு நீங்கள் பிரியக் கூடாது!'' என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டாள்.

அப்புறம் மற்றொரு பிரசவம்! இந்தத் தடவை லோரு தாய் வீடு செல்லவிரும்ப வில்லை. ஆனால் அவளது தாயார் அவளை வற்புறுத்தி இழுத்துச் சென்று விட்டாள்.

''சமயத்துக்குத் தந்தி கொடுப்பேன். உடன் வந்துவிட வேண்டும். ஆமாம்; குழந்தை பிறக்கு முன்பே நீங்கள் அங்கிருக்க வேண்டும்!''

தந்தி வரவே யில்லை! வெறும் கடிதம் வந்தது! மீண்டும் லோருவுக்குக் குறைப் பிரசவம்! இந்தத் தடவை சந்து அவள் வீட்டுக்குப் போக வில்லை. லோருவும் அவரை வரும்படி எழுத வில்லை.

லோருவைத் திரும்பக் கொண்டு விட அவளது தந்தை வந்திருந்தார். அவளது தந்தை இரண்டு மூன்று தினங்கள் இருந்து விட்டுப் போய்விட்டார். லோருவும் சந்துவும் மீண்டும் தனிமையாகி விட்டார்கள்.

சந்துவுக்கு அப்போது ஒரு பெரிய ரயில் சந்திப்பில் வேலை. குவார்ட்டர்ஸ் கொடுத்திருந்தார்கள். இருவரும் குவார்ட்டர்ஸ் வெளியில் அமர்ந்தார்கள். வீடுகளின் வரிசையான நிழல்கள் சம நீளங்களில், சம இடைவெளிகளில் வெகு தூரம் வரை விழுந்திருந்தன.

''நம் வாழ்க்கையைப் பார்த்தீர்களா?''—லோரு பேசினாள்.

''ஏன்?''

''தனியாக நிற்கிறோம்!''

''உனக்கு நான் துணை! எனக்கு நீ துணை !''

''சிறிது நாள் கழித்து இந்தத் துணையில்கூட ஒருவருக்கொருவர் நம்பிக்கையில்லாது போய் விடும்!''

''அப்படி நான் நினைக்க வில்லை!''

''நாம் இருவர் இருந்தாலும் இனி அவரவர் தனி தான்!''

அன்றைக்கே அவர்கள் வாழ்க்கையில் ஒரு பகுதி டக்கென்று அமிழ்ந்து பள்ளம் உண்டானதுப் போல் தோன்றி விட்டது. லோருவின் பேச்சுக்கள் ஏனோ குறைந்து விட்டன. தனிமையில் தோட்டத்து நாற்காலியில் அமர்ந்து பொழுது போக்குவதே ஒரு வழக்கமாகி விட்டது. துள்ளி விளையாடிய அவள் கண்களில் ஒரு தேக்கம் விழ ஆரம்பித்தது.

அந்தத் தேக்கம் வரவர ஒருவித வெறுப்பாகப் பரிணமித்து வந்து விட்டது. இப்போது லோருவுக்கு எதை எடுத்தாலும் வெறுப்பு! அருவை!.... உள்ளத்தில் எதை வளர்க்கிறாள்?

அவள் காலையில் கூறிவிட்டது மீண்டும் அவர் நினைவுக்கு வந்தது. இப்படியா ஒருத்தி கூறுவாள்? அதன் பொருள் என்ன? அப்படி கருமையாவுக்கு லோரு எப்படி மாறினாள்? இந்த மாறுதல்களெல்லாம் மூன்றாம் பிரசவத்துக்குப் பிறகுதானே ?

லோருவுக்கு மூன்றாம் பிரசவமும் நடந்தது. ஆனால் இந்தத் தடவை அவள் தன் பிறந்தகம் போக வில்லை. பிறந்தகம் என்று சொல்லிக் கொள்ள அப்போது ஒன்றுமே யில்லை. தாயும் தந்தையும் ஒருவர் பின் ஒருவராக மறைந்து விட்டனர். எஞ்சியிருப்பது அவள்தான்.

லோருவுக்கு வலி கண்டதும் ஆஸ்பத்திரியில் சேர்த்தார்கள். பிறகு... அவள் திரும்பி வந்ததே புனர் ஜன்மமாகிவிட்டது. குழந்தை வயிற்றிலேயே மரித்துக் கிடந்தது. ரண சிகிச்சை செய்துதான் அவள் பிழைக்க வேண்டி வந்தது. அதன் பலனும் அவள் கர்ப்பப்பைக்கு நிரந்தரத் தீங்கு விளைந்து விட்டது. இனி அவள் தாய்மையைப் பெறுவது இந்த ஜென்மத்தில் இல்லை என்றாகி விட்டது.

இந்தத் தடவை அவள் வெகு நாட்கள் படுக்கையில் படுத்திருந்தாள். எழுந்து நடமாடுவதற்கே வெகு நாட்கள் பிடித்து விட்டன. சந்து நிறைய செலவழித்தார். பாலும் பழமும் வீட்டில் வழிந்தோடின.

குணமடைந்த பின்புகூட அவள் முகத்தில் விழுந்திருந்த அந்தத் துக்க நிழல் மாறவே யில்லை.

''என் வம்சத்தில் நான்தான் மிஞ்சினேன். அது என்னோடு நின்று விட்டது'' என்றாள் லோரு.

''உன் வம்சம் மாத்திரமில்லை. என் வம்சமுந்தான்!''

அவள் சந்துவை ஏறிட்டு நோக்கினாள்.

''நிஜமாகவா?''

''இதென்ன கேள்வி? அது எப்படிப் பொய்யாக இருக்க முடியும்?''

''இல்லை; கேட்டேன்!''

இந்த ரயில் நிலையத்துக்கு ஸ்டேஷன் மாஸ்டராக வந்து நான்கு வருடங்களாகி விட்டன. இப்போது சந்துவுக்கு வயது நாற்பத்தைந்தாகிறது. இல்லற வாழ்க்கை போல் உத்தியோக வாழ்க்கையும் தனிமையைத்தான் காட்டி விட்டது. ஒவ்வொரு ஸ்டேஷனிலும் ஸ்டேஷன் மாஸ்டராகப் பதவி வகித்தாகி விட்டது. இதுவும் ஓர் அனாதை ஸ்டேஷன்!

பேச்சுக்குத் துணையில்லை. முகம் பார்த்துச் சிரிக்க ஆளில்லை. அவரும் லோருவும் தான். ஒருவரை யொருவர் பார்த்துக் கொள்ள வேண்டியதுதான்! அதுவும் அலுத்துப் போய் விட்டது. புளியந்தோப்புக்குச் செல்லும் வெட்டவெளி போல் வாழ்க்கை வெறுமையாகி விட்டது.

அன்று இரவு வண்டி தாமதமாகி எட்டு மணிக்கு வந்தது. சிறிது நேரம் நின்று விட்டு உடன் புறப்பட்டு விட்டது. அதை அனுப்பியவுடன் அவர் யந்திரம் போல் தம் அறைக்கு வந்தார்.

பச்சை விளக்கை வைத்தவுடன், ''அம்மா!'' என்று ஒரு தீனக் குரல் அவர் காதில் விழுந்தது.

வேப்ப மரத்தடியில் யாரோ நிற்பது தெரிந்தது. விளக்கைத் தூக்கிப் பிடித்தார். எதிரே ஒரு சிறுமி தென்பட்டாள்.

''யார் நீ?''

''நான் நீலு!''

''எந்த ஊர்?''

அவள் விழித்தாள்.

''இங்கே எப்படி வந்தாய்?''

''எங்க அம்மா ரயில்லே யிருந்து இறங்கினாள். நானும் இறங்கினேன். இப்போது அவளைக் காண வில்லை!''

''ஏன் இறங்கினீர்கள்?''

''டிக்கெட் இல்லை; டிக்கெட் காரர் இறக்கி விட்டார்!''

சந்து அவளை உற்று நோக்கினார். அந்தப் பெண்ணின் கவுனில் ஓரேயடியாக அழுக்கு ஏறியிருந்தது. விலாப் புறத்தில் கிழிந்திருப்பதால் கவுன் அலங் கோலமாய்த் தொங்கியது. அவள் தலையில் எண்ணெய்ப் பசையே இல்லை.

ஊட்டமில்லாதது போல் அவள் உடல் மெலிந்து தென்பட்டது. ஆனால் அவள் முகம்! குழவிக்

# இண்டியனாயில் என்றாலே முன்னேற்றம்

இன்று, விவசாயிகளுக்கு அதி முக்கியத்துவம் வாய்ந்தது இண்டியனாயில். ஆழ உழுது வளத்தைப் பெருக்கும் அளவுக்கு ட்ராக்டர்களை இயக்க உதவும் ஹைஸ்பீட் டீஸல் ஆயில் (எச்.எஸ்.டி) அவர்கள் வழங்குகிறார்கள். விதைகள் விதைக்கவும் பயிரை அறுவடை செய்து போரடிக்கவும் தேவையான விவசாய உபகரணங்களையும் இயக்குகிறது. எச்.எஸ்.டி. ● இண்டியனாயில் என்றாலே முன்னேற்றம், வளர்ந்துவரும் இந்தியப் பொருளாதாரத்துக்கு இன்றியமையாதது-இண்டியன் ஆயில் கம்பெனி இப்பொழுது நாடெங்கும் பெட்ரோலியம் தயாரிப்புக்களை விற்பனைக்குக் கொணர்ந்து விநியோகிக்கின்றது. வயல் வெளியோ, தொழிற்சாலையோ அல்லது இல்லமோ, தேசிய வாழ்வின் ஒவ்வொரு துறையிலும் பெட்ரோலியம் ஜீவநாடியாக விளங்குகிறது. மோபில் தொழிலுபயோக மற்றும் ஆடோமோடிவ் லூப்ரிகண்டுகள் ஆகியவற்றிற்கும் இந்தியாவிலேயே பூரண விநியோகஸ்தர்கள்; இண்டியன் ஆயில் கம்பெனி.




**இண்டியன் ஆயில் கம்பெனி லிமிடெட்,** (இந்திய அரசாங்கத்தின் பொறுப்பிலுள்ள ஸ்தாபனம்.) தலைமை ஆபீஸ்: க்ளாக் ரோட், மகாலக்ஷ்மி, பம்பாய்-34. மேற்குக் கிளை: "ராஷ்மி," கார்மைக்கேல் ரோட், பம்பாய்-26 டப்ளியூ. வடக்குக் கிளை: 'ஜீவன் விஹார்,' 3, பார்லிமெண்ட் ஸ்ட்ரீட், புது டில்லி-1. கிழக்குக் கிளை: பி-64, டாக்டர் சுந்தரி மோஹன் அவென்யூ, கல்கத்தா-14. தெற்குக் கிளை: 'கெனாத் மான்ஷன்,' 160-ஏ, மவுண்ட் ரோட், சென்னை-2.

mas. IOC 3180A.

அவள் உங்களை 'அப்பா!' என்று அழைக்கும் சுவாதீனமே தெரிகிறதே! ஸ்டேஷனில் கிடைத்தவள் என்று நீங்கள் சொன்னதெல்லாம் பொய்!"

லோசு படபடத்து விட்டாள். அந்தச் சத்தத்தில் நீலு கண் விழித்து எழுந்தாள். சந்து அவளைத் தூக்கிக் கொண்டு உள்ளே போய் விட்டார்.

மறு நாள் காலை விடிந்து நேரமாகியும் லோசு படுக்கையை விட்டு எழுந்திருக்கவில்லை. சந்து மெள்ள அவளருகில் சென்று பார்த்தார். அவள் இன்னும் விசித்துக் கொண்டிருந்தாள்.

"லோசு! எழுந்திருக்க வில்லையா?"

"என்னைப் பற்றிக் கவலைப்படாதீர்கள்."

"வீணாக இப்படிப் பேசாதே!"

"நான் பேச வில்லை! இது உறுதி! இந்த வீட்டில் ஒன்று நான் இருக்க வேண்டும், அல்லது நீலு இருக்க வேண்டும்!"

"நீலுவை இப்போது எங்கே போகச் சொல்வேன்!"

"ஏன்! ஹாஸ்டலிலே கொண்டு சேர்த்து விடுங்களேன்!"

"ஹாஸ்டலிலா...?" அவர் குரல் உடைந்து நின்று விட்டது.

கண்களில் நீர் நிரம்பி விட்டது. தூரத்தில் நீலு நின்று அவர்களையே கவனிப்பது தெரிந்தது. உடன் அங்கிருந்து அகன்று விட்டார்.

அன்று பாஸஞ்சர் வண்டியில் பாச்சா டிரைவராக வந்தார். வெகு நாள் டைபாயிடில் படுத்து விட்டு இப்போது தான் வேலை ஏற்றுக் கொண்டு வருகிறார். வண்டியை நிறுத்தி விட்டுக் கீழே இறங்கி வந்தார். அவரைப் பார்த்ததும் சந்துவின் முகம் குன்றி விட்டது. கையில் இருக்கும் கொடியைத் தொங்க விட்டு நின்றார்.

"ஸலாம் ஆலேகும், ஸார்!"

"உடம்பு சரியாய்ப் போச்சா, பாய்?"

"ஆண்டவன் புண்ணியத்திலே குணமாய்ப் போச்சு! நம்ப குழந்தை எங்கே, ஸார்?"

"டவுன் ஹாஸ்டலிலே சேர்த்து விட்டேன். மூணு மாசமாய் அங்கேதான் இருக்கிறாள்!"

"ஹாஸ்டலிலேயா? அந்தச் சின்னப் பெண்ணையா?"

"சில கஷ்டங்கள் ஏற்பட்டன, பாய்! அதுதான்...."

பாய் உதட்டைப் பிதுக்கினார். சந்து தலை குனிந்தார். அவர் கண்கள் நீரிட்டு விட்டன.

அன்று காலையில் லோசு குளித்து விட்டு வந்து விட்டாள். ஸ்டேஷனுக்குப் புறப்படும் போது அவரது முன் நின்றாள்.

"நான் என் தங்கை வீட்டுக்குப் போகப் போகிறேன்!"

"விசேஷமா?"

"சும்மாதான் போகிறேன். மனசுக்குக் கொஞ்சம் ஆறுதல் வேண்டும். இங்கே எனக்கு நிம்மதியில்லே!"

சந்து மௌனமாக நின்றார்.

"இந்த வண்டிக்கே போகிறேன்!"

"எப்போது திரும்புவாய்?"

"நாலாம் நாள் வந்து விடுவேன்!"

"உன் இஷ்டம்!"

லோசு அவசரம் அவசரமாகப் புடவைகளை மடித்துப் பெட்டியில் வைத்துக் கொண்டு புறப்பட்டு விட்டாள்.

ரயில் வந்து விட்டது. பாச்சாவின் தலை என்ஜினில் தெரிந்தது. ஸ்டேஷன் பிளாட்பாரம் முழுவதையும் நோக்கி விட்டு ஏமாற்றத்துடன் கை விரித்தார். சந்து தலையைக் குனிந்தார். லோசு ரயிலேறிப் போய் விட்டாள்.

இரண்டு தினங்கள் ஓடி விட்டன. அன்று தபாலில் நீலுவைப் பற்றிய 'ப்ராக்ரஸ் ரிப்போர்ட்' வந்திருந்தது. அதில் நீலு கோணலாகக் கையெழுத்திட்டிருந்தாள். அவர் கண்களில் நீர் மல்கி விட்டது.

மறுதினம் சந்துவுக்கு வாராந்திர ஓய்வு நாள்! ரிலீவிங் ஸ்டேஷன் மாஸ்டர் ஏற்கனவே வந்து விட்டார்.

'நீலுவைப் போய் ஒரு முறை பார்த்து விட்டு வந்தால் என்ன? இப்போது லோசுதான் வீட்டில் இல்லையே!' நினைவுகள் உடன் படரத் தொடங்கின. 'நாளை டவுனுக்குப் புறப்பட்டு விட்டால்....'

இரவு மழை ஒரு தரம் அடித்துப் பொழிந்து விட்டது. மழை ஓய்ந்த பிறகு தூறல்கள் இலேசாகச் சிதறிக் கொண்டிருந்தன. சந்து வீட்டில் படுத்திருந்தார். வாசற் கதவு தட்டப்படும் சத்தம் கேட்டது.

"அப்பா!"

யார் அது? நீலுவின் குரலா? போர்வையை உதறி விட்டு எழுந்தார். பரபரப்புடன் கதவைத் திறந்தார்.

"அப்பா!"

"நீலுக் கண்ணு!"

சந்து அவளை வாரி அணைத்துக்கொண்டார். முகம் முழுவதிலும் மகிழ்ச்சி பரவி விட்டது. நீலுவின் உடலெல்லாம் ஒரே ஈரம்! கையில் ஒரு கரடிப் பொம்மை வைத்திருந்தாள். எவ்வளவு மெலிந்திருக்கிறாள்? முகம் வெளிறிப் போயிருக்கிறது. தோற்றத்தைப் பார்த்ததும் அவருக்கு இப்போது அழுகை வந்து விட்டது. "நீலு, நீலு!" என்று நாக் குழறினார்.

"எப்ப வந்தாய், நீலு?"

"வாச்சர் கவனிக்காமலிருந்தான். டவுன் ஸ்டேஷனுக்கு ஓடி வந்துட்டேன். பாச்சா மாமா ரயில் ஏற்றினார்!"

"அடி, சமர்த்து!"

நீலு ஈர உடைகளைக் களைந்து விட்டுப் புது கவுன் போட்டுக் கொண்டாள். அவள் உடலைத் துவட்டும் போது சந்து திடுக்கிட்டுப் போனார்.

## அவருக்குப் பிடித்தது!












''நீலு, உனக்கு ஜுரமா?''

''ஆமாம்! நேத்திலிருந்து! என்னை ஹாஸ்டல் ஆஸ்பத்திரியிலே போட்டிருந் தாங்க. அங்கேயிருந்து தப்பிச்சு ஓடி வந்துட்டேன்....''

சந்து அவளை உடனே படுக்கையில் படுக்க வைத்தார். அவர் முகத்தில் கவலை படர்ந்து விட்டது. ''மழையிலே வேறு நனைஞ்சிருக்கிறியே, நீலு!'' என்று சொல்லிக் கொண்டார்.

இரவு நீலு சற்று முனகிக் கொண் டிருந்தாள். சந்து அவள் மீது போர்வை களைப் போர்த்தி விட்டார்.

பொழுது விடிந்தது. நீலுவின் முகத் தில் தெளிவு தோன்றி விட்டது. ஜுரம் குறைந்திருந்தது. சந்துவைப் பார்த்து இலேசாகச் சிரித்தாள்.

''அப்பா, அம்மா எங்கே?''

''ஊருக்குப் போயிருக்கிறாள்.''

''எப்போ வருவாள்?''

''இரண்டு நாளாகும்!''

''அவள் வரதுக்கு முன்னாடி என்னை ஹாஸ்டல்லே கொண்டுபோய் விட்டுடு!''

''ஆகட்டும்!'' அவர் கண்களில் நீர் நிறைந்து விட்டது. துண்டால் துடைத் துக் கொண்டார். நீலு அவரைக் கவ னித்து விட்டாள்.

''உன்னைக்கூட அம்மா திட்டுவாளா?''

''மாட்டாளே! ஒருத்தரையும் திட்ட மாட்டாள்!''

''என்னைத் திட்டறாள், அப்பா! ஹாஸ் டல்லே போய்ச் சாகணும்னு சபிச்சா! தனக்குத் தானே பேசிண்டிருந்தா; ஆனால் என் காதிலே விழுந்தது!''

சந்து வெலவெலத்து நின்றார். நீலு லோகுவைப் புரிந்து கொண்டிருக்கிறாள்!

மறு நாள் நீலுவின் ஜுரம் குறைய வில்லை. சந்துவுக்குத் திகில் தோன்றி விட்டது! 'தானே லோகு வேறு வந்து விட்டால்...?''

மாலையில் பாயிண்ட்ஸ்மேன் கண்ணு சாமி ஒரு நாட்டு வைத்தியனைக் கூட்டி வந்திருந்தான். நாடியைப் பிடித்து, அவர் மாத்திரைகளைக் கொடுத்து விட்டுப் போய் விட்டார்.

இரவாகி விட்டது. எங்கேயோ மழை அடிக்கும் குளுமை வீசிக்கொண்டிருந்தது. வானம் முழுதும் மேகங்களாய்க் கறுத்து வழிந்திருந்தது. புளியந் தோப்பு இருட் டில் புதைந்து விட்டது.

சந்து நீலுவின் அருகில் அமர்ந்திருந் தார். நீலு கண் விழித்துக் கூரையையே நோக்கிக் கொண்டிருந்தாள்.

''அப்பா!''

''என்ன நீலு?''

''எனக்கு நீ நிஜ அப்பா தானே!''

''ஆமாம், கண்ணு!''

''இல்லேனு அம்மா சொன்னு அப்பா!''

சந்து திடுக்கிட்டார்.

''உன்னை மாதிரி சமர்த்துப் பெண் ணுக்கு 'அப்பா'ன்னு சொல்லிக்கொண்டு யாரும் பெருமைப்படலாம், நீலு!''

இரவு எட்டு மணி ரயில் வரும் சத்தம் கேட்டது! இப்போது மணி ஒன்பது ஆகி றது! சந்து கதவைக் கலந்து வர உள்ளே சென்றார். கதவைப் பாத் திரத்தில் ஆற்றிக் கொண்டு நீலு அருகில் வந்ததும் அவர் திடுக்கிட்டார்.

வெளியே வண்டியின் நீராவியோசை இரைந்து கேட்டுக் கொண்டிருந்தது. நீலு ''பாச்சா மாமா!'' என்று முனகிக் கொண்டிருந்தாள். அவள் கண்கள் இப் போது நிலையிழந்து சுற்றிக் கொண் டிருந்தன.

''நீலு! உனக்கு என்ன செய்யறது அம்மா ?''

நீலு பதில் பேசவில்லை. சிறிது நேரம் உடலை தெளிந்து விட்டுக் கொண்டாள்.

''நீலு! உனக்கு என்ன செய்யறதம்மா? நீலு.... நீலு....''

நீலு இப்போது கண் விழித்தாள். ஆனால் சந்துவின் பார்வை வாயிலை நோக்கி ஓடியிருந்தது. அவர் விழிகள் நிலையாக நின்று விட்டன.

அங்கே லோகு கையில் பெட்டியுடன் நின்று கொண்டிருந்தாள். விழிகளை உருட்டி விழித்து உள்ளே நடப்பதை உற்று நோக்கிக் கொண்டிருந்தாள். அவள் கையைப் பிடித்துக் கொண்டு அவள் தங்கையின் குழந்தை, பேந்தப் பேந்த விழித்தவாறு நின்று கொண் டிருந்தது.

சந்து லோகுவின் மீது வைத்த கண் களை எடுக்க வில்லை. லோகு வாயில் நிலை யில் அசையாது நின்று விட்டாள். அவள் அந்தச் சிறு பெண்ணை அழைத்து வந் திருப்பதன் பொருள் அவருக்குப் புலப் பட்டு விட்டது. அவள் உள்ளே வந்தால் நீலு எவ்வளவு பயம் கொள்ளுவாள் என்பதும் தெரிந்து விட்டது. உள்ளத் தில் ஆத்திரம் பொங்கி நின்றது.

''அப்பா!'' என்று நீலு மெதுவாக அழைத்தாள்.

சந்துவின் கண்கள் வெளி நோக்கியே இருந்தன. ''நில் அங்கே!'' அவர் லோகுவை நோக்கி இரைந்தார். கைகளை எச்சரிப்பது போல் ஆட்டினார்.

''அப்பா!''

''நீலா!''

''ஏன் இரைந்தாய்?''

''கம்மாத்தான்!''

''அம்மா சொல்லுவாளே அந்தப் புளியந்தோப்புப் பேயா அப்பா?''

'ஆமாம்; பேய்தான்!' என்று தனக் குள் முணுமுணுத்த சந்து லோகுவை நோக்கினார். அவள் கண்கள்! ஆமாம்! பேய்கள் புளியந் தோப்பில் உலவவில்லை. அவள் கண்களில்தான் உலவுகின்றன.

''அப்...பா!'' சந்து திரும்பினார். நீலுவின் முகம் திருகிக் கொண்டிருந்தது. கண்கள் சொருகிக் கொண்டிருந்தன.

''நீலு! நீலு! என்னைப் பார் நீலு!''

சந்து அவளை உலுப்பினார். அவள் சுவாசம் உயர்ந்து கொண்டிருந்தது. கண் விழிக்க வில்லை !

''அப்.... பா... ''

''நீலு!''

''நானெக்கு என்....னே...''

''ம்.''

''ஹா...ஸ்டல்லே கொண்டு........ விட்....டு....!''

---

# துன்பத்திலும் இன்பம்

பி.எஸ்.மணி

"உன் பேச்சைக் கேட்டு 'ஸ்டேட்டஸ்' இல்லாத பயலுக்குப் பெண்ணைக் கொடுக்க முன் வந்தால் இந்தக் கதிதான்!" என்று கூப்பாடு போட்டார் புவனாவின் தந்தை.

"என்ன அப்பா! என்ன நடந்து விட்டது?" என்று கேட்டுக் கொண்டே வந்தாள் புவனா.

"உனக்கு வரப் போகிற மாப்பிள்ளை, பெரிய கால்பந்தாட்டக் கலைஞர்—எழுதியிருக்கிற கடுதாசியைப் படித்துப் பாரு!" என்று கூறி அந்தக் கடிதத்தை அவள் பக்கம் வீசியெறிந்தார் அவர்.

புவனா திகிலோடு அந்தக் கடிதத்தைப் பிரித்துப் படித்தாள்: "புவனாவுக்கும் எனக்குமுள்ள திருமணத்தை இன்னும் ஒரு வருஷத்துக்கு ஒத்திப் போட வேண்டும். இந்த அசௌகரியம் கொடுப்பதற்கு மன்னிக்க வேணும். —சங்கர்."

"கடிதத்தைப் படித்தாயா? கலியாணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் செய்தாகி விட்டது. இப்படி ஒரு பயல் வெடிகுண்டைத் தூக்கிப் போட்டால் எப்படி? ஊரில் நம்ம பேரு கெட்டுக் குட்டிச்சுவராகி விடுமே?" என்று குதித்தார் புவனாவின் தந்தை சுந்தரம்.

"அப்பா! அவருக்கு ஏதாவது இடைஞ்சல் ஏற்பட்டிருக்கும். இல்லாவிட்டால் இப்படி அவர் எழுதியிருக்க மாட்டார்!" என்று அவனுக்கு வக்காலத்து வாங்கினாள் புவனா.

"புவனா! நிறுத்து! இரண்டு வரிகளில் இப்படி எழுதிய துரைக்கு நேரில் வந்து விஷயத்தைச் சொல்ல முடியவில்லையோ? கிடக்கிறான், பயல்! வேறு அந்தஸ்துள்ள மாப்பிள்ளையைப் பிடித்து இதே முகூர்த்தத்தில் உனக்குத் தாலி கட்டச் சொல்லி விடுகிறேன்!" என்று இரைந்தார் சுந்தரம்.

பேர்தான் அவருக்குச் சுந்தரமே ஒழிய கோபம் வந்து விட்டால் அவருக்குக் கண்ணு, மூக்கு தெரியாது! அவருக்கு இப்படித் தன் காதலன் எழுதி, நிலைமையை மோசமாக்கி விட்டானே என்று புவனாவுக்கு ஏற்பட்ட வருத்தத்துக்கு அளவில்லை.

சென்னையில் தேசிய கால் பந்தாட்டப் போட்டி ஸ்டேடியம் மைதானத்தில் நடந்து கொண்டிருந்தது. சங்கர் ஆடிய கோஷ்டி இறுதியாட்டத்துக்கு வந்து விட்டது. அன்று மைதானத்துக்குள் அவன் கோஷ்டி இறங்கும் சமயத்தில் சங்கருக்கு ஒரு தந்தி வந்திருப்பதாக யாரோ கூறினார்கள். அந்தச் சமயத்தில் சங்கர் கோஷ்டியின் காப்டன், அந்த ஆளிடம், "தந்தியா? அதை மறைத்து வைத்துக் கொள். ஆட்டம் முடிந்த பிறகு சங்கரிடம் கொடுக்கலாம்!" என்று கூறினான். இது சங்கரின் காதில் விழுந்து விட்டது. தந்தி என்னவாயிருக்கும் என்று அவனுக்குப் புரிந்தும் விட்டது. ஆனால் அவன் அது தெரியாத மாதிரி நடந்து கொண்டான்.

அன்று சங்கர் ஆடிய ஆட்டத்தை விவரித்து முடியாது. எதிர்த்த கோஷ்டியின் மீது நாலைந்து 'கோல்'கள் போட்டு ரசிகர்களின் ஏகோபித்த பாராட்டுதல்களுக்கு உள்ளானான். அவை யெல்லாம் அவன் காதில் ஏறவில்லை. ஆட்டம் முடிந்ததும் காப்டன் கண்கலங்கியபடியே சங்கரிடம் வந்து, "சங்கர்! நான் ஒரு பெரும் தவறுசெய்துவிட்டேன். ஆட்டம் முடிந்த பிறகு தந்தியைக் கொடுக்கலாம் என்று மறைத்து வைத்த என்னை மன்னித்து விடு; நீ இல்லாவிட்டால் இந்தத் தேசிய விளையாட்டில் வெற்றி கிடைக்காது என்ற காரணத்துக்காகத்தான் அப்படிச் செய்தேன்....." என்று கூறினான்.

"எனக்குத் தந்தி வந்தது ஆட்டத்துக்கு முன்பே தெரியும்....."

"தெரியுமா? அப்படியும் உனக்கு ஆட்டத்தில் பங்கு கொள்ள எப்படித் தைரியம் வந்தது?" என்று வியப்புடன் கேட்டான் காப்டன்.

"நான் இந்தப் போட்டியில் கலந்து கொள்வதாக இருக்கவில்லை, காப்டன்! என் தந்தைக்கு உடல் நிலை மோசமாக இருந்தது. ஆனால் என் தந்தைதான் வற்புறுத்தி என்னை அனுப்பி வைத்தார். 'இந்த உயிர் என்றும்தான் போகப் போகிறது. நீ தேசிய விளையாட்டுப் போட்டியில் வெற்றி பெற்றுப் புகழ் சூடினால் என் ஆன்மாவுக்குத் திருப்தியாக இருக்கும்' என்று சொல்லி விட்டுப் போனார். அந்தச் சந்தோஷச் செய்தியைக் கேட்க அவர் இல்லையே என்பது எனக்கு எவ்வளவு துயரமாயிருக்கிறது, தெரியுமா?" என்று கூறிய அவன் கண்களிலிருந்து மாலை மாலையாகக் கண்ணீர் வழிந்தது.

சங்கர் பந்தாட்ட மைதானத்துக்குள் போகும் பொழுது ஒரு கார்டில் இரண்டே வரிகளில் புவனாவின் தந்தைக்கு எழுதினான். அதிகமாக எழுதக் கூடிய மன நிலையில் இல்லை அவன். ஒரு பக்கம் ஆட்டத்தில் வெற்றி பெற வேண்டும் என்ற கவலை. மறுபக்கம் அப்பாவின் உடல்நிலைபற்றிய கவலை. அக்கடிதம்தான் சுந்தரத்தையும் புவனாவையும் அன்று அப்படிக் குழப்பத்தில் ஆழ்த்தியது.

"அப்பா! இன்றையப் பத்திரிகையைப் பார்த்தாயா அப்பா? எல்லாம் முழுக்க முழுக்க அவரைப் பற்றியே பாராட்டி எழுதி யிருக்காங்க......" என்று கூறினாள் புவனா. இப்படிப் புகழ் வெள்ளத்தில் மூழ்கிய சங்கர் கலியாணத்தை ஒத்திப் போடச் சொன்னதின் மர்மம்தான் அவளுக்கு விளங்கவில்லை.

"இனி அந்தப் பயலைப் பற்றி ஒரு வார்த்தை பேசப் படாது!" என்று தடை உத்தரவு போட்டார் சுந்தரம்.

அவர் நிலைமையை உணர்ந்த புவனா, சங்கரைப் பற்றிப் பிறகு அவரிடம் எதுவும் பேச்செடுக்கவில்லை.

மறு நாள் காலையில் தினப் பத்திரிகை வந்ததும் சுந்தரம், "புவனா! இங்கே வாயேன். இன்றையப் பத்திரிகையைப் படித்துப் பார்!" என்று கூப்பிட்டபோது அவளுக்கு வியப்பாக இருந்தது. இரண்டு நாட்களாகச் சிடுசிடுவென் றிருந்த அவள் தந்தையின் வார்த்தைகளில் அன்பு பெருக்கெடுத்தோடுகிறது என்றால் அது அதிசயம்தானே?

"என்ன அப்பா! என்ன விஷயம்? அவரைப் பற்றி..." என்று பேச்செடுத்தவள் நாக்கைக் கடித்துக் கொண்டாள்.

அன்றையத் தினப் பத்திரிகையில் வந்த செய்தியைப் படித்த போது புவனாவின் கண்கள் வியப்பினால் விரிந்தன!

**மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கவேண்டியவர் துயரக் கடலில் மூழ்கினார்!**

பிரபல கால் பந்தாட்டக்காரர் சங்கர் தேசிய விளையாட்டுப் போட்டியில் அபாரமாக ஆடி இறுதியாட்டத்தில் வெற்றி பெற்றது அனைவருக்கும் நினைவிருக்கும். அவர் ஆட்டம் ஆரம்பிக்கும் நேரத்தில் அவர் தந்தை இறந்து விட்டதாகச் செய்தி வந்தது. மோசமான நிலையிலும் சங்கரின் தந்தை அவன் ஆட்டத்தில் சோபிக்க வேண்டும் என்று வற்புறுத்தி ஆட அனுப்பி யிருந்த பெருந்தன்மையை என்னென்பது? தந்தையின் வார்த்தையைக் காப்பாற்றத் தனயன் ஆடி வெற்றி பெற்றதை என்ன வென்பது?

பிரபல கால் பந்தாட்டக்காரர் சங்கருக்கு விரைவில் பிரபல தொழிலதிபர் சுந்தரத்தின் புதல்வி புவனாவை மணமுடிக்க நாள் நிச்சயித்திருந்தனர். இந்தச் சமயத்தில் சங்கர் தம் தந்தையை இழந்தது துரதிர்ஷ்டம்.

"அப்பா! நான் அப்பவே சொல்லவில்லையா? அவருக்கு ஏதாவது இடைஞ்சலில்லாவிட்டால் இப்படி எழுத மாட்டார் என்று? அவர் மேல் உங்களுக்குக் கோபமில்லையே?" என்றாள் புவனா.

"கோபமில்லையா? நிறையக் கோபம் இருக்கு. இரண்டு வரி கடுதாசில் நடந்த விஷயத்தை முழுதும் எழுதாததற்கு அவனைக் கோபித்துக் கொள்ளாமலா விடப் போகிறேன்!" என்றார் சுந்தரம்.

புவனா தந்தையை வியப்புடன் பார்த்தாள். இப்பொழுதுள்ள கோபம் பாசத்தினால் ஏற்பட்டுள்ளது என்பதையறிய அவளுக்கு அதிக நேரமாகவில்லை.

"வா, புவனா! புறப்படு. மாப்பிள்ளை சங்கர் வீட்டுக்குப் போய்த் துக்கம் விசாரித்து விட்டு வந்து விடுவோம்!" என்று கூறி அவளை அழைத்தார் சுந்தரம்.

"சரி, அப்பா! போகலாம்!" என்று புறப்பட்டாள் புவனா. சங்கரோடு கல்யாணத்துக்காக ஒரு வருஷமென்ன, எத்தனை வருஷங்களாயினும் காத்திருக்கலாம் என்று தோன்றியது. அந்தத் துயர வேளையிலும் அவள் மனத்தில் நிம்மதி பிறந்தது.



# அறுபதாம் கல்யாணம்

**வா**சலில் கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டது. பொழுது போக்காக ஏதோ ஒரு பழைய பத்திரிகையைப் புரட்டிக் கொண்டிருந்த நான் அதை மூடி விட்டு அவசரத்துடன் எழுந்து, "வேதம்!" என்று உள்ளே யிருந்த என் மனைவியைக் கூப்பிட்டேன்.

"என்ன?"

"ரெடியா? கார் வந்து விட்டது."

"இதோ ரெண்டே நிமிஷம்!"

"ராமா! ராமா!" என்று தலையில் அடித்துக்கொள்ளப் போனவன் சட்டென்று கையை இழுத்துக் கொண்டேன். சே! ஒரு நல்ல காரியத்துக்காகப் புறப்பட்டுப் போகும் போது தலையில் அடித்துக் கொள்ளுவதாவது!

ஆமாம். நல்ல சுப காரியம்தான். அன்று என் நண்பர் வேதகிரியின் பேத்தி கனகாவுக்குத் திருமண நிச்சயதார்த்தம். அந்தச் சம்பந்தத்துக்குக் காரணமாக இருந்ததே நான்தான். எனவே, முதல்நாள் மாலையில் வேதகிரி, அவர் பிள்ளை ராகவன், அவன் மனைவி சியாமளி எல்லோருமாக வந்து என்னையும் என் மனைவியையும் நிச்சயதார்த்தத்துக்கு அழைத்துவிட்டுப் போயிருந்தார்கள். "மூன்று மணிக்குக் கார் அனுப்புகிறேன். எங்கள் வீட்டுக்கு வந்து விடுங்கள். பிறகு எல்லாரும் ஒன்றாகச் சம்பந்தி வீட்டுக்குப் போகலாம். நாளை ஞாயிற்றுக்கிழமை. ராகுகாலத்துக்கு முன் நிச்சயதார்த்த வேலைகள் முடிந்துவிட வேண்டும்" என்று வேதகிரி பிரத்தியேகமாக எச்சரித்து விட்டுப் போனார். எனவே இரண்டு மணிக்கே வேதத்தை டிரஸ் செய்து கொள்ளச் சொல்லி எழுப்பி விட்டு விட்டேன். பிறகு நான் டிரஸ் செய்து கொண்டு அந்தப் பழைய பத்திரிகைகளில் இரண்டு சிறுகதைகளைக் கூடப் படித்து முடித்து விட்டேன். மணி கிட்டத்தட்ட மூன்று ஆகப் போகிறது. இன்னும்கூட வேதம் டிரஸ் செய்து கொண்டு முடிக்க வில்லை யென்றால்....? சே! சே! பெண்களுக்கு எத்தனை வயதானாலும் இந்த அலங்காரப் பித்து விடவே விடாதோ !

வாசல் கதவு தட்டப்பட்டது. டிரைவர் அவசரப்படுத்துகிறான். "இதோ வந்து விட்டோம் டிரைவர்" என்று கூறிக் கொண்டே கதவைத் திறந்தவன் ஒரு கணம் திகைத்துப் போனேன்.

வெளியே வேதகிரியே நின்று கொண்டிருந்தார்.

"அடாடா! நாங்கள்தான் கட்டாயம் வருகிறோம் என்று சொல்லி யிருந்தோமே சார். பாவம், நீங்கள் எதற்காக வீணில் அலைந்தீர்கள்?" என்று அநுதாபத்தோடு சொல்லி விட்டு மறுபடியும் உள்ளே திரும்பி, "வேதம் !" என்று என் மனைவியைக் கூப்பிடப் போனேன்.

**மாயாவி**

"வேண்டாம்; அவர்களைக் கூப்பிட வேண்டாம்" என்றார் வேதகிரி.

நான் திடுக்கிட்டேன். "ஏன் சார்?"

"உள்ளே வாருங்கள்; உட்கார்ந்து பேசலாம்" என்று அவர் என்னை முந்திக் கொண்டு வீட்டினுள்ளே நடந்தார். அவருடைய முகத்தில் தேங்கி யிருந்த விசனத்தைப் பார்த்ததுமே ஏதோ விபரீதம் நடந்திருக்கிறது என்று ஊகித்து விட்டேன்.

என் அறைக்குச் சென்று சோபாவில் உட்கார்ந்தோம். "என்ன சார் விசேஷம்? ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறீர்கள்?" என்று அவரைக் கேட்டேன்.

"அரை மணி நேரத்துக்கு முன் பிள்ளை வீட்டுக்காரர் ஒருவர் வந்து, 'பிரகதீசன் தம்மை மன்னித்துக் கொள்ளச் சொன்னார். அவருக்கு இந்தச் சம்பந்தத்தில் பிரியம் இல்லையாம். நீங்கள் நிச்சயதாம்பூலத்துக்கு வரவேண்டாம் என்று சொல்லிவிட்டு வரச்சொன்னார்' என்று சொன்னார்."

"ஐயையோ! ஏன் சார்? என்ன காரணமாம்?" என்று பதறிக்கொண்டே கேட்டேன்.

"காரணம் கேட்டோம். தமக்கு ஒன்றும் தெரியாது என்று சொல்லி விட்டு அவர் போய் விட்டார். அதுதான் உங்களையும் கூட்டிக் கொண்டு சம்பந்தியின் வீட்டுக்குப் போய், காரணத்தையாவது கேட்டு விடுவோம் என்று புறப்பட்டு வந்தேன்."

எனக்கு இந்தச் செய்தி ஒரே திகைப்பாக இருந்தது. சம்பந்தி பிரகதீசன் என் ஆபீஸ் நண்பர். அவருடைய மூத்த பையன் பிரணதார்த்திதான் கனகாவுக்கு நிச்சயிக்கவிருந்த மாப்பிள்ளை. நான்தான் பையனின் ஜாதகத்தை வேதகிரிக்கும், பெண்ணின் ஜாதகத்தைப் பிரகதீசனுக்கும் வாங்கிக் கொடுத்தவன். இரு தரப்பிலும் ஜாதகப் பொருத்தம் பார்த்துத் திருப்தியடைந்த பிறகு பிரணதார்த்தியை வரவழைத்துப் பெண்ணைப் பார்க்கச் செய்தோம். பிரணதார்த்தி ஜாம்ஷெட்பூர் உருக்காலையில் அதிகாரியாக இருந்தான். கனகாவை அவனுக்குப் பிடித்து விட்



டது. பிறகு லௌகிக விஷயங்களைப் பேசி முடித்தோம். பிரகதீசனும், அவர் மனைவியும் கேட்ட எதிர் ஜாமீன், சீர் வரிசைகள் எல்லாவற்றையும் வடுக் கூடக் குறையாமல் ஒப்புக் கொண்டார் வேதகிரி. பிறகுதான் நிச்சயதார்த்தத்துக்கு நாள் குறிப்பிட்டோம். ஏன்? சித்திரை மாதத்தில் கலியாணத்துக்குக் கூட நாள் பார்த்து முடிவு செய்து விட்டோம். இரண்டு முகூர்த்தங்கள் தேர்ந்தெடுத்திருந்தோம். முதல் முகூர்த்தத்திலேயே கலியாணத்தை நடத்திவிட வேண்டுமென்று வேதகிரி கேட்டுக் கொண்டார். ஏனென்றால், இரண்டாவது முகூர்த்தத்துக்கு மறுநாள் அவருக்கு அறுபதாண்டு நிறைகிறது. அறுபதாம் கலியாணத்தைச் சிறப்பாக நடத்த வேண்டுமென்று வேதகிரியின் பிள்ளை ராகவன் விரும்பினான். "முதல் முகூர்த்த நாள் எங்களுக்கும் சௌகரியம்தான். எதற்கும் என்னை வளர்த்து ஆளாக்கிய அத்தை கல்கத்தாவில் தமிழ்ப் பள்ளி ஒன்றில் தலைமை ஆசிரியையாக இருக்கிறாள். அவளுக்கு எழுதி, அவளுடைய சௌகரியத்தைத் தெரிந்து கொண்டு முடிவு சொல்லுகிறேன்" என்று சென்ற வாரம் லௌகிக விஷயங்களைப் பேசி முடிவு செய்த போது சொல்லி யிருந்தார் பிரகதீசன்.

இவ்வளவு தூரம் எல்லாம் முடிவான பிறகு, இப்போது திடீரென்று, அதுவும் நிச்சயதார்த்த நாளன்று, நிச்சயதார்த்தத்துக்கு ஒரு மணி நேரம் இருக்கையில் 'உங்கள் சம்பந்தத்தில் பிரியம் இல்லை' என்று அவர் சொல்லி அனுப்பியிருப்பதன் காரணத்தை எவ்வளவு மண்டையை உடைத்துக் கொண்டும் என்னால் கண்டுபிடிக்க முடியவில்லை.

## 2

பிரகதீசனையாவது கடந்த இரண்டு வருஷங்களாக, அதாவது நான் சென்னைக்கு வேலை மாற்றலாகி வந்த பிறகுதான் தெரியும். ஆனால் வேதகிரியைக் கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாக அறிவேன். பம்பாயில் முப்பது முப்பத்தைந்து வருஷங்கள் ஒரு பெரிய பிரிட்டிஷ் கம்பெனியில் உதவி டைரக்டராகப் பணியாற்றிவிட்டு, இப்போதுதான் நாலைந்து வருஷங்களுக்கு முன் வேலையிலிருந்து ஓய்வு பெற்று, சென்னையில் வேலை பார்த்து வந்த தமது மகன் ராகவனுடன் வசிக்க வந்திருந்தார் அவர். நானும் என் வாழ்வில் பெரும் பகுதியை பம்பாயில் கழித்தவன்தான். இருபதாவது வயதில் வேலை தேடி பம்பாய்க்குப் போனவன், இரண்டு ஆண்டுகளுக்கு முன் உடல் நலத்தை முன்னிட்டு வேலையைச் சென்னைக்கு மாற்றிக் கொண்டு வந்தேன்.

பம்பாயில் வேதகிரியை அறியாத தமிழர்களே இருக்க மாட்டார்கள். பெரிய உத்தியோகத்தில் இருந்த போதிலும், கொஞ்சம் கூடப் பெருமை பாராட்டிக் கொள்ளாமல் என் போன்ற சாதாரண ஆட்களிடம் கூடச் சகஜமாகப் பழகுவார். பம்பாயில் எத்தனை சமூக, கலாசார, இலக்கிய நிறுவனங்கள் உண்டோ, அத்தனையிலும் அவருக்கும் பங்கு உண்டு. அவற்றின் வளர்ச்சிக்கு ஊன்று கோலாக இருந்தவர்களில் அவரும் ஒருவர். தரும சிந்தையும், தயாள சீலமும் அவருடைய தனிப் பண்புகள்.

பம்பாய் வாசியாகி இரண்டு — மூன்று ஆண்டுகள் சென்றபின் எனக்கு அவருடன் நெருங்கிப் பழகும் வாய்ப்புக் கிட்டியது. நான் அங்கே ஓர் இலக்கிய சங்கத்தில் ஈடுபாடு கொண்டிருந்தேன். அதன் செயலாளராகவும் சில காலம் தொண்டு செய்தேன். முதல் தடவை அதன் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆண்டில் வேதகிரியும் அதன் தலைவராக வந்தார்.

தமிழ் நாட்டிலிருந்து இலக்கிய அறிஞர் ஒருவர் காசிப் பிரயாணத்தை மேற்கொண்டு பம்பாய்க்கு வந்திருக்கிறார் என்றும் செம்பூரில் தமது உறவினர் ஒருவர் வீட்டில் தங்கியிருக்கிறார் என்றும், மறு நாளே பம்பாயிலிருந்து புறப்பட இருக்கிறாரென்றும் செய்தி வரவே, அன்று மாலையே சங்கத்தில் அவர் சொற்பொழிவுக்கு ஏற்பாடு செய்து விட்டு, தலைவரிடம் விஷயத்தை அறிவித்து மாலைக் கூட்டத்துக்குத் தலைமை தாங்க வருமாறு அழைப்பதற்காக அவர் வீட்டுக்குச் சென்றேன்.

வேதகிரி சாப்பிட்டு விட்டு அப்பொழுது தான் இளைப்பாறப் போயிருப்பதாக, வீட்டு வெளித் தாழ்வாரத்தில் உட்கார்ந்து புத்தகம் படித்துக் கொண்டிருந்த இளைஞன் சொன்னான். அவனுக்குப் பதினாறு பதினேழு வயது இருக்கும். வேதகிரியின் முகச் சாயல் இல்லையெனினும், அவன் அவருடைய மகன் ராகவனாகத்தான் இருக்க வேண்டும் என்று ஊகித்தேன்.

"சரி, அவர் எழுந்ததும்...."

எங்கள் பேச்சைக் கேட்டு வேதகிரியே மூக்குக் கண்ணாடியை மாட்டிக் கொண்டு வெளியே வந்தார். அவரிடம் விஷயத்தைச் சொன்னேன்.

"ராகவா! இவர்தான்டா, சங்கத்தின் செயலாளர் கணபதி. செயலாளர் என்பதை விடச் சங்கத்தின் தூண் என்று சொன்னால் இன்னும் பொருத்தமாக இருக்கும். சோறு தண்ணீர் இல்லாமல், தூக்கம், ஓய்வு என்பதைச் சிந்தியாமல் உழைப்பார். உழைப்பதற்கு உன் போன்ற இளைஞர்கள் இவரிடம் பாடம் கற்றுக் கொள்ள வேண்டுமடா!" என்றார் வேதகிரி.

ராகவன் பதில் ஒன்றும் சொல்லாமல் தர்மசங்கடத்துடன் விழித்தான். அவன் நிலையை உணர்ந்து நான் பேச்சை வேறு பக்கம் திருப்பினேன். "பையன் படிக்கிறானா?" என்று கேட்டேன்.

"ஆமாம், பி.ஏ. இறுதி ஆண்டு. அடுத்த வருஷம் இன்ஜினீயரிங் காலேஜில் சேர்த்து விடலாம் என்றிருக்கிறேன்" என்று கூறிய அவர் ராகவனை நோக்கி, "சரி சரி, போய்ப் படி. இந்த வெயிலில் கிரிக்கெட் விளையாடப் போய்விடாதே!" என்றார். ராகவன் உள்ளே சென்ற சிறிது நேரத்துக்கெல்லாம் முப்பத்தைந்து — நாற்பது வயது மதிக்கத்தக்க ஓர் அம்மாள், நீர் கசியும் கிளாஸ் டம்ளரில் குளிர்ந்த ஐஸ் சர்பத்துடன் வந்தாள். டம்ளரை என் முன் இருந்த டீபாயின் மேல் வைத்தாள்.

"ராகவனின் அம்மா!" என்று அவளை எனக்கு அறிமுகம் செய்து வைத்தார் வேதகிரி.

"நமஸ்காரம்" என்று கைகூப்பினேன்.

அந்த அம்மாள் பதில் வணக்கம் சொல்லாமல் இருப்பதைக் கண்ட வேதகிரி, உரத்த குரலில், "உனக்குத்தான் வணக்கம் சொல்லுகிறார் காமாட்சி" என்று கூவினார்.

அவள் நின்று, திரும்பி, மௌனமாகக் கைகூப்பி விட்டு உள்ளே சென்று விட்டாள்.

தலை மறையும் வரையில் அவளையே பார்த்துக் கொண்டிருந்தார் வேதகிரி. பிறகு என்னிடம் திரும்பி, "காது கேட்காது; செவிட்டு ஜன்மம்!" என்றார்.

"அடாடா, அப்படியா சார்! உங்கள் மனைவி..."

மேலே பேசுவதற்குள் அவர் குறுக்கிட்டார். "காமாட்சி என் மனைவியில்லை. சகோதரி மாதிரி."

"பின் ராகவன் உங்களை அப்பா என்று..." நான் நாக்கைக் கடித்துக் கொண்டேன், அசட்டுத் தனமாக என்னவோ கேட்டு விட்டோமென்று.





ஆனால் அவரிடம் பதற்றமோ, கோபமோ காணப்படவில்லை. "அது ஒரு பெரிய கதை, கணபதி" என்றார் அமைதியாக.

## 3

வேதகிரி விரிவாகக் கூறிய அந்தக் கதையின் சாரம் இதுதான்:

அவருடைய சொந்த ஊர் திருநெல்வேலி. சிறு வயதிலேயே தந்தையை இழந்து விட்டார். ஏழைக் குடும்பம். இருந்தாலும் அவருடைய அம்மாவுக்குப் பிள்ளையைப் படிக்க வைத்துக் கலெக்டராக்கிப் பார்த்து விட வேண்டும் என்று ஒரே ஆவல். ஒரே சொத்தான வீட்டை விற்றும் பல வீடுகளில் குற்றவேல் புரிந்தும் மகனை பி. ஏ. வரையில் படிக்க வைத்து விட்டாள். அதற்கு மேல் தனது கனவை நனவாக்கிக் கொள்ள அவளுடைய பொருளாதார நிலையும், உடல் நிலையும் இடம் கொடுக்க வில்லை. அளவுக்கு மீறி உழைத்து அவள் நோயாளியாகி விட்டாள். சோற்றுக்கே திண்டாட்டமான நிலை வந்து விட்டது. எனவே வேதகிரி திருநெல்வேலியிலேயே ஓர் உண்டியல் கடையில் சொற்ப சம்பளத்தில் வேலைக்கு அமரும்படி ஆயிற்று.

நோய் வேதனையைவிட, மகனைக் கலெக்டராக்கிப் பார்க்க முடியவில்லையே என்ற வேதனைதான் அந்தத் தாயைப் பெரிதாக அரித்தது. நாள் தோறும் அதைச் சொல்லிப் புலம்புவாள். தெய்வங்கள் ஒன்று விடாமல் வேண்டுவாள்.

தெய்வம் ஒரு நாள் அவளுடைய வேண்டுகோளுக்குச் செவி சாய்த்தது. திருச்சியில் லட்சுமி நாராயணன் என்று ஒரு லட்சாதிபதி உண்டியல் கடை நடத்திக் கொண்டிருந்தார். அவர் ஒரு சமயம் திருநெல்வேலிக்கு வந்து, வேதகிரி வேலை பார்த்து வந்த உண்டியல் கடைக்காரரின் வீட்டில் தங்கினார்.

லட்சுமி நாராயணனுக்கு மனைவி இல்லை. ஒரே ஒரு ஊமைப் பெண்ணைப் பெற்றுப் போட்டு விட்டு அந்தப் புண்ணியவதி கண்களை மூடி விட்டாள். அந்தப் பெண்தான் இப்பொழுது வேதகிரியின் வீட்டில் இருந்த காமாட்சி. காமாட்சிக்கு அப்பொழுது பதினொரு வயது. அவளிடம் உயிரையே வைத்திருந்தார் லட்சுமி நாராயணன். எப்பொழுதும் அவருக்குக் காமாட்சியைப் பற்றிய கவலை தான். 'இன்னும் சில வருஷங்களில் இவளை யார் கையிலாவது பிடித்துக் கொடுக்க வேண்டுமே! மாற்ற முடியாத உடற்குறையுடைய இவளை, அக்குறையைப் பாராட்டாமல் வைத்துக் காப்பாற்றக் கூடியவனாக ஒருவன் கிட்ட வேண்டுமே! பணத்துக்காக மணந்து பிறகு பரிதவிக்க விட்டு விடும் பாவியிடம் இவள் சிக்கிக் கொண்டு விடக் கூடாதே!' என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தார் அவர்.

திருநெல்வேலிக்கு வந்திருந்த போது அவர் இந்தக் கவலையை வேதகிரி வேலை செய்து வந்த கடைக்காரரிடம் வெளியிட்டார். வேதகிரியிடம் அந்தக் கடைக்காரருக்கு ஓர் அலாதியான பற்றுதல். காரணம், அவனுடைய நேர்மையும், விடாமுயற்சியும், நன்னடத்தையும் தான். எனவே, அவர் அவனையே காமாட்சிக்குக் கணவனாக்கி விடும்படி சிபாரிசு செய்தார். வேதகிரியின் அம்மாவிடம் லட்சுமி நாராயணனைக் கூட்டிக் கொண்டு போய் எல்லா விவரங்களையும் சொன்னார். முதலில் அந்த அம்மாள், எத்தனை சொத்து சுகத்துடன் இருந்தாலும் ஓர் ஊமைப் பெண்ணைத் தனது மகனுக்கு மனைவியாக்க மனமே இல்லாதவளாகத்தான் இருந்தாள். ஆனால் அவளுடைய பிறவி ஆசையான, பையனைக் கலெக்டராக்கும் எண்ணத்தை ஈடேற்றுவதாகச் சொன்னதும், அவள் ஒருவாறு இணங்கி விட்டாள். "அப்படியானால் முதலில் அவனைக் கலெக்டருக்குப் படிக்க அனுப்புங்கள். கலெக்டராகி வந்தபிறகு கல்யாணம் நடக்கட்டும்" என்றாள்.

காமாட்சி அப்போது பதினொரு வயதுச் சிறுமியாகவே இருந்ததால், அவள் பருவ வயதடைவதற்கும் வேதகிரி கலெக்டர் படிப்பை முடித்துக் கொண்டு திரும்புவதற்கும் சரியாக இருக்குமென்று லட்சுமி நாராயணனும் அதற்கு இணங்கினார். விஷயம் அறிந்த போது வேதகிரிதான் சிறிது பிணங்கினார். ஆனால் அவருடைய அம்மா, "உன்னைக் கலெக்டராக்கிப் பார்ப்பதற்காகவே நான் வாழ்ந்தேனடா!" என்று கண்ணீர் சோரக் கூறிய போது அவரும் இணங்கி விட்டார். பிறகு என்ன? அன்றே வேதகிரி லட்சுமி நாராயணனுடன் திருச்சிக்குச் சென்றார். ஐ. ஸி. எஸ். படிக்கத் தேர்ந்தெடுக்கப்படும் மாணவர்களுக்கான பரீட்சைக்கு விடா முயற்சியுடன் படித்தார். தேர்வும் கிடைத்தது. இங்கிலாந்துக்குக் கப்பலேறினார்.

ஆனால் அவர் ஐ. ஸி. எஸ். முதலாண்டுப் படிப்பை முடிப்பதற்குள்ளே எதிர்பாராத நிகழ்ச்சிகள் நடந்து விட்டன. மகன் கலெக்டராகிப் பார்ப்பதற்காகவே உயிர் வாழ்வதாகச் சொன்ன வேதகிரியின் தாய், அவர் முதல் வருஷப் படிப்பில் ஈடுபட்டிருக்கும் போதே கண் மூடி விட்டாள். தவிர, வேதகிரியின் ஐ. ஸி. எஸ். படிப்புக்கே உலை வைத்து விட்ட மற்றொரு எதிர்பாராத சம்பவமும் நிகழ்ந்து விட்டது.

எதிர்பார்த்ததற்கு முன்பே காமாட்சி பெரியவளாகி விட்டாள். அதோடு, ஊமையானாலும், உணர்ச்சிகள் செத்து விடாத அவள், தன் தந்தைக்குக் காரியதரிசியாகப் பணியாற்றி வந்த ரகுபதி என்ற இளைஞனிடம் மனத்தையும் பறிகொடுத்து விட்டாள். ரகுபதியும் சீலமான பையன்தான். தவிர மூன்று-நான்கு வருஷங்களாக லட்சுமி நாராயணனிடம் வேலை செய்து வந்ததால் அவனுடைய உள்ளும் புறமும் நன்றாகஅறிந்து கொள்ளும் வாய்ப்பு அவருக்குக் கிட்டியிருந்தது. பணக்காரர்கள் போக்கெல்லாம் ஒரு மாதிரிதானே? அவர், ஏற்கனவே வேதகிரிக்கு அளித்த வாக்குறுதியை மறந்து தமது மகளை உடனடியாக ரகுபதிக்கே திருமணம் செய்து வைத்து விட்டார். இந்த மகத்தான துரோகத்தின் இடையிலும் அவர் ஒரு நல்ல காரியம் செய்தார். வேதகிரிக்கு



ஐயாயிரம் ரூபாயை மொத்தமாக அனுப்பி, மகளுக்கு வேறு மணாளனைத் தேடி விட்டதையும் அறிவித்து விட்டார்.

இந்த அதிர்ச்சிதானோ, அல்லது தம்மைக் கலெக்டராகக் காண ஆசையோடு இருந்த தாய்தான் போய் விட்டாளே என்ற அலட்சியமோ, படிப்பில் சுட்டிகையான வேதகிரி, ஐ. சி. எஸ். தேர்வில் தோற்று விட்டார். அக்காலத்தில் ஐ. சி. எஸ்.ஸில் தோற்றவர்கள் சாதாரணமாகப் பாரிஸ்டருக்குப் படித்துப் பட்டம் பெற்றுத் திரும்புவதுண்டு. ஆனால் வேதகிரி அதையும் செய்யவில்லை. ஐ. சி. எஸ். தேர்வின் முடிவு வெளியானதுமே இந்தியாவுக்குத் திரும்பி விட்டார். அதிர்ஷ்டவசமாக மேலை நாட்டுப் படிப்பு அவருக்கு பிரிட்டிஷ் கம்பெனி ஒன்றில் கண்ணியமான வேலை ஒன்றைத் தேடித் தந்தது. அதில் படிப் படியாக உயர்ந்து இன்று அக்கம்பெனியின் உதவி டைரக்டராகியிருந்தார்.

இடையே இக்கம்பெனியில் வேலை பெற்ற புதிதில், அவர் சென்னைக்கு வந்து சில மாதங்கள் தங்க நேரிட்டது. கம்பெனியின் கிளை ஒன்றைச் சென்னையில் புதிதாகத் தொடங்கினார்கள். புதிய கிளையின் அலுவல்களை ஒழுங்கு செய்வதற்காகவே அப்பொழுது அவர் சென்னையில் தங்கினார்.

வேலையை முடித்துக் கொண்டு பம்பாய்க்குத் திரும்புவதற்கு முன்னால் சென்னைக் கிளையின் மானேஜர், வேதகிரிக்குத் தமது வீட்டில் ஒரு விருந்தளித்தார். அந்த விருந்தின் போது ஊமைக் காமாட்சியை அவர்கள் வீட்டுச் சமையற்காரியாகக் கண்டு திடுக்கிட்டார் வேதகிரி. நடந்தது இதுதான்:

மகளை ரகுபதிக்கு மணம் முடித்த ஆண்டிலேயே லட்சுமி நாராயணனின் கை தாழ்ந்து விட்டது. அவரிடம் லேவாதேவி செய்து வந்த பெரும் புள்ளிகள் நாலைந்து பேர் ஒரே சமயத்தில் மஞ்சள் காகிதத்தை நீட்டி விட்டனர். அவ்வளவுதான், லட்சுமி நாராயணனின் ஆட்டபாட்டமும் தீர்ந்துவிட்டது. அதை கூடப் பொறுத்துக் கொண்டார். ஆனால், தமது கை தாழ்ந்த பிறகு மாப்பிள்ளைப் பையனின் போக்கு அடியோடு மாறி ஊமை மகளை அவன் கொடுமைப்படுத்தத் தொடங்கிய கண்ணராவியை அவரால் பொறுக்கவே முடிய வில்லை. மாமனுக்கும் மருமகனுக்கும் தகராறு வலுத்துப் பகையை வளர்த்தது. இருவரும் ஒருவரை மற்றவர் ஆள் வைத்துக் கொல்லும் கொடுமையில் முடிந்தது அவர்களுடைய கதை. ஒரு வயது ஆண் குழந்தையுடன் தெருவில் நின்ற காமாட்சிக்கு, அப்போது திருச்சியில் மற்றொரு கம்பெனியில் பணியாற்றி வந்த இந்த மானேஜர் மனமிரங்கித் தமது வீட்டில் சமையல் வேலை கொடுத்துக் காப்பாற்றினார். சென்னைக்கு இந்தப் புதியவேலையை ஏற்க வந்த போதும் உடன் அழைத்துக் கொண்டு வந்தார்.

இதைக் கண்ட வேதகிரிக்கு மனம் தாங்கவில்லை. தாம் இன்று இந்நிலையில் இருப்பது காமாட்சியால்தான் என்பதை நினைவுகூர்ந்தார். அன்றே காமாட்சியைத் தமது சகோதரியாகத் தம்முடன் பம்பாய்க்கு அழைத்து வந்து விட்டார்.



மாமியார்: அப்பப்பா! இந்த வெடிச் சத்தத்தைக் கேட்டுக் கேட்டு என் மண்டையே வெடிச்சிடும் போல இருக்கு.

மருமகள்: அதையும்தான் வெடிச்சுக் காட்டுங்களேன்; குழந்தைகள் சந்தோஷப்படட்டும்!

அவளால் உயர்ந்த நாம் அவளுக்காகவே வாழ வேண்டும் என்று முடிவு செய்தார். மணம் செய்து கொண்டால் மனைவியின் மயக்கத்தில் இவளைப் புறக்கணித்து விடுவோமோ என்று பயந்து திருமண நினைவையே மனதிலிருந்து விரட்டி விட்டு ஐந்து வயதுக் குழந்தையாக இருந்த ராகவனை முறைப்படி சுவீகாரமும்செய்து கொண்டார்.

## 4

இந்த உருக்கமான கதையை அவர் கூறி முடித்த போது எனக்கு அவர் சாதாரண மனிதராகத் தென்படவில்லை. மனிதருள் மாணிக்கமாக, தியாக வேள்வியில் குளித்தெழுந்த புடமிட்ட பொன்னாக, கோவில் கட்டிக் கும்பிட வேண்டிய தெய்வமாகத் தோன்றினார்.

இதன் பிறகு மேலும் பல்லாண்டு காலம் அந்த உத்தம ரத்தினத்துடன் தொடர்பு கொள்ளும் பேறு எனக்குக் கிடைத்தது. ஐந்து வருஷங்களுக்கு முன் அவர் தமது ஐம்பத்தைந்தாவது வயதில் வேலையிலிருந்து ஓய்வு பெற்று பம்பாயை விட்டுப் புறப்பட்ட போது பம்பாய்த் தமிழர்களில் கண்ணீர் விட்டுக் கதறாதவர்களே இல்லை எனலாம். அதற்குள் ராகவன் இன்ஜினீயரிங் படித்து வேலை பார்க்கத் தொடங்கி விட்டான். அவனுக்குத் திருமணம் நடந்தது. முதற் குழந்தையாகக் கனகாவும், அவளைத் தொடர்ந்து நான்கு ஆண் குழந்தைகளும் பிறந்தன. இப்போது ஏழெட்டு ஆண்டுகளாக ராகவன் சென்னையில் உள்ள மோட்டார் உற்பத்திக் கம்பெனி ஒன்றில் இன்ஜினீயராகப் பணியாற்றி வருகிறான். குடும்பத்துடன் இங்கேதான் வாழ்ந்து வருகிறான். நான்கு வருஷங்களுக்கு முன் காமாட்சி நோய் வாய்ப்பட்டு இறந்து போனாள். ஆனால் தாய்க்குத் தாயாகவும், தந்தைக்குத் தந்தையாகவும் விளங்கும் வேதகிரி தன்னுடன் இருந்ததால் ராகவன் தாயை இழந்த துயரத்தை உணரவில்லை.

சென்னைக்கு வேலை மாற்றலாகி, வந்த பிறகு வேதகிரியுடன் உறவாடும் பேறு எனக்கு மீண்டும் கிடைத்தது. பம்பாயில் இருந்த போதும் சரி, சென்னைக்கு வந்த பிறகும் சரி, என் சுக துக்கங்களைத் தமதெனக் கருதி அவர் எனக்குச் செய்துள்ள உதவிகள் எழுத்தில் அடங்காதவை. அவரைச் சந்திக்கும் போதெல்லாம் அதைச் சொல்லி, ''இவ்வளவு செய்து வரும் உங்களுக்கு நான் எப்படி நன்றி செலுத்தப் போகிறேன்!'' என்று என் ஆற்றாமையை வெளியிடுவேன்.

சமீபத்தில் ஒரு தடவை இப்படிச் சொன்ன போது, அவர் சட்டென்று, ''உனக்கு அதற்கு ஒரு வாய்ப்பு அளிக்கட்டுமா?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டார்.

''தாராளமாக!'' என்றேன் நான்.

''எங்கள் கனகாவுக்கு ஒரு மாப்பிள்ளை கண்டுபிடியுங்களேன்!'' என்றார் அவர்.

அன்றுமுதல் அதே வேலையாக அலையத் தொடங்கினேன். எத்தனையோ ஜாதகங்கள் வாங்கிக் கொடுத்தேன். சில பொருத்தமில்லை; சில சம அந்தஸ்தில்லை. சில எட்டாக் கொம்புகளாக இருந்தன.

கடைசியில் எங்கள் ஆபீசில் என்னைப் போலவே அதிகாரியாக இருந்த பிரகதீசனுக்குக் கலியாண வயதில் ஒரு மகன் இருப்பதையும், அவன் கனகாவுக்கு ஏற்ற ஜோடி என்பதையும் அறிந்தேன். ஜாதகம் வாங்கி வந்து கொடுத்தேன். பொருத்தம் இருந்தது. இருதரப்பாருக்கும் பிடித்தும் இருந்தது.

ஆனால் இது என்ன கடைசி நிமிஷத்தில் இந்தச் சோதனை? இந்த மாற்றம்?

## 5

பிரகதீசனின் வீட்டை நாங்கள் அடைந்த போது அவர் வீட்டின் முன் தாழ்வாரத்தில்தான் அமர்ந்திருந்தார். எங்களைக் கண்டதும் எழுந்து உள்ளே செல்ல முயன்றார். ''சார்! சார்!'' என்று விளித்து அவரை நிறுத்தினேன். ''என்ன சார் இது? ஏன் இப்படிக் கடைசி நிமிஷத்தில் எங்களை மோசம் செய்கிறீர்கள்?''

பிரகதீசன் குனிந்த தலையை நிமிர்த்தாமலே பேசினார். ''என் வரையில் இன்னும்கூட இந்தச் சம்பந்தத்தைவிட்டு விடப் பிரியமில்லைதான். ஆனால் இப்பொழுது மத்தியானம்தான் என் அத்தை கல்கத்தாவிலிருந்து வந்தாள். காலையில் வந்திருக்க வேண்டும். ரயில் எட்டு மணி நேரம் தாமதம். நிச்சயதாம்பூலத்துக்காகத்தான் வரச் சொல்லி எழுதியிருந்தேன். ஆனால் அவள் கலியாணத்தை நிறுத்தவே புறப்பட்டு வந்திருக்கிறாள்.''

''ஐயையோ! ஏன் சார்? எதற்காகக் கலியாணத்தை நிறுத்த வேண்டுமாம்?''

''காரணம் கேட்டால் சொல்ல மறுக்கிறாள். 'பம்பாயில் பிரிட்டிஷ் எலெக்டிரிக் கம்பெனியில் டைரக்டராக இருந்த வேதகிரியின் பேத்திதானே? அவர்கள் சம்பந்தம் நமக்கு வேண்டாம்; அதற்கு மேல் என்னை ஒன்றும் கிண்டிக் கிளறிக்

கேட்காதே' என்கிறாள். உங்களுக்குத் தான் தெரியுமே? அவள்தான் என்னை வளர்த்து ஆளாக்கி விட்டவள்! அவள் வார்த்தையை மீற எனக்குத் துணிவில்லை. என்னை மன்னித்துக் கொள்ளுங்கள்."

'இது என்ன கிணறு வெட்ட பூதம் புறப்பட்ட கதையாக இருக்கிறது?'— என்று நினைத்த நான் "உங்கள் அத்தை எங்கே இருக்கிறார்கள்? அவர்களை நான் பார்க்கலாமா?" என்று கேட்டேன்.

"உள்ளேதான் இருக்கிறாள். போய்ப் பாருங்கள். ஆனால் அவள் இருக்கும் மன நிலையில் உங்களுடன் பேச மறுத்தால் என்னைக் குற்றம் சொல்லாதீர்கள்."

"சரி, வேதகிரி சார். நீங்கள் இங்கேயே இருங்கள்; இல்லாவிட்டால் காரில் போய் உட்கார்ந்திருங்கள். நான் அந்த அம்மாளைப் பார்த்து விட்டு வருகிறேன்" என்று சொல்லி விட்டு உள்ளே சென்றேன்.

வீட்டுக் கூடத்தில் நின்று கொண்டிருந்த பிரகதீசனின் கடைக்குட்டிப் பையன், "வஞ்சுளா அத்தை கொல்லைக் கிணத்தடியில் உட்கார்ந்திருக்கிறா, மாமா. இப்படி நேரே பின்னாலே போங்கோ" என்று வழி காட்டினான்.

அத்தை ஆசிரியையாகப் பணியாற்றி வருபவள் என்றதும் என் மனம் கற்பனை செய்து கொண்டு போன கோலத்துக்கு மாறாக நெற்றி நிறையக் குங்குமத்தோடு பழுத்த சுமங்கலி ஒருத்தி அங்கே துணி துவைக்கும் கல்லில் உட்கார்ந்திருந்தாள். பிரகதீசன் எச்சரித்தது போல் அவளுடைய முகம் கடுகடுப்பாகவே இருந்தது.

"யார் நீங்கள்?" என்று அவள் அதட்டினாள்.

"வேதகிரியின் நண்பன்."

"என்ன வேண்டும் உங்களுக்கு?"

"நீங்கள் இந்தக் கலியாணம் நடக்கக் கூடாது என்று சொன்னீர்களாமே?"

"ஆமாம், சொன்னேன்."

"அதற்குக் காரணம் என்னவென்று தெரிந்து கொள்ள வந்தேன்."

"நான் யாரிடமும் எந்தக் காரணமும் சொல்லத் தயாராக இல்லை. என் மருமகனின் பிள்ளைக்கு இந்தச் சம்பந்தம் உதவாது என்று தோன்றியது. அதைச் சொல்ல எனக்கு உரிமை இருந்தது. சொன்னேன்."

"உங்கள் உரிமையை நாங்கள் மதிக்கிறோம் அம்மா. அதே மாதிரி நீங்களும் எங்கள் உரிமையை மதிக்க வேண்டும்."

"உங்களுக்கு என்ன உரிமை இருக்கிறது இதில்? பிடிக்க வில்லை; வேண்டாம் என்கிறோம்."

"வேண்டாம் என்று தாராளமாகச் சொல்லுங்கள். ஆனால் நிச்சயதாம்பூலத்துக்கு எல்லாம் தயார் செய்த பிறகு வேண்டாம் என்று சொன்னால், அதற்குக் காரணம் கேட்க எங்களுக்கு உரிமை இருக்கிறது. இது வெறும் மறுப்பு மட்டும் அல்ல. எங்களை அவமானப் படுத்துவதும் ஆகும். அதற்கு நீங்கள் முகாந்திரம் காட்டித்தான் ஆகவேண்டும்?"

"ஓ! அவருக்காக வாதாட வந்திருக்கும் வக்கீலா நீங்கள்? கேட்டுக் கொள்ளுங்கள் வக்கீல் சார். அன்று அவர் என்னை அவமானப்படுத்தினார். அதற்குப் பழி தீர்த்துக் கொள்ள......"

"அம்மா!" என்று நான் வேகத்துடன் குறுக்கிட்டேன். "நீங்கள் யாரைச் சொல்கிறீர்கள்? வேதகிரியா உங்களை அவமானப்படுத்தினார்? எப்போது? எப்படி?"

"அதை யெல்லாம் அவரையே போய்க் கேளுங்கள். மனச் சாட்சி என்று ஒன்று இருந்தால் அவர் வெளிப்படையாகப் பதில் சொல்வார்."

"வேதகிரியைப் பற்றி உங்களுக்குத் தெரியாது. அதனால்தான் இப்படிப் பேசுகிறீர்கள் என்று நினைக்கிறேன். இல்லாவிட்டால் ஆள் மாறாட்டம் ஏற்பட்டிருக்க வேண்டும் உங்களுக்கு."

"ஒரு மாறாட்டமும் ஏற்பட வில்லை. அவரைப் பற்றி நன்றாகத் தெரிந்து கொண்டுதான் பேசுகிறேன். உங்களுக்குத்தான் அவரைப் பற்றிச் சரியாகத் தெரியாது."

"எனக்கா அவரைப் பற்றித் தெரியாது? அவரோடு இருபத்தைந்து வருஷ காலம் பழகினவன் அம்மா, நான்."

"என்ன தெரியும் உங்களுக்கு அவரைப் பற்றி?"

## "இதற்குப் பதில் சொல்லும்!"



"ஒரே வார்த்தையில் சொல்லட்டுமா? அவர் தமக்கென வாழாமல் பிறர்க்கென வாழ்பவர்."

"யார் சொன்னது அப்படி? நான் அவரைப்பற்றி ஒரே வார்த்தையில் சொல்லட்டுமா? அவர் சுயநலமே உருவானவர்!"

"அம்மா, தயவு செய்து அவர் உங்களுக்குச் செய்த பிழை என்ன என்பதைச் சொல்லுங்கள். என்னால் உங்கள் பேச்சில் ஒரு வார்த்தையைக் கூட நம்ப முடியவில்லை."

"பிழை! பிழையா?" என்று கூறியவாறு தனது கழுத்தில் அணிந்திருந்த தங்கச் செயினை வெளியே உருவிக் காட்டினாள். பிறகு தன் நெற்றியையும் சுட்டிக்காட்டி, "இந்த வயதில் நெற்றியில் குங்குமம் இட்டிருக்கும் ஒருத்திக்கு இந்தச் சங்கிலியில் என்ன இருக்கவேண்டும், தெரியுமா?"

"மாங்கல்யம்."

"அதை இன்றளவும் எனக்குக் கிட்டவிடாமல் செய்தவர் உங்களுடைய பிறர்க்கென வாழும் உத்தமர்!"

"என்ன? வேதகிரியா உங்களுடைய தாலிப் பாக்கியத்துக்குத் தடையாக நின்றார்?"

"தடையாக நின்றது மட்டுமில்லை; அதைத் தமது சுயநலத்துக்காகப் பலிவிடவும் செய்தார்."

"நீங்கள் பேசுவது ஒன்றுமே எனக்கு விளங்கவில்லையே!"

"உங்களுக்குத் தெரியுமா, உங்கள் உயர்வான வேதகிரி தமது வாழ்க்கையைத் திருநெல்வேலியில் ஓர் உண்டியல் கடையில் கணக்கெழுதும் தொழிலுடன் தொடங்கினார் என்பது?"

"தெரியும். அதன் பிறகு அவருக்கு அதிர்ஷ்டம் அடித்ததும் தெரியும்!"

"அந்த அதிர்ஷ்டம் எதனால் அடித்தது என்பது உங்களுக்கு நிச்சயமாகத் தெரிந்திராது. அது நான் செய்த தியாகத்தால், இன்றளவும் ஓர் உண்மையை மறைத்து வருகிறேனே, அதனால் அடித்தது.

"அவர் வேலை பார்த்து வந்த உண்டியல் கடை திருநெல்வேலி டவுனில் கீழ ரத வீதியில் ஒரு வீட்டுத் திண்ணையில் இருந்தது. அந்த வீட்டில் விதவைத் தாயுடன் ஓர் ஏழைப் பெண் வசித்து வந்தாள். தாய்க்கு இருந்ததெல்லாம் அந்த ஒரே வீடுதான். அதை விற்றுத் தன் மகளுக்குக் கலியாணத்தை முடித்துவிட எண்ணினாள். ஆனால் அந்தப் பைத்தியக்கார மகள் தன் மனத்தை உண்டியல் கடைப் பையனிடம் இழந்து விட்டாள். அவனும் அவளுடைய தாயிடம் வந்து ஆயிரம் வாக்குறுதிகள் அளித்தான். வேறொரு நல்ல வேலை தேடிக் கொண்டதும் தானே அவளுடைய மகளை மணந்து கொள்வதாகச் சொன்னான். அவர்கள் அவனை நம்பினார்கள். என்றோ முடிந்திருக்கவேண்டிய அந்தப் பெண்ணின் கலியாணம் தள்ளிப் போடப்பட்டுக் கொண்டே வந்தது.

"இடையே அவளுடைய தாய் நோய் வாய்ப்பட்டாள். மரணப் படுக்கையில் கூட அவளுக்குக் கையடித்துக் கொடுத்தார் உங்கள் மேலான வேதகிரி. அவள் நிம்மதியோடு கண்களை மூடினாள். அதன் பிறகுதான் திருச்சிக்காரர் அவருடைய வாழ்வில் குறுக்கிட்டார். சொத்தும், கலெக்டர் பதவியும் அவருடைய கண்களைக் கட்டி விட்டன. அந்த ஏழைப் பெண்ணை அவர் உதறி விட்டார். தாயின் மன நிம்மதிக்காக, கலெக்டருக்குப் படிக்கக் கிட்டியிருக்கும் வாய்ப்பை ஏற்றுக் கொள்ளும் பொருட்டு ஊமைப்பெண்ணை மணக்க வேண்டியிருக்கிறதென்று நியாயவாதம் பேசினார். வஞ்சுளத்தின் உள்ளம் கொதித்தது. அவள் தங்கள் காதலைப் பற்றி ஒரு வார்த்தை திருச்சிக்காரரிடம் கூறியிருந்தால், அவருடைய அதிர்ஷ்டம் எல்லாம் ஆடிக் காற்றில் சிக்கிய தூசியாக அடித்துக் கொண்டு போகப் பட்டிருக்கும். ஆனால் அந்தப் பைத்தியக்காரிக்கு அத்தனை துணிச்சல் ஏற்படவில்லை. விட்டுக் கொடுத்து விட்டாள். அவளுடைய காதல் உள்ளம் அவரையன்றிப் பிறிதொருவரை ஏற்க விரும்பவில்லை. எனவே, அவள் தன் தலைவிதியை நொந்து கொண்டு, என்றென்றும் கன்னியாக வாழ்வதென்று சென்னையிலிருந்த தன் ஒன்றுவிட்ட அண்ணனிடம் வந்தாள். வீட்டை விற்றுக் கிடைத்த பணத்தைக் கொண்டு பி.டி. வரையில் படித்து வேலையில் அமர்ந்தாள். உப்புச் சப்பற்ற வாழ்க்கை வாழ்ந்து வருகிறாள். ஆனால் ஒன்றைமட்டும் அவளுடைய உள்ளம் வலியுறுத்திக் கொண்டே இருந்தது. எப்போதாவது,ஏதாவது ஒரு சந்தர்ப்பம் வாய்த்தால் அந்த வேதகிரியை இதற்குச் சரியாகப் பழி வாங்க வேண்டும் என்று. அந்தச் சந்தர்ப்பம் இன்று இப்படித் தான் வாய்த்தது. பழி தீர்த்துக் கொண்டு விட்டாள் என்று உங்கள் நண்பரிடம் போய்ச் சொல்லுங்கள்" என்று முடித்தாள் வஞ்சுளம்.

நான் சிரித்தேன்.

"நீங்கள் அவரை நினைத்துக் கொண்டு உரலை இடிக்கிறீர்கள்!" என்றேன்.

"என்ன உளறுகிறீர்கள்?"

"உளறவில்லை அம்மா. நீங்கள் இப்போது வேதகிரியைப் பழி வாங்குவதாக நினைத்துக் கொண்டு ஒரு பிழையும் அறியாத காமாட்சியின் பேத்தியினுடைய திருமணத்தை நிறுத்தப் பார்க்கிறீர்கள்."



"கேட்டேளா மாமா! நீங்கதான் சாட்சி! மாப்பிள்ளை ஊனம்னு உங்க இட்டே சொன்னாரா இல்லையா?"

"அட கஷ்டகாலமே! மாப்பிள்ளேன்னு உங்களைக் கூப்பிட்டு ஊனமாக இருக்குன்னு மோதிரத்தை அல்லவா சொன்னார்!"

"காமாட்சியின் பேத்தி என்றால் என்ன? இவருடைய பேத்தி என்றால் என்ன? கனகா இவ்விருவரின் மகனுக்குப் பிறந்தவள்தானே?"

"அதுதான் இல்லை. காமாட்சிக்கும் வேதகிரிக்கும் கலியாணம் நடக்கவே இல்லை."

"என்ன? பின் இவர் ராகவனைத் தமது மகன் என்றும், கனகாவைத் தமது பேத்தி என்றும் சொல்வதின் அர்த்தம் என்ன?"

"அர்த்தம் இதுதான். ராகவன் அவருடைய சுவீகாரப் பிள்ளை. வேதகிரி இன்றளவும் பிரம்மச்சாரி."

"உண்மையா? இது உண்மையா?"

"நூற்றுக்கு நூறு உண்மை. தெய்வத்தின் சாட்சியாக உண்மை" என்று கூறி நான் கதை முழுவதையும் அந்த அம்மாளுக்கு விவரித்தேன்.

"அப்படியானால் அவர் சொன்ன சொல்லைக் காப்பாற்றி விட்டார்."

"இது என்ன அம்மா, புதிதாக ஏதோ சொல்கிறீர்கள்?"

"இல்லை; அன்று என்னை ஒதுக்கிய போது அவர் உறுதியாக ஒன்று சொன்னார். 'அம்மாளின் திருப்திக்காகவே இந்த வாய்ப்பை ஏற்றுக் கொண்டு, கலெக்டருக்குப் படிக்கப் போகிறேன். ஆனால் ஒன்று உறுதியளிக்கிறேன். உன்னை ஏமாற்றி விட்டு இன்னொருத்தியை மணக்க மாட்டேன். இப்போது நீ என்னை நம்ப மாட்டாய். ஆனால் கலெக்டராகித் திரும்பி வந்த பிறகு அது உண்மை என்பதை நீயே காண்பாய்!' என்றார்."

"அவர் கலெக்டராகத் திரும்பி வரவும் இல்லை. நீங்கள் உண்மையைக் காணவும் இல்லை. அப்படித்தானே?"

"ஆமாம்; அதோடு இந்தக் காமாட்சியோடும் மகனோடும் பம்பாயில் வாழ்கிறார் என்றும் கேள்விப்பட்டேன். அன்று சும்மா பசப்பியிருக்கிறார் என்று எண்ணி விட்டேன்."

"இப்போது அது பசப்பில்லை என்ற உறுதி உங்களுக்கு ஏற்பட்டு விட்டதல்லவா? மேலே...."

நான் முடிக்கும் முன்னே வஞ்சுளம், "பிரகதீசா! பிரகதீசா!" என்று கூப்பிட்டுக் கொண்டே எழுந்து வாசலுக்குப் போனாள். "மணி நாலுதான் ஆகப் போகிறது. அவர்களை உடனே நிச்சய தாம்பூலத்துக்கு வரச் சொல்லு. வேண்டாம், வேண்டாம். நானே போய்ச் சொல்கிறேன். அவர் எங்கே? அவர் தாண்டா? என்னடா, விழிக்கிறாய்? கனகாவின் தாத்தாவைத்தான் சொல்கிறேன்" என்று பரபரப்புடன் துடித்தாள்.

"காரில் உட்கார்ந்திருக்கிறார்" என்று பிரகதீசன் சொன்னதும், "என்னை மன்னியுங்கள்" என்று கூவியவாறு காரை நோக்கி ஓடினாள் வஞ்சுளம்.

அந்தச் சித்திரையில் வேதகிரியின் வீட்டில் இரண்டு கலியாணங்கள் நடந்தன. ஒன்று அவருடைய பேத்தியின் கலியாணம். மற்றொன்று அறுபதாம் கலியாணத்தோடு சேர்த்து நடத்தப்பட்ட அவருடைய சொந்தக் கலியாணம்!



# "முல்லை மொக்கு ஆழாக்கு ஓரணா!"

# கைராசி

வித்வான் வே. லட்சுமணன்

பைங்கிளியின் பவள வாயிலிருந்து 'கீச்'சென்று வெளிப்படும் ஓசையின் நயத்தோடு பூக்காரி பொன்னம்மாவின் வழக்கமான விற்பனை நாதம் தெருவில் முழங்கிற்று. முல்லையூர்க் கிராமத்தில் அந்தக் குரலுக்கு உரிமை படைத்தவள் அவள் ஒருத்திதான். இரு சாரிகளிலும் சின்னஞ் சிறு வீடுகள் நிறைந்துள்ள அந்தத் தெருவில் மாலை மூன்று மணிக்கெல்லாம் பொன்னம்மா பவனி புறப்படுவாள்.

கருமணற் பரப்பை மிஞ்சிய அடர்ந்த கூந்தலைத் திரட்டிக் கட்டி அழகாக அவள் கொண்டை போட்டிருக்கும் விதம் வர்ணனைக்கெட்டாது. பிரம்பினால் பின்னப்பட்ட சிறிய கைக்கூடை நிறைய முல்லை மொக்குகள் குவிந்திருக்கும். ஆனால் அவள் செவ்விதழ்களுக்கிடையே மின்னும் முத்துப் பற்களுக்கு அவை இணை பேச முடியாது. தாமரைத் தண்டின் அளவு பருமனுடன் வட்டமாக வளைந்திருக்கும் வெள்ளிக் காப்புகள் அவளது இரு கால்களிலும் மின்னும் காட்சி கருமுகிலினிடையேவெட்டும் மின்னல் வனப்பைத்தான் நினைப்பூட்டும்.

ஆறு கெஜத்திற்கும் குறைவான கைத்தறிப் புடவை அவளது வாளிப்பான உடற்கட்டை முழுவதும் மூடி மறைக்க முடியாமல் திண்டாடினாலும் அது கைதேர்ந்த ஓவியன் அதிகம் சிரமம் எடுத்துக்கொள்ளாமல் தத்ரூபமாக அவளைப் படம் வரைவதற்குச் சாதகமாக அமைந்திருக்கும்!...

மலரின் இனத்தில் வேறு பல வகைகள் இருந்தபோதிலும் பொன்னம்மாளின் கூடையில் முல்லை மொக்குகளுக்கு மட்டுமே இடமுண்டு. பசுமையும், வெண்மையும் தேக்கி இயற்கை வாரிச் சொரியும் அவற்றைக் கூடை நிறைய எடுத்துக்கொண்டு அவள் புறப்பட்டாள் என்றால், கூடை காலியாகாமல் திரும்பிய நாளே கிடையாது.



அதற்குக் காரணம் முல்லை மொக்குகளின் நறுமணமா அல்லது அவற்றை விற்பனை செய்யும் அவளுடைய கைமணமா?

அந்தத் தெருவில் உள்ளவர்களைக் கேட்டால் அவர்கள் பொன்னம்மாவின் கைமணத்தைத்தான் அதிகம் புகழ்ந்து பேசுவார்கள். ஏனென்றால் அவளுடைய கைராசியில் எல்லோருக்கும் நல்ல அநுபவம் இருந்தது. வீட்டுத் தோட்டத்தில் முத்து முத்தாய் முல்லை அரும்பி, இலவசமாய்க் கிடைக்கக் காத்திருந்தாலும் கூட, பொன்னம்மாவிடமிருந்து ஓர் ஆழாக்காவது வாங்காமல் அவர்களுக்குத் திருப்தி ஏற்படாது.

கடந்த ஐந்து ஆண்டு காலமாக நடந்து வரும் இந்த அன்றாட வியாபாரத்தை வழக்கமான பல்லவியுடன் தொடங்கி நடத்தினாள் அவள்.

தெருவின் பாதி அளவைக் கடந்து குறிப்பிட்ட ஒரு வீட்டிற்குள் நுழைந்தாள். "அம்மா! முல்லை மொக்கு!" என்று அவள் குரல் கொடுத்தும் கூட வழக்கமாக வாங்க வரும் அந்த வீட்டுக்கார அம்மாள் வெளியே வரவில்லை. அது அவளுக்கு வியப்பாகவே இருந்தது. திண்ணையைக் கடந்து ரேழியையும் தாண்டி உட்புறத்துக்கு வந்தாள். அங்கே அவள் பார்த்த காட்சி அவளுக்கு வியப்பை அல்ல; வேதனையை அளித்தது.

"என்னம்மா! கண்ணீரும் கம்பலையுமா குந்திக்கிட்டிருக்கீங்க!" என்று ஆதரத்துடன் கேட்டாள். வீட்டுக்காரம்மாள் பார்வதி அவளிடம், "பொன்னம்மா! நேத்து நடந்த ரேக்ளா வண்டிப் போட்டியிலே என் வீட்டுக்காரரு தோத்துட்டாரு...." என்று மேலே தொடர்ந்து பேச முடியாமல் நாத் தழுதழுக்க விசும்பினாள்.

பொன்னம்மா, "ம்.... இம்புட்டுத்தானே! இந்தவாட்டி தோத்துட்டா மறுவாட்டி ஜெயிச்சுட்டுப் போறாரு; இதுக்கா இப்படி வெசனப்படுவாங்க?" என்றாள்.

பார்வதி, "இல்லே பொன்னம்மா! அவரு தோத்துட்டதுக்காக நான் விசனப்படல்லே. போட்டியிலே ரோசத்தோட வண்டி ஓட்டியிருக்காரு. அப்போ கீழே தவறி விழுந்து பலமான அடிபட்டிருக்கு. ஆஸ்பத்திரிக்குக் கூட்டிக்கிட்டுப் போயிருக்காங்க. அவரு பிழைச்சுத் திரும்பவும் இந்த வீட்டுக்கு வருவாரா, பொன்னம்மா!" என்று பொங்கிப் பொங்கி வந்த அழுகையை அடக்கிக் கொள்ள முடியாமல் அடக்கிக் கொண்டு பேசினாள்.

பொன்னம்மாவுக்கும் மனம் கலங்கத்தான் செய்தது. இருந்தாலும் தன்னைத் தானே தைரியப்படுத்திக் கொண்டு, ''அம்மா! கட்டாயம் அவர் நல்லபடியா வீடு திரும்புவாரு! இந்தாங்க! இதைத் தொடுத்துத் தலையிலே வச்சுக்கிங்க. மனசோட நான் கொடுக்கறபோது உங்க மஞ்சளுக்கு மாசே ஏற்படாது'' என்று கூறித் தானே அங்கு பக்கத்தில் இருந்த பாத்திரத்தை எடுத்து, வாடிக்கை அளவு மொக்குகளை குவித்து விட்டு, ''தைரியமாக இருங்க! நான் வாரேன்'' என்று கூறிச் சென்றாள்.

எல்லா வீடுகளுக்கும் கொடுத்துவிட்டுக் குடிசைக்குத் திரும்பிய பொன்னம்மாவின் மனம் என்ன காரணத்தாலோ பார்வதி அம்மாளைப் பற்றியே நினைத்த வண்ணமாய் இருந்தது. 'அவங்க பூவைத் தொடுத்துத் தலையிலே வெச்சிட்டிருப்பாங்களா?' இந்தக் கேள்வி அவள் மனத்தில் ஒலித்துக்கொண்டே இருந்தது. அவளுக்குத் தன்னுடைய சரக்கின் மீது அவ்வளவு நம்பிக்கை.



பார்வதி அம்மாளுக்கும் — இவளுக்கும் உள்ள சம்பந்தம் அதுவரையிலும் ஓர் ஆறாக்கு முல்லை மொக்குத்தான். ஆனால் அன்று அவளுடைய நிலையை மீறிய பற்றுதலும், பாசமும் அவளைக் கவ்விக் கொண்டன. வேறு எதிலும் சிந்தனை ஓடவில்லை அவளுக்கு. அறுபடாத சிந்தனைத் தந்தியில் பார்வதியின் 'மஞ்சள்' பற்றிய கேள்விக் குறியே மீண்டும் மீண்டும் ஒலித்துக் கொண்டிருந்தது.

மணி ஐந்து, ஆறு, ஏழும் ஆகிவிட்டது. வயலுக்குச் சென்றிருந்த அவள் தகப்பன் மருதன் வீட்டு வாயிலில் நின்றபடியே, ''பொன்னம்மா!'' என்று மும்முறை குரல் கொடுத்தான். சிந்தனைத் தந்தி அறுபடவில்லை அவளுக்கு.

''பொழுது சாஞ்சு இம்மா நேரம் ஆகியும் இன்னுமா இந்தப் பொண்ணு வீடு திரும்பல்லே?'' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டவனும், உள்ளே வந்து பார்த்தான். பொறிகளை அடக்கி ஞானத் தவத்தில் இருக்கும் யோகினி போல் உட்கார்ந்திருந்தாள் பொன்னம்மாள்.

மருதன் வந்ததை அவள் கண் பார்த்தது. ஆனால் அது அவள் உணர்வை எட்டவில்லை. மருதனுக்குத் தூக்கிவாரிப்போட்டது. அவள் வீட்டுக்குள் வரும்பொழுது இப்படி அவள் சோர்ந்து உட்கார்ந்திருந்த நாளே இல்லை. 'ஏதோ அவளுக்கு ஆபத்து' என்று பயந்த மருதன் இரண்டு மூன்று தடவை குரல் கொடுத்துக் கூப்பிட்டான்.

தந்தி அறுபட்டது. மருதனைப் பார்த்தாள் பொன்னம்மா. ''எப்ப வந்தீங்க?'' என்றாள். மருதன், ''சரியாப் போச்சு. கூப்பிட்டுக் கூப்பிட்டுத் தொண்டைத் தண்ணி வத்திப் போச்சு. எங்கே இருந்தே அம்மா இம்மா நேரம்?'' என்றான்.

பொன்னம்மாள் தன்னுடைய கவலையைப் பற்றித் தன் தந்தையிடம் கூறினால், தான் ஒரு பைத்தியக்காரி என்ற பெயரைத்தான் வாங்க முடியும் என்று கருதி, ''ஒன்னுமில்லேப்பா'' என்று கூறித் தன் விசித்திரக் கவலையை அடியோடு மறைத்தாள்.

மருதன் அதற்கு வேறு விதமாக அர்த்தம் எடுத்துக் கொண்டு நீண்டதொரு பெருமூச்சை வெளி விட்டு, "ம்... தப்பு என் மேலே. காலா காலத்திலே உன் கழுத்திலே மூணு முடிச்சு விழுந்து பாக்காததுனால்தான் இப்படி யெல்லாம் நீ இருக்கிறதைப் பாக்கும்படியா ஆவுது. அதுக்கும் ஓர் ஏற்பாட் டோட தான் இப்ப வந்திருக் கேன்னு வச்சுக்கயேன்" என்றான்.

அவன் அவ்வாறு பேசிய அவ் வார்த்தைகள் வேறொரு சந்தர்ப்ப மாக இருந்திருந்தால் அவளுக்கு ஓரளவு மகிழ்ச்சியைத் தந்திருக்கக் கூடும். இப்போது, தகப்பனின் சொற்களுக்கு அவள் மறுமொழி ஏதுமளிக்கவில்லை. மருதனே தொடர்ந்து பேசலானான்.

"பொன்னம்மா! நல்ல இடத் துப் பிள்ளைதான். பக்கத்து ஊரு. கல்யாணம் முடிச்ச கையோட உன்னையும் கூட்டிக்கிட்டுப் போக ணுங்கறாங்க. அது ஒண்ணுதான் எனக்குப் பிடிக்கலே. நீ அங்கே போறதைக் காட்டிலும் அவன் இங்கே வர்றது தேவலேன்னு பார்த்தேன். அதுக்கு அவங்க இசையலே. இருந்தாலும் இந்த விஷயத்துக்காகச் சம்பந்தத்தை உதறித்தள்ள நான் விரும்பலே. நாளைக் காலையிலே புள்ளையைக் கூட்டிக்கிட்டு வரச் சொல்லிட் டேன். எல்லாம் நல்ல விதமா முடிஞ்சு நீ சந்தோஷமா இருக் கிறதைப் பாத்துட்டா அப்புறம் எனக்கு ஒரு கவலையும் இல்லே" என்றான்.

பொறுமையோடு கேட்டுக் கொண்டிருந்த பொன்னம்மாள் விஷயம்முற்றிவிட்டதையுணர்ந்து, "அப்பா! அவசரப்பட்டு அவங்களை ஏன் வரச் சொன்னீங்க? நான் உங்களையும், இந்த ஊரையும் விட்டு எப்பவுமே போக மாட் டேன்" என்றாள்.

"அப்படிச் சொன்னா ஆகுமா? பொண்ணுன்னு பொறந்தா ஒரு நாள் புருஷன் வூட்டுக்குப் போய்த் தானே ஆவணும்!" என்றான் மருதன்.

"நீங்க என்ன சொன்னாலும் எனக்கு அதுலே இஷ்டமில்லே" என்று பிடிவாதமாகக் கூறினாள் பொன்னம்மாள்.

மருதனுக்குத் தர்மசங்கடமாக இருந்தது. ஆசைக்கு ஆசையாய், அருமை பெருமையாக வளர்த்த அவனுடைய அன்புக்குச் சின்னம் அவள் ஒருத்திதானே? அவனுக்கு மட்டும் அவளைப் பிரிந்து இருக்க வேண்டும் என்று ஆசையா? 'அரியாப் பெண்ணும் இருக்கிறாள்' என்று தனக்குள் முணு முணுத் துக் கொண்டான்.

சில விநாடிகள் மௌனத்துக்குப் பின் அவன் மீண்டும் பேசத் தொடங்கினான். "பொன்னம்மா! இந்த ஒரு விஷயத்துலே மட்டும் என் வார்த்தையை நீ தட்டக் கூடாது. உன் தாய் உயிரோட இருந்தா உன்னை இன்னும் கல்யாணம் கட்டிக் கொடுக்காம இருக் கிறதுக்குக் கண்ணீர் வடிச்சிருக்கும். இப்பத்தான் நல்ல நேரம் வந்தது. பெரிய இடத்துப் பிள்ளே. நாம கொட்டிக் கொடுக்கிற சீதனத்தையெல் லாம் கட்டிக் காக்கற குடும்பம். பையன் ரேக்ளா வண்டிப் போட்டி யிலே மட்டும் மாசம் ரெண்டு நூறு சம்பாதிக்கிறான். உன்னை ஒரு குறைவு மில்லாம வச்சுக் காப்பாத்துவான்" என்றான். பொன்னம்மாளுக்குப் பெரும் அதிர்ச்சி ஏற்பட்டது.

பார்வதியின் புருஷனைப் பலிகாயப் படுத்தி, மரணத்தோட போராடச் செய்திருக்கும் போட்டி! அவளுடைய நினைவின் அடித்தளம் சிறிது நேரத்துக்குள் வறண்டு விட்டது.

"என்ன பொன்னம்மா! என்ன யோசிக்கறே?" என்று சர்வ சாதாரண மாகக் கேட்டான் மருதன்.

"உங்களுக்கு வேற தொழில் செய் யற மருமகப் பிள்ளை எங்கேயும் கிடைக் கலியா அப்பா!" என்றாள் பொன் னம்மாள்.

"ஏன்? இதுக்கென்ன! கைகட்டிச் சேவகம் செய்யற தொழில் இல்லே! விதை விதைச்சு வானத்தைப் பார்க்கற தொழிலுமில்லே. கையிலே காசு; வீர விளையாட்டு!" என்றான்.

"நல்ல வீரம்! நல்ல விளையாட்டு! உயிரோட போராடற இந்த விளை யாட்டு ஒரு தொழிலா அப்பா?"

"அப்படிப் பாத்தா ஆபத்து இல்லாத தொழிலே இல்லேம்மா! எனக்குத் தெரியாதா?.... உன்னைத் தகாத இடத் திலேயா குடுப்பேன்?"

"இல்லேப்பா! நீங்க எப்படியாவது எனக்குக் கல்யாணம் கட்டி முடிக்கணு மின்னு இப்படிப் பேசறீங்க. இன்னிக்கு பூ விக்கிற இடத்துலே ஒரு சமாசாரம் கேள்விப்பட்டேன். இந்த ரேக்ளா வண்டி யில்தான் அடிபட்டுப் பார்வதியம்மா புருஷன் ஆஸ்பத்திரிலே கிடக்கறாரு."

அது கேட்ட மருதன் எந்த விதமான வருத்தமும் முகத்தில் காட்டாமல், "ஓ! அதச் சொல்றியா, அந்தப் போட்டி இந்தப் பையனுக்கும் அவருக் கும்தான் நடந்தது. அவருக்கோ வயசு நாப்பது. 'முப்பது முறுக்கு, நாப்பது தளுக்கல்' ன்னு சொல்லுவாங்க. நாப் பது வயசிலே ரேக்ளா வண்டி என்ன வேண்டியிருக்குது. முரட்டுப் பிடி வாதத்தோட தன்னாலே முடியாததுலே தலையிட்டா இப்படித்தான். ஆளு பொழைக்கிறதே அரிதுன்னு சொல் றாங்க. நானும் கேள்விப்பட்டேன்." என்றான்.

கூர்வாளால் கூறு கூறாகத் தன் நினைவை அறுப்பது போல் இருந்தது அவ்வார்த்தைகள் பொன்னம்மாவுக்கு. ஒரு சமயம் தகப்பன் சொன்னதுபோல் அந்த மனிதன் இறந்துவிடுவாரோ? பார்வதி அம்மாளின் மஞ்சள் அழிந்து குங்குமம் கலைந்து போகுமோ? ஊரார் புகழ்ந்த தன் வைராக்கிய அன்றுமுதல் அழிவுதானா? இனி முல்லை மொக்கு களைப் பறித்து, விடுதோறும் வழங்கி, மலர்ந்த பல முகங்களைக் காணும் பாக்கியம் கிடையாதா?

இப்படியாக வட்டமிட்டுச் சுழன்றது எண்ணம். "அப்பா! அவரு பிழைக்கவே மாட்டாரா?" என்று நெஞ்சின் ஆழத்தி லிருந்த கேள்வியைத் தொடுத்தாள்.

"அப்படித்தான் சொல்லிக்கிறாங்க! அதுக்கெல்லாம் நாம கவலைப்பட்டுக் கிட்டு இருக்க முடியுமா?"

"இல்லேப்பா! அவரு பிழைக்கணும். பார்வதி அம்மா மஞ்சள் குங்குமத் தோடு வாழணும்."

"நான் வேண்டாமுன்னு சொல் றேன். நல்லா வாழட்டும். இப்ப நீ என்ன சொல்றே? அதைச் சொல்லு முதல்லே."

"என்ன சொல்லச் சொல்றீங்க!"

"முழு மனசோட நீ கல்யாணத் துக்கு ஒத்துக்கணும்." பொன்னம்மா மௌனமாய் இருந்தாள். அவள் மனத் தில் பார்வதி அம்மாளின் விசனம் தோய்ந்த முகம் குத்திட்டு போல் செருகிக் கொண்டிருந்தது. அதை அவ ளால் எடுத்து எறிய முடியவில்லை.

அப்போதைய நிலையில் பொன்னம்மா தனக்கும் பார்வதி அம்மாளுக்கும் இடையே எந்த விதமான பேதத்தையும் காணவில்லை.....

இரவு பன்னிரண்டு மணி இருக்கும். திண்ணையில் மருதன் நிம்மதியாகத் தூங் கிக்கொண்டிருந்தான். அவனுக்குத் தன் மகள் சீக்கிரத்தில் கன்னி கழிந்து ஒரு குடும்பத் தலைவியாகப் போகிறாள் என்ற சந்தோஷத்தால் ஏற்பட்ட நிம் மதி. உள்ளே தூக்கமோ நிம்மதியோ இல்லாமல் எண்ண அலைகளால் மோதப் பட்டுக் கொண்டிருந்த பொன்னம்மாள் ஒவ்வொரு விநாடியும் பயங்கரமான நினைவின் ஆக்கிரமிப்போடு போராடிக் கொண்டிருந்தாள்.

மறுநாள் காலை வெளிறிய முகத் தோடு படுக்கையிலிருந்து எழுந்தாள் பொன்னம்மா. அன்று மணமகன் வீட்டார் அவளைப் பெண் பார்க்க வரும் தினம். குளியல் முடிந்தது. தகப்பன் நல்ல உடையை உடுத்திக்கொள்ளச் சொன் னான். பொன்னம்மாவோ வழக்கமாக அன்று உடுத்திக்கொள்ள வேண்டிய— உடையையே உடுத்திக் கொண்டாள்.

வாசலில் வண்டியிலிருந்து சிலர் இறங்கி வரும் சத்தம் கேட்டது.. அவர்கள்தான். சந்தேகமே இல்லை. மருதன் மிக்க உபசாரத்தோடு அவர் களை உள்ளே அழைத்து வந்தான். உள் ளூர்ச் சிற்றுண்டி விடுதியில் தயாராக வாங்கி வைத்திருந்த காலைப் பலகாரத் தைத் தகப்பனின் கட்டளைப்படி பொன்னம்மா கொண்டு வந்து வைத் தாள். பின்னை வீட்டார் பெண்ணைப் பார்த்தார்கள். எல்லோருடைய முகங் களிலும் திருப்திக் களை வழிந்தது. பின்னை வீட்டார் தங்கள் சம்மதத்தைத் தெரிவித்து விட்டுப் புறப்பட்டார்கள்.

திண்ணையில் சிறிது நேரம் மருதனும் மாப்பிள்ளையின் தகப்பனும் பேசிக் கொண்டிருந்தனர். பிறகு அவர்களை அனுப்பிவிட்டு மருதன் உள்ளே வந்தான்.

"பொன்னம்மா! ஊருக்கெல்லாம் பூ கொடுக்கிறியே, உன் தலைக்கு ஒரு முழம் பூ கிடைக்கல்லியா? கல்யாணப் பொண்ணு இப்படியா வெறுந் தலை யோட இருக்கிறது?" என்றான் மருதன் 'தாய்ப் பாச'த்தோடு.

"ஏன்? அவுங்க என்ன சொன்னாங்க?" என்று கேட்டாள் பொன்னம்மா.

"அவுங்களுக்கு என்ன காக்குதா? சம்மதிச்சிட்டாங்க. அடுத்த மாசம் அஞ்சாந் தேதின்னு நாளும் குறிப்பிட்டாங்க."

அதற்கு மேல் பொன்னம்மா எதுவும் கேட்கவில்லை. அவளுடைய ஒரே சிந்தனை பார்வதி.!

வழக்கம் போல் மாலை பூ விற்கச் சென்றாள் பொன்னம்மாள். பார்வதி அம்மாள் அவளைப் பார்த்ததும் மகிழ்ச்சியோடு வரவேற்று, "என் புருஷனுக்கு ஒன்னும் பெரிய ஆபத்து இல்லேன்னு சொல்லிட்டாங்க. இன்னும் பத்துநாளிலே குணமாகி வீட்டுக்கு வந்திடுவாரு. நான்கூடப் பக்கத்து டவுன்லே இருந்துகிட்டு ஆஸ்பத்திரிக்கு அடிக்கடி போய் வரும்படி இருக்கும். இன்னும் கொஞ்ச நேரத்திலே புறப்படப் போறேன்" என்றாள்.

பொன்னம்மாவுக்கு மனம் பூரித்தது. தன்னுடைய 'கைராசி' பலித்து விட்டதில் அவளுக்குக் கரை கடந்த மகிழ்ச்சி பிறந்தது. அதுவரை நெஞ்சினுள் ஏதோ ஒரு மூலையில் புதைந்திருந்த அவளுடைய கல்யாணச் செய்தி அப்பொழுது ஏற்பட்ட மகிழ்ச்சியின் விளைவாக நெஞ்சம் முழுவதையும் நிறைத்துக் கொண்டது. பார்வதி அம்மாளிடம், "உங்களுக்கு ஒரு நல்ல செய்தி! எனக்குக் கல்யாணம் ஆகல்லேன்னு அடிக்கடி குறைப்படுவீங்களே, இனிமே அதுக்கு இடமில்லே. எங்கப்பாரு எனக்கு வரன் பாத்துட்டாரு! காதும் காதும் வெச்சாப்பலே இன்னிக்குக் காலையிலே பாக்கு வெத்திலையும் மாத்திட்டாக" என்றாள்.

# படைப்பு

## தமிழழகன்

காலப் பெருங்கடல் தாண்டவும் — அங்குக்
காவியப் பேரொளி தூண்டவும்
மூலப் பொருளினை வேண்டினேன்; — அது
முன்னெடுங் கற்பனை செய்ததே!

ஆழ மனத்திநு டாடவும் — அங்கு
அமுதக் கனியில்நீ ராடவும்
சூழச் சிவத்தினை வேண்டினேன்; — அது
சொந்தமாய் உண்மையைத் தந்ததே!

விண்ணின் பரப்பினை வெல்லவும் — அங்கு
விந்தைமர் மங்கலைச் சொல்லவும்
மண்ணிற் பரத்தினை வேண்டினேன்; — அது
மந்திரச் சொல்மழை பெய்ததே!

கண்ணை இருளில் விதைக்கவும் — அங்குக்
கதிரொளி மீன்கள் அறுக்கவும்
எண்ணி இறையினை வேண்டினேன்; — அது
என்னைக் கவிஞனும் ஆண்டதே!

பார்வதி அம்மாள் மிக்க மகிழ்ச்சியோடு, "பையனை நீ பாத்தியா? நல்லா இருக்கிறானா?" என்றாள்.

பொன்னம்மாளின் தலையசைப்பு அவளுடைய மௌனத்தையும் மீறி அவளது விருப்பத்தை வெளிக் காட்டியது. வழக்கமான பூவைக் கொடுத்துவிட்டுப் புறப்பட்டாள்.

பார்வதி அம்மாள், "உன் கல்யாணத்துலே நானே உனக்கு எல்லா அலங்காரமும் செய்து பூச்சூட்டி மணமேடைக்குக் கொண்டு போய் விடுவேன். அப்பத்தான் என் மனசு குளிரும்" என்று கூறி உவகையோடு அனுப்பினாள்.

"அப்படியே நடக்கட்டும்" என்பதை பாவனையால் தெரிவித்துவிட்டு நாணத்தோடு நகர்ந்தாள் பொன்னம்மாள்.

நாட்கள் உருண்டோடின. பொன்னம்மாளின் உடையில் — நடையில் — எல்லாவற்றிலுமே புதுமை காணப்பட்டது. மணம் செய்துகொள்ளப்போகும் கன்னியின் மனம் எவ்வளவு முழுமையான உற்சாகத்தை அடையுமோ அவ்வளவையும் அவள் அடைந்து காணப்பட்டாள். ஒரு விநாடி நேரந்தான் தனக்கு வரப்போகும் கணவனைப் பார்த்திருந்தாள் என்றாலும் அவளுக்கு அவனுடைய தோற்றம் கவர்ச்சியையே அளித்திருந்தது. கன்னிப் பெண்ணின் கற்பனையில் வடிவெடுக்கும் வருங்காலக் கணவன் நிஜ வாழ்வில் அப்படியே பிரதிபலிப்பதில்லை. பொன்னம்மாவுக்கோ தன்னைக் கைப்பிடிக்க இருக்கும் இளைஞனின் தோற்றத்தைப் பற்றிய கற்பனையில் தோல்வி ஏற்படவில்லை. ஆயினும் அவனுடைய 'ரேக்ளா' தொழிலைப்பற்றித்தான் குறை. அதையும் மணமான பின் மாற்றிவிடலாம் என்று தனக்குள் முடிவு செய்துகொண்டாள்.

கல்யாணத் தேதிக்கு முதல் நாளும் வந்தது. மாப்பிள்ளை வீட்டாரும் காலையிலேயே வந்துவிட்டனர். ஊரிலுள்ள எல்லோரும் அவரவர் வீட்டில் கல்யாணம் நடப்பதைப் போல் நினைத்தார்கள். எல்லோருடைய அமோக ஆதரவினாலும் கல்யாண ஏற்பாடு மிக விசேஷமாக அமைந்திருந்தது.

'பூக்காரி பொன்னம்மாளின் கல்யாணத்துக்கா இத்தனை ஏற்பாடு?' என்று அதிசயிக்கும்படியாக அமைந்த ஊராரின் ஒத்துழைப்புக்குக் காரணம் 'முல்லை மொக்கு கைராசி'தான் என்று சொல்லத் தேவையில்லை.

பொன்னம்மா, "பார்வதி அம்மாள் இன்னும் வரவில்லையா?" என்று விசாரித்தாள். அவள் கணவரை அன்றுதான் ஆஸ்பத்திரியிலிருந்து விடுவித்தார்கள் என்றும், கல்யாணத்துக்கு அவசியம் தன் கணவனுடன் வந்துவிடுவாள் என்றும் தகவல் கிடைத்தது.

சொல்லி வைத்தாற் போல் ஒரு வண்டியிலிருந்து பார்வதி அம்மாளும் அவளது கணவனும் இறங்கினார்கள். பொன்னம்மாளுக்கு மகிழ்ச்சி அளவுக்கடங்கவில்லை. பார்வதி அவளிடம், தன் கணவன் பிழைக்கப் பொன்னம்மா காரணமாக இருந்ததைப் பற்றி நன்றியோடு பேசினாள். இந்த நல்ல வார்த்தைகள் காதில் எப்போதும் விழுந்துகொண்டிருந்தால் அதுவே தனக்குப் பெரிய பாக்கியம் என்று கூறினாள் அவள்.

பார்வதியின் கணவன் மட்டும் அங்கு வந்ததிலிருந்து, ஒரு மாதிரியாகவே தோற்றமளித்தான். மணமகனைப் பார்த்த அவனது பார்வை மிகவும் பயங்கரமாக இருந்தது. ஆனாலும் அதனை வெளிக் காட்டாமல் அவன் மணமகனிடம் சிரித்துப் பேசினான்.

"நடந்ததை மறந்திடுங்க!" என்று மணமகன் மாணிக்கம் அவனிடம் அடக்கமாகக் கூறிய சொல்லை நல்லெண்ணத்தோடு ஏற்கவில்லை பார்வதியின் கணவன். இருவருக்கும் இடையே சாதாரணமாகத் தொடங்கிய பேச்சு சற்றே முற்றியது.

"அன்னிக்கு என்னை ஏமாத்தி ஜெயிச்சுட்டே! நான் மட்டும் கீழே விழுந்து அடிபடலேன்னா நீ என்னை ஜெயிச்சிருக்கவே முடியாது" என்றான் பார்வதியின் கணவன். மாணிக்கம் அந்தச் சொல்லைக் கேட்டுச் சற்றே உணர்ச்சியுடன், "வேண்டுமானால் இன்னொரு தடவை பரீட்சை செய்து பார்த்துவிடுவோமே" என்றான்.

"நான் தயார்" என்றான் பார்வதியின் கணவன். "நானும் பின்வாங்கவில்லை" என்றான் மாணிக்கம். இருவருடைய உள்ளங்களிலும் 'தன்மான' வெறி ஏறிக்கொண்டது. திருமணம் ஆனதும் போட்டியை வைத்துக்கொள்வதாக முடிவு செய்துகொண்டனர். அன்று இரவெல்லாம் இருவருக்கும் சரியான தூக்கம் இல்லை. 'எப்பொழுது பொழுது விடியும்; பொன்னம்மாவுக்குத் தாலி கட்டிவிட்டுப் புறப்பட்டுப்போய் போட்டியை நடத்தலாம்' என்று துடித்தான் மாணிக்கம். அதே போல், அவன் மணம் முடித்ததும் தன்னுடைய வீரத்தின் முன் அவனை அடிபணிய வைக்க வேண்டும் என்று தவித்தான் பார்வதியின் கணவன்.

மறுநாள் பொழுது புலர்ந்தது. பொன்னம்மாளுக்குப் பார்வதி பூச்சூட்டி அலங்காரம் செய்தாள். பொன்னம்மாவின் கைராசி தன் கணவனைக் காளையிடமிருந்து மீட்டது என்றும் தன்னுடைய கைராசி அவளுக்குப் பெரு வாழ்வை அளிக்கப் போகிறது என்றும் பார்வதி பெருமையுடன் பேசிக்கொண்டாள்.

முகூர்த்தத்துக்கு இன்னும் ஒரு மணி நேரம்தான் இருந்தது. திடீரென்று 'மணமகனைக் காணவில்லை' என்ற குரல் பரவிற்று. பொன்னம்மாவின் காதிலும் அச் செய்தி எட்டவே அவள் புழுவாய்த் துடித்தாள். காலையில் கதிர் முளைத்ததிலிருந்தே மணமகனை யாரும் பார்க்கவில்லை என்ற செய்தி தெரியவே, அவளது வேதனை பன்மடங்கு அதிகமாயிற்று.

பார்வதியிடம் பொன்னம்மாள் கதறினாள். "அம்மா, உங்க ஆசியோடு நான் நல்லபடியா வாழ்வேன்னு நம்பினேன். ஆனா அவமானப்படும்படியா அவரையே காணல்லேன்னு செய்தி வந்திருக்குது" என்று புலம்பினாள்.

பொன்னம்மாவின் உருக்கமான புலம்பல், பார்வதியின் உள்ளத்தை ஊடுருவித் தைத்தது. தனக்கு வாழ்வளித்தவள் தவிப்பதை அந்த உள்ளத்தால் சகிக்க முடியவில்லை. பார்வதி எதையோ யோசித்தபடி சிறிது நேரம் நின்றாள். பிறகு, "பொன்னம்மா, இரு! இன்னும் முகூர்த்தத்துக்கு ஒரு மணி நேரம் இருக்கிறது. சுமங்கலியான நான் உன்னை மனமார வாழ்த்தியிருக்கிறது உண்மையானால், மணமகன் ஒரு குறையும் இல்லாமல் வந்துவிடுவான்" என்று கூறி அங்கிருந்து நகர்ந்தாள்.

பொன்னம்மாளுக்கு அவள் ஆறுதல் சொன்னாளே தவிர, தனக்குள் அந்த ஆறுதல் பிறக்கவில்லை. தன் கணவனைக் காணும் எண்ணம் அவளுக்கு அப்போது ஏற்படவே, வெளியில் நாலா பக்கமும் தேடிப்பார்த்தாள். அவனையும் காணவில்லை. உடனே அவளுக்குச் சந்தேகம் பிறந்தது. ஒருவரிடமும் சொல்லாமல் வேகமாக நடந்தாள்.

## விளம்பரம் உரையேல்!




"உண்மையைச் சொல்லும் விளம்பரம்டா இது! பாக்கெட்தான் புதுசு! பட்சணங்கள் அல்லன்னு எவ்வளவு நாசுக்காச் சொல்லி இருக்காங்க!"

ஒரு மைல் தொலைவு இருக்கும். மின் வெட்டும் நேரத்தில் ஓடி வந்து சேர்ந்த அவளது பார்வையில் இரண்டு ரேக்ளாக்கள் சற்றுத் தொலைவில் அவளை எதிர் நோக்கி வருவது தெரிந்தது. அவளது சந்தேகம் ஊர்ஜிதமாகி விட்டது. அது நிச்சயமாக அவளுடைய கணவனும் மாணிக்கமும்தான்.

எதிரில் ஓடிவரும் ரேக்ளா வண்டிகளை எப்படி நிறுத்துவதென்று அவளுக்குத் தெரியவில்லை. என்ன ஆனாலும் நிறுத்தியாக வேண்டும்.

இரண்டு வண்டிகளும் ஒன்றுடன் ஒன்று போட்டிபோல் வந்துகொண்டிருந்தன. பார்வதியின் கணவன் எப்படியும் தான் ஜெயித்துவிடவேண்டும் என்ற வெறியுடன் மற்ற வண்டியோடு இடிக்கிற முறையில் ஓட்டலானான். மணமகனோ விலகி ஓட்டியபடி முன்னேறினான். சற்றைக்கெல்லாம் அவன் ரேக்ளா இருபது கஜ தூரம் முன்னேயும் பார்வதியின் கணவனது ரேக்ளா பின்னேயும் வந்து கொண்டிருந்தன. தன் வண்டியில் பூட்டிய ஒற்றைக் காளையைச் சாட்டையால் ஓங்கியடித்தான் பார்வதியின் கணவன். அடி தாளாமல் துள்ளிப் பறந்தது அந்த அஃறிணை ஜீவன். மின்னல் பாய்ச்சலாகப் பாய்ந்து மாணிக்கத்தின் ரேக்ளாவைத் தாண்டிவிட்டது.

தன் அருகில் வண்டி வந்துவிட்டதைக் கண்ட பார்வதி கூவிப்பார்த்தாள். நிறுத்துவதாகத் தெரியவில்லை. உடனே தன் கணவனின் வண்டி வரும் வழியில் நேர் எதிராகப் படுத்து விட்டாள். அவனோ வெறி கொண்ட காளையை வேறு பக்கமாக ஒதுக்கி ஓட்டிக்கொண்டு போய்விட்டான். ஆனால் பின்னால் வந்த மாணிக்கத்தின் ரேக்ளாவோ பார்வதி படுத்திருந்த இடத்தைக் குறிபார்த்து வந்தது. மாணிக்கம் கண நேரத்தில் பதறிவிட்டான். தன் பலமுள்ள வரை மாட்டின் கயிற்றை இழுத்துப் பார்வதியின் மீது வண்டி ஏறாமல் மயிரிழையில் நிறுத்திவிட்டுப் பெருமூச்செறிந்தான்.

பரபரப்புடன் எழுந்த பார்வதி, "தம்பி, அங்கே கல்யாணப் பொண்ணு உன்னைக் காணாமல் துடிச்சிகிட்டிருக்குது. இந்த வேளையில் இதென்ன போட்டி வேண்டிக்கிடக்குது!" என்று கூவினாள்.

அவனும் தன் தவறுக்கு வருந்தி விட்டு, "உங்க புருஷன் பிடிவாதமாகப் பேசி என் ரோஷத்தை மூட்டி விட்டாரு! அதனாலேதான் வெறி கொண்டு கருக்கலோடயே புறப்பட்டேன்" என்று சொல்ல, உடனே அவன் போய் மணத்தை முடிக்க வேண்டுமென்று தூண்டியவாறு நடந்தாள் பார்வதி. அப்போதுதான் சுய உணர்வுக்கு வந்திருந்த மாணிக்கமும் உடனே அவள் சொற்படி புறப்படலானான். தன் கணவனை அழைத்து வருவதாகக் கூறி அவனை மட்டும் அனுப்பினாள்.

அவன் போனதும் அவள் பார்வை தூரத்தில் சாய்ந்து குப்புறக் கிடந்த ஒரு ரேக்ளா வண்டியின் மீது சென்றது. ஓடோடியும் போய்ப் பார்த்தாள். வெறி கொண்ட காளை, வண்டியிலிருந்து அறுபட்டு ஓட, வண்டி சாய அவளுடைய கணவன் கீழே விழுந்து கிடந்தான். அவள் தண்ணீரைத் தெளித்தாள் அவனது முகத்தில். நல்ல வேளை! அவன் கண் திறந்தான். உடம்பில் அடி ஒன்றும் பலமாகப் படவில்லை. "எங்கிட்டே சவால் பேசினான்! இப்போ ஜயிச்சது யாருன்னு அவனைக் கேக்கணும்" என்றான் புத்துயிர் பெற்ற அவன். "எல்லாம் நீங்கதான் ஜயிச்சீங்க! அதோட மறுவாட்டி உயிர் பிழைச்சீங்களே!" என்றாள் பார்வதி. பிறகு அவள் பொன்னம்மாவின் 'கைராசி'யால்தான் தன் மாங்கல்யம் இரண்டாவது முறையும் பிழைத்தது என்று அவனிடம் கூற, அவன் வியப்புடன் கேட்டு விவரமும் தெரிந்து கொண்டான்.

மனிதன் எவ்வளவு சீக்கிரத்தில் மிருகமாக மாறுகிறானோ அவ்வளவு சீக்கிரத்தில் மனிதனாகவும் மாறுவதற்கு மனம் என்ற ஒன்றைக் கடவுள் படைத்திருக்கிறார். பார்வதியின் கணவன், "பொன்னம்மா நல்ல விதமாக வாழ வேண்டும்" என்று கூறியவாறும், மனைவியுடன் புறப்பட்டான்.

அவர்கள் இருவரும் மணப் பந்தலுக்கு வந்து சேர்ந்த நேரமும் முகூர்த்த நேரமும் ஒன்றாக இருந்தன.

பார்வதியின் கையிலும் அவள் கணவன் கையிலும் உதிரிப் பூக்களைக் கொடுத்தார்கள்.

மணமகன் மணமகளுக்குத் தாலி கட்டினான். பார்வதியும் அவள் கணவனும் பூமாரி பொழிந்தார்கள்.

கெட்டி மேளம் முழங்கிற்று.

# தரத்தின் விலை என்ன?




நீங்கள் கொடுப்பது விலை




நீங்கள் பெறுவது தரம்

உங்கள் தேவைகளுக்கும், வீட்டை அலங்கரிப்பதற்கும் தேவையான பற்பல விதமான பருத்தித் துணிகள் பாம்பே டையிங் சில்லறை வியாபாரிகளிடம் கிடைக்கும்! பெண்மணிகளின் ஆடைகளுக்கான வண்ண வண்ணமான துணிகள், ஆண்களுக்கேற்ற வனப்புள்ள டிரில்கள், மற்றும் டஸ்ஸோர்கள், கோ:பா, திண்டு, மேஜுறைகள், கர்ட்டன்கள் முதலியவைகளுக்கான கண்ணைக்கவரும் துணிகள், காம்பின்கள் போன்ற சாப்பாட்டு மேஜைக்கேற்ற துணிகள், கவர்ச்சியான பெட் ஷீட்கள், டவல்கள், எல்லாம் உங்கள் மனத்துக்குப் பிடித்த மாதிரிகளில் தேர்ந்தெடுக்கலாம்! பாம்பே டையிங் துணிகளில் நீங்கள் தேர்ந்தெடுப்பது எதுவானாலும் கொடுக்கும் விலை எவ்வளவானாலும் உங்கள் பணத்துக்கு தரமான துணிகளைப் பெறுகிறீர்கள் என்பது திண்ணம்! நாடெங்குமுள்ள எல்லா முக்கிய சில்லறை நவுளிக் கடைகளிலும், கீழ்க் கண்டவர்களிடமும் கிடைக்கும்:

தென்னிந்தியாவிற்கு டிஸ்ட்ரிபியூட்டர்கள்:

**செல்லாராம்ஸ்**

மதராஸ் & ஹைதராபாத்

# பாம்பே டையிங்

தி பாம்பே டையிங் & மானுபாக்சரிங் கம்பெனி லிமிடெட்.


பண்டிட் டி.கோபாலாச்சார்லுவின்



# புதிய மருந்து பிறக்கிறது

எம். எஸ். உதயமூர்த்தி

"உங்களுக்குக் கடுமையான ஜலதோஷமா? ஜலதோஷத்தை உடனே காசாக்குங்கள். அறை எண் 106க்கு வாருங்கள். ஏழு டாலர் தருகிறோம்'' என்ற செய்தி பல்கலைக் கழகத்தின் விளம்பரப் பலகையில் தொங்கிக் கொண்டிருந்தது. 'சாதாரண ஜலதோஷம் வந்தால் அதற்கு முப்பத்தைந்து ரூபாய் பணம் பெறலாமா? கொடுக்கிறார்களா?' என்ற சிந்தனை என்னை வியப்பில் ஆழ்த்தியது.

ஜலதோஷம் ஒருவகை வைரஸ் என்னும் கிருமிகளால் ஏற்படுவது. அதன் காரணத்தைக் கண்டுபிடிக்க — குணமாக்கும் வழி காண ஆராய்ச்சிக் கூடங்கள் இரவு பகலாகப் பாடுபடுகின்றன. அமெரிக்காவில் ஜலதோஷம், இன்புளுயென்ஸா முதலிய மூச்சுக் குழல் சம்பந்தமான நோய்கள் மிகப் பெரிய பிரச்னையாக இருக்கின்றன. அதனால் பல வேலைகள் தடைப்பட்டு ஏற்படும் நஷ்டம் சுமார் 3 பில்லியன் டாலர் என மதிப்பிடுகிறார்கள் என்றால் உங்களிடமிருந்து ஜலதோஷத்தைப் பற்றித் தெரிந்துகொள்ள ஏழு டாலர் தருவது பெரிய காரியமல்ல!

அமெரிக்கர்களது மருத்துவ ஆராய்ச்சியும், வேகமும் என்னை வியப்படையச் செய்து கொண்டிருந்தபோது மற்றொரு விசித்திர நிகழ்ச்சி நிகழ்ந்தது. நான் குடியிருந்த வீட்டிலிருந்த அமெரிக்கர்கள் உணவு முடிந்தவுடன் குழந்தைகளிலிருந்து பெரியவர்கள் வரை தலைக்கொரு வைட்டமின் மாத்திரையைப் போட்டு விழுங்கி வைத்தார்கள். விசாரித்ததில் அந்நாட்டின் உணவு மிகச் சத்துள்ளதாக இருந்தாலும், வைட்டமின் மாத்திரைகளும் சாப்பிட்டாக வேண்டும் என்று அந்நாட்டு மக்களை மருந்துக் கம்பெனிக்காரர்கள் நம்ப வைத்திருக்கிறார்கள் என்ற உண்மையைக் கண்டேன். விளம்பரம் அவ்வளவு வலிவுடையதாயிருக்கிறது.



அமெரிக்காவின் முன்னேற்றத்துக்கு முக்கிய காரணம் அவர்களது ஆராய்ச்சி மனோபாவம்தான். அணுசக்தி, வானவெளி ஆராய்ச்சிக்கெல்லாம் மேலாக மிக அதிகமாகப் பணம் கொட்டப்படும் ஆராய்ச்சித் துறை மருத்துவம் எனலாம். எத்தனையோ நோய்களுக்கு முடிவான மருந்து கண்டு பிடித்துவிட்டார்கள். எனினும் கண்டு பிடித்துள்ள அம்மருந்துகளைவிட உயர்தரமான ஒன்றைக் கண்டுபிடிப்பதில் நேரத்தையும், பொருளையும், அறிவையும் செலவழித்து வருகிறார்கள்.

உதாரணமாக அலெக்சாந்தர் பிளெமிங் பெனிசிலினைக் கண்டுபிடித்தார். ஆனால் அதில் எத்தனையோ குறைபாடுகள் இருந்தன. மருந்து அதிக நேரம் ரத்தத்தில் நிலைத்திருப்பதில்லை. ஆகவே அடிக்கடி பெனிசிலின் ஊசி குத்த வேண்டியிருந்தது. இப்போதோ ஒரு முறை பெனிசிலின் கொடுத்து, சிறுகச் சிறுக ரத்தத்துக்குப் போகச் செய்யும் ஒரு நல்ல முறையைக் கண்டுபிடித்து விட்டார்கள்.

பெனிசிலினை மாத்திரையாக விழுங்கினால் அது வயிற்றிலுள்ள ஹைட்ரோ குளோரிக் அமிலத்தினால் நாசமாக்கப்படுகிறது. ஆகவே அதை ஈடு செய்ய அமிலத்தினால் பாதிக்கப்படாத புதிய பெனிசிலினை (பெனிசிலின் — வி) தயாரித்திருக்கிறார்கள்.

நூற்றில் ஒருவர் பெனிசிலின் மருந்தினால் பாதிக்கப்படுகிறார். அதாவது அவர் உடலுக்குப் பெனிசிலின் கொப்புளங்களை, அரிப்பை ஜுரத்தை உண்டு பண்ணுகிறது. அத்தகையோருக்காக ஒரு தனி பெனிசிலினை — பெனிசிலின்-ஓ என்பதைக் கண்டு பிடித்திருக்கிறார்கள்.

எப்படி இவர்கள் நாளும் புதிய மேம்பட்ட மருந்துகளைக் கண்டுபிடிக்கிறார்கள் என்று நாம் யோசிக்கக்கூடும்.

ஒரு மருந்தின் மூலத்திலுள்ள அமைப்பைச் சிற்சில இடங்களில் மாற்றி அமைத்து முன்னைவிடச் சிறந்த மருந்துகளைத் தயாரிக்கிறார்கள்.

பெனிசிலின் இனத்தைச் சேர்ந்த எண்ணற்ற மருந்துகள் இப்போது உபயோகத்துக்குக் கிடைத்திருக்





கின்றன. ஸ்ட்ரெப்டோமைசின், டெர்ரமைசின், ஆரோமைசின், பாக்டீரியசின் எனப் புதிது புதிதாகப் பல மருந்துகள் ஆராய்ச்சிக் கூடங்களிலிருந்து தோன்றியவண்ணம் இருக்கின்றன.

அந்த ஆராய்ச்சிக் கூடங்களில் உலகின் பல்வேறு பாகங்களிலிருந்தும் மண்ணைக் கொண்டுவருகிறார்கள். அம்மண்ணில் எத்தனையோ உயிர்கள் வாசம் செய்கின்றன. அவற்றை வளரவிட்டு அவற்றிலிருந்து கிருமிகளைக் கொல்லும் புதிய மருந்துகளைப் பிரித்தெடுக்கிறார்கள். அந்தக் குறிப்பிட்ட மருந்து, கிருமிகளை எப்படிப் பாதிக்கிறது என்பதைச் சோதனை செய்கிறார்கள். சிலவற்றில் ஒன்றும் பயன் இல்லை. சில டி. பி.க்கு எதிராக வேலை செய்கின்றன. சில பெரும்பாலான கிருமிகளையும் ஒரேயடியாகக் கொல்கின்றன. பின் அவற்றை நோயுள்ள பிராணிகளுக்குக் கொடுத்துப் பார்க்கிறார்கள். அதில் வெற்றி கண்டவுடன் மனிதர்களுக்குக் கொடுத்துப் பார்க்கிறார்கள். அங்கும் வெற்றி கண்டால், பொறி இயல் நிபுணரும், மருத்துவ அறிஞரும் சேர்ந்து அதைப் பெரிய அளவில் செய்ய முற்படுகின்றனர். காளானிலிருந்து கிடைக்கும் அதே பொருளை எளிதில் கிடைக்கும் ரசாயனப் பொருள்களிலிருந்து செய்ய முற்படுகிறார் ரசாயன நிபுணர். அல்லது சில மாற்றங்களை மூலகத்தில் ஏற்படுத்தி முன்னிலும் நல்ல பொருளை மக்கள் முன் வைக்கிறார் விஞ்ஞானி. சென்ற ஆண்டில் ஆர். பி. உட்வர்ட் (R. B. Woodward) என்ற பிரபல விஞ்ஞானியும், பைசர் (Pfizer) கம்பெனிக்காரர்களும் டெர்ரமைசினை, ரசாயன முறையில் உண்டாக்கும் அதிசயத்தைச் சாதித்திருக்கிறார்கள்.

வைரஸ் கிருமிகளால் பரவும் நோய்களுக்கெதிராகப் பெரும் பாரை மற்றொரு முனையில் ஆராய்ச்சியாளர்கள் தொடங்கி யிருக்கிறார்கள். வைரஸ் கிருமிகளால் சுமார் 300 வகை நோய்கள் பரவுகின்றன. வைரஸ் மிக மிக நுண்ணியவை. படிகமாக — உயிரற்ற பொருளாக ஒரு சமயம் காட்சி தரும் இவ்வைரஸ் கிருமிகள் — வாழும் சூழ்நிலையில் கோடிக்கணக்காகப் பெருகி நோய்களை உண்டுபண்ணுகின்றன. போலியோ (முடக்கு வாதம்), அம்மை நோய், ஜலதோஷம், தட்டம்மை, இவை யனைத்தும் வைரஸினால் ஏற்படும் ஒருசில நோய்கள். போலியோவுக்கு எதிராக டாக்டர் சாக் என்பவர் ஓர் ஊசி மருந்தைக் கண்டு பிடித்து விட்டார்.



எந்த நாட்டில் சுகாதார நிலை உயர்வாக இருக்கிறதோ அந் நாட்டில் தோன்றும் ஓர் அதிசயமான நோய் இது. சுகாதார முறைகள் குறைவாக உள்ள நாட்டில் குழந்தைகள் இளவயதிலேயே பல்வேறு நோய்க் கிருமிக்கும் ஆளாவதால் தான் அவர்கள் உடலில் இயல்பாகவே தற்காப்பு பெருகி விடுகிறது என்று கூறுகிறார்கள். சமீபத்தில் தட்டம்மைக்கு (Measles) காரணமான வைரஸ் கிருமிகளைப் பிரித்தெடுத்து அவற்றை ஆராய்ந்திருக்கிறார்கள். தட்டம்மை வைரஸ்களைக் கொன்று அந்தத் திரவத்தை உடலில் செலுத்தி, உடலில் வைரஸிற்கெதிரான சக்தியை உண்டு பண்ணுகிறார்கள். இதே போலத்தான் டாக்டர் சாக் போலியோவுக்கெதிரான தற்காப்பு மருந்து முறையைக் கண்டு பிடித்தார். போலியோ வராமல் தடுக்க, பிறந்த எல்லாக் குழந்தைகளுக்கும் போலியோ ஊசி குத்தினார்கள். துரதிர்ஷ்டவசமாகச் சிலவற்றில் போலியோ கிருமிகள் உயிருடன் இருக்கவே சுமார் 400 குழந்தைகள் போலியோ மருந்தினால் முடமானார்கள். பின் இதைச் சோதித்து அனுப்பும் பொறுப்பை அரசாங்கம் கண்காணித்து வருகிறது.

மருத்துவர்களுக்கும் ஆராய்ச்சியாளர்களுக்கும் பெரும் சவாலாக இருக்கும் மற்றொரு நோய் மனம் சம்பந்தமானதாகும். அதாவது சித்த பேதம். இந்திய மூலிகையான சர்ப்பகந்தியிலிருந்து தயாரித்த ரிசர்ப்பின் ரத்தக் கொதிப்பை அடக்குவதிலும், சித்த பேதத்தைக் குணப்படுத்துவதிலும், மிகைப்பட்ட காமவேட்கையைத் தணிப்பதிலும் பலன் தந்தது. அதன்பின் இந்திய மூலிகைகள் உலகின் கவனத்தைக் கவர்ந்திருக்கின்றன எனலாம். ரிசர்ப்பினை ஒத்த பல்வேறுமூலகங்கள் சோதனைச் சாலையில் செய்யப்படுகின்றன; ஆராயப் படுகின்றன.

இதுவல்லாமல் வேறு பல வழிகளிலும் மன நோய்க்கு வழி காண முயல்கிறார்கள். மின் அதிர்வால் மன நோய் குணமடைகிறது. மின் அதிர்ச்சியால் தாக்கப்பட்ட மூளைக்கும் சாதாரண மூளைக்கும் ரசாயன முறையில் என்ன வேறுபாடு; என்ன புதிய பொருளை மின் அதிர்ச்சி மூளையில் உண்டாக்கி யிருக்கிறது என்

பதை உயிரியல் ரசாயன நிபுணர்கள் ஆராய்ந்து வருகிறார்கள். அதைக் கண்டு பிடித்தால் மன நோயின் பெரும் பிரச்னை தீரலாம்.

நம் கல்லீரலில் பினைல் அலனின் (Phenyl alanine) என்ற பொருள் டைரோசின் (Tyrosine) என்ற பொருளாக ஓர் என்சைமால் மாற்றப்படுகிறது. இவ்விரண்டு பொருள்களுக்கும் உள்ள ஒரே ஒரு வித்தியாசம் டைரோசினில் ஓர் ஆக்ஸிஜன் அணு அதிகமாயிருப்பதுதான். பினைல் அலனின் டைரோசினாக மாற்றப்படவில்லை என்றால் ஒருவித சித்த பேதம் நிகழ்கிறது. ஆகவே அந்த என்சைமைப் பற்றி அறிவு வளர்ந்தால் சித்த பேதத்தின் ஒரு பகுதிக் கொடுமை ஒழியும்.

பெரும் பிரச்னையாகவும், புதிராகவும் இருந்துவரும் மற்றொரு நோய் புற்று நோய். புற்று நோய் அந்திய காலத்தில் மிகவும் கொடுமை நிறைந்தது. பல்வேறு கோணங்களிலிருந்து இது இன்று ஆராயப்படுகிறது.

ஒரு புண் ஏற்பட்டு அது குணமாகாமல் அதில் சதா உராய்வு ஏற்படுமானால், அங்கே செல்கள் கட்டுப்பாடின்றிப் பெருகிப் புற்று நோயாகிறது. புற்றுநோய் ஒரு தனி வியாதியல்ல. பல வியாதிகளின் தொகுதி என்று அபிப்பிராயப்படுகிறார்கள். சமீபத்தில் புற்று நோயை உண்டு பண்ணும் வைரஸ் கிருமிகளைப் பிரித்தெடுத்திருக்கிறார்கள். அதிலிருந்து புற்றுநோயைக் கட்டுப்படுத்த முயல்கிறார்கள்.

நல்ல நிலையில் உள்ள மனிதர்கள் உடலில் புற்று நோய்ச் செல்களைச் செலுத்தினால் அவர்கள் அதனால் பாதிக்கப்படுவதில்லை. ஏனெனில், அவர்கள் உடலில் புரோபெர்டின் (Properdin) என்ற தற்காப்புப் பொருளை உடல் உற்பத்தி செய்து காக்கிறது. ஆகவே ஆராய்ச்சி இப்போது இந்தத் தற்காப்புப் பொருளைப் பற்றி நடந்து கொண்டிருக்கிறது.



நம் உடலில் உள்ள 'செல்'லில் அமைந்திருக்கும் நியூக்ளிக் அமிலத்தில் புற்று நோய் மாறுபாட்டை உண்டாக்குகிறது. இம்மாறுபாட்டைத் தடுப்பதற்காக 5–புளோரோ யுரேசில் (5-Fluoro uracil) என்ற மருந்தை டாக்டர் ஹீடல் பர்கர் (Dr. Hiedel Burger) என்பவர் உருவாக்கியிருக்கிறார். ஆராய்ச்சி இன்று தாவர உலகை நோக்கியும் திரும்பியிருக்கிறது. அரிஸ்டோ லோசிக் இண்டிகா என்ற இந்திய மூலிகையிலிருந்து டாக்டர் குப்சன் (Dr. Kupchan) புற்று நோய்க்கான மருந்தைப் பிரித்தெடுத்திருக்கிறார். அமெரிக்காவில் புற்றுநோய்க்காக மூலிகைகளிலிருந்து மருந்து காணும் பணி ஒன்று அர்க்கான்ஸாஸிலும், மற்றையது டாக்டர் குப்சனின் ஆய்வுக்கூடத்திலும் நடைபெறுகிறது. இங்கு பல ஆயிரம் தாவரங்களைப் பரிசீலிக்கிறார்கள். இதுவரை இருபதுக்கு மேற்பட்ட புற்றுநோய்க்கான மருந்துப் பொருட்களைப் பிரித்தெடுத்திருக்கிறார்கள்.

நித்திய கல்யாணிச் செடியிலிருந்து கிடைக்கும் ஒரு பொருள் புற்று நோயைக் குணமாக்குகிறது என ஒரு மருந்துக் கம்பெனி கண்டு பிடித்திருக்கிறது.

புற்றுநோய் சம்பந்தப்பட்ட அனைத்தும் ஆராய்ச்சி நிலையிலேயே இருக்கின்றன.

மாபெரும் ரசாயன நிபுணர்களும், மருத்துவ ஆராய்ச்சியாளர்களும், உயிரியல் விஞ்ஞானிகளும் பல்வேறு கோணங்களில் நின்று நோய்களுக்கு விடை காணும் நிலையில் உலகம் இருக்கும் போது நம் நாட்டில் சர்வ ரோக சஞ்சீவித் தைலங்கள் வெளிவந்தவண்ணம் இருக்கின்றன!

நம் நாட்டில் விற்கப்படும் மூளை குளிர்ச்சித் தைலங்களிலிருந்து விளம்பரம் செய்யப்படும் அதிசய சக்தி பெற்ற அற்புத லேகியங்கள் வரை இங்கே ஆராய்ச்சி செய்தார்கள். பலன்: பூஜ்யம்தான். நான் இங்கு வந்தபோது பேராசிரியர்கள் வாயிலாக அதைத்தான் காதால் கேட்டேன்.

இந்த ஏமாற்று வித்தைகளை ஒழிக்கவும், உண்மையான நமது நல்ல மருந்துகளை உலகின் முன் வைக்கவும் ஆராய்ச்சிகள் தேவை.

**மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள்**
**சொல்வதில் ஓர் மகிமை இல்லை**

**திறமான புலமையெனில் வெளிநாட்டார்**
**அதை வணக்கம் செய்தல்வேண்டும்.**



# விருந்தாளி

## ஐ.சாமிநாதன்



பையன் முகத்தில் ராஜ களை தாண்டவமாடியது. என்னை ஒரு முறை அவன் ஏறிட்டுப் பார்த்துச் சிரித்தான். 'ஐயோ, ராஜ களை இப்படிப் பத்தாவது வயதிலேயே பிளாட்பாரத்தில் பூட்ஸுக்குப் பாலிஷ் போட்டுக் கொண்டிருக்கிறதே' என்று வருந்தினேன்.

ஆமாம், அவனுக்கு வயசு பத்துக்குமேல் இருக்காது. ஆடியும், ஓடியும் தோழர்களோடு சிரித்தும் விளையாட வேண்டிய அவனுடைய வயது பிளாட்பாரத்தில் விளையாடிக் கொண்டிருந்தது. ஆனால் பையனோ இதற்கெல்லாம் கவலைப்படுபவனாக இல்லை. எப்போதும் அடக்கமான புன்சிரிப்புடன் பரபரவென்று பாலிஷ் போடுவான். பத்துப்பைசாவோ, பதினைந்து பைசாவோ கொடுத்ததை வாங்கிக்கொண்டு ஒரு சலாம் வைத்து விட்டு நிஜாரப் பைக்குள் காசைத் திணித்துக்கொள்வான். அவனுடைய வாழ்க்கையைப் போலப் பொலிவு இழந்து நைந்துபோன பூட்ஸைக் கூட அழகாக மெருகிட்டு விடுவான். ஆனால் அவனுக்குக் கிடைக்கிற அந்தக் காசில் அவன் வாழ்க்கையில் மெருகு ஏற முடியுமா?

எனக்கு அவனைக் கண்டால் ஒரு கனிவு. அழுக்கடைந்த காக்கி அரை நிஜாரும், மேலே பனியனும் போட்டுக் கொண்டு தன்னருகில் அவனுடைய மூலதனமான பாலிஷ் பெட்டியை வைத்துக்கொண்டு அவன் ஆவலுடன் உட்கார்ந்திருப்பதைச் சற்றுத் தூரம் தள்ளி நின்று கவனிப்பேன். பங்களாவுக்காகவும், காருக்காகவும், புகழுக்காகவும் பொய்மையும் புரட்டையும் மூலதனமாக வைத்து வியாபாரம் செய்கிற அந்தப் பெரிய கடைத் தெருவிலே ஒரு சின்ன ஜீவன் பிறர் கால்களைப் பிடித்து, சலியாமல் உழைத்து உயிர் வாழ்கிறதை எண்ணி எண்ணி அவனுடன் பேசும்போதே அபார மதிப்புடன் அணுகுவேன். எல்லோரையும் போலப் பத்துப் பைசாவோ, பதினைந்து பைசாவோ கொடுக்காமல் நாலணா தருவேன். அவனுக்கு வாயெல்லாம் பல்லாகிவிடும். என்னுடைய பூட்ஸைக் கண்ணாடிமாதிரி ஆக்கி விடுவான். பூட்ஸைப் பார்த்தால் அவன் முகம் தெரியும். ஆனால் ஒவ்வொரு முறையும் நான் இப்படி நாலணா கொடுப்பதைக் கண்ட அவன் அதை வாங்குவதற்கே வெட்கப்பட்டான்.

ஒரு நாள், ''உன் பெயர் என்ன?'' என்று அவன் பாலிஷ் போட்டுக் கொண்டிருக்கும்போது கேட்டேன். 'தன்னையும் ஒரு மனிதனாக மதித்துப் பெயரைக் கேட்க ஒருவர் இருக்கிறாரா?' என்ற வியப்புடனும், நன்றியுடனும் என்னை அவன் ஏறிட்டுப் பார்த்தான்.

''என் பெயர் மணி.''

''உனக்கு அப்பா?''

''எனக்கு யாரும் கிடையாது.....''

இதைச் சொல்லும்போது துக்கமே ஓர் உருக் கொண்டு எதிரில் வந்து பேசியதுபோல இருந்தது. ''நான் ஹார்பருக்கு எதிரில் பிளாட்பாரத்தில் குடிசை போட்டுக் கொண்டிருக்கிற ஒரு கிழவருடன் இருக்கிறேன். தினமும் ஒரு ரூபாய் அவருக்குக் கொடுக்க வேண்டும். அப்போதுதான் சாப்பாடும், இரவு அந்தக் குடிசையில் தூக்கமும் ....''

அவன் மேலும் தொடர்ந்தான்.

''கிழவர் சாப்பாடு போடுவதற்கு ஒரு ரூபாய் மட்டும் போதாது. இரவு அடுப்புக்குச் சுள்ளி பொறுக்கி வரவேண்டும், பானையில் தண்ணீர் எடுத்து வரவேண்டும். கிழவருக்குக் கைகால் பிடித்துவிட வேண்டும். பாவம், கிழவர் வியாதிக்காரர்......''

எங்களுக்கு இடையே வளர்ந்ததை நட்பு என்று சொல்லலாமா? வெள்ளைச் சட்டையும், வெள்ளைப் பாண்டுமாக ஆபீசுக்குப் போகும் ஒருவனுக்கும், தெரு ஓரத்தில் செருப்பை ரிப்பேர் செய்தும், பூட்ஸுக்குப் பாலிஷ் போட்டும் வாழ்கின்ற பத்து வயசுப் பையனுக்கும் இடையே சிநேகம் என்றால் உலகம் சிரிக்காதா?

ஆனால் நான் நிச்சயமாகச் சொல்வேன், அவனிடம் எனக்குப் பரிவு ஏற்பட்டது நூற்றுக்கு நூறு உண்மை. கொஞ்சம் கூட உபயோகம் கருதாத பரிவு.

தினமும் அல்லது இடையிடையே ஒன்று விட்டு ஒரு நாள் அவனைப் பார்த்தாக வேண்டும். அவனும் என்னைக் கண்டு முக மலர்ச்சியுடன் வரவேற்பான். ஒரு முறை எனக்கு உடம்பு சரியில்லை என்று நான்கு நாட்கள் ஆபீசுக்குப் போகாமல், பிறகு போன போது அவன் தவித்த தவிப்பு! பாலைவனத்தில் முளைத்த இளந்தளிர் போல இருந்த அவனுக்கு நான் கொழுகொம்பாக இருந்தேன்.

இன்றைக்கும் அவனைப் பற்றி நினைத்துக் கொண்டு நடந்தேன். அவனோடு சுமார் மூன்று வருஷம் பழக்கமாகி யிருந்தது. பையன்கூடச்

சற்று வளர்ந்திருந்தான்; தொழிலையும் நன்றாகக் கற்றுக் கொண்டிருந்தான். பூட்ஸ் பாலிஷோடு நிறுத்திக் கொள்ளாமல், செருப்புத் தைப்பதற்கும் பழகி விருந்தான். நல்ல தானாலும், பொல்லாததானாலும் சட்டென்று பிடித்துக் கொள்கிற சின்ன வயசிலே சுறு சுறுப்புடன் இருந்ததால் வயசுக்கு மீறிய திறமை பளிச்சிட்டது. நான் ஆபீசுக்கு நாழிகையாகி விட்டது என்று வேகமாக அவனை அனுப்பினேன். வழக்கப்படி என் கால்கள் அவன் முன் நீண்டன. அவனும் தன் கடமையைச் செய்யலானான். அவன் பாலிஷ் போட்டுக் கொண்டிருந்த என் பூட்ஸில் சொத்தென்று கண்ணீர் விழுந்தது. அவன் அழுகிறான்போல இருக்கிறது.

''எனக்குச் சோறு போட்டுத் தினமும் என்னைக் காப்பாத்தினவர் போயிட்டார் சார்....'' என்று சொல்லி என்னை நிமிர்ந்து பார்த்தான். அவனுக்கு அழுகை வெடித்துக் கொண்டு வரும்போல இருந்தது. அவன் கண்கள் கண்ணீரில் தத்தளித்தன. உதடுகள் இழுத்துக் கொள்ள, விசும்பினான்

''இனி மேல் எனக்கென்று யார் இருக்கிறார்கள் ?'' என்று கேவினான். நான் மெல்ல அவனைத் தேற்ற முயன்றேன். பிறகு அன்று இரவு என் வீட்டுக்கு வரும்படி அழைத்தேன். என்னுடைய விலாசத்தையும் அவனிடம் கொடுத்தேன்.

அன்று இரவு ஏழரை மணிக்கு அவன் தன்னுடைய பையுடன் வீட்டுக்கு வந்துவிட்டான். உடனே நீலாவைக் கூப்பிட்டேன். நீலாவுக்கு அடுத்த மாசம் நாலு வயசு முடிகிறது. ''இவள் என் பெண். இவளுக்குச் செருப்புத் தைக்க வேண்டும்'' என்று அவனிடம் சொன்னேன். அவன் அவளையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். ''நாளைக்குள் தைத்துத் தந்துவிட வேண்டும்'' என்று நான் சொன்னதைக்கூட காதில் வாங்கிக் கொள்ளாமல் அவளையே நோக்கினான். நான் இன்னொரு முறை அழைத்தவுடன்தான் உடலைச் சிலுப்பிக் கொண்டு கனவு கண்டு விழித்தவனைப் போல ஒன்றும் புரியாமல் விழித்தான்.



''ஆ..... என்ன சொன்னீர்கள்? நாளைக்குள்ளே வேண்டுமா? அதற்கென்ன....'' என்று தட்டுத் தடுமாறிப் பதில் அளித்தான். சிறிது நேரம் கழித்து, என் மனைவியைக் கூப்பிட்டு அவனுக்குச் சாப்பாடு போடச் சொன்னேன். அவள் முகத்தைச் சுளித்தாள். அவனை ஒரு விருந்தாளியாக ஏற்றுக் கொள்ள அவளுக்கு மனம் இடம் தரவில்லைபோல இருக்கிறது. அந்தத் 'தாராள மனசி'ல் 'சின்னப் பையன் இடம் பெற முடியவில்லை. பெரிய மனிதர்கள் வந்தால் அகமும் முகமும் மலர அவர்களுக்கு விருந்து ஓம்பலின் சிறப்பைப் பூரணமாக உணர்ந்து கொண்டவர்களைப் போல உபசரிப்பதென்றால் எல்லோருக்கும் இஷ்டமே. இப்படி வறுமைச் சகதியில் புரண்டு, உடலையும் உடையையும், வாழும் இடத்தையும் அழுக்காக்கிக் கொண்டு அவலத்தின் உருவாய் ஒரு சிறு பையன் வந்து நிற்கும்போது, உடலையும், உடையையும் வாழும் இடத்தையும் சுத்தமாக வைத்துக் கொண்டிருக்கும் மனிதர்கள்—அவனை விருந்தாளி என்று அழைப்பார்களா? இப்படிப்பட்ட சாதாரணமான மனிதர்களிலே ஒருத்தியே அவளும்.

இப்படி அவள் முகம் சுளித்ததும் நான் கோபம் கொண்டேன். அவளை உள்ளே போகும்படி சைகை காண்பித்தேன். அவள் முகம் கோணுவதைக் கண்டால் நிச்சயமாய், அந்தப் பையன் வெளியே போய் விடுவான். அவன் வாழ்க்கை கரடுமுரடாக இருந்தாலும், உடை அழுக்காய் இருந்தாலும், அவன் உள்ளம் மென்மையும் தூய்மையும் உடைய மலரென அறிவேன். அந்த மலர் அவள் முகத்தைக் கண்டால் வாடுமே என்று பயந்து அவளை உள்ளே அனுப்பினேன்.

உள்ளே நான் போய் அவளைக் கடிந்துகொண்ட பிறகு அவள் அரை மனதுடன் அவனுக்குச் சாப்பாடு போட ஒப்புக் கொண்டாள். அவள் என் கோபத்துக்கு மதிப்புக் கொடுத்தாளே தவிர, இரக்கத்துக்கு மதிப்புக் கொடுக்கவில்லை.

நான் வாசலுக்கு வந்து பார்த்தேன். அந்தப் பையன் நீலாவுடன் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தான். அவன் மகிழ்ச்சியாக இருந்து பார்ப்பதில் எனக்கு மகிழ்ச்சியாக இருந்தது. ''சார்... உங்கள் பெண் என்னுடைய தங்கைபோலவே இருக்கிறாள்....'' என்று என்னிடம் சொன்னான்.

''உன் தங்கையா?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டேன்.

''ஆமாம் சார்! போன வருஷம்வரை என்னைப் பிரியாமல் இருந்தாள். ஒரு நாள் பஸ் ஸ்டாண்டிலே பிச்சை எடுத்தாள் என்று நான் கோபத்தில் அடி அடி என்று அடித்து....''

அவன் குரல் கம்மிற்று. கண்கள் குளமாயின. ''அவள் போய் விட்டாள் சார்.''

ஒரு நிமிஷத்துக்கு முன்னர் மகிழ்ச்சியாக இருந்தவன் அதற்குள் எப்படிச் சோகத்தில் மூழ்கி விட்டான்? இந்த வயசுக்குள் இந்தப் பிஞ்சு மனத்தைச் சொல்ல முடியாத துன்பம் அழுத்துகிறதே என்று பரிதவித்தேன். பிறகு மெல்லப் பேச்சை மாற்றி, அவனைச் சாப்பிடச் சொன்னேன். அவள் அவனை விருந்தாளியாக முழு மனசுடன் ஏற்றுக்கொள்ளா விட்டாலும், அவனுக்கு விருந்தாளிக்குரிய கூச்சமும், சங்கோசமும், பரபரப்பும் இருந்தன. நாங்கள் யாரும் பார்க்காத போது அல்லது நான் அவனைப் பார்க்கவில்லை என்று அவன் நினைத்தபோது வயிற்றை இறுக்கிக் கட்டிய 'பெல்ட்'டை மெல்ல அவிழ்த்துக் கொண்டான். ஆனால் மறுகணமே, 'இன்றைக்குப் பெல்ட்டை அவிழ்த்து வயிற்றுக்கு ஆசை காண்பித்தால் நாளைக்கு ஆபத்து ' என்று நினைத்தோ என்னவோ மறுபடியும் இறுக்கிக் கட்டிக் கொண்டான். ''என்ன பையா,



மிகவும் குறைவாகச் சாப்பிடுகிறாயே! இன்னும் கொஞ்சம் போட்டுக் கொள்'' என்றேன். அவன் சாப்பிடுவதை நிறுத்தினான். என்னையே உற்றுப் பார்த்தான். ''ஹோ'' வென்று அழுகை பொத்துக் கொண்டது. இலையை அப்படியே மடித்து எடுத்துக்கொண்டு வேகமாக வாசலில் போட்டுக்கையைக் கழுவிக்கொண்டான். கண்ணீர் தேங்கி நிற்பது தெரியாத வாறு முகம் முழுவதையும் தண்ணீரால் கழுவிக்கொண்டான். ''வயிறு ரொம்பிப் போச்சு சார்.... குழந்தையின் செருப்புக்குக் கால் அளவு எடுத்துக் கொண்டு விட்டேன்.... நாளைக்குத் தந்து விடுகிறேன்'' என்று சொல்லிப் பையைத் தூக்கிக் கொண்டு கிளம்பி விட்டான். கிளம்பும் போதும் நீலாவை உற்றுப் பார்த்தான். குழந்தையும் அவனைப் பார்த்துச் சிரித்தது. உடனே பெரிய புதையல் கிடைத்தது போல அவனும் வாய் விட்டுச் சிரித்தான்.

''செருப்புக்கு எவ்வளவு ரூபாய் வேண்டும்?'' என்றேன்.

''நாளைக்குச் சொல்கிறேன்'' என்று என் முகத்தைக் கூடப் பாராமல் விடுவிடு வென்று பையைத் தூக்கிக் கொண்டு சென்று விட்டான்.

அவன் போய் அரை மணி நேரம் இருக்கும். நாங்கள் எல்லோரும் சாப்பிட்ட பின் அவள் தன்னுடைய காரியங்களை முடித்துக் கொண்டு வந்தாள். குழந்தை நீலா தரையிலே படுத்துத் தூங்கி விட்டிருந்தாள். அவளை எடுத்து என் அருகிலே விட்டு விட்டு, ''குழந்தைக்கு ஒரே காலில்தான் கொலுசு இருக்கிறது. போன வாரம் இன்னொரு கால் கொலுசு தொலைந்து போய் விட்டது. நாளைக்காவது போய் இன்னொரு கால் கொலுசுக்கு 'ஆர்டர்' கொடுத்து விட்டு வரவேண்டும். ஒரு காலில் மட்டும் கொலுசு இருந்தால் பார்ப்பதற்கு....'' என்று பேசிக் கொண்டிருந்தவள், ''ஐயையோ!'' என்று பதறினாள். ''இதோ, பாருங்கள்! இந்தக் கால் கொலுசையும் காண வில்லை. சாயங்காலம் கூடப் பார்த்தேன். அவள் காலில் இருந்தது....'' என்று சுற்று முற்றும் தேடினாள். ''நான் அப்போதே நினைத்தேன். அந்தப் பையன், நீங்கள் அழைத்த விருந்தாளி, நன்றாக உங்களுக்கு நன்றி செலுத்தி விட்டுப் போய் இருக்கிறான்!''

''சும்மா ஏதாவது சொல்லாதே!''

''நீங்கள் சும்மா இருங்கள். நீங்கள் உள்ளே வந்து என்னிடத்தில் இரக்கம், அன்பு என்று உபதேசம் செய்து கொண்டிருந்த போதே அவன் அவளுடைய கொலுசைக் கழற்றிக் கொண்டு பையில் போட்டுக் கொண்டிருப்பான். இதற்குத் தான் அப்போதே சொன்னேன். உடனே போய்ப் போலீசில் புகார் செய்து விட்டு வாருங்கள்....''

எனக்குத் தலை சுற்றியது. நானும் சாயங்காலம் நீலா கொலுசு போட்டுக் கொண்டிருந்ததைப் பார்த்தேன். அதற்குள் எப்படிப் போயிருக்கும்? அவள் சொல்லுவது போல அந்தப் பையன்.... 'சே, அவனா? இருக்காது!'

அவள் சொன்னாள்:

''இரக்கம் யாருக்குக் காண்பிக்க வேண்டுமோ, அவர்களிடம்தான் இரக்கம் செலுத்த வேண்டும். தூங்குகின்ற ஒரு மனிதன் மீது பாம்பு ஏறும் போது, அதை அடிக்காமல் அதனிடம் இரக்கம் காண்பித்தால் அது அந்த மனிதனைக் கடித்து.... பாம்பினிடம் காட்டும் இரக்கம் அந்த மனிதனுக்குத் தீமை இழைத்ததாகும். திருடர்களிடம் காட்டும் இரக்கமும், தீயவர்களிடம் காட்டும் இரக்கமும் மற்றவர்களுக்குக் கேடாக முடியும். இதனால் உங்களுக்குப் பாவமே தவிர புண்ணிய மில்லை.... அவன் இதைப் போல எத்தனை பேர் வீட்டில்..''

நான் ஒன்றும் புரியாமல் எனக்கே சவால் விடுகின்ற அவளுடைய பேச்சையும் அவனுடைய போக்கையும் நினைத்திருந்தேன்.

''நான் வேண்டுமானால் நீலாவையே எழுப்பிக் கேட்டு விடுகிறேன்'' என்று அவள் நீலாவை எழுப்பப் போனாள். ''வேண்டாம், எழுப்பாதே! நாளைக்குக் காலையில் கேட்டுக் கொள்ளலாம்'' என்று தடுத்தேன். நீலா தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்டு 'நீதான் இத்தனை நாள் தூக்கத்தில் இருந்தாய்' என்று சொல்லி விட்டால் என்ன செய்வது என்ற பயம் எனக்கு. தினம் அவன் என்னிடம் குழைந்து பேசியதும், இப்போது சாப்பிட்டு விட்டு என் முகத்தைக் கூடப் பாராமல் சென்றதும்.... 'சீ, இரக்கம் என்பதுகூடத் தாமாக வருவித்துக் கொண்ட ஓர் உணர்வா? அல்லது பிரமையா? நம்மையும் அறியாமல் உள்ளத்தில் ஊற்று எடுக்கும் உணர்வு இது என்று நம்பியதெல்லாம் நம்மை நாமே ஏமாற்றிக் கொண்டதுதானா?' என்று குழம்பினேன். அப்படியே தூங்கிவிட்டேன். தூக்கத்தில் அவன் வந்து என்னைப் பார்த்து ஏளனமாகச் சிரித்து, ''உங்களை ஏமாற்றி விட்டேன்....... பாருங்கள்.....'' என்று கூவினான்.

என் மனைவி மறுபடியும் வந்து நான் ஏமாந்ததைக் குத்திக் காட்டினாள். இப்படிக் கனவில் என்னை எல்லோரும் குற்றவாளிக் கூண்டில் ஏற்றி........

காலையில் நான் விழித்தேன். தூக்குத் தண்டனை அறிவிக்கப்படப் போகும் ஒருவன் நீதிபதி என்ன சொல்லப் போகிறார் என்று ஆவலுடன் எதிர்பார்ப்பதைப் போல நான் நீலா சொல்வதைக் கேட்டேன். அவள் அந்தப் பையன்தான் கொலுசைக் கழற்றிப் பையில் திணித்துக் கொண்டதாகச் சொன்னாள்.

எனக்கு அந்தக் குளிர்காலத்திலும் வியர்த்துக் கொட்டியது.

**கா**லையில் வெகு சீக்கிரமாக ஆபீசுக்குக் கிளம்பி அவன் இருக்கிறானா என்று பார்த்தேன். அவன் இருந்த இடம் காலியாக இருந்தது. இனி மேல் அவன் ஏன் அங்கே இருக்கப் போகிறான்? எனக்கு ஆபீஸில் வேலையே ஓட வில்லை. செய்த வேலையிலும் தவறுகள். 'லீவ்' போட்டு விட்டு வீட்டுக்குப் போகலாம் என்றாலோ வீட்டுக்குப் போனவுடன் அவள் அந்தப் பையனைப் பற்றிக் கேட்பாளே என்ற எண்ணம் தடுத்தது. அதனால் சாயங்காலம்கூட எங்கெல்லாமோ சுற்றி விட்டு இரவு எட்டு மணிக்குத்தான் வீட்டை நெருங்கினேன். காம்பவுண்டுக்குள் நுழைந்ததும் வாசல் ஜன்னல் அருகே யாரோ ஒண்டிக் கொண்டு நிற்பது தெரிந்து அங்கே விரைந்தேன். ஆ. அவனேதான்; அந்தப் பையனேதான்! நேற்று கொலுசை எடுத்துக் கொண்டு போன அதே திருடன் தான்! அவனறியாமல் அவனை நெருங்கி அவன் பிடரியையும் சட்டைக் காலரையும் சேர்த்துப் பிடித்துக் கொண்டேன். அவன் அதிர்ச்சியுடன் திரும்பிப் பார்த்து, 'சார்' என்று கூவினான். அவனைத் தரதர வென்று வாசல் திண்ணைக்கு இழுத்துக் கொண்டு போனேன்.

''மரியாதையாகச் சொல்லி விடு. நீதானே நேற்று கொலுசைத் திருடியது....!'' அடுத்த கணம் 'பளார்' என்று அவன் முகத்தில் அறை விழுந்தது.

''இல்லே, சார். .. இல்லே சார்..... நான்தான்......''

மறுபடியும் 'பளார்' என்று...''உண்ட வீட்டுக்கே துரோகமா?''.... எனக்குக் கோபத்தில் நிலை புரிய வில்லை. நான் அடுத்த அடியில் அவன் கையில் இருந்த பை கீழே விழுந்தது. அதிலிருந்து இரண்டு புத்தம் புது சிறிய பூட்ஸ்கள் விழுந்தன. கூடவே 'ஜல் ஜல்' என்று கொலுசும்....

அவன் என்னைப் பார்த்து அழுதான்.

''ஐயோ, நான் திருடனில்லே சார்.... நான் திருடனில்லே சார்.... நீலாவைப் பார்க்க என் தங்கச்சி போலவே இருந்தது..... அதுதான் போன வருஷம் செத்துப் போச்சு.... அது சாகற அன்னிக்குக் கொலுசு வேணுமென்று கேட்டது..... ஆனால் கொலுசு வாங்குவதற்குள்ளே.... அந்தப் பணம் அப்படியே அதோட ஞாபகார்த்தமா வைத்திருந்தேன். அதிலேதான் நீலாவுக்கு இன்னொரு கொலுசு வாங்கி.... அதற்குத்தான் இன்னொரு கொலுசையும் அளவுக்காக எடுத்துக் கொண்டு போனேன்.:.... ஐயோ... நான் திருடன் இல்லே சார்... என்னை நம்புங்க சார்...''

அவன் அப்படியே காலில் விழுந்தான். அந்தப் பையிலிருந்து விழுந்த இரண்டு புதிய கொலுசைப் பார்த்தேன். ஒன்று புதிதாக வாங்கி இருக்கிறான் போல இருக்கிறது. இன்னொன்றுக்கும் மெருகு போட்டிருந்தான். அதன் அருகேயிருந்த சின்னஞ் சிறிய பூட்ஸை எடுத்துப் பார்த்தேன். 'லிலி நாலரை' என்று போட்டிருந்தது. எனக்கு நெஞ்சு வெடித்தது. கண்கள் நீரைப் பெருக்கின. அந்தச் சின்ன உள்ளத்தில் அமைந்து கிடந்த மாற்ற முடியாத அன்பை எண்ணி அப்படியே நின்றேன். எனக்கு, நான் காட்டிய இரக்கமும் அன்பும் வீணல்ல என்ற வெற்றிப் பெருமிதமும் கர்வமும் உண்டாயின. என்றாலும் அவனை ஏறிட்டுப் பார்க்கக் கூடத் தைரியம் இல்லை. என் மனத்துள் அவனைப் பூஜித்துக் கொண்டே ''இரு, உள்ளே போய் இதற்கான பணத்தை எடுத்து வருகிறேன்'' என்று சொல்லி உள்ளே போய் அவளை அவசரம் அவசரமாக அழைத்துக் கொண்டு வெளியே வந்தேன். அவன் நின்றிருந்த இடத்தில் பளபளக்கும் இரண்டு கொலுசுகளும் அந்தப் பூட்ஸும் இருந்தன. ஆனால் அவன் இல்லை.

''என்ன இது?'' என்றாள் அவள்.

''அந்தக் கொலுசு அந்தப் பையனின் தங்கையான நீலாவுக்குப் போட; அந்தச் செருப்பு உன் புத்தியையும், உலகத்தின் புத்தியையும் அடிக்க!'' என்றேன் நான்.


மகாவீர சரிதம்
அன்னை திரிசாலையின் அணைப்பிலே இருக்கும் அருமை மகனைக் கண்டு பூரிக்கிறான் குந்தபுர மன்னன் சித்தார்த்தன். இளவரசன் பிறந்த வேளை நல்ல மழை பெய்தது. நாடு செழித்தது. மக்கள் மகிழ்ந்தார்கள். குழந்தைக்கு வர்த்தமானன் என்று நாமகரணம் செய்வித்தார்கள். அழகும் ஆரோக்கியமும் கொண்ட குழந்தை வர்த்தமானன் வளர்ந்து பெரியவனானான். அண்ணன் நந்தி வர்த்தனனுடன் அரசர்க்குரிய அருங்கலைகள் அனைத்தும் கற்றுத் தேர்ந்தான். ஆனாலும் அடிக்கடி தனிமையை நாடிச் சிந்தனையில் மூழ்கிவிடுவது வழக்கம்.
கல்கி தீபாவளி மலர் 1963

வர்த்தமானருக்குப் பன்னிரண்டு வயது. பலசாலியும் தைரியசாலியுமான அவர் ஒரு நாள் அண்ணன் நந்திவர்த்தனர் மற்றும் தோழர்களுடனும் கோட்டை மதிலுக்குள் விளையாடிக் கொண்டிருந்தார்கள். எங்கிருந்தோ ஒரு மதம் பிடித்த யானை வெறிகொண்டு பாகனுக்கு அடங்காமல் இவர்களை நோக்கி ஓடிவந்தது. எல்லோரும் பயந்து ஓடிவிட்டார்கள். வர்த்தமானர் துளியும் பயமின்றி அதன் வழியில் நின்று கொண்டிருந்தார். யானை அருகே வந்ததும் அதன் துதிக்கையைப் பற்றி ஏறி அதன் மீது அமர்ந்து அதை அடக்கிக் கொண்டு போய் யானைக் கொட்டிலில் கட்டி விட்டுத் திரும்பினார். பெற்றோரும் மற்றவரும் அவரது துணிச்சலைப் பாராட்டியபோது, 'இது ஒரு பெரிய திறமையா? என்னுள்ளே இருக்கும் ஏழு மதயானைகளை அடக்கி யிருந்தாலல்லவா பெருமைப்பட முடியும்?' என்றார்.

மகனின் போக்கு அன்னை திரிசாலைக்குக் கவலையாக இருந்தது. சுகபோகங்களை வெறுத்த வர்த்தமானர் எங்கே துறவறத்தை மேற்கொண்டுவிடுவாரோ என்று பயந்தாள். 'நான் உயிரோடிருக்கும்வரை நீ துறவியாகக் கூடாது' என்று அவரிடமிருந்து வாக்குறுதி பெற்றுக் கொண்டாள். அதுமட்டுமல்லாமல், கௌண்டின்ய கோத்திரத்தில் உதித்த யசோதை என்ற பக்கத்து நாட்டு இளவரசியை அவருக்கு வாழ்க்கைத் துணைவியாக்கி வைத்தாள். வர்த்தமானரும் யசோதையுடன் பத்தாண்டுகள் பாங்குடன் இல்லறம் நடத்தி, பிரியதரிசனை என்ற ஒரு மகளுக்கும் தந்தையானார். இருந்தும் வர்த்தமானரின் உண்மையான இயல்பு மாறவில்லை. துறவறத்தைப் பற்றியே சிந்தித்தபடி யிருந்தார்.







வர்த்தமானரின் பெற்றோர்கள் 'சல்லேகனம்' என்ற பிராயோபவேச நோன்பு நோற்று நிலவு தப்பாமலே உயிர் துறந்தார்கள். தம் தாய்க்குக் கொடுத்த வாக்கு நிறைவேறிவிட்டதால் இனி துறவறத்தை மேற்கொள்ள விரும்பினார் வர்த்தமானர். அப்போது அவருக்கு முப்பது வயது. அண்ணனிடம் தம் விருப்பத்தைச் சொல்லி அனுமதி கேட்டபோது தம்பியைப் பிரிய மனமில்லாத நந்திவர்த்தனன் அனுமதி தர மறுத்தான். ஆனால் வர்த்தமானரின் முடிவை மாற்ற முடியவில்லை. தம் உடைமைகளை ஏழை எளியவருக்கு வழங்கிவிட்டு மூன்று நாள் உபவாசமிருந்தார். அப்போது இந்திரன் தோன்றி தெய்வீக ஆடை ஒன்றை அளித்தான்.


சோமதத்தன் என்ற பிராமணன் யாசித்து வர, அவனுக்குத் தம் ஆடையில் பாதியைக் கொடுத்தனுப்பினார் வர்த்தமானர். அவ்வாடை மிக மதிப்பற்றது என்பதை அறிந்து பேராசை கொண்ட சோமதத்தன், மறு பாதி ஆடையைத் திருடிச் சென்றுவிடுகிறான். கண் விழித்த வர்த்தமானர் நடந்ததை உணர்ந்து, அன்று முதல் திகம்பரராக இருக்கத் தீர்மானித்தார். இதனால் இவரைப் பித்தன் என்று மக்கள் கல்லால் அடித்துத் துன்புறுத்தினார்கள். குந்தபுரத்தை அடைந்தபோது மனைவி யசோதை அவரைத் தேடிவர அவளுக்கு அறிவுரை வழங்கி அனுப்பி வைக்கிறார். தம்மை விழுங்க வந்த சண்ட கௌசிகன் என்ற பாம்பின் கர்வத்தை அடக்குகிறார்.


வர்த்தமானர் நாலந்தாவில் ஒரு நெசவாளியின் குடிசையில் தங்கியிருக்கும்போது கோமகவரர்கள் பலர் தங்களுக்கும் மெய்ஞ்ஞானம் சித்திக்கும்படி அருள்புரிய வேண்டினார்கள். இதைக் கண்ணுற்ற கோசாலன் என்பவன் தனக்கும் மெய்ஞ்ஞானம் சித்திக்கும்படி அருள்புரிய வேண்டுமென்று கேட்டுக் கொண்டான். லாட தேசத்துக்குப் போகும் வழியில் காட்டு மிராண்டி வேடர்களுக்கு அஹிம்சையைப் போதிக்க அதனால் கோபங்கொண்ட அவர்கள் வேட்டை நாயை இவர் மீது ஏவித் துன்புறுத்தினார்கள். புன்முறுவலோடு அவைகளைச் சகித்துக் கொள்ளவே வேடர்கள் வியந்து அவரிடம் மன்னிப்புக் கேட்டார்கள். தியானத்திலிருக்கும் வர்த்தமானரின் மன உறுதியைக் கலைக்க மாயைகள் முயன்று தோல்வி படைகின்றன. சீடன் கோசாலனுடன் சித்தார்த்தக் கிராமத்துக்குப் போகும்போது கானகத்தில் சில முனிவர்கள் கைகளை உயரத் தூக்கி நின்று சூரியனையே பார்த்தபடி கண் கொட்டாமல் தியானத்திலிருந்தார்கள். அவர்களுடைய உடல் முழுதும் பேன்கள் அடையாக அப்பிக் கொண்டிருந்தன. இதைக் கண்ட கோசாலன் கேலியாக, 'இவர்கள் ரிஷிகளா பேனடைகளா?' என்றான். இதைக் கேட்ட வேசாயனர் என்ற முனிவர் கடுங்கோபம் கொண்டார். அவனைத் தம் யோக சக்தியால் எரித்துவிடப் போனபோது வர்த்தமானர் தம் ஆத்ம சக்தியால் அதை அடக்கிக் கோசாலனைக் காத்து, வேசாயனருக்குக் கோபம் பொல்லாதது என்று போதித்தார்.


சௌனதார் என்ற பிராமணப் புரோகிதர்கள் பதினொரு பேர். அவர்களில் முக்கிய மாணவர் இந்திரபூதி. வேதம் விதித்த யாக யக்ஞங்களை வர்த்தமானர் கண்டிப்பதைக் கேட்டு ஆத்திரமடைந்து இவருடன் வாதிட்டு வெல்ல வந்தார்கள். ஆனால் வர்த்தமானர் அவர்களுடைய கேள்விகளுக்கெல்லாம் தக்க பதில் அளிக்கவே அந்தப் பதினொரு பேரும் தங்கள் நாலாயிரத்து இருநூறு சீடர்களுடன் மகாவீரரின் கொள்கையை ஏற்று சிரமணர்களாகின்றனர். சண்டமகாசேனன் என்னும் மன்னனுக்குச் சத்தியம், நேர்மை, அஹிம்சை இவைகளை உபதேசித்து வந்து நாட்டை அவன் முற்றுகையிடுவதிலிருந்து காப்பாற்றுகிறார்.
கருத்து வேற்றுமை காரணமாகப் பிரிந்து ஹடயோக சாதனைகளைக் கைவரப்பெற்ற கோசாலன் ஆஜீவக சம்பிரதாயத்தின் தலைவனாகி மகாவீரருக்கு எதிரியாக இருந்து வருகிறான். அவனுடைய சீடனான சித்தல புத்திரன் என்ற குயவன், மகாவீரரின் கொள்கைகளை ஏற்றுச் சமணனாகிறான். இதனால் கோப வெறிகொண்ட கோசாலன் மகாவீரர் தங்கி இருந்த கோஷ்டகம் என்ற கோயிலுக்குப் புறப்பட்டுப் போய் அவரைக் கண்டபடி ஏசிப் பேசி, மகாவீரரின் சிஷ்யர் இருவரைச் சுட்டெரித்து விடுகிறான். இதனால் வேதனையடைந்த மகாவீரர் வேசாயனரிடமிருந்து அவனை ஒரு நாள் காப்பாற்றியதை நினைவுபடுத்த அதனால் அவமானமடைந்த அவன் தன் சித்தி சக்தியால் அவரையே எரிக்க முயல அது முடியாமல் போகவே அவமானமடைந்து ஓடுகிறான்.



மகா வீரரின் கொள்கைகளை ஏற்றுப் பல மன்னர்கள் சமணர்களானார்கள். நாளுக்கு நாள் ஜைனர்களின் எண்ணிக்கை அதிகமாகிக் கொண்டு வந்தது. நாடு நகரங்கள் தோறும் சென்று மக்களின் துயர் துடைக்கத் தமது கொள்கைகளைப் பரப்பி வந்தார் மகாவீரர். தமக்கு எழுபத்திரண்டு வயதானபோது இவ்வுலகை நீத்து மகாநிர்வாணம் அடைய வேண்டிய தருணம் வந்துவிட்டதை உணர்ந்தார். தமது பிரதம சீடன் இந்திரபூதியை அழைத்துத் தாம் பிறந்த குந்தக் கிராமத்துக்குப் போய்ப் பிரசாரம் செய்து வருமாறு பணித்தார். அந்த நிலையில் அவரைப் பிரிந்து செல்ல மனமில்லாமல் கலங்கிய அவனுக்கு எதிலும் பற்று வைக்கக் கூடாதென்று உபதேசித்து அனுப்பினார். குந்தக் கிராமம் கிளம்பிய இந்திரபூதியின் மனம் சரியில்லை. அதற்கு ஏற்றாற் போல ஒரு சீடன் ஓடிவந்து மகாவீரரின் அந்திமக்காலம் நெருங்கிவிட்டதைக் கூறினான். திரும்ப நினைத்த அவன் மனத்தில் 'குருவின் கட்டளையை மீறலாமா?' என்ற கலக்கம் ஏற்பட்டது. ஊர் மதிலுக்கு வெளியே செய்வதறியாது உலாவலானான். இதை ஒரு சீடன் மூலம் அறிந்தார் மகாவீரர். பத்து நிமிஷம் கழித்து மற்றொருவன் வந்தபோது 'இந்திரபூதி என்ன செய்து கொண்டிருக்கிறான்?' என்று வினவினார் ஜினதேவர். இன்னும் அப்படியேதான் யோசனையில் ஆழ்ந்திருப்பதாகக் கூறினான் சீடன். இன்னும் கொஞ்ச நேரம் கழித்துக் கேட்ட போது, குந்தக் கிராமத்தை நோக்கிப் போய்க் கொண்டிருப்பதாகக் கூறினார்கள். ''இனி அவனைப் பற்றிக் கவலையில்லை. அவன் பற்றுக்களை உதறி விட்டான். அவனுக்குக் கேவல ஞானம் சித்தியாகி விட்டது'' என்றார் பரம திருப்தியோடு. பிறகு 'நல்லறிவு, நற்கொள்கை, நல்லொழுக்கம், நல்ல தவம் இவைகளிலிருந்து சிறிதும் வழுவாமல் நடந்து கொள்ளுங்கள்' என்று தம் சீடர்களுக்கு உபதேசித்தபடியே பூரண சமாதியில் ஆழ்ந்தார். மகா வீரர் மறைந்த செய்தி கேட்டு தேச தேசத்து மக்களும் மன்னர்களும் கடைசி முறையாக மகா வீரரைக் காண வந்து கூடினார்கள். மகா வீரரின் சடலத்தைக் குளிப்பாட்டி, சந்தனக் கட்டைகள் அடுக்கிய சிதையில் வைத்துத் தீமூட்டினார்கள். மகா வீரர் மகா நிர்வாண நிலையை அடைந்தது சாந்திரமான கார்த்திகை மாதம் அமாவாசையன்று. இன்றைக்கும் ஜைனர்கள் ஆண்டுதோறும் இந்நாளைத் தீபாவளியாகக் கொண்டாடுகிறார்கள்.

"நிசமாகச் சொல்கிறேன், ராஜா. நீ அழகாக இருக்கிறாய், பெண்களைப் போல். பட்டுப் போல இருக்கும் உன் கன்னங்களைக் கிள்ளிக் கிள்ளிக் காக்கவேண்டும் என்று தோன்றுகிறது......"

என் கன்னங்களைக் கிள்ளி உதடுகளை நெருடியவாறு என் அழகை வியந்து கொண்டிருந்தாள் மனோரமா.

நானோ வெட்கத்தால் ஒடுங்கிக்கொண் டிருந்தேன். வெப்பு முகம் வெட்கத்தால் மேலும் செம்மை கொள்ளும் என்பது உண்மையானால் அப்போது என் முகம் ரத்தச் சிவப்பாகி இருக்கலாம்; அவள் கிள்ளியதால் பட்டு ரோஜாவைப் போல் கருஞ் சிவப்பாகவும் ஆகி யிருக்கும்.

ஒரு சின்னப் பையனிடம் ஓர் இளம் பெண் பேசத் தகாத வார்த்தைகளை — அவன் கேட்கவும் தகாதவை — சொல்லுகிறாள் என்பதைப் போன்ற உணர்ச்சி ஒன்று எனக்குள் ரேகை விட்டது. ஆனால் அவள் கூறியதில் தகாத வார்த்தை எது எது என்பதைப் பாகுபாடு படுத்தி அறியும் வயதோ, அநுபவமோ எனக்கு இல்லை. ஆனால் அவள் பேசும் போது எனக்கு வெட்கமாக இருப்பினும், இனிமையாகத் தோன்றியது. அந்த இனிமை என் உடல் முழுவதும் சுமையாக இருந்திருக்க வேண்டும்; இல்லா விட்டால், எழுந்து போய் விட வேண்டும், போய் விட வேண்டும் என்று நினைத்துக் கொண்டே, இருந்த இடத்தை விட்டு அசையாமல் அங்கேயே நான் ஏன் உட்கார்ந்திருந்தேன் ?

என் நிலைமையை அவள் கவனித்ததாகத் தெரியவில்லை. ஏதாவது பேசிக்கொண்டே இருந்தாள்; கேட்டாள்: "உனக்கு என்ன வயசு?"

"எனக்கா?.... பதினாறு...."

"அவ்வளவுதானா? இதற்குள் ஆளை மயக்கும் வித்தை கற்று விட்டாயே!"

எனக்குப் புரிய வில்லை.

"நீ பெரியவனாக வளர்ந்த பிறகு, என்னை ஞாபகத்தில் வைத் திருப்பாயா?"

நான் தலையாட்டினேன்.

"எங்கே? சில நாள் பழக்கம்; ஊருக்குப் போனதும் மறந்து விடுவாய்!"

விவரம் விளங்காத ஓர் உணர்ச்சி அதை வெளியிடுவதற்குத் தேவையான மொழியோ எனக்குள் அப்போது உதயம் ஆகவில்லை.

"நான் கேட்டதுக்குப் பதில் சொல்லவில்லையே?"

"எனக்குத் தெரியாது. நீ அழகா இருக்கிறாய்; எனக்குக் கண் இல்லையா?"

"கண் இருந்தால் அழகைக் கண்டு பிடித்துவிட முடியுமா?"

இதுவும் எனக்குப் புரியவில்லை.



# என்ன அது?



## எம்.வி. வெங்கட்ராம்

நான் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, "இல்லை. மறக்க மாட் டேன்" என்றேன்.

"ஏன்?"

"நீ ரொம்ப அழகா யிருக்கிறாய்!"

"நானா? நிசமாகவா? அழகாகவா இருக்கிறேன்?"

அடக்க முடியாத சிரிப்பு ஒன்று என் மீது விழுந்து புரண்டு ஓய்ந்த பிறகு அவள் கேட்டாள்: "உனக்கு எப்படித் தெரிந்தது? பதினாறு வயசில் முப்பது வயசுப் பேச்சு பேசி விட்டாயே! நான் அழகு என்று உனக்கு எப்படிடா தெரிந்தது?"

உண்மையாகவே அவள் அழகுதான். எலுமிச்சம் பழம் போன்ற மேனியுடன் அதிகப் பருமனாகவோ, ஒல்லியாகவோ இல்லாமல் அவள் கச்சிதமாக இருந்தாள் என்பது மட்டும் அல்ல; நாளுக்கு ஒரு விதமாக உடுத்து அவள் ஒய்யாரமாக இருந்தாள் என்பது மட்டும் அல்ல; அவள் உடல் முழுவதும் ஆட்சி செய்த இளமையின் கோலாகலம் தான் என்னை அழகாய்க் கவர்ந்தது. இது உண்மை; எனினும்

"சரி, அது போகட்டும். நான் அழகாக இருக்கிறேன் என்பதற்காகவா என்னை மறக்காமலிருக்கப் போகிறாய்? நான் பிரியமாக இருந்ததற்காகக் கூட என்னை நினைவில் வைத்திருக்க மாட்டாயா?"

இது வேடிக்கையான கேள்வி இல்லையா? அழகா யிருப்பவர்களை மறக்க முடியுமா? ஆனால் அழகினால் அவள்மீது எனக்கு அன்பு ஏற்பட்டதா, அல்லது அன்பினால் அவள் அழகைக் கண்டேனா என்கிற முடிவு காண முடியாத தத்துவ விசாரம் செய்யும் அளவுக்கு என் மூளை முதிரவில்லையே!

வெள்ளை நகையுடன் மீண்டும் அவள் கூறினாள்: "உண்மையாக நீ ஆண்பிள்ளைதான். இன்னும் ஐந்து வருஷத்துக்குப் பிறகு என்னைப் பார்த்தால் என்னோடு இப்படிப் பேசுவாயா?"

அவளுடைய விழிகளை என்னால் பார்க்க முடிய வில்லை. தலை குனிந்தவாறு எழுந்தேன்.

"போகிறாயா?"

"உம்...."

"மறுபடி எப்போது வருவாய்?"

"இனி இங்கே வரவே மாட்டேன்."

எழுந்து என்னைப் பிடிக்க வந்த அவளிடம் பிடிபடாமல் நான் வெளியே ஓடிவந்து விட்டேன்.

அப்போது எனக்குப் பதினைந்து வயதுதான். நாலாவது 'பாரம்' படித்துக் கொண்டிருந்தேன். ஆண் என்றால், வேட்டி கட்டும் பிராணி, பெண் என்றால் சேலை உடுத்தும் ஜீவன் என்ற அளவுக்குத்தான் என் அறிவு முதிர்ந்திருந்தது. வீட்டுக்கு ஒரே பிள்ளையான நான் தங்கை, தமக்கை, தாய் என்பது போன்ற பெண் வாடையில் வளர்ந்தது அதற்கு ஒரு காரணமாக இருக்கலாம். 'பெண் மாறுபட்டவள்' என்ற பிரக்ஞை எனக்குள் புதையவில்லை.

எனக்குக் கோடை விடுமுறையின்போது என் தாயின் சிநேகிதி ஒருத்தியின் – அவள் பெயர் நாகமணி–மகனுக்குச் சித்தக் கோளாறு உண்டாகிவிட்டது; வைத்தியம். நாலு குழந்தைகளின் தாய்; எவ்வளவோ வைத்தியம் செய்தும் அவனுக்குக் குணமாகவில்லை. இறுதியில் எங்கள் ஊருக்குப் பக்கத்தில் உள்ள திருவிடைமருதூர் மகாலிங்கேசுவரரின் ஆலயத்தை ஒரு மண்டலம் பிரதட்சிணம் செய்தால் பித்தம் தெளியும் என்று யாரோ



கூறியதன்பேரில் பித்தனை அங்கே அழைத்துச் சென்றாள் அவன் தாய். அவர்களைப் பார்த்து வருவதற்கு என் தாயார் கிளம்பியதும் நானும் உடன் புறப்பட்டேன்.

ஊருக்குச் சமீபம் என்றாலும் திருவிடைமருதூர் எங்களுக்குப் புதிதுதான். நாகமணி சிறிய வீடு ஒன்றை வாடகைக்கு அமர்த்திக் கொண்டிருந்தாள். அங்கேயே நாங்களும் தங்கினோம். வைத்தியத்தின் கால்களுக்குப் பெரிய விலங்கு பூட்டியிருந்தது. அதைச் சுமந்து கொண்டு அட்டகாசமாய் அவன் கோயிலை வலம் வருவான். நாகமணி அவன் பின்னால் ஒரு சவுக்குடன் மிரட்டிக்கொண்டே செல்வாள். ஆனால் என் தாயார் அங்கே போன மறு நாளே கால் விலங்குகளைக் கழற்றச் செய்தாள். வைத்தியத்துக்கு என்னவோ என் தாயிடம் ஒரு வைத்தியக்காரப் பயம். அவள் மேல் பார்வையில் கொஞ்சம் அடங்கி நடந்தான். ஆனாலும் அம்மா சற்று அயர்ந்தால் போதும், கடையில் விற்கும் வாழைப் பழம், தேங்காய், பட்டாணி முதலியவற்றை எடுத்து வாயில் திணித்துக் கொண்டு விடுவான். கடைக்காரர்கள் சண்டைக்கு வந்தால், அம்மா காசு கொடுத்துச் சமாதானம் செய்வாள். எனக்கு இவையெல்லாம் வேடிக்கையாக இருந்தன.

ஒரு நாள் மத்தியானம் படுத்திருந்தேன்; அம்மாவும், நாகமணியும் ஏதோ பேசிக் கொண்டிருந்தனர்; பித்தி எங்கோ வெளியில் ஓடிவிட்டான். எனக்கு அரை குறையாகத் தூக்கம் வரும் சமயம்; அவன் 'ஹோ' வென்று இரைந்து கொண்டே ஓடி வந்தான். கண் விழித்துப் பார்த்தேன். கையில் வைர மோதிரம் ஒன்றை வைத்திருந்தான்.

"இது எப்படிக் கிடைத்தது?" என்றாள் அம்மா.

"எங்கிருந்து எடுத்து வந்தாய்? சொல்கிறாயா, இல்லையா?" என்று அதட்டினாள் நாகமணி.

"என்னுடையதுதான். என்னிடம் மோதிரம் இல்லையா? வைரம் வைத்துக்கொண்டு வாழவில்லையா? நான் ஆண்டியின் பெண்டாட்டியா?" என்று பெருங் குரலில் சிரித்தான் வைத்தியம், மோதிரத்தை விரலில் மாட்டி அழகு பார்த்துக்கொண்டே.

"உன்னாலே எனக்குத் திருட்டுப் பட்டம் வேறு?" என்றவாறு சவுக்கை எடுத்தாள் நாகமணி.

பித்தி என் தாயிடம் முறையிட்டான்: "மோதிரம் என்னுடையதுதான். இவள் என்னை ஏன் அடிக்க வருகிறாள்?"

அவன் அழத் தொடங்கினான். அம்மா தடுப்பதற்குள் சவுக்கு அவனை ஒரு முறை விளாசிக் கொண்டது.

"வீணாக அவனை ஏன் அடிக்கிறீர்கள்? புத்தி சுவாதீனம் இருந்தால் எடுப்பானா?" புதிய குரலைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தோம். வாசலில் ஓர் அழகான பெண் நின்று கொண்டிருந்தாள். அவளை அது வரை நான் பார்த்ததில்லை.

"நான் குளிப்பதற்காக எடுத்துவைத்தேன். இவன் வந்ததை நான் கவனிக்கவில்லை. எடுத்துவிட்டான்."

நாகமணி அமைதியுற்று மோதிரத்தை வந்தவளிடம் கொடுத்தாள்.

"யார் அம்மா நீ?" என்று விசாரித்தாள் அம்மா.

"பக்கத்து வீட்டில் இருக்கிறேன்."

"உட்கார் அம்மா!" என்று உபசரித்தாள் அம்மா. அந்தப் பெண்ணும் உட்கார்ந்தாள்.

"பக்கத்து வீடு என்கிறாய்; நான் பார்க்கவே இல்லையே?"

"உங்களுக்குத்தான் தலைக்கு மேலே கவலை இருக்கிறதே!"

"இவனுக்கு விலங்கு மாட்டுகிறேன்" என்று சொல்லி மகனை உள்ளே இழுத்துச் சென்றாள் நாகமணி.

"உன் பெயர் என்ன?"

"மனோரமா."

"சொந்த ஊர் இது தானா? குழந்தைகுட்டிகள் உண்டா?"



''இது சொந்த ஊர் இல்லே. சம்மாத்தான் வந்தேன்.''

''உன் புருஷனுக்கு என்ன வேலே?''

மனோரமா பதில் சொல்லாமல் கேட்டாள். ''உங்களுக்கு இந்தப் பைத்தியம் உறவா?''

''இல்லே; வேண்டியவர்கள். நாகமணிக்கும் எனக்கும் அடிநாளிலிருந்தே சிநேகம். இருக்கச் சொல்லித் தொந்தரவு செய்கிறாள். இந்த ஊர் எனக்குப் புதுசு. கொஞ்ச நேரம் பேசக்கூட யாரும் இல்லே.''

''என் வீட்டுக்கு வாருங்களேன். மாலே வருகிறீர்களா?''

''வருகிறேன்.'' என்று அம்மா சொன்னதும் அவள் எழுந்தாள்.

என் செவிகளைவிடக் கூர்மைபெற்றிருந்தன என் விழிகள். அவள் பேசியது எதுவும் என் காதுகளில் விழவில்லே. அவள் என்னே நோக்கும் போதெல்லாம் என் உடல் கூசியது.

அம்மா நாகமணியிடம் கேட்டாள்: ''யார் இந்தப் பெண்? உனக்குத் தெரியுமா ?''

''இவளா?.... வைத்தீசுவரன் கோயிலாம். தேவதாசி என்கிறார்கள்.''

''நிசமாகவா?''

''அப்படித்தான் சொல்கிறார்கள்.''

''புருஷனுக்கு என்ன வேலே என்று கேட்டேன்; அது தான் அவள் பதில் சொல்லவில்லே போல் இருக்கிறது. யாரா யிருந்தால் என்ன? ஒழியும்போது பேசுவதற்குத் துணை கிடைத்தது. பார்ப்பதற்குக் குடும்பப் பெண்போலவே இருக்கிறாளே!''

எனக்கு மிகவும் வியப்பாக இருந்தது. தாசியா? அது ரொம்பக் கெட்டவார்த்தை அல்லவா? அப்படியானால் மனோரமா கெட்டவளா? இத்தனே அழகாக இருப்பவள் கெட்டவளாக இருக்க முடியுமா? நாகமணி மீது எனக்கு நம்பிக்கை ஏற்படவில்லே. வேண்டுமென்றே பொய் சொல்கிறாள் என்று நினைத்தேன்; எதற்கும் மாலேயில் அம்மாவுடன் போனால் எல்லாம் தெரிந்து விடுகிறது என்று தீர்மானம் செய்து கொண்டேன்.

மாலேயில் அம்மா மனோரமாவின் வீட்டுக்குக் கிளம்பியபோது நானும் பின் தொடர்ந்தேன்.

''அங்கே எல்லாம் நீ வரக் கூடாது'' என்றாள் அம்மா.

''நீ மாத்திரம் போகலாம். நான் போகக் கூடாதா?''

அதை நினைத்தால் இப்போது சிரிப்பு வருகிறது. என் தாயார் ஸ்திரீ என்பதுடன் வயதானவள்; ஆகையால் மனோரமாவுடன் தனித்துப் பேசலாம். எதுவானாலும் நான் ஆண் மகன்தானே? ஒரு யுவதியை அதுவும் ஒரு வேசியைக் கண்டு பேச அவள் எனக்கு அனுமதி மறுத்ததில் ஆச்சரியம் இல்லே.

அப்போது, எனக்கு என்னவோ ஆச்சரியமாகத் தான் இருந்தது: அம்மாவின் முன்னுரிமையைப் பற்றி நின்றேன்.

என் பிடிவாதத்தைக் கண்டு அம்மாவுக்குச் சிரிப்புத்தான் வந்தது: ''நீ எப்போதுதான் ஆண்பிள்ளே ஆகப் போகிறாயோ! எந்நேரமும் பெண்களோடு சுற்றுகிறாயே, உனக்கு வெட்கமாக இல்லையா...?''

உண்மையாக அவளுக்குந்தான் புரியவில்லே; என் பௌருஷம் தான் அந்தப் புதியவளேப் பார்க்க என்னேத் தூண்டிக் கொண்டிருந்தது என்பதை அவளும் அறியவில்லே.

இருவரும் பக்கத்து வீட்டுக்குப் போனோம். வீடு பெரிதா யிருந்தது. மூன்று பகுதிகள். முதல் பகுதியில் சுவர்மீது கண்ணன் கோபியருடன் ராஸக்கிரீடை செய்யும் பெரிய சித்திரம் ஒன்று இருந்தது; இரண்டாவது பகுதியின் ஒரு கோடியில் இரண்டு கட்டில்கள், பெரிய மெத்தைகள், பல தலையணைகள், மூன்றாம் பகுதியில் விஸ்தாரமான அறை, சமையல் அறை. அங்கே இருந்த மனோரமாவிடம் எங்களே அழைத்துச் சென்றாள் வேலேக்காரி.

''வாருங்கள்'' என்று கலகலப்பாக வரவேற்றாள் மனோரமா. அம்மாவும் நானும் உட்கார்ந்தோம். இரண்டு கிளாஸ்களில் காப்பி கொண்டு வந்தாள் மனோரமா.

''நான் சாப்பிட்டுவிட்டேன்'' என்றாள் அம்மா.

''வெறும் காப்பிதானே?''

அம்மாவுக்கு அவள் வீட்டில் சாப்பிட விருப்பம் இல்லே என்று அறிந்தேன். மனோரமாவும் அதைப் புரிந்து கொண்டாள் போலும்! அதற்காக அவள் வருத்தம் அடைந்தவளாய்க் காட்டிக்கொள்ளவில்லே. சிரித்துக் கொண்டே ''பாலுக்கும் ஜலத்துக்கும் தோஷம் இல்லே என்பார்களே!'' என்றாள்.

அவளேப் புண்படுத்த அம்மாவும் விரும்பவில்லே. கிளாஸை என்னிடம் நீட்டி, ''ராஜா, நீ சாப்பிடு'' என்றாள்.

அம்மா சாப்பிடாததை ஏற்க நானும் விரும்பாததால் அதை எடுத்துக் கொள்ளவில்லே.

வறளாத சிரிப்புடன் மனோரமா சொன்னாள்: ''நீ சாப்பிடலாம். பெரியவர்களுக்குத்தானே இந்த வித்தியாசம் எல்லாம்?''

வேண்டாம் என்று மனம் முடிவு செய்வதற்குள் என் :ரங்கள் காப்பியை வாங்கி வாயில் ஊற்றி விட்டன.

''ராஜா உங்கள் பையன்தானே?''

''ஆமாம்.''

''எந்தக் கிளாஸ் படிக்கிறாய் ராஜா?''

நான் மகிழ்ச்சியுடன் சொன்னேன்: '' நாலாவது பாரம்.''

''தேவலேயே.... எட்டாவது ஹென்றியைப் பற்றித் தெரியும் அல்லவா?''

அவளுடைய கேள்வி எனக்கு ஒருவகையில் ஆச்சரியத்தை அளித்தது. இவளுக்கு எங்கள் வகுப்புப் பாடம் எப்படித் தெரிந்தது? படித்தவளா, அப்படியானால்? படித்துமா கெட்டவள்?... மற்றொரு வகையில் எனக்குக் கோபமும் உண்டாயிற்று. இவள் யார்? என்னேக் கேள்வி கேட்க?

''தெரியாமல் என்ன ?'' என்றேன் அலட்சியமாக.

''அவனுக்கும் [போப்பாண்டவருக்கும் ஏன் தகராறு உண்டாயிற்று?''

இக்கேள்வியை வகுப்பில்' நாலு' முறை வாத்தியார் கேட்டிருக்கிறார்;' ஒப்பித்தேன்: '' அவன் தன்னுடைய முதல் மனைவியை ஒதுக்கி விட்டு, இரண்டாம் தாரமாக ஆனிபோலீன் என்பவளே மணக்க விரும்பினான். அதற்குப் போப்பாண்டவர் அனுமதி அளிக்க வில்லே. ஆகையால் இருவருக்கும் சச்சரவு உண்டாயிற்று.''

''பேஷ்'' என்று' பாராட்டினாள் அவள்: ''ஆனே அவன் மணம் புரிய விரும்பியது ஏன்?''

இந்தக் கேள்வியைப் பரீட்சையில் யாரும் கேட்டதில்லே. மௌனம் சாதித்தேன் 'நான்.



"தெரிய வில்லையா? ஆள் மிகவும் அழகாக இருந்தாள்; அதனால்தான். புஸ்தகத்தில் இருக்கிறதே, கவனிக்க வில்லையா?"

இந்தச் சின்ன விஷயத்தை மறந்து அவளுக்குப் பதில் கூற முடியாமற் போனதற்காக நான் வெட்க மடைந்தேன்.

பிறகு அம்மாவும் அவளும் வெகு நேரம்வரை ஏதேதோ பேசிக் கொண்டிருந்தனர். இருட்டும் சமயம் அவள் எழுந்து விளக்கு ஏற்றினாள். வாசலில் நிலையை மாடத்தில் ஓர் அகல் விளக்கு, சமையல் அறைக்குள் இருந்த பூஜை அறை ராதாகிருஷ்ணன் படத்துக்கு முன் ஒரு பெரிய குத்து விளக்கு; பிறகு நாங்கள் இருந்த இடத்தில் ஒரு 'பவர் லைட்'. இவ்வளவையும் ஏற்றினாள்.

விடைபெற்றுக் கொண்டு அம்மா எழுந்த போது இருவரும் வெகு நாள் பழகியவர்கள் போல் ஆகிவிட்டனர். சுமுகமாகப் பேசுகிற இருவர் நெருங்குவதில் ஆச்சரியம் என்ன?

"ஒழியும் போது உங்கள் வீடு போல் நினைத்துக் கொண்டு வாருங்கள்."

"கட்டாயம் வருகிறேன்; நாள் முழுவதும் வைத்தியத்துடன் அல்லல்பட யாரால் முடியும்?"

என் தோளை அழுத்திக் கொண்டே மனோரமா கேட்டாள்: 'ராஜா, நீயும் வருகிறாயா?"

கர ஸ்பரிசத்தை எதிர்பாராத நான் 'உம்' என்று தெளித்தபடி அம்மாவையும் கடந்து வெளிச் சென்றேன்.

வீடு திரும்பிய பிறகும் அவளைப் பற்றியே நாகமணியிடம் பேசிக் கொண்டிருந்தாள் அம்மா.

"நாகமணி, அந்தப் பெண் வீட்டை எவ்வளவு சுத்தமாக வைத்திருக்கிறாள் தெரியுமா? அவளைப் பற்றி உனக்கு ஒன்றும் தெரியாதா?"

"இந்தப் பைத்தியத்தை ஆள்வதற்கே பொழுது போதவில்லை; ஊர் வம்பு பேச எனக்கு ஏது நேரம்?"

"ரொம்ப நல்ல பெண். பூர்வ ஜன்மத்து வினை என்கிறார்களே, ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. இவ்வளவு நல்ல பெண் இந்தக் குலத்தில் பிறந்தாளே!"

"ஏன் பிறந்தாள் என்று அவளையே கேட்பதுதானே?"

"என்னிடம் பேசிய வரை, அவள் கேவலம் இல்லை. நிறையப் படித்திருக்கிறாள்."

"பத்தரை மாற்றுத் தங்கம்தான் போ!" என்று பரிகசித்தாள் நாகமணி.

வெள்ளிக் கிழமைகூட வாயிலில் தீபம் ஏற்றச் சொல்லும் நாகமணி மனோரமாவைக் குறை கூறுவது எனக்குச் சிறிதும் பிடிக்கவில்லை.

அப்புறம் அம்மாவும் நானும் அடிக்கடி பக்கத்து வீட்டுக்குப் போனோம். மனோவினுடைய தாராள பாவத்தால் என் சங்கோசம் வெகு எளிதாக மறைந்தது. நான் அவளுடன் சகஜமாகப் பழகத் தொடங்கினேன். கொஞ்சநேரம் நான் போகா விட்டால் வேலைக்காரியை அனுப்பி விடுவாள். முதல் நாள் அவள் கொடுத்த காப்பியைச் சாப்பிட்டேனாயினும் அவள் வீட்டில் சோறு சாப்பிடக் கூடாது என்று அம்மாவின் கண்டிப்பான கட்டளை. ஆனால் நான் தனியாகப் போகும் போதெல்லாம் மனோ ஏதாவது உண்பதற்குத் தருவாள். நான் ஏற்க மறுத்தால், விளையாட்டாகப் பேச்சுக் கொடுத்து, நான் வாய் திறக்கும் சமயம் பார்த்துத் திணித்து விடுவாள். வலுக் கட்டாயமாக ஊட்டி விட்டாள் என்பதற்காக நான் எதையும் துப்பியதில்லை.

"நான் கொடுத்ததைச் சாப்பிட்டு விட்டாய் அல்லவா? இரு, இரு. அம்மாவிடம் சொல்கிறேன்" என்று அவள் அச்சுறுத்துவாள். நான் பயப்படுவேன். சில சமயம் கண்களில் ஜலம் வரும் வரை பயமுறுத்துவாள். ஆனால் அவளை விட்டு வரும்போது மகிழ்ச்சியாகவே இருப்பேன். சிரிப்பும் விளையாட்டும் அவள் உடன் பிறந்த தன்மைகள்.

இவ்வளவு நெருங்கியும் அவள் எனக்கு ஓர் அதிசயமாகவே இருந்தாள். அவளுடைய சிரிப்பு மட்டும் அல்ல, உடையும் ஓர் அதிசயம். ஒவ்வொரு நாளும் அவள் புதுப் புதுக்கோலத்தில் தோன்றுவாள். ஒரு நாள் சாதாரணமாக மற்றப் பெண்களைப் போல் புடவை கட்டியிருப்பாள்; மறு நாள் முஸ்லிம் மாதரைப் போல் முக்காடு; மூன்றாவது நாள் பாவாடையும் மேலாக்கும்; வங்காளி பஞ்சாபி பெண்களைப் போல — பல விதமாய் உடுத்துக் கொள்வாள். எந்த ஆடையும் அவளுக்குப் பொருத்தமாக இருந்தது.

என் தாயார் எப்போதாவது புதுப் புடவையும் நகைகளும் அணிந்தால் — நானும் என் தங்கை தமக்கைகளும் அவளைப் பரிகசிப்போம்: "கிழடு தட்டியும் ஆசை குறைய வில்லையே!" என்று.

"எல்லாம் உங்கள் அப்பாவுக்காகத் தான்" என்பாள் அம்மா சிரித்துக் கொண்டே.

'ஆனால் மனோரமா யாருக்காக இவ்வளவு அலங்காரம் செய்து கொள்கிறாள்?' ஒரு நாள் அம்மாவிடம் கேட்டேன்.

"அவள் அப்படித்தான் இருப்பாள்' என்றாள் அம்மா.

"அவளுக்குப் புருஷனே இல்லையா, அம்மா?"

"சீ, கேள்வியைப் பாரு! தாசி என்றும் புருஷன் இருப்பானா?"

அம்மாவின் பதில் எனக்குத் திருப்தி அளிக்க வில்லை. அன்றே மனோவிடம் கேட்டு விட்டேன்: "உனக்குப் புருஷனே இல்லையா, மனோ?"

"இல்லை என்று யார் சொன்னது?"

"அம்மா சொன்னாளே."

"அவர்களுக்கு எப்படித் தெரியும்?"

"புருஷன் இருந்தால் இங்கே காணோமே?"

"கடவுள் உன் கண்ணுக்குத் தெரிகிறாரா?" என்றாள் அவள் வழக்கம் போல் நகைத்தவண்ணம்.

"உன் கணவர் கடவுளைப் போல் மாயாவியா? எங்கும் நிறைந்தவரா, எல்லாம் வல்லவரா?"

"ஆமாமடா, ஆமாம்!"

இதை நம்புவதற்கு நான் சிறு குழந்தையும் அல்லவே? அவள் கூறியதைக் கொண்டே கேட்டேன்: "அவருக்காகவா நீ நாளுக்கொரு அலங்காரம் செய்து கொள்கிறாய்? துணி வாங்குவதற்கு அவர் பணம் தருகிறாரா? கண்ணுக்குத் தெரியாமல் அவர் எப்படிப் பணம் தருவார்? அவர் வருவது போவது எல்லாம் உனக்கு எப்படித் தெரியும்?" என்று சாமர்த்தியமான கேள்விகளாய் அடுக்கினேன்; அவைகளுக்கு அவளால் பதில் கூற முடியாது என்றும் நம்பினேன்.

"பைத்தியக்காரப் பிள்ளை! உன் வயதில் இந்தக் காலத்துப் பிள்ளைகள் எப்படி இருக்கிறார்கள்? நீ வெறும் அசடு!" என்றாள்.

"நீதானே உன் கணவர் கடவுளைப் போல மாயாவி என்றாய்?"

"சரி, எலிசபெத் மகாராணியைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறாயா?" என்று ஆரம்பித்துக் கன்னி ராணி எலிஸபெத், ருஷ்யாவை ஆட்டிப்படைத்த காதரைன் ஆகியவர்களின் வாழ்க்கையைப் பற்றி எல்லாம் கூறியவள், மேலும் கதை கதையாகச் சொன்னாள். அரசர்களையும், அரசிகளையும் பற்றி, அவர்களுடைய குடும்ப வாழ்க்கையின் கோலாகலங்கள் பற்றி வர்ணித்தாள். துலவிக்கும் அரண்மனைகளில் வாழ்ந்து வைரமாகவே உடலை இழைத்துக் கொண்டிருந்த பிரான்ஸ் தேசத்து ராணிகளைப் பற்றி; முகலாய



பாதுஷாக்களின் 'ஜனானா'க்களைப் பற்றி; இந்து சிற்றரசர்களின் அந்தப்புர வாழ்க்கை பற்றி.

எல்லாவற்றையும் கேட்ட நான் திகைப்படைந்தேன். இப்படியும் இருப்பார்களா பெண்கள்? ராமாயணம், மகாபாரதம், நள சரித்திரம் முதலியவற்றைப் பாராயணம் செய்யும் சூழ்நிலையில் நான் வளர்ந்தவன். சீதை, கண்ணகி, தமயந்தி, அருந்ததி முதலிய பதிவிரதைகளைப் பற்றி அறிவேன். மனோரமா கூறியது போன்ற கதைகளை நான் கேட்டதே இல்லை. பதிவிரதை என்ற சொல்லின் மெய்ப் பொருள் அறியேன். எனினும் அவர்களைத் தெய்வமாகவே வணங்கினேன். அவர்கள் தம் கணவரைத் தவிர வேறு ஆடவரைத் தலையெடுத்தும் பார்க்க மாட்டார்கள் என்பதும் தெரியும். ஆகையால் மனோரமா சொன்ன கதைகளின் பாத்திரங்களான காதரைன் முதலியோர் மீது எனக்கு வெறுப்பும் கதை சொன்னவள் மீது சினமும் உண்டாயிற்று.

''சை! இந்த மாதிரிக் கதை சொல்வதற்காகவா என்னை அழைத்தாய்? அம்மாவிடம் சொல்கிறேன்!''

''டேய், வேண்டாம், சொல்லாதே. அப்புறம் உன்னை இங்கே அனுப்பவே மாட்டார்கள். வேடிக்கையாகக் கதை சொன்னால் இவ்வளவு கோபித்துக் கொள்கிறாயே!''

அவள் கொடுத்ததைச் சாப்பிடுவதற்காக அம்மாவிடம் சொல்வதாக என்னை அவள் மிரட்டுவாள் அல்லவா? அவளை மிரட்ட நான் இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டேன்.

''இந்த மாதிரிக் கதை இனி சொல்லாதே! இல்லை என்று சொல்லு!''

''இல்லை, இல்லை, இல்லை'' என்றாள் மும்முறை.

பதினைந்து இருபது நாட்களில் அவளும் நானும் பல நாள் பழகியவர்கள் போல் ஆகிவிட்டோம். ஒரு விஷயம் மாத்திரம் நான் நிச்சயம் கூற முடியும். சகோதர உணர்ச்சி என்கிறார்களே அந்த மாதிரிப் பாசம் ஒன்றும் எனக்கு ஏற்படவில்லை. அவளுடைய உடலழகு, உடையழகு, சொல்லழகு இவைகளால் கவரப்பட்டுத்தான் நான் அவளை நாடி அடிக்கடி சென்று கொண்டிருந்தேன்.

அந்த உணர்ச்சியை வெளியிடும் அநுபவமோ, ஆற்றலோ வயதோ எனக்கு வரவில்லை என்பதைத்தான் தொடக்கத்தில் கூறினேன். அவளிடமும் அதைத்தான் 'நீ அழகு; ஆகையால் மறக்க மாட்டேன்' என்று வலுவற்ற பாஷையில் மொழிந்தேன். அதற்காகத்தான் அவளுடைய ஏளனத்துக்கும் இலக்கு ஆனேன். அவளுடைய பார்வையின் இனிமைச் சுமையைத் தாள மாட்டாமல், ''இனி இங்கே வரமாட்டேன்'' என்று ஓடிச் சென்றேன்.

ஆனால் அன்று இரவே அவள் வீட்டில் நான் அடைக்கலம் புக வேண்டிய அவசியம் ஏற்பட்டது.

அன்று மாலையிலிருந்தே ஆகாசத்தில் மேக மூட்டம் கண்டது. ராத்திரி நாங்கள் படுக்கு முன்பே பலமாக மழை பெய்யத் தொடங்கியது. வீடு சிறியது. கூரை கிடுகு; வீடு முழுவதும் ஈரம் ஆகிவிட்டது. ஓர் அறையில் மாத்திரம் ஒழுகல் இல்லை. அம்மாவும் நானும் அங்கே படுத்துக்கொண்டோம். பைத்தியமும் நாகமணியும் சாரலில் ஒடுங்கியிருந்தனர்.

நிசி இருக்கும். என் மீது திடீரென்று அருவி போல் ஜலம் கொட்டுவதை உணர்ந்து எழுந்தேன். அம்மாவும் எழுந்தாள். கூரைதான் பிய்த்துவிட்டது என்று முதலில் எண்ணினோம். ஆனால் இல்லை. வெளியில் இருந்து பைத்தியக்காரி நீரை வாரி அறைக்குள் இறைத்துக் கொண்டிருந்தாள்.

அம்மாவுக்குக்கூடக் கோபம் வந்துவிட்டது. அங்கிருந்த சவுக்கால் பித்தியை அடிக்கலானாள்.

இவர்களின் கும்மாளத்தால் பைத்தியத்துக்குக் குதூகலம் உண்டாயிற்று போலும். அம்மாவையும் அடியையும் லட்சியம் செய்யாமல் ஆபாசமான பாட்டு ஒன்றை உரத்துப் பாடிக்கொண்டே அறை முழுவதையும் தெப்பம் ஆக்கிவிட்டாள். அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்த நாகமணி சத்தம் கேட்டு விழித்து, சவுக்கினால் பலமாக விசாரித்த பிறகுதான் அந்தப் பைத்தியம் அடங்கிற்று.

அடங்கி என்ன செய்ய? அறையில் படுக்க முடியாது. பாதி இரவு கழிய வேண்டுமே! அம்மாவின் முகம் கன்றிவிட்டது. வீட்டுச் சுவர்களின் பாதுகாப்பில் சுகமாகக் காலம் கழித்துவிட்ட அவளுக்கு மிகவும் சங்கடமாக இருந்தது. எனக்கும்தான். ''மனோரமாவின் வீட்டுக்குப் போனால் என்ன?'' என்றேன்.

''அங்கேயா?'' என்று கொஞ்சம் தயங்கினாள் அம்மா. வேறு வழியில்லாது தான் ஒப்புக்கொண்டாள். இருவரும் பக்கத்து வீட்டுக்கு ஓடினோம்.

மழையின் கோரமான கூக்குரலில் அவளை எழுப்புவது கஷ்டமாகத்தான் இருந்தது. வெகு நேரம் கதவைத் தட்டிய பின் கையில் ஒரு அரிக்கேன் லைட்டுடன் மனோரமா கதவைத் திறந்தாள். அந்நேரத்திலும் பூமணமும், புனுகு மணமும் 'குப்'பென்று என் நாசியைத் தழுவின.

அம்மா சுருக்கமாக விஷயத்தைத் தெரிவித்தாள்.

''அதனாலென்ன? இங்கே படுத்துக் கொள்ளுங்களேன்'' என்று வீட்டின் முன்கட்டைக் காட்டினாள். ''தலையணை தரட்டுமா?''

''வேண்டாம்; கட்டை ஒன்று கொடு, போதும்.''

''ராஜா, உனக்குத் தலையணை வேணுமா?''

கட்டை மீது தலை வைத்து அது வரை நான் படுத்ததில்லை.

''சரி, உனக்குத் தலையணை கொண்டு வருகிறேன்'' என்றவள் அம்மாவிடம் கட்டை ஒன்று கொடுத்துவிட்டு உள்ளே சென்றாள்.

சிறிது நேரம் பொறுத்தேன். தூக்கக் கலக்கத்துடன் குளிர் வேறு. மனோவிடம் ஒரு போர்வையும் கேட்கலாமென்று இருட்டில் தடவிக்கொண்டே உள்ளே போனேன்.

இரண்டாம் கட்டில் நான் கண்ட காட்சி என்னை ஓர் உலுக்கு உலுக்கிவிட்டது. கட்டில் மீது யாரோ ஒரு மனிதன்; மனோவின் வலது கையைப் பற்றியிருந்தான். இடது கையிலிருந்த படுக்கையறை விளக்கு கீழே விழாமல் சமாளித்தவாறு சிரித்தவண்ணம் அவனிடமிருந்து திமிறிக்கொண்டிருந்தாள் மனோ. என்னைக் கண்ட இருவரும் திகைத்துவிட்டனர்.

''யார் இந்தப் பையன்?'' என்றான் அந்த மனிதன், அவள் கையை விட்டுவிட்டு. அவள் கூறியது என் காதில் விழவில்லை. திரும்பிக் கொண்டிருந்த என்னை அவள் ஓடிவந்து பிடித்துக் கொண்டாள்.

''ஏண்டா இங்கே வந்தாய்? நான் தான் வருகிறேன் என்றேனே?''

அவள் மீது ஆத்திரமும் வெறுப்பும் கொண்டு மௌனமாக நின்றேன்.

''ராஜா, இங்கே யாரையும் பார்த்ததாய் அம்மாவிடம் சொல்லாதே'' என்றாள் கெஞ்சும் குரலில்.

அதற்கும் நான் பேசவில்லை. என் மோவாயைப் பிடித்துக் கூறினாள்: ''ராஜா சொல்வாயா? சொல்லாதே!''

வேண்டா வெறுப்புடன் 'இல்லை'' என்று தலையாட்டினேன். இரண்டு தலையணைகளுடன் அவளும் நானும் நடந்தோம்.



"கவலை இல்லாமல் தூங்குங்கள். இங்கே ஒழுகாது" என்று கூறிவிட்டு அவள் உள்ளே போய்விட்டாள்.

படுத்தவுடன் அம்மாவுக்குத் தூக்கம் வந்துவிட்டது. இருட்டில் நான் படுப்பதில்லை. ஆகையால் மனோரமா வெளிச்சம் வைத்திருந்தாள்.

அவள் கொடுத்த தலையணைகளும் அழகாயிருந்தன; வெள்ளை உறை; அதில் பூவேலை; சென்டின் பரிமளம்; அவள் தான் வாசனை உபயோகிக்கிறாள்; தலையடியில் கிடக்கப் போகும் இந்தத் தலையணைக்கு மணம் எதற்கு?

அந்தப் புதிய மனிதனின் தோற்றம் என்னைச் சஞ்சலப்படுத்தியது. யார் அவன்? எங்கிருந்து முளைத்தான் திடீரென்று? இதெல்லாம் எனக்கு விளங்கவில்லை. அவன் மீது அருவருப்பும் அவள் மீது வெறுப்பும் வளர்ந்தன. இனி நிச்சயமாக அவள் வீட்டுக்குள் நுழைவதில்லை என்று உறுதி செய்து கொண்டேன். சிறிது நேரத்தில் கண் அயர்ந்தேன்....

மறு நாள் வீடு கூட்டிக் கதவைத் தட்டியபோது வெளியே வந்துவிட்டோம். மழை நின்றுவிட்டது.

உறுதி செய்து கொண்டபடி நான் அவள் வீட்டுக்குப் போகவில்லை. வேலைக்காரி இரண்டு மூன்று தடவை வந்து அழைக்கவே, அம்மா என்னைப் போய் வரும்படி சொன்னாள். தெருவில் வந்ததும் வேலைக்காரியிடம் கேட்டேன். "அங்கே வேறு யாராவது...."

"யாரும் இல்லை."

"போய்; நேற்று யாரோ...."

"காலையில் போய்விட்டாரே."

"அவர் யார்? அவளுக்கு உறவா?"

வேலைக்காரி சிரித்தாள். "அவர் இந்த ஊரில் பெரிய மிராசுதார்."

"நான் அங்கே வரவில்லை."

"அம்மா உங்களுக்காகப் போளி செய்து வைத்துக் கொண்டு சாப்பிடாமல் காத்திருக்கிறார்கள்."

போளி என்றால் எனக்கு மிகவும் பிரியம். அந்த ஆசை ஒருபுறம் இழுக்கத் தயங்கிக் கொண்டே சென்றேன். மனோரமாவின் தோற்றத்தில் யாதொரு மாறுதலும் இல்லை; மலர்ச்சியாகவே இருந்தாள்.

என்னைக் கண்டதும், "அப்பா! கவர்னர் துரையைப் பேட்டி காண்பது போல் இருக்கிறதே!" என்றாள்.

என்னை அவள் அவ்வளவு மலிவாக நினைத்தது எனக்குப் பிடிக்கவில்லை. "நீ கூப்பிட்டவுடன் வந்துவிட வேண்டுமாக்கும்!"

"உனக்காக நான் காப்பி சாப்பிடாமல் காத்திருக்கிறேன், தெரியுமா?" சாப்பிடும்போதும் நான் பேசவில்லை. சாப்பிட்ட பிறகு அவள் கேட்டாள். "ராஜா, அம்மாவிடம் சொல்லவில்லையே?"

"சொன்னேன்" என்றேன் ஆத்திரமாய்.

"போய்! சொல்லியிருந்தால் நீ இங்கே வந்திருக்க முடியாதே!.... ராஜா, நீ இன்றைக்கு ஏன் சரியாக என்னுடன் பேசவில்லை?"

"நாங்கள் நாளைக்கு ஊருக்குப் போகிறோம்."

அந்தச் செய்தியை அவளுக்குத் தண்டனையாகவே கருதினேன். அவளும் எதிர்பார்க்கவில்லை.

"நிசமாகவா?" என்றவள் சிறிது சுழித்துக் கூறினாள்: "சரிதான், அப்புறம் உன்னைப் பார்க்கவே முடியாது!"

அவளுடைய குரலின் குழைவு என்னைக் கலவரப்படுத்தியது. என்னை இழுத்துப் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டாள்.

"இதற்குள் என்னடா அவசரம்?"

"இங்கே வந்து ஒரு மாதம் ஆகிறது. இரண்டு நாளில் எனக்குப் பள்ளிக்கூடம் திறக்கிறது. அப்பா ஆள் அனுப்பி விட்டார்."

"நீ போய்விட்டால் எனக்கு 'வெறிச்' என்று இருக்கும். நீ மறுபடி வர மாட்டாயா?"

என் கோபமும் வெறுப்பும் வருத்தமாக மாறின. "உனக்கு என்ன? நேற்று ராத்திரி வந்தாரே, அவருடன் பேசி விளையாடிக் கொண்டிருப்பாய். நான் போனால் குடி மூழ்கிவிடுமா?"

அவள் முகம் சிவந்தது. "அதற்கும் நீ போவதற்கும் என்னடா சம்பந்தம்? தலை கால் இல்லாமல் பேசுகிறாயே?"

"நான் போனால் வருத்தமாக இருக்கும் என்று பொய்தானே சொல்கிறாய்? அவரோடு நீ சிரித்துப் பேசவில்லையா?"

"சீச்சீ! பேச்சைப் பார்!" என்றாள் அவள்; முகத்தில் முறுவல் மீண்டது.

வழக்கத்துக்கு மாறாக அவள் நெடு நேரம் மௌனமாயிருந்தாள். என் தலையைக் கோதிய வண்ணம், "அந்த மனிதருடன் பேசியதற்காக என் மேல் உனக்குக் கோபமா?" என்றாள்.

நான் பதில் சொல்லவில்லை.

என் மனம் புண்பட்டுள்ள விதத்தை அவள் கண்டு கொண்டாள் போலும்.

"சரி, ராஜா, நான் வேறு யாருடனும் பேசவில்லை; சிரிக்கவில்லை. நீ என்னோடு இருந்து விடுகிறாயா?"

"அது எப்படி முடியும்?" என்றேன் சோர்வுடன்.

அவள் இவ்வளவு ஆழ்ந்த மூச்சு விட்டதை முதல் முறையாகக் கண்டேன்.

"நீ இன்னும் சிறு குழந்தை; உன்னைக் கடவுள் காப்பாற்றுவார்."

அவள் விசனத்துடன் பேசினாள். எனக்கும் வருத்தமாக இருந்தது. அவள் மீது உண்டான கோப தாபம் எல்லாம் பறந்து விட்டன. அன்று கன்னங்களிலும் உதடுகளிலும் ரத்தம் வந்து விடும் என்று அஞ்சிவிட்டேன்.

மறு நாள் காலையிலிருந்து அவளுடைய வீட்டிலேயே இருந்தேன். பிரியும் நேரம் நெருங்க நெருங்க எனக்கும் வருத்தம் உண்டாகத் தொடங்கியது. மத்தியானம் அவளோடு சாப்பிட்ட பின் இனி அவள் கொடுத்துச் சாப்பிட முடியாது என்னும் நினைவு துன்புறுத்தியது. பள்ளிக்கூடம், புஸ்தகம், வாத்தியார் முதலியவைகளை விட மனோரமா மிகவும் வசீகரமாயிருந்தாள் எனக்கு.

அவளிடம் விடைபெற்றுக்கொள்ள அம்மாவும் வந்தாள். வாசலில் வண்டி காத்திருந்தது.

"வரட்டுமா, மனோரமா?"

"ஊருக்குப் பக்கம்தானே? இதுவும் ஒரு க்ஷேத்திரம். விசேஷ தினத்தில் வாருங்களேன். வருவீர்களா? ராஜாவையும் அழைத்து வாருங்கள்."

"வருகிறேன். வந்தால் உன்னைப் பார்க்காமல் போவேனா?"

அம்மாவோ நானோ எதிர்பாராத காரியம் ஒன்றைச் செய்தாள் அவள். தன் கழுத்தில் அணிந்திருந்த செயினை எடுத்து என் கழுத்தில் போட்டாள். செயினில் 'லாக்கெட்' ஒன்று இருந்தது.

அம்மா என்ன சொல்லியும் அவள் அதைத் திரும்ப எடுத்துக் கொள்ளவில்லை. அம்மாவுக்குத் தர்மசங்கடமாயிருந்தது.

"ராஜா புத்திசாலி. என் பிரியத்துக்காகப் போட்டேன். என் ஞாபகம் உங்களுக்கு வேண்டாமா?"

"இந்தச் செயின் இல்லாமலே உன் ஞாபகம் இருக்கும்." — ஒரு மாதப் பழக்கத்துக்கு இவ்வளவு பெரிய ஞாபகார்த்தம் மனோரமா எழுப்புவதை அம்மாவினால் புரிந்து கொள்ள முடியவில்லை. எனக்கு மட்டும் புரிந்துவிடுமோ?

"எனக்கு என்னவோ இவன் மீது ஒரு பாசம் உண்டாகி விட்டது. நீங்கள் தடை செய்யக் கூடாது" என்று கூறிய மனோவின் கண்கள் கலங்குவதைக் கண்டேன்.

"எனக்கு இது நியாயம் என்று படவில்லை" என்று அம்மா மீண்டும் ஆட்சேபித்தாள்.

"பவுனிலுமா பாவம்ஒட்டியிருக்கும்?"

அவள் அழுதுவிடுவாள் என்று அஞ்சினேன். அம்மாவின் கண்களும் ஈரமுற்றதைக் கண்டேன். மேலும் தடை புரியாமல் அன்பளிப்பை ஏற்றாள். மனோவின் முகம் சிறிது மலர்ந்தது.

"நீங்களே பாருங்கள். இவன் கழுத்துக்கு இந்தச் சங்கிலி எவ்வளவு எடுப்பாக இருக்கிறது!"

அம்மா மகிழ்வுற்றாள். அவள் காலில் விழுந்து மனோ நமஸ்காரம் செய்தாள்.

"சுகமாயிரம்மா" என்று வாழ்த்தி அவளைத் தூக்கினாள் அம்மா. நாங்கள் வண்டியில் ஏறினோம்.

"இந்தப் பக்கம் வந்தால் என்னை மறந்து விடாதீர்கள். ராஜா, உனக்கும் தான் சொல்கிறேன்."

உண்மையாக அவள் அழுதுகொண்டிருந்தாள்!

நான் பலமாகத் தலையை ஆட்டினேன் என் கண்ணீரை மறைப்பதற்காக.

வண்டி தெருக் கோடி திரும்பியதும் மனோவின் உருவம் மறைந்தது.

"இவ்வளவு நல்ல பெண்; இவள் ஏன் இப்படி...." என்று சொல்லிக் கொண்டே அம்மா சங்கிலியிலிருக்கும் 'லாக்கெட்'டைத் திறந்தாள். மனோவின் நகைமுகம் அதில் படமாக இருந்தது.

ஃ ஃ ஃ

அப்போது நடந்ததைச் சொன்னேன். கலையான நிகழ்ச்சிகளாய் அவைகளை நினைத்துப் பார்க்கையில்— உலகம் அறியாத அச் சிறுவனுக்கும் விவரம் தெரிந்த அந்த யுவதிக்கும் இடையில் ஏற்பட்ட பாசத்தின் பிணைப்பு இருக்கிறதே, 'அது என்ன அது?' என்று இப்போதும் எனக்கு விளங்கவில்லைதான்.


BENGA



தீபாவளி வாழ்த்துக்கள்!

✳

பட்டுப் புடவைகள்,
பாவாடை துண்டுகள்,
சோளி பீஸ்கள்,
சில்க் & மில் ரக ஜவுளிகள்
விற்பனை செய்கிறோம்



# கரணை

## ஜவுளி மாளிகை

ராஜவீதி, கோயமுத்தூர்

போன்: 2881, தந்தி: 'KARANA'



தீபாவளி வாழ்த்துக்கள்!

✳

விவசாய சேவைக்கு
எங்கள் தயாரிப்புகள்

அமோனியம் ஸல்பேட் • சூபர்பாஸ்பேட்
ஃபாக்டம்ஃபோஸ்
(அமோனியம் பாஸ்பேட் 16-20)

✳

தொழில்துறை சேவைக்கு
எங்கள் தயாரிப்புகள்

அன்ஹைட்ரஸ் அமோனியா • ஸல்ப்யூரிக்
ஆஸிட் • ஸல்பர்-டை-ஆக்ஸைடு
அமோனியம் க்ளோரைடு

**FACT**

பெர்டிலைசர்ஸ் & கெமிகல்ஸ்
திருவிதாங்கூர் லிமிடெட்

ரிஜிஸ்டர்ட் ஆபீஸ்: ஏலூர்
உத்யோகமண்டல் P.O., கேரள ராஜ்யம்



# நிம்மதியாக

## வீட்டை விட்டுச் செல்ல




## பத்திரமாக வீட்டை பூட்டிச் செல்ல




# டி'லாக்

# பூட்டுகள் பூட்டமைப்புகள்



**அரசினர் பூட்டு நிலையம்**

**திண்டுக்கல்**





# தெரியுமா, தம்பி?

அழ. வள்ளியப்பா





நெட்டை யான காலுடனே
நீள மான கழுத்துடனே
சுட்டுப் பொசுக்கும் மணலில்கூடச்
சுமையைத் தூக்கிச் செல்லும்அது

என்ன தெரியுமா? — தம்பி
என்ன தெரியுமா?

முறத்தைப் போன்ற காதுடனே
முகத்தில் ஒற்றைக் கையுடனே
உரலைப் போன்ற காலுடனே
ஊர்வ லத்தில் வருமேஅது

என்ன தெரியுமா? — தம்பி
என்ன தெரியுமா?

பட்டுப் போன்ற உடலுடனே
பலவி தத்தில் இறகுடனே
கட்டை யான குரலுடனே
களித்தே நடனம் ஆடும்அது

என்ன தெரியுமா? — தம்பி
என்ன தெரியுமா?

வட்ட மான முகத்துடனே
வளைந்தி ருக்கும் மூக்குடனே
முட்டை போன்ற கண்ணுடனே
வேட்டை யாடும் இரவில்அது

என்ன தெரியுமா? — தம்பி
என்ன தெரியுமா?





◁ "மாமா! ஊரிலிருந்து வந்திருக்கேனே ஒரு கதைசொல்லுங்கள்!"

"என்ன கதை சொல்வது?"

"ஊரிலிருந்து வெறுங்கையோடு வந்த மாமா, குழந்தைகளைக் கடைவீதிக்கு அழைத்துப் போய் நிறைய பட்டாஸ் வாங்கிக் கொடுத்த கதை சொல்லுங்களேன்!"




டாக்டர்: சபாஷ், சபாஷ்! ▷ பார்த்தீரா, சின்னப் பயல் எப்படிப் படிக்கிறான்? இவ்வளவு வயசாச்சு உங்களுக்கு. இடக்கு தடுமாறுகிறீரே?






கிருஷ்ண பிரஸாத் சிங்காரவேலு உயர்நிலைப் பள்ளியில் பத்தாவது வகுப்பில் படிப்பவன். மிகவும் அடக்க சுபாவம் உள்ளவன். பள்ளிக்கூடத்தில் முதல் வகுப்பிலிருந்தே முதன்மையாகத் தேறி வருபவன். பள்ளிக்கூடத்து விடுதியிலேயே தங்கிப் படித்துக் கொண்டு வருபவன். தன் அறையில் இருக்கும்பொழுது கூட ஒருவருடனும் அவன் அவசியமில்லாமல் பேச மாட்டான். எப்பொழுதும் புத்தகமும் கையுமாக இருப்பான்.

ஒரு நாள் வகுப்புப் பாடம் நடந்து கொண்டிருக்கும் சமயம் கணக்கு ஆசிரியர் கறுப்புப் பலகையில் கணக்குப் போட்டுக் கொண்டிருந்தார். அப்பொழுது திடீரென்று பலகையில் ஏதோ கறுப்பான கைபோன்ற ஓர் உருவம் அவர் எழுதியிருந்த கணக்குகளை அழித்தது. கணக்கு உபாத்தியாயர் திரும்பிப் பார்த்தார்; திடுக்கிட்டார். ஒரு யானை அவரை நோக்கித் தும்பிக்கையை நீட்டிக் கொண்டிருந்தது. 'யானை யானை' என்று சொல்லிக் கொண்டே பயந்து பின்னால் நகர்ந்தார்; தடுக்கி நாற்காலியில் விழுந்தார். பையன்கள் அனைவரும், ''யானை யானை!'' என்று கத்தினார்கள்.

''சார், சார்! அந்த யானையோடு கிருஷ்ண பிரஸாத் தெருவில் நின்று கொண்டிருந்ததை நான் பார்த்தேன் சார்'' என்றான் ரவி.

''ஆமாம், சார்! அது கிருஷ்ண பிரஸாத்தைத் தேடிக் கொண்டுதான் வந்திருக்கிறது'' என்று ஒரே குரலில் மங்கேஷும், சிவராமும் சொன்னார்கள். கீழே விழுந்து எழுந்திருந்த ஆசிரியர் மிகுந்த கோபத்துடன், ''அந்த யானையைப் பள்ளிக்கூடச் சிப்பந்திகளிடம் சொல்லி, அடித்து வெளியே துரத்தச் சொல்லுங்கள்'' என்று கத்தினார்.

உடனே கிருஷ்ண பிரஸாத் எழுந்து நின்றான். ''சார்! அந்த யானையை யாரும் அடித்துத் துரத்த வேண்டாம். நானே அதை வெளியில் கொண்டு போய் விட்டு வருகிறேன்'' என்று சொல்லிக் கொண்டே வெளியே போனான். பிரஸாத் யானை அருகில் சென்றவுடன் யானை தன் தும்பிக்கையினால் கிருஷ்ண பிரஸாத்தைத் தடவிக் கொடுத்தது. கிருஷ்ண பிரஸாத் அதைத் தட்டிக்கொடுத்தான். யானை தனது முன் காலை மடித்துக் கொண்டு நின்றது. கிருஷ்ண பிரசாத் அதன் மேல் ஏறிக் கொண்டான். பள்ளிக்கூடத்துக்குச் சற்றுத் தூரத்துக்கு அப்பால் அதை விட்டு விட்டு மறுபடியும் வகுப்புக்கு வந்தான். யானையைப் பற்றி அவன் ஆசிரியரும் பையன்களும் கேட்ட கேள்விகளுக்கு ஒன்றும் பதில் சொல்லாமல் அவன் மௌனம் சாதித்தான். 'கிருஷ்ண பிரசாத் காட்டில் வசித்திருந்தவன் போல் அல்லவா தோன்றுகிறது?' என்று ஆசிரியர் பரிகாசமாகச் சொல்லவே எல்லாப் பையன்களும் கிருஷ்ண பிரஸாத்தைப் பார்த்து

# பட்டினத்து யானை

ஏளனமாகக் கைகொட்டிச் சிரித்தனர். அதைக் கண்டு கிருஷ்ண பிரஸாத் தலைகுனிந்தான்.

தீபாவளி அன்று விடியற்காலை இரண்டு மணி இருக்கும். பள்ளிக்கூட விடுதியில் ''திருடன்.... திருடன்.... ஓடுகிறான். பிடியுங்கள்....'' என்று பல குரல்கள் கிளம்பின. திருடன் வேகமாக ஓடிய சத்தம் கேட்டதே தவிர அவன் அகப்படவில்லை. பல மாணவர்களின் அறைகளிலிருந்து பல உயர்ந்த பொருள்கள் காணாமற் போனதாகத் தெரிய வந்தது. திருட்டுப் போனதைப் பற்றி டெலிபோன் மூலம் போலீஸ் நிலையத்துக்குத் தெரியப்படுத்தவே, ''திருடன் இங்கு அகப்பட்டு விட்டான். உடனே வாருங்கள்'' என்று தலைமை ஆசிரியருக்குப் பதில் வந்தது.

தலைமை ஆசிரியர், மற்றைய ஆசிரியர்கள், பையன்கள் அனைவரும் போலீஸ் நிலையத்துக்கு ஓடி வந்தார்கள். ''திருடனைப் பிடித்து அறையில் பூட்டி இருக்கிறோம். எங்கள் கண்களுக்கு அகப்படாமல் தலைமறைவாக இருந்த பெரிய பொல்லாத திருடன் இவன். இவனைப் பிடித்துப் போலீஸ் நிலையத்துக்கு அழைத்து வந்த பெருமை தோட்டப் பக்கம் நின்று கொண்டிருக்கிறார்களே அவர்களைச் சாரும்'' என்று போலீஸ் இன்ஸ்பெக்டர் சொன்னதும் எல்லோரும் தோட்டப் பக்கம் சென்றார்கள். அங்கே கிருஷ்ண பிரஸாத் இருந்தான். அவன் பக்கத்தில் பள்ளிக்கூடத்துக்கு வந்திருந்த யானையும் நின்று கொண்டிருந்தது.

உடனே கிருஷ்ணபிரஸாத் தலைமை ஆசிரியரையும் மற்றைய ஆசிரியர்களையும் கைகூப்பி வணங்கினான்.

''ஐயா! என் தகப்பனார் இந்த 'லக்ஷ்மி' என்ற யானையை விடியற்காலம் இரண்டு மணிக்கு அனுப்பி வைத்தார். இந்த யானை நான் குழந்தையாக இருக்கும் பொழுதே என்னிடம் மிகவும் பழகி விட்டது. இரவில் என் தாய் தந்தையர்களுடன் படுத்தால் துஷ்ட மிருகங்களின் சத்தத்தால் எனது தூக்கம் பாதிக்கப்படுமோ என்று பயந்து, விடியற்காலையில் என்னை யானையின் மீது ஏறித் தன்னிடம் வந்து தீபாவளி கொண்டாடி விட்டுப் போகும்படி சொன்னார் அப்பா. பள்ளிக்கூடத்துக்கு வந்த யானை, உள்ளே வரக் கூடாதென்று முன்பே ஒரு முறை வாத்தியார் கூறி இருந்ததால் வெளிச் சுவருக்குப் பக்கத்தில் நின்று கொண்டிருந்தது. நான் வெளியே வந்து யானையின் மீது உட்காரும் சமயத்தில் ''திருடன் திருடன்'' என்று சத்தம் கேட்டது. 'தப தப' வென்று யாரோ ஓடி வந்துசுவரின்மீது ஏறிக்கீழேகுதித்தான். குதித்தவன் கீழே குனிந்து கொண்டிருந்த யானையின் மீது என் பின்னும் குதித்து விட்டான். திருடன் தான் பின்னுடி யிருக்கிறான் என்று தெரிந்ததும், யானையை அரை நொடியில் நாலு கால் பாய்ச்சலில் போலீஸ் நிலையத்தை அடையும்படி செய்தேன். நல்ல இருட்டில் தான் யானை மீது சவாரி செய்வதைக் கண்ட திருடன் ஒன்றும் தெரியாமல் திகைத்து உட்கார்ந்திருந்தான். போலீஸ் நிலையத்தை அடைந்ததும் அவனைப் போலீஸ்காரர்கள் பிடித்துக் கொண்டு விட்டார்கள்'' என்றான். ஆச்சரியத்தில் ஆழ்ந்த தலைமை ஆசிரியர், ''அதெல்லாம் சரி, ஆனால் இந்த யானை நீ சொன்னபடி செய்கிறதே, எப்படி அது?'' என்று கேட்டார்.

''இந்தப் பட்டணத்துக்கு அருகில் வந்திருக்கும் சாந்தாராம் சர்க்கஸின் சொந்தக்காரர் சாந்தாராம் தான் என் தகப்பனார். அதிலுள்ள மிருகங்கள் யாவும் சிறு வயது முதற் கொண்டே என் மீது அன்பு கொண்டிருக்கின்றன. இந்த விஷயத்தை முன்பாகவே தெரிவித்திருந்தால் பள்ளிக்கூடத்தில் உள்ள என் சிநேகிதர்கள் யாவரும் இலவசமாகச் சர்க்கஸுக்கு அழைத்துச் செல்லுமாறு கட்டாயப்படுத்துவார்கள். ஆனால் என் தகப்பனாரோ கண்டிப்பானவர். அதனால்தான் நான் யாரிடமும் அதைப் பற்றிச் சொல்லவில்லை. அதற்கு என்னை மன்னிக்க வேணும்'' என்றான் கிருஷ்ண பிரஸாத்.

போலீஸ் நிலயத்தில் நடந்த சம்பவத்தை அறிந்த சர்க்கஸ் சொந்தக்காரர் சாந்தாராமே அங்கு வந்து விட்டார். விஷயத்தை அறிந்த அவர் சந்தோஷம் கொண்டு, தீபாவளிக்காகக் காலைக் காட்சி நடத்தப் போவதாகவும், அதற்குச் சிங்காரவேலு பள்ளியில் உள்ள எல்லாச் சிறுவர்களையும் ஆசிரியர்களையும் இலவசமாக அனுமதிக்கப் போவதாகவும் பலத்த கரகோஷங்களுக்கு இடையே சொன்னார். அன்று சர்க்கஸ் காட்சியில் கிருஷ்ண பிரசாத்துக்கும் அவனது 'லக்ஷ்மி' என்ற யானைக்கும் அவர்களுடைய தீரச் செயலைப் பாராட்டிப் பல மாலைகள் போடப்பட்டன.

சாமா

# கந்தசாமியின் கனவு

கதை : வாண்டுமாமா

சித்திரம்: ஸாகர்

கந்தசாமிக்குக் கதைகள் படிப்பதென்றால் கரும்பைச் சுவைப்பது போல. அவன் மாமா, பிறந்த நாள் பரிசாக அவனுக்கு ஒரு புத்தகம் பரிசளித்திருந்தார். கலிவரின் யாத்திரைகள், சிந்துபாதின் வீரச்செயல்கள் ஆகிய கதைகள் அடங்கிய புத்தகம் அது. அதைப் படித்து அந்தக் கதாபாத்திரங்களாகவே மாறி இருந்தான் கந்தசாமி. அப்போது வாசலில் ஒரு குரங்காட்டி வேடிக்கை காட்ட வந்தான். அதன் சேஷ்டைகளை ரசித்தபடி கண்ணயர்ந்து விட்ட கந்தசாமி கனவுலகிலும் சஞ்சரிக்கலானான்.



























குள்ளர்கள் ஜமுக்காளத்தின்மீது நின்று சோதிக்கும்போது திடீர் காற்று...

ஐயையோ! இது பறக்கிறதே! ஆபத்து ஆபத்து! இதில் ஏதோ சூது!

காற்றினால் ஜமுக்காளம் பறந்ததும் நல்லதாயிற்று.

அபூர்வ சக்தியுள்ள நீங்கள் இனி எங்கள் விருந்தினர்

குள்ளர்கள் இவர்களைத் தேவர்கள் என்று உபசரிக்க, கந்தசாமி குள்ள அரசனுடன் சிரித்துப் பேசுவதைக் கண்டு பொறாமை கொண்ட ஜிப்பி குள்ளர்களின் அரச மோதிரம் தூக்கிக் கொண்டு ஓடுகிறது.

ஜிப்பி, ஜிப்பி! அதைக் கொடுத்து விடு!

ஜிப்பி இறங்கி விடு... ஐயோ, மலைப்பாம்பு!

ஜிப்பி, பயப்படாதே. இதோ....

இதற்குத் தான் என்ன பலம்?

அந்தக் கொடிகளை அறுத்து...

பட்டுப்போன மரத்தை...

பாம்பின் மீது வீழ்ந்து...






அதைத் துரத்திச்
சென்ற ஜிப்பி உண்
மையை அறிந்து...


கந்தனிடம் ஓடி வந்து சொல்
லத்
தான்...




மந்திர ஜமுக்
காளத்தின்
வேலையைப்
பார்!


தப்பிவிட முடி
யாதப்பா!


இந்தத் திருடனைப் பிடிக்க
எத்தனையோ பாடு
பட்டும் என்னால்
முடியவில்லை.


இப்படி எத்தனையோ அதி
சயங்கள் என்னிடமுள்ளன;
இப். எனக்கு நேரமா
கிறது, வருகிறேன்.
கந்தசாமி சுல்தானின்
அவையிலே மந்திர ஜமுக்
காளத்திலமர்ந்தபடி தன்
பிரதாபங்களை அளக்கிறான்.


அம்மா எழுப்பக் கனவும் கலைகிறது.
தீபாவளியன்று குரங்காட்டி வரவே
தான் கண்ட கனவு நினைவுக்கு வந்து
வருக் குரங்காட்டிக்கு நிறையப்
பட்சணங்கள் கொடுத்தனுப்புகி
றான் கந்தசாமி.



# ஐடியா ஐயாசாமி

பரதன்



சமீபத்தில் ஒரு விசேஷ விருந்து விழா வைபவத்துக்கு, விசேஷ அழைப்பின்பேரில் போயிருந்தேன். இந்த வி. வி. வி. வை. அழைப்பு 'இதழே' ஒரு விநோதமாக இருந்தது. நல்ல முட்டைக் கோஸ் இலைச் சருகில் வெந்த குங்குமப் பூ குழம்பினால் எழுத்துக்கள் பொறிக்கப்பட்டிருந்தன. (இந்தக் காலத்தில், கடையில் கிடைக்கும் 'நூல்' குங்குமப்பூ—மெல்லிய நூல் இழைகளைச் சிறிதாக வெட்டி, செவ்விற மைதா மாவில் தோய்த்து எடுத்துப் புட்டியில் அடைத்துப் பலம் பத்து ரூபாய்க்கு விற்கிறார்களே — அந்தக் குங்குமப் பூவைத்தான் அப்படிச் செங்குழம்பாக அச்சு மைபோல் குழைக்க முடியும்.) எழுத்துக்கள் விசித்திரமான சித்திர உருவத்தில் இருந்தன. இந்த விசித்திர விருந்து விழாவுக்குக் காரணமானவர்கள் பெயர்களையும் சமையல்காரர்கள் பெயர்களையும் மாற்றி மாற்றிக் கோஸ் இலையின் பின்புறத்தில் அச்சடித்திருந்தது.

சரி, ஓசியில் வந்த விருந்தை விடக்கூடாதென்று நாக்கைத் நீட்டிக் கொண்டு சென்றேன். மற்றொரு முக்கிய விஷயமும் என் உற்சாகத்தைத் தூண்டியது. விருந்தோம்பி ஜாபிதாவில் தலைமை தாங்கிய ஒரு பெயர்தான் அதற்குக் காரணம். கோஸ்முட்டையில் (மன்னிக்கவும்! கோஸ் முட்டை போடுமா என்று கேட்காதீர்கள் — முட்டைதான் கோஸ் போடும்!) பின்பக்கத்தில் பொறித்திருந்த விருந்தோம்புவோர் ஜாபிதாவில் முதல் பெயர் கொட்டை கொட்டையாகக் கண்ணில் வந்து குத்தியது.

அந்தப் பெயர் "ஐ. ஐ. சாமி." ஐயையே! இவ்வளவுதானா என்று அலட்சியம் செய்யக் கூடிய சாமியல்ல அது. சாக்ஷாத் ஐயனார்புரம் ஐயாசாமிதான் அது. மிகப் பிரபலமான பெயர். உலகமறிந்த—அறியாவிட்டால் அறிய வேண்டிய—பெயர்தான்! அருமைத் தாயார் என்னவோ "ஐயா! ஐயப்பா! ஐயி! ஐய்யய்யா! ஐயாக்கண்ணு! ஐயாக்குட்டி!" என்று பலவாறாகச் செல்லப் பெயர்கள் வைத்துப் பாலகன் ஐயாசாமியை அழைத்ததுண்டு. ஆனால் பள்ளிக்கூடத்தில் அம்மா செல்லம் செல்லவில்லை; அதனால் பையன் பெயர் "ஐயனார்புரம் ஐயாசாமி" என்றுதான் பதிவாயிற்று. "ஐ. ஐயாசாமி" என்று சுருக்கியும் அழைப்பதுண்டு.

விருந்து வழங்கும் இடத்துக்கு வந்து சேர்ந்தோமா? என்ன? இல்லையென்கிறீர்களே!.... ஆமாம்! ஸார்! இது சுத்தானைத் தோப்புதான்! இங்குதான் ஸார் விருந்து! பையிலிருந்து முட்டை — மன்னிக்கவும் — கோஸ் அழைப்பிதழை எடுங்கள். ஊம்.... என்ன போட்டிருக்கிறது பாருங்கள்! சரியான இடத்துக்குத்தானே வந்தோம்? என்ன? மேஜை, நாற்காலி, பந்தி ஜமுக்காளம் இவைகளையா தேடுகிறீர்கள்? சே! சே! சே! அந்த மாதிரி பழைய, பழகின மோஸ்தர் எல்லாம் ஐ. ஐ. சாமி இருக்கும் இடத்தில் தலை காட்டலாமா? அதோ, ஐ. ஐ.யே நம்மை அழைக்கிறார்...எங்கே முருங்கை மரத்திலா ஏறச் சொல்கிறார்? நாம் அப்படி எல்லாம்......இல்லையே என்று நினைக்காதீர்! தைரியமாக ஏறுங்கள்! ஐ. ஐ. விருந்துக்கு ஆசைப்பட்டால் முருங்கை மரத்திலும் ஏற வேண்டும்; புளியமரத்திலும் ஏற வேண்டும்! அதோ கிளையில் தொங்குகிறதே....இல்லை..... நீங்கள் அஞ்சுவது போல் இல்லை...அது ஒரு ஊஞ்சல்தான்! வலையில் பின்னப்பட்ட ஆடும் ஆசனம்! மெள்ள ஏறிக் கொள்வோம். முருங்கை மரத்தில் ஏறியதும், நம் மனம், வாக்கு, நாக்கு எல்லாம் ஊசலாடுகின்றன: 'சாப்பாடு எங்கே? விருந்து எங்கே?' என்று.

இது ஒரு 'பீராடா?' மோசடியா? வேடிக்கையா? கிண்டலா?

கிண்டலும் இல்லை, சண்டையும் இல்லை. இந்த விருந்தில் அதெல்லாம் மூச்சு விடக் கூடாது...ஊறுகாய், பொரியல், சமையல் எல்லாம் பழுத்துப் புளித்துப்போன வகைகள். அதோ பாருங்கள். கிளைகளில் தொங்குகின்றன. விதம் விதமான வர்ண நூல்களால் கட்டித் தொங்க விட்டிருக்கிறது. புதுப் புது தினுசாக இருக்கிறது. புடலங்காயைப் பாம்பு மாதிரி தொங்க விட்டிருக்கிறது! பூசணிக்காயைக் குடைந்து வைத்து அதிலே சப்பாத்திப் பழ ஜாம் வைத்திருக்கிறது. தம்மட்டங்காய், பச்சை மிளகாய், பீர்க்கங்காய் மற்றுத் தெரிந்த தெரியாத காய்கறி வகைகளை முள்ளில் குத்தி வைத்திருக்கிறது. முள் கரண்டிக்குப் பதில் இயற்கை முள் பயன்படுகிறது பார்த்தீர்களா? அடாடா! ஏன் சும்மா நினைத்து நிற்கிறீர்கள்! பாருங்கள் ஒரு கை....நீங்கள் பார்ப்பதற்குள் முள் கையைப் பதம் பார்த்து விட்டதா? அதோ, பிளந்த தேங்காய்க் கொப்பரையில் பனம்பழ ரசம்; உடம்புக்கு ரொம்ப நல்லது. நீரா, நீரா என்றெல்லாம் சாப்பிடுகிறோமே! இதற்கு முன் நிற்குமா? அதெல்லாம் நிற்காது: ஓடியே விடும், ஆமாம்!

நிற்க! (அல்லது ஓடு!) நமது ஆப்த நண்பர் ஐ.ஐ. சாமியை மறந்து விட்டோமிறோம்? இந்த விசித்திர விருந்து உபசாரத்துக்கு உங்களை எதற்கு அழைத்து வந்தேன் என்றால் நமது கதாநாயகனின் குணநலத்தின் அருமை பெருமைகளையெல்லாம் விளக்கவே. இந்த விருந்துபசாரம் நல்ல சந்தர்ப்பத்தில் அமைந்தது. அவரிடமே நேரில் பேசித் தெரிந்து கொள்வோம், வாருங்கள்!

"பிரமாதம்! பிரமாதம்! போங்கள்! இப்படி ஒரு விருந்தை நாங்கள் கண்டதில்லை! கேட்டதில்லை! சுவைத்ததில்லை!" என்று மிஸ்டர் ஐ. ஐ. சாமியைப் பாராட்டுகிறோம்.



"ஊம், இதென்ன பிரமாதம்? இந்த ஐடியா முழுக்க முழுக்க யாருடையது தெரியுமோ?" என்று ஒரு கேள்வியைத் தூக்கி நம் மேல் அவர் வீசுகிறார்.

கேள்வியினுடைய கூரிய முனையின் தாக்குதல் தாளாமல் நாம் அலறுகிறோம் பதிலுக்கு!

"கேட்க வேண்டுமா! எல்லாம் உங்களுது தான்! ஐ. ஐ. சாமியைத் தவிர வேறு யாருக்கு இப்படி ஒரிஜினல் ஐடியா தோன்றும்?" என்று உண்மையைச் சொல்லி வைக்கிறோம். ஐ. ஐ. சாமியின் நான்கு அடி மூன்று அங்குல உருவம் முக்காலே மூணேகால் அங்குலம் வளர்ந்து அவர் உயர்கிறார் — தம்முடைய சொந்த முயற்சியிலேயே — யாரும் தூக்கி விடாமல் இப்படி ஒரு மனிதன் உயர்வதென்றால் அது இயற்கையா? இயற்கைக்கு அப்பாற்பட்டதா? நீங்களே சிந்தியுங்கள், சிந்தித்துக் கொண்டே இருங்கள்; முடிவுமட்டும் கண்டிடாதீர்கள்.

ஐ. ஐ. சாமியின் நுண்ணறிவு பள்ளிக் கூடத்திலேயே ஆரம்பித்து விட்டது; பரீட்சையில் கேள்வித் தாளில் "பாரத நாட்டில் பிரக்கியாதி பெற்ற ஒரு பிரமுகரின் பெயரைக் குறிப்பிடுக; அவரது வாழ்க்கை இலட்சியங்களைச் சுருக்கமாக வரைக" என்று இருந்தது. இளம் பாலகன் ஐயாசாமி என்ன செய்தான் தெரியுமா?

இங்கேதான் ஐயாசாமியின் தனிக் குண விசேஷம் வெளிப்பட்டது. பூனைக்காலுடன் உடலும், யானை முகமும் உள்ள ஒரு விசித்திரப் படத்தை வரைந்தான். அதன் கீழே: "நம் நாட்டில் தோன்றிய அபூர்வ அவதாரம்; பெயர்: நிப்போலியன் பூனைப்பாட்டு; கீச்சுக் குரலில் பாடுவதில் மிகவும் நிபுணர்; இசை சங்கீதத்தின் பின்னணி வீரர். யானைக்குக் குரல் இரவல் கொடுத்த வள்ளல். அவருக்குப் பிடித்த உணவு: போளி. வாழ்வு: மூன்றே முக்கால் ஆண்டுகள். தேய்வு: பத்தே முக்கால் ஆண்டுகள்; மறைவு: நிகர் இட்லியைத் நிகர் சட்னியில்லாமல் தின்றதின் நிகர் விளைவு."

இந்த விடையைப் பார்த்து விட்டுப் பரீட்சைத் தாள் பரிசோதகர் இடி இடியென்று சிரித்துவிட்டு இந்தச் சிரிப்பின் காரணமாக மாரடைத்து மாண்டார். பள்ளிக்கூட அதிகாரிகள் ஐ. ஐ. சாமியை அவனுடைய அபார மூளைக்கு மெச்சி மகிழ்ந்து, உச்சி முகர்ந்து ஒரு பாராட்டு விழா வைத்தார்கள். அதிலேயே காலஞ்சென்ற பரீட்சைப் பரிசோதகர் அனுதாப விழாவையும் கலந்து கொண்டாடினார்கள். அதற்கு ஐடியா கொடுத்தது யாரென்று எண்ணினீர்கள்? ஆமாம்! ஐயாசாமி தான்!

அந்தக் கூட்டத்தில்தான் உணர்ச்சிப்பரவசப் பட்ட தலைமை உபாத்தியாயர் எழுந்து முத்தாய்ப்பு வைத்தாற்போல் தமது முடிவுரையை ஆற்றும் பொழுது, (டபரா டம்ளர் இல்லாமல்) தம்முடைய உணர்ச்சி மேலிட்டால் ஐயாசாமியை அழைத்துக் கூட்டத்தின் முன்னால் நிறுத்தினார்; தம் கீழ்ப்படித்த ஒரு மாணவனுக்கு அதுவரை தாம் செய்யாத ஓர் அதிர்ச்சி தரும் செய்கையைக் கையாண்டார். "அப்பனே ஐயாசாமி! இப்படி வா!" என்று அன்பு அழைப்பு அளித்தார். அவர் கையில் பிரம்பும் இல்லாததால், தொனியும் கனிவாக இருந்ததால், ஐயாசாமி தைரியமாக மிடுக்கு நடை போட்டுக் கொண்டு வந்து மேடையில் ஏறி நின்றான். ஹெட்மாஸ்டர் வார் தமது இருக் கரத்தால் அவனை அவனுடைய இயற்கை சுபாவத்திற்கு அப்பாற்பட்ட அரிய அன்பு, ஆதரவு, அத்தனையும் சேர்த்து முதுகில் ஒரு சொட்டு வைத்தார். அவர் அன்போடு வைத்த சொட்டுத்தான். ஆனால் ஹெட்மாஸ்டரின் அவ்வளவு அபூர்வமான அபாரமான அன்பையும் ஆதரவையும் தாங்கும் சக்தி அப்போது ஐயாசாமியின் முதுகில் இல்லை. ஆகவே மேடை மீது குத்திட்டு நின்ற அவன் அப்படியே சாஷ்டாங்க நமஸ்காரம் செய்ய நேரிட்டது. சபையோர்கள், பையன் இங்கிதம் தெரிந்தவன். இந்த வயதிலேயே பொது மக்கள் ஆதரவையும் ஆசியையும் பெறுவதில் இவ்வளவு ஆர்வம் படைத்தவனாகக் காண்கிறான்; இப்படி நம்மை வணங்க வேண்டும் என்று தெரிந்து விழுந்து கும்பிடுகிறானே, இவன் பிற்காலத்தில் ஜனநாயகத் தலைவர்களில் தலை சிறந்து ஓங்கக்கூடிய ஒரு புள்ளி என்று உணர்ந்து, கரகோஷம், சிரக்கம்பம், ஆரவாரம் எல்லாம் செய்தார்கள். ஹெட்மாஸ்டர் வாரும் மனப்பூர்வமாகத் தம் வழக்கத்துக்கு மாறாக நிஜமாக ஆசீர்வதித்து அவனைக் கைகொடுத்துத் தூக்கி நிற்க வைத்து மேலும் பகர்ந்தார்:

"அப்பா! குழந்தாய்! நீ வெறும் ஐயாசாமி இல்லை! நீ பெரிய ஐடியா சாமி" என்று அவர் சரித்திரத்திலேயே என்றுமில்லாத ஓர் அபூர்வ ஹாஸ்யம் நிறைந்த உண்மையை வெளியிட்டார். சபையில் கிளம்பிய ஆரவாரம் பள்ளிக்கூடத்தில் எஞ்சியிருந்த கூரையைப் பிய்த்துக் கொண்டு போயிற்று. அன்று முதல்தான் ஐயாசாமி, ஐடியாசாமியாக உலகத்துக்கு அறிமுகப்படுத்தப்பட்டான்.

இந்தப் பூர்வ கதையை எதற்குச் சொன்னேன் என்றால், ஏதோ நான் வேடிக்கையாகக் கதைக்குப் பெயரும் காலும் வைக்கும் முயற்சியில் ஐயாசாமிக்குப் பட்டம் சூட்டி விட்டேன் என்ற வீண் அபவாதத்தை என் மேல் சுமத்தப் போகிறீர்களே என்றுதான் அவனது இரண்டாவது நாமகரண வைபவத்தை விளக்கிச் சொன்னேன்.

ஐடியாவுக்குப் பிச்சை வாங்க வேண்டு மென்று சொல்கிறார்களே, உண்மையாக ஐடியாவுக்குப் பிச்சை கொடுக்கக் கூடிய பாத்திரம் ஒன்று உண்டென்றால் அது ஐ. ஐயாசாமி தான். இதை நானாகச் சொல்லவில்லை; நானோ, பிறரோ சொல்ல வேண்டிய அவசியத்துக்கு இடம் கொடுப்பவர் ஐயாசாமி இல்லை. அவரே அதை அப்பட்டமாக, சாங்கோபாங்கமாக, மேள தாள சீர்வரிசையுடன் நம்மிடம் சொல்லி விளக்குவார்—நாம் கேட்டாலும் கேட்கா விட்டாலும்.

சமீபத்தில் ஒரு கலை விழா நடந்தது. அதில் "நாட்டுக் கலை"க்குச் சிறப்பிடம் தந்திருந்தார்கள். அதாவது கூடை, முறம், துடைப்பம், தட்டு இவற்றுக்கெல்லாம் செம்புள்ளி கரும்புள்ளி குத்திக் கோலாகலமாகத் தொங்க விட்டிருந்தார்கள். அந்தக் கலைக் களேபரத்தை நான் பார்த்து அதிசயித்துக் கொண்டிருந்தேன். அப்போது முதுகில் ஒரு தட்டு விழுந்தது. தொங்க விட்டிருந்த மூங்கில் தட்டு அல்ல—முதுகில் யாரோ தட்டினார்கள். திரும்பிப் பார்த்தேன். யாராயிருக்க முடியும்? நமது அதிசயப் பிறவி ஐயாசாமிதான்!

"என்ன! எப்படி ஐடியா?"

"ஐடியாவா? எது?" என்று தேடினேன்.

"எதுவா? இதெல்லாம்தான்...." என்று கூடை, முறம், துடைப்பம் வகையறாக்களைச் சுட்டிக் காட்டினார்.

"ஓ! இதுவா! பிரமாதம்! பிரமாதம்!" என்று சொல்லி, என் முதுகில் நிஜத்தட்டு (மூங்கில்) விழு முன், சமாளித்துக் கொண்டேன்.

"ஆமாம்! இதெல்லாம் ரொம்ப நாவலாக இருக்கிறதே! யார் ஐடியா இது?" என்று கேட்டு வைத்தேன்.

"யார் ஐடியாவாக இருக்க முடியும்? எல்லாம் என் சொந்த ஒரிஜினல் ஐடியாதான்! இந்தக் கலைக் காட்சியை ஏற்படுத்திய மன்றத்துக்கு மூளையில் களி மண் தானே வைத்திருக்கிறது! நாட்டுக் கலை என்றால்





என்ன வென்றே தெரியாமல் விழித்துக் கொண்டிருந்தான்கள். அப்புறம் நான் தான் போனால் போகிறதென்று இந்த ஐடியாவெல்லாம் ஒரே ராத்திரியில் கொடுத்தேன்'' என்றார் ஐயாசாமி.

''ஒரே ராத்திரியிலா? இத்தனையும்? கூடை., முறம், துடைப்பம்,.....?'' என்று மூக்கில் விரல் வைத்து வியந்தேன்.

''இப்படி வா! அதோ பார்.....அந்தப் பகுதியை'' என்றார். பார்த்தேன்; களித்தேன்; அயர்ந்தேன்.

அந்தப் பகுதியில் இறுக இறுகாக ஒட்டைப் பானை, சட்டிகள் பஞ்சவர்ணம் பூசி, கோணலும் மாணலுமாக, கவிழ்த்தும், நிமிர்த்தியும், உருட்டியும் தொங்கவிட்டும் காட்சியளித்தன.

''இதென்ன! வால்ட் டிஸ்னியின் அதிசய உலகம் போல் இருக்கிறதே!'' என்று சொல்லி வைத்தேன்.

''அவன் கெட்டான்! வால்ட் டிஸ்னி நம்மகிட்டே ஐடியாவுக்குப் பிச்சை வாங்கணும்! என்ன பிரமாத அதிசய உலகம் பண்ணி விட்டானாம்? என்னைக் கேட்டிருந்தால் நான் அதைவிட ஆயிரம் மடங்கு அதிகமான காட்சிகளுக்கு ஐடியா கொடுத்திருப்பேனே!'' என்று கூறினார் ஐயாசாமி.

''உண்மை! உண்மை! பாவம்! வால்ட் டிஸ்னியின் அறியாமையினால் தான், ஒரு நல்ல ஐடியாக் களஞ்சியம் உலகத்துக்குக் கிடைக்காமல் போய் விட்டது!'' என்று நான் ஒத்துப் பாடாமல் என்ன செய்ய?

பார்ட்சைத்தான், விருந்து, கலை இவற்றோடு மட்டும் ஐ. ஐயாசாமியின் ஐடியாக்கள் நின்று விட்டன என்று நினைக்காதீர்கள். இப்படி நான் நினைத்துத்தான், பிறகு எப்பேர்ப்பட்ட அடிமுட்டாள் நான் என்று உணர்ந்தேன். அந்த ஒரே ஒரு சந்தர்ப்பத்தில்தான் என்னை நானே அறிந்த ஆத்மஞானம் பெற்றேன்!

கிடைப்பதற்கரிய தங்கம் சில காலமாகச் சிரிப்பாகச் சிரிக்கிறதே, அதைப் பற்றி ஐயாசாமியிடம் ஒரு சமயம் தவறிப் பிரஸ்தாபித்து விட்டேன்.

''எவர்களோ அடாதவர்கள் தங்கத்தைக் கள்ளக்கடத்தல் செய்தால் அதற்காக நம் தாலியறுக்கிறதே! இந்தப் பதினாறு காரட் கண்டுபிடித்த பிரகஸ்பதி யாரோ!'' என்று சொல்லி வைத்தேன்.

''ஊம்! இந்தப் பயல்களுக்கு என்ன தெரியும்! இந்தப் பதினாறு காரட் ஐடியா முதன் முதலில் சர்க்காருக்குக் கொடுத்தது யாரு தெரியுமோ! நானேதான்! போன வருஷம் நம்ம ஊருக்கு நிதிமந்திரி வந்தபோது ஒரு விருந்து கொடுத்தார்களே, நினைவிருக்கா? அதற்கு என்னையும் கூப்பிட்டிருந்தார்கள். அப்பொழுது நிதி மந்திரியோடு இந்தக் கள்ளத் தங்கவிஷயமாப் பேச்சு வந்தது. 'தங்கத்தின் மதிப்பைக் குறையுங்கோ. தானே கள்ளத் தங்கம் நின்றுவிடும்' என்று ஒரு ஐடியா போட்டு வைத்தேன். அதைப் பிடிச்சுண்டார் அவர். ஒரேயடியா பதினாறு காரட்டுக்குப் போயிட்டார்'' என்று பெருமையடித்துக் கொண்டார்.

''அவர்தான் போயிட்டாரே! இனி மேல்தான் தங்கம் தரைப் போகிறதே'' என்றேன்.

''ஆமாம்! அது பார் ஐடியா! எல்லாம் நம்மதுதான். தற்போது இருக்கிற நிதிமந்திரியோட பேசிண்டு இருந்த போது, தங்கத்துக்கு வந்தது தலையோட போகட்டும் என்று ஒரு ஐடியா சொல்லி வைத்தேன். அதை அவர் பிடிச்சுண்டார்; தங்கத்துக்குத் தலையைக் கிள்ளிப் புட்டு வாலே வச்சிண்டிருக்கார்'' என்றார்!

''ராகு – கேதுமாதிரி வால் கையிலே இருந்தால் ஆட்டினால் ஓட்ட நறுக்கிடலாமோ இல்லையோ'' என்று என் ஐடியாவைப் போட்டு வைத்தேன்.

''அதான் இலேசில்லே! இதுக்கெல்லாம் ஐடியா வேணும்; ஐடியா இல்லாமல் செய்தா அந்தக் காரியம் குட்டிச் சுவர்தான்'' என்றார் ஐயாசாமி.

''ஆமாம்; இப்போதான் குட்டிச்சுவர்களெல்லாம் புனருத்தாரணம் செய்றார்களே! பழைய கோயில் கோபுரம் எல்லாம் இப்ப எவ்வளவு பளிச்சென்று வர்ணக் கதிர் வீசுகிறது!'' என்று எனக்குத் தெரிந்ததைச் சொல்லி வைத்தேன்.

''கோபுரமா! அந்தப் பேச்சை என் காதில் போடாதே! சே! சே! சே! சுத்த ஐடியாவே இல்லாம குட்டிச்சுவர் அடிக்கிறா! புனருத்தாரணம்னு அந்தக் கோபுரங்களிலே தீட்டற வர்ணத்தைப் பார்த்தாலே கண் வலி வந்துவிடும்'' என்றார் ஐயாசாமி.

''பின்னே கோபுரங்களை அப்படியே பாசி படிஞ்சு, மடிஞ்சு போக விட்டுட முடியுமா? அதுவும் இப்ப ஜனங்களுக்குப் பக்தி அதிகரித்து வருகிறது. தேவாலயங்களிலே நல்ல பண வசதி இருக்கிறது; இப்போது புதுப்பித்தால் தானே பிற்பாடு நம்ம சந்ததிகள் பார்த்து, 'ஓ! இது நம்ம மூதாதையர் திருப்பணி' என்று கன்னத்தில் போட்டுக் கொள்வார்கள்!'' என்று அழுத்தமாகச் சொன்னேன்.

''அது சரி! ஆனால் இப்படிக் கன்னு பின்னுன்னு தசாவதாரக் கலர் அடிக்க வேண்டாமே! எல்லாத்துக்கும் ஐடியா வேணும்! எப்பிலோ நான் இந்தத் தர்ம பரிபாலனசபையாருக்குப் பழைய கோயில் கோபுரங்களைப் புதுப்பிக்காமலே என்று ஒரு ஐடியா கூறி வைச்சேன்; அதை உடனே பிடிச்சுண்டு கோபுரத்திலே ஏறிட்டா! அதுவும் இப்ப எல்லாம்தான் வியாபாரிகளுக்கு அபார பக்தி வந்து அடிச்சுண்டு போறது. அவர்களைப்பிடிச்சா புதுப்பிக்கிறதுக்கு வேண்டிய சாமான்களை இலவசமாகவே கோயில் திருப்பணிக்குக் கொடுத்துப் பாவத்தைத் தீர்த்துக் கொள்ளப் பலபேர் முன்வருவார்களே? என்று ஒரு ஐடியா போட்டு வைச்சேன்; அதைப் பிடிச்சுண்டாங்க! கடையிலே செலவாகாத அலுமினியம் பெயிண்டு, பேபார்க வர்ணங்கள் எல்லாம் கோபுரங்கள் மேலே ஏற்றித்து! கண்ணறாவி'' என்று அங்கலாய்த்தார் ஐயாசாமி.

''பயப்படாதீர்! அந்த வர்ணம் எல்லாம் வெயில், மழைக்கு நிற்காது. அப்புறம் கோபுரம் சுயரூபத்துக்கு வந்துவிடும்'' என்று ஆறுதல் கூறினேன்.

''ஆமாம், வர்ணம் போய்ச் சிமிண்டு தெரியும்! அவ்வளவுதான். ஐடியாவே இல்லாதவங்க பெரிய காரியங்கள் நடத்தினா இப்படித்தான்'' என்றார் ஐடியா ஐயாசாமி.

ஐயாசாமியின் ஐடியாக்கள் கோபுரத்துக்கு மேலே மேகமண்டலம் தாண்டி வானவெளியிலும் பறக்கும் என்பதற்கு உதாரணம் சமீபத்தில் நிகழ்ந்த ஆகாய விமான விபத்திலிருந்து தெரிய வந்தது. அந்த விபத்தைப் பற்றி ஐயாசாமியின் விமரிசனம் பின்வருமாறு:

''சுத்த ஐடியாச் சூனியங்கள்! ஐடியாவே இல்லாமல் விமானத்தைப் பறக்க விடலாமா? ஏதுடா! இவ்வளவு உயிர்கள் நம் கையில் இருக்கேன்னு ஐடியா வேணும்?'' என்று சினந்தார்.

''விமானம் செலுத்துபவர் உயிரும் அவர் கையில்தானே இருந்தது; மற்றவர்கள் உயிர்களை மறந்தாலும், தம் உயிரை மறக்க மனம் வருமா? நீங்களாக இருந்திருந்தால் என்ன செய்திருப்பீர்கள் அப்போது?'' என்று போட்டு வைத்தேன்.

''நானு இருந்தால், ஆபத்து சமயத்திலே என் முதல் ஐடியா விமானத்தைக் கீழே இறக்கி விடுப்பேன்'' என்றார் ஐயாசாமி.

ஆபத்தில் அவருடைய அருமையான, அமைதியான ஐடியாவுக்கு நாம் முதல் மார்க் கொடுக்காமல் வேறு என்ன செய்ய முடியும்?

ஐ. ஐயாசாமியின் ஐடியாக்கள் விண்வெளியில் மட்டுமல்ல, அரசியல் வானில் கூட அவருடையவைதானும், சமீபத்தில் உலகப் பிரசித்தி பெற்றிருக்



ஸ்தாபகர்




தொ. ஆறுமுக முதலியார்

# சுதேசி

(ஸ்தாபிதம்: 1906)

டெலிபோன்: 84469
தபால் பெட்டி: 2433
தந்தி: "புவனு"

இத் தீபாவளித் திருநாளில் நண்பர்களுக்கும் அபிமானிகளுக்கும் எங்களது மனமார்ந்த

## நல் வாழ்த்துக்கள்!

இதர எந்தத் தயாரிப்புகட்கும் தலைசிறந்ததும், நீடித்து உழைக்கக கூடியதும், அழகும் கவர்ச்சியும் பொருந்தியனவுமாகும். விலையுயர்ந்த நவீன யந்திர சாதனங்களால், மேனாட்டு முறைப்படி தயாரிக்கப்பெற்ற எங்கள் "கணபதி" புதிய தமிழ் எழுத்துக்களும், "ஆறுமுகம்" புதிய தெலுங்கு எழுத்துக்களும் "மணி" புதிய கன்னட எழுத்துக்களும் "சுதேசி" புதிய மலையாள எழுத்துக்களும் புகழ் சிறந்த பல்லோராலும் பாராட்டப் பெற்றுள்ளன. மேலும், அச்சாபீஸ் நிர்வாகிகள் அனைவருடைய நன்மதிப்பையும் ஆதரவையும் பெற்றவையாகும்.

பூரா விவரங்களுக்கு எழுதவும்

**தொ. ஆ. சுப்பிரமணிய முதலியார்**
நிர்வாக பாகஸ்தர்

# டைப் பவுண்டரி

51, குருவப்ப செட்டித் தெரு, சிந்தாதிரிப்பேட்டை
சென்னை - 2

(இந்திய அரசாங்கத்தாரால் அங்கீகரிக்கப்பட்ட கண்டிராக்டர்கள்)



கிளைக் காரியாலயங்கள்:

B-13, இண்டஸ்டிரியல் எஸ்டேட், சனத் நகர், ஹைதராபாத்-18
போன்: 34902 தந்தி: "புவனு", செகந்திராபாத்

B-6, இண்டஸ்டிரியல் எஸ்டேட், ராஜாஜி நகர், பெங்களூர்-10
போன்: 70495 தந்தி: "புவனு", பெங்களூர்

XIV/8310-A கரியில் ரோடு, தபால் பெட்டி நெ. 4, எர்ணாகுளம்-8 (கேரளா)
போன்: 8207 தந்தி: "புவனு", எர்ணாகுளம்

இந்தத் தீபாவளி மலரில் உபயோகிக்கப்பட்டிருக்கும் எழுத்துக்கள் "கணபதி" புதிய தமிழ் எழுத்துக்களே. இந்த எழுத்துக்களின் உறுதிக்கும், அழகான அமைப்பிற்கும் இந்த மலரே தக்க சான்று.





# சக்தி நோன்பு

நா. சி. வரதராஜன்

உள்ளத் தருள்மலர்ந் தின்னிசை-மணம்
ஒப்பென் றெழுந்து பரந்திடும்!
கள்ளத் துயர் மிடி யாவுமே-ஓடிக்
காரி ருளூடு கலந்திடும்!
எள்ளத் தனை கலப்பின்றியே-இன்பம்
எட்டிநம் ஜீவியம் தொட்டிடும்!
வெள்ளமெனக் களி விம்மிடும்-அன்னை
வீரையின் பேரை ஜபித்திடின்!

முள்ளும் மலர்ந்து விரிந்திடும்-அதில்
முல்லையின் மென்மை செறிந்திடும்.
புள்ளும் பலப்பல பேசிடும்-இந்தப்
பூதலம் சொர்க்கம தாகிடும்.
அள்ளும் கவிதைகள் யாவையும்-குன்றும்
அங்கெதிர் பாடி நிறைந்திடும்.
துள்ளும் அருள்நட மாடிடும்-சக்தித்
தோகையை எண்ணிடும் போழ்தினிலே!

காலம் விரைந்திடு மாயினும்-அதில்
கானம் கலந்து ஒலிப்பதால்
ஞாலம் இசைமய மாகவும்-இங்கு
நாமொலி யாழென மாறவும்
கோலம் மனத்திடைத் தோன்றிடும்-உடன்
கொள்ளைமதுக் கனா வேய்ந்திடும்!
வேலும் கரமுமாய்ப் புன்னகை-வீசும்
விந்தை மகளினை யெண்ணிடின்!

போற்றிப் புகழ்ந்திசை பாடுவோம்!-அன்னை
பொன்னடியில் மலர் சூடுவோம்!
தூற்றிச் சிறுமைகள் தள்ளுவோம்!-பின்னர்
தூயபெரு நிலை கொள்ளுவோம்!
ஏற்றிப் புகழ்விளக் கின்னொளி-எங்கும்
எட்டிப் பரந்திடச் செய்குவோம்!
நூற்றுக் கவிதைகள் பாடியே-சக்தி
நோன்பு நிகழ்த்துவம் பாரிலே!

ஜும் கா. திட்டம் கூட அவர் சொல்லிக் கொடுத்த ஐடியாதானும். நமது தலைவர்கள் அவர் கொடுத்த ஐடியாவை அப்படியே ஏற்றுக்கொண்டு விட்டார்களாம்!

திரை உலகில் கூட ஐயாசாமியின் ஐடியாக்கள் மின்னிக் கொண்டிருக்கின்றன. எந்தத் திரைப் படமாவது பிரமாதமாக ஓடிக் கொண்டிருந்தால் அதில் ஐயாசாமியின் ஐடியாக்கள் புகுந்து வேலை செய்கின்றன என்று நீங்கள் தாராளமாக நம்பலாம்; நம்பா விட்டால் அது உங்கள் துரதிர்ஷ்டம்.

சமீபத்தில் அவருக்கு ஒரு ஐடியா பளிச்சென்று மின்னல் போல் தோன்றிற்று. இரவல் குரல் பாட்டிசைக்க, கதாநாயகனும், நாயகியும் உதட்டசைக்கிறார்களல்லவா? இப்போது ஐயாசாமியின் "நாவல்டி ஐ. பினால்" படி சினிமா நட்சத்திரங்கள் உதட்டசைப்புக்குத் தக்கபடி, இரவல் குரலும், வாத்திய கோஷ்களும் இசைக்க வேண்டும். இதற்கு அவர் "ரிவர்ஸ் லிப் மூவ்மெண்ட்" என்று பெயரிட்டிருக்கிறார்.

"இது திரைப்பட சரித்திரத்திலேயே ஒரு புரட்சிகரமான ஐடியா இல்லையா?" என்றார் ஐயாசாமி.

"கண்டிப்பாக! யார் மறுக்க முடியும்?" என்றேன்.

"ஆமாம், இதில் என்ன புதிய விசேஷம், லாபம்?" என்று கேட்டேன்.

"திரையில் நடிக நடிகைகள் வந்து எந்தப் பாஷையில் வேண்டுமானாலும் பேசலாம், பாடலாம்; அவர்கள் உதட்டசைவுக்குச் சரியாகப் பாட்டுக்களும் வசனங்களும் எந்த பாஷையில் வேண்டுமானாலும் அமைத்து வாபாடப்படலாம். இதன் பலாபலன்களைச் சற்று யோசித்துப் பார்" என்றார்.

ஒரு கணம் இதன் விளைவைக் கண்ணை மூடிக் கொண்டு நினைத்துப் பார்த்தேன். அலறியடித்துக் கொண்டு கண்ணைத் திறந்தேன். என் அலறலில் அவர் குதித்தெழுந்தார்.

ஐ. ஐ. சாமி இத்தனை பிரதாபத்துடன் விளங்குகிறாரே; அவர் இந்த உலகத்தில் அவதரித்தது யாருடைய ஐடியா? இந்தச் சந்தேகத்தையும் அவரே தீர்த்து வைத்து விட்டார்! ஐயாசாமியேதான் தம்மை சிருஷ்டிக்கும்படி பிரும்மாவுக்கு முதன்முதலில் ஐடியா கொடுத்தாராம்! இப்படிப்பட்ட ஓர் அபூர்வப் பிறவி நமது நாட்டுக்கும் உலகத்துக்கும் பயன்படக் கூடிய தமது ஐடியாக்களை அள்ளி வீசுவதற்கு ஒரு நிரந்தர ஸ்தாபனம் வேண்டாமா என்று நாம் கவலைப்பட அவர் விட வில்லை. இப்போது "ஐடியாஸ் அன் லிமிடெட்" என்ற அகில உலக ஸ்தாபனம், அமெரிக்கா, சுமேரியா, துலேஷியா முதலிய கண்டங்களிலும், நாடுகளிலும் பல்லாயிரக்கணக்கான கிளைகள் தழைத்து வளர்ந்து, நிழல் தருகிறது. அந்த ஸ்தாபனத்தின் ஆணிவேர் நுனி மரம், காய், பூ எல்லாம் ஐ. ஐயாசாமிதான். உங்களுக்குச் சொந்த விஷயங்களிலோ பொது விவகாரங்களிலோ ஏதாவது ஐடியா வேண்டுமானாலும் "ஐடியாஸ் அன் லிமிடெட்"டுக்கு எழுதிக் கேளுங்கள். பிறகு உங்களுக்கு உலகக் கவலையே வேண்டாம்.



# நெஞ்சில் எழுதிப் பார்க்கின்றேன்!

- என். எஸ். சிதம்பரம் -

களிந்த மதியின் வரவுகண்டு
கடலின் தெய்வம் உளம்பொங்கி
இனிய அலையால் இசையெழுப்பி
எழிலார் நடஞ்செய் காட்சியினைத்
தனிமை நிலையில் எனைமறந்து
தரணி மறந்து சுவைத்திடுங்கால்
பனியின் மலர்போல் மணம்வீசிப்
பாவை நீவந் தாயன்றோ ?

வானத் தழகி மேனகையோ
வடிவார் அரம்பை யோவென்று
மோனத் திருந்த நான்வியக்க
மோக மலரைக் காட்டிநின்றாய் !
வானத் துறையும் மகளிரெலாம்
வனப்பின் வடிவம் உனக்கீடோ ?
ஞானம் படைத்தோர் உனைக்கண்டால்
நன்றிவ் விதமே உரைப்பரன்றோ ?

பொலியும் முத்தும் பொன்னகையே !
பூத்துக் குலுங்கும் பூங்கொடியே !
சலிப்பில் லாமல் ஆடுமயிற்
சாய லுடைய பெண்ணமுதே !
நலிவில் லாத கற்பனைகள்
நாலு கோடி மனத்தெழுப்பி
நலஞ்சேர் கவிபா டும்உணர்வை
நல்கும் உனக்கு நிகருமுண்டோ ?

குமுதம் உனது வாயென்பேன் !
குளிர்ந்த கடல்உன் இதயமென்பேன் !
அமுதம் உனது பார்வை யென்பேன் !
அரும்புஞ் சிரிப்பு முல்லையென்பேன் !
அமையும் இந்த ஏற்றமெல்லாம்
அன்பே, உனக்கே உரைப்பதனால்
கமழும் மணம்நீ பெற்றுவிட்டாய் !
கருத்தில் என்றும் ஒன்றிவிட்டாய் !

அலைகள் எழும்பும் கடற்கரையில்
அழகின் உருவாய்த் தோன்றியநீ
அலையை இதயக் கடல்தனிலே
அடுக்காய் எழுப்பிச் சென்றுவிட்ட
நிலையை நினைத்துப் பார்க்கின்றேன் !
நெஞ்சில் எழுதிப் பார்க்கின்றேன் !
கலையின் அணங்கே ! எனதாசைக்
கனவை நனவாக் கிடுவாயே !





# தாட்சண்யம்

"எங்கள் நாட்களிலெல்லாம் தாட்சண்யம் என்று ஒன்று உண்டு. இந்தக் காலத்தில் ஒரு பெண்ணுக்குக் கலியாணம் செய்து முடித்தால் தலையில் துணி போட்டுத் துறவு கொள்ள வேண்டியிருக்கிறது. ஒரு தலை தீபாவளி நடத்தி முடித்தால் தலையில் துணி போட்டுக் கொள்ள வேண்டியிருக்கிறது. தயை, தாட்சண்யம், நாக்கில் நரம்பு ஒன்றுமில்லாமல் கேட்கிறார்களே, பிள்ளையும் அவளைப் பெற்றவர்களும்!" என்று ஆத்திரத்தோடு மொழிந்துகொண்டே நான் அரிவாள்மணையை நறுக்கென்று ஒரு தட்டுத் தட்டி, அப்பால், திண்ணை அடியில், ஒதுக்கி வைத்தேன். என் விரலைச் சுற்றி வாழைத் தண்டு நறுக்கின நார் சுற்றிக் கொண்டிருந்தது. அவைகளை நீக்கும் பணியில் என் மனச் சிக்கலையும் நீக்க முயன்று கொண்டிருந்தேன்.

"ஆமாம், ஆமாம்! உன் காலத்தில் தாட்சண்யப்பட்டுக் கொண்டு, ஈ ஓட்டிக் கொண்டு உட்கார்ந்திருக்க நேரம் இருந்தது. எங்கள் காலத்தில் அசட்டுத்தனத்துக்குப் போது கிடையாது. அந்தந்தச் சமயத்துக்கு 'டக் டக்' என்று நடக்க வேண்டும்" என்று பொரிந்து தள்ளியபடி விட்டு, கையில் இருந்த வாரப் பதிப்பைக் குப்புற விசிறியெறிந்து விட்டு, என் பெண் சித்ரா வேகமாக முன் பக்கம் போனாள்.

கூடாரம்போல் நின்ற வாரப் பதிப்புப் புத்தகத்தைச் சீராக்கி விட்டு நான் என் மகளையே பார்த்தேன். அவள் நடையில் ஓர் உதாசீனம், முன் பக்கம் விழுந்த அவள் சாட்டைப் பின்னலைப் பின்புறம் வீசிக் கொண்டதில்கூட ஓர் அலட்சியம்!

அவளைச் சொல்லியும் குற்றமில்லை. தலை தீபாவளி நடக்க விருக்கிறது. கணவன் வரப் போகிறான். இருவரும் இன்பமாகக் காலம் கழிக்கத் திட்டமிட்டிருப்பார்கள். அதை நடத்த என்னை எதிர்நோக்கி நிற்கிறாள். நான் பிடிகொடாமல் பேசுவதைக் கேட்டால் அவளுக்கு எரிச்சல் வருவது இயற்கைதானே?

மாப்பிள்ளையிடமிருந்து மாமனுக்குக் கடிதம் வந்து விட்டது இன்று. தீபாவளியை ஒட்டிப் பத்து நாட்கள் லீவு வருகின்றனவாம். அந்தச் சமயத்தில் பெங்களூர், மைசூர் போய் வர வேண்டுமாம். இருநூறு ரூபாயாவது வேண்டியிருக்குமாம். அதை எங்களிடமிருந்து எதிர்பார்த்தார் மருமகன் சுந்தரம்.

"உல்லாசப் பிரயாணம் போகிறவர்கள் தத்தம் கைக் காசுக்குத் தகுந்த மாதிரி திட்டம் போட வேண்டும். மாமனார் கைபார்த்து வாழ்வது போல் கேவலம் எதுவும் கிடையாது" என்று பெண்ணின் மீதே அவள் கணவன் கடிதத்தை வீசி விட்டு அவள் தகப்பனார் வெளியே போய் விட்டார்.

இதற்கு வழி தேடிய வண்ணம் நான் வீட்டைச் சுற்றிச் சுற்றி வந்தேன். மாப்பிள்ளைக்கு நல்ல வேஷ்டி வாங்க வேண்டும். டெரிலின் ஷர்ட் வேண்டுமாம். பெண்ணுக்குப் புடவை அவர்கள் சாதாரணமாகத்தான் வாங்குவார்களாம். தனக்கு ஒரு தர்மாவரம் பட்டுப் புடவை வேண்டும் என்று என்னை நச்சரிக்கிறாள் சித்ரா.

"மயில் சரிகை போட்டுத் தர்மாவரம் மிகவும் நேர்த்தியாக இருக்கிறதம்மா. தலைப்பில் நிறைய வேலைப்பாட்டுடன் இருக்க வேண்டும்" என்று அவள் எனக்கு விவரிக்கிறாள்.

"எல்லாம்தான் வாங்கலாம். காசு எங்கேயிருக்கிறதோ தெரியவில்லையே? கல்யாணக் கடனே இன்னும் அடையவில்லை. மேலே செலவுகள் குவிகின்றன. உன் மாமியாரோ மிகவும் கெட்டிக்கார அம்மாளாக இருக்கிறாள். சாதுர்யமாக ஒவ்வொன்றையும் கறக்கிறாள். 'ஊரில் பலருக்குக் கிடைப்பதைப் பார்க்கிறோமல்லவா? ஆசைப்படுவது இயல்புதானே? சிறிசுகள் ஆசைப்படாமல் நாமா ஆசைப்படப் போகிறோம்? வாங்கித் தந்து விடுங்கள்' என்று சிபாரிசு செய்கிறாள்! வர வர உலகில் தாட்சண்யமே காணோம். நாக்குக் கூட இல்லையே!"

"என்ன, அம்மா, காட்டுமிராண்டித்தனமாக நடந்து கொண்டு விட்டார்கள் அவர்கள்?" என்று சூடாகக் கேட்டுக் கொண்டே திரும்பி வந்தாள் சித்ரா.

எனக்கும்தான் பொறுமை போய் விட்டது. ஆசையாக, அன்பாக, நாலுசப் பார்த்துச் செய்ய விடாமல், எட்டாத அளவுக்கு முழம் போட்டு, அதற்குச் சரியாக ஆடு என்று நிர்ப்பந்தம் செய்யும் சம்பந்திமார்களைக் கண்டாலே எனக்கு வெறுப்பாக இருந்தது. ஆனால் யார் மீது காட்டுவது!

சித்ராவைப் பார்த்தேன். காலை முதல் முகத்தைத் தூக்கி ஆகாயத்தில் வைத்துக் கொண்டு திரியும் அவளைப் பார்க்கவும் விந்தையாக இருந்தது. நேற்று வரை, 'அம்மா, அப்பா!' என்று உயிரை விட்ட குழந்தை, இப்பொழுது ஒட்டாமல் எட்டி நின்று, சம்பந்திமார்களின் சார்பாகப் பேசி நிற்கும் பிரதிநிதியாக மாறி விட்டதில் ஆச்சரியம் தான் என்ன?

"எம். ஏ வரை படிக்க வைத்தாயிற்று. அது உனக்கு அறிவைத் தரவில்லை. ஆசையையும் அற்பத்தனத்தையும் கண்டு விலகக் கூடத் தெரியாமல் நிற்கத்தான் சொல்லித் தந்திருக்கிறது. படிப்புக்கு என்ன ஆயிற்று? அதற்கேற்ற உடை, வழிச் செலவு எல்லாம் என்ன ஆயிற்று? எட்டு வருஷங்களுக்கு முன் கல்யாணத்தை முடித்திருந்தால் மாப்பிள்ளையையும் சாதாரணமாகத் தேடியிருக்கலாம், உன் உடம்புக்கு நகையும் ஆகியிருக்கும். பொறுப்பு தீர்ந்து நிம்மதியும் இருந்திருக்கும்" என்றேன் நான்.

"படிக்க வைத்ததனால் நீ என்ன கஷ்டப்பட்டு விட்டாய், அம்மா? நான்கு வருஷங்கள் சம்பாதித்து உன் கையில் தானே தந்தேன்?"

வெடுக் வெடுக்கென்ற பேச்சு சித்ராவின் இயல்புதான். சமயத்தில் ஆணி அடித்தாற் போல் பேசுவதை மெச்சி, அவளைச் சட்டக் கல்லூரியில் சேர்க்க அவள் தகப்பனார் ஆசைப்பட்டார். நான்தான் குறுக்கே நின்றேன். வக்கீல் பெண்ணுக்கு ஜட்ஜ் மாப்பிள்ளை தேட வேண்டி வரும் என்று அஞ்சினேன். பி. ஏ.வோடு நிறுத்தப் பாடுபட்டேன். அவளும் எப்படியோ எம். ஏ. படித்து விட்டாள். உத்தியோகமும் செய்தாள். இன்று அவள்



அநுத்தமா



மனசுக்கேற்ற மணாளனும் கிடைத்து விட்டான்.

என் கைதான் சலித்து, நொடித்து, நோவுற்றுவிட்டது. ஆயின் சித்ராவுடன் மேலும் மேலும் பேச நான் விரும்பவில்லை. பேச்சு தடித்து, வாக்குவாதமாகி, வீட்டில் ஓசை பெருகுமேயன்றிப் பலன் ஒன்றும் காண முடியாதே ?

சித்ராவின் தகப்பனார் வேறு வந்து எங்கள் சண்டையைக் கவனித்து விட்டால், மிகவும் கோபம் கொள்ளலாம். பிறகு பெண்ணைத் திசை தெரியாமல் திட்டி விடலாம். நாளைக்கே அவள் புக்ககம் போய் விட்டால், அவள் முகத்தைப் பார்க்க வேண்டும் என்றாலும் புக்ககத்தாரைக் கெஞ்ச வேண்டும் சிறு வயசில் அவள் ஆசைப்படுவது இயற்கைதானே?

எல்லாவற்றையும் எண்ணி, என்னைச் சமாளித்துக் கொண்டேன்.

''என்னிடம் வரும் போது தான் உனக்குச் சுத்தனாகப் பேச்சு வருகிறது, அம்மா! கண்டிப்பாகக் கணக்கு எல்லாம் காட்டுகிறாய். அது போலவே மற்றவர்களிடமும் நீ இருந்தால் நம்முடைய குடும்பமே உருப்பட்டிருக்கும்.''

''ஆமாமடி, கிடக்கிறேன் போ.''

''நேரே கேட்டு விட்டால் இப்படித்தான் வழுக்குகிறாய், அம்மா!''

''என்னை என்ன செய்யச் சொல்லுகிறாய் ?'' என்றேன்.

''கமலு மாமியிடம் போய்க் கேளேன். இருநூறாவது தரட்டுமே? நம் சமயத்துக்கு உதவுமே ?''

நான் மௌனமானேன். வீட்டில் ஒவ்வொருவரும் இதே பல்லவியைத்தான் பாடுகிறார்கள். எனக்குத்தான் கமலுவைக் கேட்கச் சங்கடமாக இருக்கிறது. கமலுவுந்தான் ஆகட்டும், எட்டு வருஷங்களாக ஒரு கடனை மறந்திருக்கலாமோ?

சின்ன வயது முதல் ஒரே கலத்தில் உண்டு, ஒரே இடத்தில் படித்து, விளையாடி, ஒன்றிப் பழகினோமே? அவளுக்கு என் சுபாவம் தெரியாதா? நான் வாய் திறந்து கேட்பேனா? கொடுக்க வேண்டியதைத் தானாகவே கொடுத்து விட்டால்? '

என் வரையில் அவள் கொடுக்கா விட்டாலும் பரவாயில்லைதான். மனிதனுக்கு மனிதன் உறவு, நெருக்கம், அன்புப் பிணைப்பு என்றெல்லாம் உறவாடி விட்டு, ஒரு சமயத்தில் செய்த அற்பமான உதவியைப் பெரிதுபடுத்திக் கொண்டிருக்க முடியுமா ?

''சின்னத் தொகையா? பேசாமல் இருக்கிறாயே? காலேஜுக்குப் பணம் கட்ட வேண்டுமானால் கடன் வாங்குகிறாய். கமலு மாமியைக் கேட்கக் கூடாதா? நான் கேட்கிறேனே?'' என்று என் மகன் வேறு என்னை நச்சரித்தான்.

''என்னிடம் என்னத்தை மதிப்பு இருந்தால் நீ அப்படிச் செய்ய மாட்டாய்'' என்றேன் நான், ஆணை வைப்பது போல்.

''அவளை ஏனடா தொல்லை கொடுக்கிறீர்கள்? உங்களுக்கென்ன பண விவகாரத்தைப் பற்றி? உங்கள் தேவையை நாங்கள் பார்த்துக் கொண்டிரோம். அதிகப்பிரசங்கித்தனமாக அம்மாவை விரட்டாதீர்கள்'' என்று என் கணவர் தம் மக்களை அதட்டினார்.

நான் மனசோடு அவருக்கு நன்றி செலுத்தினேன். ஆனால் குழந்தைகள் கேட்கிறார்களா — தகப்பனார் இல்லாத சமயத்திலெல்லாம், நெருக்கடி நேர்ந்த போதெல்லாம் கொட்டிக் கொட்டிக் கேட்டுக் கொண்டேதான் இருந்தார்கள்.

நான் ஒரு தீர்மானத்துக்கு வந்து விட்டேன். குழந்தைகள் சொல்வது சரிதான் என்று தோன்றி விட்டது எனக்கு. கமலுவுக்கு நாம் ஒரு சமயம் உதவியது போல் அவளும் நமக்கு இப்பொழுது கைகொடுக்கலாமே? இன்று யாருக்கும் தெரியாமல் கமலுவிடம் போய்....

''அம்மா, அம்மா! கமலு மாமி வந்து கொண்டிருக்கிறாள் '' என்று என் சின்னப் பெண் சொல்லி முடிப்பதற்குள் கமலுவே ஜவுளிக் கடை அட்டைப் பெட்டிகள் இரண்டைச் சுமந்துகொண்டு உள்ளே நுழைந்தாள்.

''நூறு ஆயுசு!'' என்றேன் நான்.

''என்னைப் பற்றி நினைத்துக் கொண்டாயா?'' என்று சிரித்த முகத்துடன் கேட்டுக் கொண்டே என் அருகில் வந்து அமர்ந்து கொண்டாள் கமலு.

'' உங்களைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருந்தோம், மாமி!'' என்று கூறி விட்டு, என் பெண் எனக்குக் கண்ணால் தந்தி சமாசாரம் கொடுத்தாள். 'இதுதான் சரியான தருணம். கேள், கேள்!' என்று தூண்டியது அவள் கண் வீச்சு.

நான் கமலுவைப் பார்த்தேன். அவள் தன் கையில் இருக்கும் பெட்டிகளைத் திறந்து, பட்டுப் புடவைகள் இரண்டை எடுத்துக் காட்டினாள்.

''அலமு! நான் காஞ்சீபுரம் போயிருந்தேனா? இந்த இரண்டு புடவைகளை எடுத்து வந்தேன். பட்டுப்புடவை வாங்கி நான்கு வருஷங்களாயிற்று. இந்தத் தடவை தீபாவளிக்கு வாங்கிக் கொள்ளச் சொன்னார். ஜோடியாக இருக்குமல்லவா?'' என்று கேட்டாள் கமலு.

புடவைகள் இரண்டும் மிகவும் நேர்த்தியாக இருந்தன. அவள் எத்தனையோ நாட்களாக ஆசைப்பட்ட அரக்கு மேக வர்ணமும், மயில் கழுத்தும், மகேசுவரி பார்டரும்.

''நன்றாக இருக்கின்றன. ஒன்றைத் தீபாவளியன்று கட்டிக் கொள். ஒன்றை இன்றே பிரித்து விடு'' என்றேன் நான், உற்சாகமாக. புடவைகளைக் கையில் எடுத்தாலே அழுத்தமாகவும் கனமாகவும் இருந்தன.



''மேட்டுத் தெருவிலே தறியிலிருந்து இப்பொழுதுதான் வந்தது'' என்றாள் கமலு பெருமையோடு.

என் பெண் என்னை வெட்டி ஒரு பார்வை பார்த்து விட்டு, அகவாரசியமாக எழுந்து போய் விட்டாள்.

''இரண்டும் சேர்ந்து இருநூற்றைம்பது ரூபாய் ஆயிற்று'' என்றாள் கமலு.

''ரொம்ப மலிவு'' என்றேன் நான்.

கமலு கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டுக் கிளம்பினாள். ''மாப்பிள்ளை வருகிறாராமா?'' என்று கேட்டாள் அவள், வாசற்படியில் நின்று.

''வருகிறாராம். பெங்களூர், மைசூர் எல்லாம் போக வேண்டுமாம். திட்டம் போட்டிருக்கிறார்'' என்றேன் நான்.

'' ஆமாம் ! போய் விட்ட மாதிரி தான்!'' என்று அலுத்துக் கொண்டாள் அப்பொழுது அங்கே வந்த சித்ரா.

''ஏன்?'' என்று கேட்டாள் கமலு.

''திட்டம் போட்டால் நடக்கும் வரையில் சந்தேகம் தானே ? சிறிசுகளுக்குப் பொறுமை இருக்குமா?'' என்றேன் நான், குறுக்கிட்டு.

கமலு விடை பெற்றுப் போய் விட்டாள். நான் உள்ளே வந்து விட்டேன். என் பெண் என் எதிரே பயங்கர மௌனம் சாதித்தாள்.

எட்டு வருடங்களுக்கு முன் நடந்த சம்பவம்.

கமலுவின் கணவர் முத்துலிங்கத்துக்குப் பிரமாதமாக உடம்புக்கு வந்து விட்டது. உடனே வேலூர் ஆஸ்பத்திரிக்குப் போகாவிட்டால் பிழைக்க மாட்டார் என்றார்கள்.

கமலு என்னிடம் ஓடி வந்தாள். அவள் கழுத்திலிருந்த மூன்று வடத்தங்கச் சங்கிலியை என் கையில் திணித்தாள். ''அலமு! உன் புருஷரைக் கேட்டு நானூறு ரூபாய் எங்காவது வாங்கிக் கொடேன். இந்தச் சங்கிலியை அடமானம் வைக்கச் சொல்'' என்று கண்களில் நீர் சோரக் கேட்டாள்.

என் கணவர் இதைக் கேட்டுக் கொண்டு தான் இருந்தார். சங்கிலியை வாங்கிக் கொண்டு போய், உள்ளேயிருந்து நான்கு நூறு ரூபாய் நோட்டுக்களைக் கொண்டு வந்து தந்தார்.

''ஏது?'' என்று கேட்டேன் நான்.

'' ஆபீஸில் கடன் வாங்கினேன். கொடு. நாம் பிறகு பார்த்துக் கொள்வோம்'' என்றார்.

கமலு எங்களை வாழ்த்தி விட்டுத் தன் வீட்டுக்கு விரைந்தாள்.

கணவன் கையில் சங்கிலியைக் கண்ட எனக்கு ஏனோ சங்கடமாக இருந்தது. ''கழுத்தில் மஞ்சள் கயிறு தவிர வேறு இல்லாமல் போகிறாள். அதோடு திரும்பி வர ஆண்டவன் அருள வேண்டுமே!'' என்று நான் கண்ணீர் வடித்தேன்.

''அலமு, இந்தா! இந்தச் சங்கிலியை அவள் கழுத்தில் போட்டு அனுப்பு. அவள் நிதானமாக நம் கடனைத் திருப்பித் தரட்டும்'' என்றார் என் கணவர்.

நான் கடவுளுக்கு நன்றி செலுத்தி விட்டுப் போனேன். என் தோழியின்



வாடிக்கைக்காரர்களுக்கும், வர்த்தக அன்பர்களுக்கும் எமது தீபாவளி வாழ்த்துக்கள்!

போடும் போதெல்லாம் புத்துணர்ச்சி தருவது




# அப்பாதுரை பட்டணம் பொடி



காரம், மணம், குணம், நிறம் நிறைந்தது....

தயாரிப்பாளர்:

**ஆ. அப்பாதுரை முதலியார் & சன்**

55, ஆச்சாரப்பன் தெரு, P.B. No: 189. சென்னை-1.

---

வர்த்தக அன்பர்களுக்கும் வாடிக்கைக்காரர்களுக்கும் மங்களகரமான தீபாவளி வாழ்த்துக்கள்

சமையலுக்கு சிறந்தது







# S.R கூட்டு பெருங்காயம்




ஆராதனைக்கு

**குமரன்** அசல் கற்பூரவில்லைகள்

S.R. ஜவ்வாது & ஸ்பெஷல் பத்திகள்

PHONE 51256 **பாலகிருஷ்ண இண்டஸ்டிரியல் ஒர்க்ஸ்,** Grams PERUNGAYAM

சென்னை-13.

# காலக் கலம்பகம்

இரவு பகல் எத்தனையோ எண்ணற்கரிய காலம்;
இயற்கையிலும் பருவமென இசைந்து நிற்கும் காலம்;

பிறவிகளில் பலவிதமாய்ப் பேதம் செயும் காலம்;
பெருந்துயரம் இன்பமெல்லாம் பின்னோட்டும் காலம்;

துறவிகளின் சிந்தனையைத் துருவிடும் மூக் காலம்;
தூயமன வெல்லைக்கெட்டாத் தொடுவானம் காலம்;

பிறரையாக்கியழிக்கவல்ல பெரிய சக்தி காலம்;
பிறப்பிறப்பைத் தானறியாப் பெருங்கடவுள் காலம்.

கழுத்தைத் துடைத்து அனுப்ப எனக்கு அச்சானியமாக இருந்தது. கணவரிடம் சொல்லவும் சங்கடமாக இருந்தது. அவரே புரிந்து கொண்டு நகையைத் தந்ததும், ஓடோடிச் சென்று வாழ்த்தி, தோழியை வழியனுப்பினேன்.

அது நடந்து எட்டு வருடங்கள் ஆகி விட்டன. கமலுவின் கணவர் பத்துமாதம் படுக்கையாகக் கிடந்தார். அதனால் வேலை போய் விட்டது. அவர் திரும்பி வந்து சில நாட்கள் அவர்கள் சிரமப் பட்டனர். அதன் பிறகு சற்று வெளிச்சம் ஏற்பட்டது. சிறிய தொகையைப் போட்டு துணி வியாபாரம் ஆரம்பித்தார். அது ஓங்கி வளர்ந்து இன்று அவர்கள் நல்ல ஸ்திதிக்கு வந்து விட்டார்கள். கமலுவும் நானும் அன்று போல இன்றும் நெருங்கிப் பழகுகிறோம்.

பணத்தைப் பற்றிப் பேச்சு எடுக்க, தோழியின் நிலவரம் சற்று நிமிர்க்கட்டும், தந்து விடுவாள் என்று நான் நினைத்தேன். பிறகு, சித்ரா கலியாணத்தின் போது சமயமறிந்து தானாகக் கொடுப்பாள் என்று எதிர்பார்த்தேன். ஆயின், முகூர்த்தத்தன்றுதான் கமலுவும் அவள் கணவரும் சேதத்திராடனம் செய்து விட்டுத் திரும்பினர்.

அதன் பிறகு, என் பிள்ளை பாஸ்கரன் உத்தியோக பேட்டிக்குப் போவதற்காகப் பணம் கேட்டபோது கேட்டிருக்கலாம். கேட்டு விடுவது என்றுதான் நானும் என் கணவரும் சென்றோம். கமலுவின் வீட்டு வாசலில் பெட்டிக் கார் ஒன்று வந்து நின்றது.

''புதிய வண்டி. தவணையில் வாங்கினோம். பின்னாடி சரக்குகளை வைத்துக் கொண்டு போகலாம், பாருங்கள்'' என்று தம்பதிகள் இருவரும் உற்சாகமாகக் காட்டினார்கள்.

தாட்சண்யப் பட்டுக்கொண்டு பேசாமல் பணத்தைக் கேட்காமலே திரும்பி விட்டோம் நாங்கள் இருவரும்.

இப்படியே வருடங்கள் கழிந்தன.... கமலுவின் குடும்பம் நலிந்திருந்த சமயம் கேட்கச் சங்கடமாக இருந்தது. அவர்கள் நல்ல நிலைமையில் இருக்கும்போது கேட்க வெட்கமாக இருந்தது. நண்பர்கள் நல்ல ஸ்திதியில் இருப்பதைக் காணச் சகியாதவர் போல் தெரியுமோ என்று அஞ்சினோம்.

என் பெண்ணும் பிள்ளையும் மட்டும் எருதின் புண்ணைக் கொத்தும் காக்கைகளைப் போல் என்னைக் கொத்திவைக்கணம் இருந்தனர்.

நான் பட்சண அடுப்படியில் மும்முரமாக வேலை செய்து கொண்டிருந்தேன். கோலம் போட்டுக் கொண்டிருந்த என் பெண் என் அருகில் வந்தாள்.

''அம்மா, பெங்களூர், மைசூர் பற்றியே அவர் பேசுகிறார். நான் என்ன பதில் சொல்ல? நீ இடித்த புளி மாதிரி இருக்கிறாய். போ, அம்மா! என் சம்பாத்தியத்தையாவது தனியாக வைத்திருந்தால் நான் உபயோகப்படுத்திக் கொண்டிருக்கலாம். அதையும் செலவு செய்து விட்டாய்!'' என்றாள் சித்ரா. கண்ணீர் முட்டியது அவள் தொண்டையிலும் கண்ணிலும்.

''நீ பெண்ணாக இருக்கவேதானே இப்படி உன் சம்பாத்தியத்தைப் பற்றிக் குத்திக் குத்திக் கேட்கிறாய்? பிள்ளையாக இருந்தால் இப்படிக் கேட்பாளா?'' என்று அலுப்போடு கேட்டேன் நான்.

''பிள்ளையானால் மட்டும் என்ன, அம்மா? எங்களைப் படிக்க வைப்பது உன் கடமை. அதைச் கட்டிக் காட்டி நீ தப்பித்துக் கொள்ளப் பார்க்கிறாயே? கமலு மாமியைப் பணம் கேட்காமல் தட்டிக் கழிக்கிறாயே? அந்தத் தத்துவம் தான் புரிய வில்லை. நேற்று துணிக் கடை நாயக்கர் எப்படிப் பேசினார், தெரியுமா? சொல்லாமல் சொல்லி, வாழைப் பழத்தில் ஊசி ஏற்றின மாதிரி 'பழைய பாக்கி நிராயலே, புதிய கணக்கு ஏற்றி வருவது சரியில்லே' என்று தொனிக்கிற மாதிரி அவர் பேசினபோது எனக்குத் தலை இறக்கமாக இருந்தது'' என்றான் பாஸ்கரன், அங்கே வந்துகொண்டே.

''சரிதானடா! கமலு ஒரு நானூறு ரூபாய்தான் கொடுக்க வேண்டும். அதனால் இந்நூறு ரூபாய் துணிக் கடன் தீர்ப்பாயா, மாப்பிள்ளைக்கு இருநூறு தந்து, நீ இருநூறு எடுத்துக் கொள்வாயா? மளிகைக் கடை நானூறு ரூபாய் பாக்கியைத் தருவாயா — எத்தனை தான் அதில் செய்ய முடியும், சொல்'' என்றேன் நான்.

''பாஸ்கர்! நீ அம்மாவோடு பேசிப் பயனில்லே. கமலு மாமியிடம் இருக்கும் அன்பில் நூற்றில் ஒரு பங்குகூட நம்மிடம் இல்லையே?''

''ஏன், அம்மா, மாமியின் சங்கிலியையாவது வைத்திருந்தால், இன்றைக்கு அதை நாமாவது அடமானம் வைத்து வாங்கிச் செலவு செய்யலாம் அல்லவா?'' என்றான் பாஸ்கரன்.

''செய்யலாம். எட்டு வருஷங்களில் அது மூழ்கிக் கூடப் போயிருக்கும். நாமே சங்கிலியை அநுபவித்திருக்கலாம். அதை விற்றும் பயன்படுத்தலாம்....''

''...... உன் அம்மா அதன் மீது விரலாவது வைத்திருப்பாளா? உங்களுக்கு ஒரு மண்ணும் புரியாது. எப்பொழுது பார்த்தாலும் பணம் பிடுங்கத் தான் தெரியும். உங்கள் தலைமுறையே அப்படி!'' இவர்கள் பேச்சைக் கேட்டுக் கொண்டும், அதற்குப் பதில் சொல்லிக் கொண்டும் அங்கு என் கணவர் வந்து சேர்ந்தார்.

''உங்கள் தலைமுறை மிகவும் ஒழுங்கோ? வாங்கின கடனைத் திருப்பிக் கொடுக்காமல் காரும், பட்டும், பீதாம்பரமும் வாங்கி, தாம் மட்டும் சுகமாக இருக்கிறது உங்கள் தலைமுறை!'' என்று என் அருகில் முணுமுணுத்தாள் சித்ரா.

பெண்ணின் பேச்சு அவள் தகப்பனின் செவியில் விழப் போகிறதே என்று நான் அஞ்சினேன். ஆனால் அவர், அருகேயிருந்த பட்சணத் தட்டிலிருந்து ஒரு பாதுஷாவையெடுத்து வாயில் போட்டபடி, ''நான் மாப்பிள்ளையை அழைத்துக் கொண்டு வெளியே போய் விட்டு வருகிறேன். அதற்குள் உங்கள் வேலைகளையெல்லாம் முடித்துக் கொண்டு, வீட்டை அழகாக வையுங்கள்'' என்று வெளியேறினார்.

''பெண்ணையும் அழைத்துப் போங்களேன்'' என்றேன் நான்.

''நான் வரவில்லை, அம்மா'' என்றாள் சித்ரா. தன் தகப்பனும் கணவரும் வெளியே போனார்களா என்பதைப் பார்த்து விட்டு வந்து மீண்டும் கோலத்தில் முனைந்தாள்.

''அவர்களோடு போகச் சொல்கிறாயே? அவர் எதிரே போனால், அவர் உல்லாசப் பிரயாணத்தைப் பற்றியே பேசுகிறார். அப்பாவோ, பணத்தைப் பற்றிப் பேசினால் வெட்டி வெட்டிப் பேசுகிறார்'' என்று அலுப்புடன் கூறினாள்.

பெண்ணின் நிலைமை தர்மசங்கடம் தான். ஆயினும், அதைக் கவனியாதது போலவே நடந்து கொண்டேன் நான்.

பெண் உதட்டை முறுக்கினதைக் கண்டும், காணாதது போல் எனக்குள் சிரித்துக் கொண்டேன். நாளை பகல் வரையில் தீபாவளி அமர்க்களப்படும். அதற்குப் பிறகு.....?

நான் ஏதேதோ சிந்தித்தேன். அடுத்த படி கமலு வந்தால் கேட்டுவிடுவது என்று திட சங்கல்பம் செய்து கொண்டேன்.

அன்றெல்லாம் கமலு தலை காட்டவேயில்லை. மறு நாள் விடியற்காலை புத்தாடை உடுத்திக் கொண்டு 'கங்கா ஸ்நானம்' விசாரிக்கத்தான் வந்தான்.

"இங்கேயே எங்களுடன் இருந்து விடுங்கள்!" என்று நான் கேட்டுக் கொண்டதன் பேரில், கமலு குடும்பம் எங்கள் வீட்டிலேயே தங்கி விட்டது.

பகல் போஜனம் ஆயிற்று. கமலுவின் பிள்ளையுடன் பாஸ்கரன் மாடிக்குப் போய் விட்டான். பெண்ணோ மாப்பிள்ளையுடன் பேசப் போய் விட்டாள். இரு ஆடவர்களும் கூடத்தில் சாய்ந்த வண்ணம் ஒய்யாரமாக இருந்தார்கள்.

கமலு என்னைத் தனியாக அழைத்தான். "அலமு! நான் உனக்கு ஒன்று தருவேன். 'வேண்டாம்' என்று தடுக்கக் கூடாது. முன்பு எனக்கு நானூறு ரூபாய் தந்தாயே, நினைவிருக்கிறதா?" என்று கேட்டு விட்டு, என் முகத்தைப் பார்த்தான்.

என்னை யார் மறக்க விட்டார்களாம்? நிமிஷத்துக்கு நிமிஷம் தேள்போல் கொட்டி வருகிறார்களே!

"ஆமாம், அதற்கென்னவாம் இப்போது?" என்று நான் அமைதியாகக் கேட்டேன்.

"ஒன்றுமில்லை. இந்த உறையை நான் வீட்டுக்குப் போன பிறகு பிரித்துப் பார்" என்று கூறின கமலு. மேலே பேசவுமில்லை, என் பதிலுக்குக் காத்திருக்கவும் இல்லை. நானே ஓடி, தடுத்து, நிறுத்தித் தாம்பூலம் தந்து அனுப்பினேன்.

அவன் போன பிறகு நான் உறையைக் கிழித்தேன். கடிதத்துடன் பொல பொல வென்று ஏதோ விழுந்தது. என் கணவர், "என்ன, அலமு?" என்று கேட்டார்.

## கைவல்யம்!



வாயைத் திறந்து ரிஸ்ட் வாட்ச் கேட்பதில்லை என்று சபதம் செய்த காட்டுவைத்தியரின் மாப்பிள்ளை:
"மாமா! ஜுரமாக இருக்கு! கொஞ்சம் என் கையைப் பிடிச்சுப் பாருங்கோ!"

"கமலு ரூபாயைத் திருப்பித் தந்தானாக்கும். அதை என்னமோ மர்மமாக உறையில் போட்டு ஒட்டித் தந்து விட்டு, நிற்காமல் ஓடி விட்டான்" என்று விளக்கினேன் நான், கீழே விழுந்தவைகளைப் பொறுக்கிக் கொண்டே.

பாஸ்கரன் என் கையில் இருந்த கடிதத்தை வாங்கினான். சத்தத்தைக் கேட்டு, சித்ராவும் வந்தாள். அவர்களே பிரித்தார்கள், படித்தார்கள், கூச்சலிட்டார்கள். பிறகுதான் அவர்கள் எனக்கு அதை உரக்கப் படித்துக் காட்டினர்.

"'அலமு,

'அன்று கைநாட்டுக்கூட இல்லாமல் நானூறு ரூபாய்களை எண்ணி என்னிடம் தூக்கித் தந்தாய். சங்கிலியைக் கூட வைத்துக் கொள்ளாமல் ஓடி வந்து என் கழுத்தில் போட்டு விட்டாயே? உன் மனசு தாராளத்தையும், உன் கணவரின் பெருந்தன்மையையும் எப்படிப் பாராட்டுவது? அதனால்தான் எனக்கு இக் கடிதம் எழுதக்கூட கூச்சமாயிருக்கிறது.

'நீ கொடுத்த வேளை நல்லது. எனக்கு மாங்கல்யப் பிச்சை கிடைத்தது. பிறகு மெதுவாகச் சேர்த்து உனக்குத் திருப்பித் தருவதற்காக இருந்தேன். இவரை யாரோ லுங்கி வியாபாரத்தில் இழுத்து விட்டனர். உன் பணம்தான் அதற்கு முதலாகப் பயன்பட்டது. அது செழித்தது. மீண்டும் உன் பணத்தைச் சேமித்தேன். புதுக் கார் வாங்க முன் பணமாகக் கட்டும்படி நேர்ந்தது. அதாவது என்ன — நாங்கள் அப்படிப் பயன்படுத்திக் கொண்டோம். இவருக்கு உன் கைராசியில் அவ்வளவு நம்பிக்கை. எந்தப் புது முயற்சிக்கும் உன் பணம் தான் முதல் போகிறது.

'கடைசியாக இரண்டு வருடங்களுக்கு முன் மீண்டும் உன் பணம் உன்னிடம் வர இருந்த சமயம் பங்குமார்க்கெட் அதற்கு வழி தேடியது. அது முற்றி இன்று நல்ல விலை விற்றதாம். ஆயிரத்துத் தொள்ளாயிரம் ரூபாய் கிடைத்தது. ஆனால் உன் நானூறைக் குறைத்துக் கொண்டு ஆயிரத்து ஐந்நூறுதான் தந்திருக்கிறேன். நல்ல ராசியான அந்தப் பணத்தைத் திருப்ப இவர் இணங்கவில்லை. இதை உன்னிடம் சொல்லக் கூட எனக்கு வெட்கமாக இருக்கிறது. எட்டு வருட காலமாக நான் குழம்பியதை நீ அறிய மாட்டாய். உன்னைப் பார்க்கும்போது எல்லாம் எனக்குப் பணத்தின் நினைவு தான். நீ அதைப் பற்றி மறந்தே விட்டிருந்தது என்னை மேலும் குத்தியது. ஒரு முறையாவது நீ கடனைப் பற்றிப் பிரஸ்தாபித்திருந்தால் என் மனசுக்குச் சாந்தி யிருந்திருக்கும். இத்தனையும் போதாதென்று, தீபாவளிப் புடவைகளை உன் கையினால் தொட்டு வாங்கிக் கொள்ளச் சொல்லி அனுப்பினார். எனக்கு அவரை மறுக்கவும் துணிவில்லை. உன்னிடம் சொல்லவும் சங்கோசமாக இருந்தது. கல்யாணச் செலவுகள் உன்னை மென்னியைப் பிடிக்க, நல்ல தீபாவளி நடத்த நீ திணறிக் கொண்டிருக்க, நான் பட்டுப் புடவைகளைக் கொண்டு வந்து காட்டுவது அநாகரிகமாக இருந்தது.

'உன் பொன் மனம் எதையும் தவறாக நினைக்கா விட்டாலும், உன் குழந்தைகள் அப்படி நினைக்க மாட்டார்கள்! ஆனால் அவர்கள் உன் குழந்தைகளாயிற்றே — அவர்களும் பேசாமல் இருந்து விட்டது

## நாய் விற்ற காசு குரைக்கும்!



"ஏன்யா!, படபடன்னு எரிஞ்சு விழறே! உன் பட்டாச பாக்கியைக் கொடுக்காமலா போயிடுவார்!"
"நான் அப்படித்தான் பேசுவேன்! உன் லுங்கிக் கடை பாக்கியை நீ வேணுமானால் அளந்து பேசி வாங்கிக்கோ!"

அதிசயமில்லைதான். என் மனம்தான் படாத பாடு பட்டு விட்டது. வலுக்கட்டாயமாக நானூறு ரூபாய்ப் பரிசைப் பறித்துக் கொண்ட என் கணவரை நீ மன்னிப்பாய். ஆயின், உன் கணவருக்கு என்ன பதில் சொல்வாய்?"

பாஸ்கரன் படிப்பதை நிறுத்தினான்.

"என்னடா சொல்கிறாய்? கமலுவை வாய் விட்டுக் கேட்டிருந்தால், இந்தப் பரஸ்பர ஆனந்தமும், அன்புப் பிணைப்பும் இருந்திருக்குமா?" என்று கேட்டார் என் கணவர் தம் மக்களை.

"என்னமோ இந்த ஒரு சந்தர்ப்பம் அப்படி நேர்ந்து விட்டது. கமலு மாமிகளும், தம் அம்மாக்களுமேவா இந்த உலகத்தில் இருக்கிறார்கள்? அவர்கள் அரட்டைக் காலத்தைச் சேர்ந்த அசட்டு மனிதர்கள்" என்றான் பாஸ்கரன் சட்டென்று.

"அப்படி யெல்லாம் இதயத்தைப் பூவால் ஒத்திப் பார்த்துக் கொண்டிருக்கிற காலம் இதல்ல. வேகம், வேலை, பலன் — இவைதான் எங்கள் நாட்களின் முக்கிய கருத்து" என்றாள் சித்ரா.

"இந்தச் சமர்த்து உலகில் நான் இருக்கவே லாயக்கற்றவளா?" என்று கேட்டேன் நான்.

"அது ஒன்றுமில்லை. உன்னைப் போல் அசடர்கள் அன்றும், இன்றும், என்றும் இருப்பார்கள். இவர்களைப் போன்றவர்களும் எப்பொழுதும் இருந்துகொண்டே இருப்பார்கள்" என்று என்னை ஆசுவாசப்படுத்தினார் என் கணவர்.

என் மக்களின் வாதப் பிரதிவாதங்கள் எனக்குப் புரிய வில்லை. அவர்கள் காலம் எனக்குப் பிடிபட வில்லை. ஆனால் கமலுவுடன் நான் இன்னமும் நெருங்கி விட்டது போலத் தோன்றுகிறது. என் மன நிறைவை எடுத்துக் காட்டுவது போல் ஒளி ஊற்றைக் கொப்புளித்தது தெருவில் ஒரு பூ வாணம்.

# எந்நாட்டவர்க்கும் இறைவன்

நினைந்துருகும் மெய்யடியார்களைக் கூட நைய வைத்து விட்டு, தம்மை நாடாத பிற மதத்தினருக்கு நமது தெய்வங்கள் தரிசனம் தந்த அற்புதம் பல முறை நிகழ்ந்திருக்கிறது. இவற்றில் நாலு சம்பவங்களை அடுத்து வரும் பக்கங்களில் ஓவியர்கள் சித்ரலேகாவும், நடராஜனும் கவினுறு சித்திரங்களாக வழங்கியிருக்கிறார்கள்.



திருநாராயணபுரத்தில் கோயில் கொண்டிருந்த சம்பத் குமாரன் விக்கிரகத்தை முஸ்லீம் மன்னனின் படையாட்கள் தூக்கிச் சென்று விடுகின்றனர். மற்றும் பல கொள்ளைப் பொருள்களுடன் அரண்மனையில் பெருமான் விக்கிரகத்தைக் கண்ட முஸ்லீம் ராஜகுமாரி அவனிடம் உள்ளத்தைக் கொள்ளை கொடுக்கிறாள். பெற்றோருக்கும் தெரியாமல் அவனை ரகசியமாக வைத்து வழிபடுகிறாள். அவனும் சிலையாயின்றி உயிருள்ள அன்பனாக வாழ்ந்து அவளது அன்பை ஏற்கிறான்.

அங்கே திருநாராயணபுரத்தில் விக்கிரகம் காணாமல் ஸ்ரீ வைஷ்ணவர்கள் பதைத்த போது உடையவரும், பாஷ்யகாரருமாகிய ஸ்ரீ ராமானுஜாசாரியர் தமது யோக சக்தியால் அதன் இருப்பிடத்தை அறிகிறார். முஸ்லீம் மன்னனிடம் செல்கிறார். "என் அரண்மனையில் அப்படி ஏதும் விக்கிரகம் இருப்பதாகத் தெரியவில்லையே! இருந்தால் நீங்கள் எடுத்துச் செல்லலாம்" என்று மன்னன் மரியாதையுடன் கூறுகிறான். அரசன் தொடர, ஸ்ரீ ராமானுஜர் அரசகுமாரியின் அந்தப்புரத்துக்குள்ளேயே செல்கிறார். "செல்வப் பிள்ளாய்! சம்பத் குமாரா! வா வா" என்று இரு கைகளையும் நீட்டுகிறார். மறைவிடம் ஒன்றிலிருந்து திரையை விலக்கிக் கொண்டு பெருமான் அவரிடம் ஓடி வந்து மீண்டும் சிலையாகிறான். இது முதல் ஓவியம்.



தனது தினசரி வழக்கப்படி ஸ்ரீ கிருஷ்ண விக்கிரகத்துக்குப் பூஜை செய்கிறான் அக்பரின் நாவிதன் வேணு. அவன் மனைவியும் ஆடிப் பாடி ஆராதிக்கிறாள். அவன் நிஷ்டையில் ஆழ்ந்து விடுகிறான்.

அவன் குறித்த நேரத்துக்கு வாராததால் அரண்மனைச் சேவகர்கள் அங்கு வந்து விடுகிறார்கள் அவனை இழுத்துச் செல்ல. அவனுக்குரிய தண்டனை சிரச்சேதம்தான்.

இதே சமயத்தில் அரண்மனையில் வேணு அக்பருக்குச் சிகையலங்கரிக்கிறான். அவருக்கு அவனது ஸ்பரிசம் புதியதொரு ஆனந்த அதீதத்தை அளிக்கிறது. தைலப் பாத்திரத்தில் தெரியும் வேணுவின் பிரதிபிம்பத்தைக் கண்ட அவருக்கு மயிர்க்கூச்செறிகிறது. வேணுவா அது? நீல நிறத்துப் பாலன் ஒருவன் கையில் மயில்பீலியுடன் அதில் காட்சி தருகிறான். "யாரவன்?" என்று சிந்திக்கிறார் அக்பர்.

உண்மையான வேணுவைச் சேவகர்கள் இட்டு வர அக்பருக்கு முடி சிங்காரித்த அந்த இன்னொரு வேணு மறைந்து விடுகிறான். அவன் யாரென வேணு அறிந்து விதிர் விதிர்க்கிறான். அக்பருக்கும் தெரிவிக்கிறான். இருவரும் தைலப் பாத்திரத்தில் கோபாலனின் திருவுருவைக் காண்கிறார்கள்.

இந்தக் காட்சியை இரண்டாவது சித்திரத்தில் காண்கிறீர்கள்.



மூன்றாவது சித்திரத்தில் நீங்கள் காணும் வரலாறு மதுராபுரி நாயகியின் மகிமையைக் கூறுகிறது.

1812-ல் மதுரை கலெக்டராயிருந்தார் ரோஸ் பீட்டர்.

கன்னிவாடி, பெரியகுளம், போடிநாயக்கனூர் முதலிய பகுதிகளில் இருந்த காட்டு யானைத் தொல்லையைத் தீர்த்த 'பீட்டர் பாண்டியன்' என்றே மக்களால் அன்போடு அழைக்கப்பட்டார் அவர். அவர் எப்போது குதிரையின் மீதேறி வெளியே செல்லும் போதும் அங்கயற்கண்ணியின் ஆலயத்தை வலமாகச் செல்வது வழக்கம்.

கன மழை பொழிந்த ஒரு சமயத்தில் அவர் தமது வீட்டில் தனியாகப் படுத்துறங்கிக் கொண்டிருந்தார். அழகே உருவான ஒரு பெண் குழந்தை அவரைத் தட்டியெழுப்பியது. "என் பின்னே வா மாமா" என்று செல்லமாக அழைத்தது. மந்திர சக்தியில் கட்டுண்டவர்போல் அவரும் அந்தச் சிறுமியைப் பின்தொடர்ந்தார். அவர்கள் வீட்டை விட்டு வெளியேறியதுதான் தாமதம், அவர் எங்கு சயனித்திருந்தாரோ, அந்த அறையின் மீது இடி விழுந்து அது பற்றி எரிந்தது.

குழந்தையின் புறம் திரும்பினார் துரை. அங்கே குழந்தை, பசுமை கமழும் அன்னை போல் ஒரு புகைத் தோற்றம் காட்டி உடனே மறைந்து விட்டாள். "தேவி, மீனாட்சி! காலால் நடவாமல் குதிரையின் மீதிருந்து உன்னை வலம் வந்ததற்கே இத்தனை அருளா?" என்று வியந்தார் பீட்டர். தேவியின் குதிரை வாகனத்துக்கு விலையுயர்ந்த கற்கள் பதித்த பொன் மிதியடிகளைத் தமது காணிக்கையாக அளித்தார்.



1798-ல் மதுராந்தகப் பகுதியில் ஏக மழை பெய்து ஏரி நீர் மட்டம் நாளுக்கு நாள் உயர்ந்து வந்தது. உடைப்பெடுத்து விட்டால் என்ன செய்வது என்று ஊரே கலங்கியது. செங்கல்பட்டு கலெக்டராக இருந்த கர்னல் லயனல் பிளேஸ் கோயில் பட்டர்களிடம், "சுவாமிகளே! இவ்வளவு பெரிய கோயில் கட்டி இங்கு பெருமானைப் பூஜை செய்கிறீர்களே. இவர் உங்கள் ஊர் ஏரியைக் கூடவா காத்துத் தாங்கக் கூடாது?" என்று முதலில் கேலியாகக் கேட்கிறார். பிறகு அவருக்கே என்ன தோன்றிற்றோ, "சரி, நானே பிரார்த்தித்துக் கொள்கிறேன். பிரார்த்தனை ஈடேறினால் தாயாருக்குக் கோயிலும் கட்டித் தருகிறேன்" என்கிறார்.

அன்று நள்ளிரவு. வழக்கத்தை விடப் பெரு மழை. சிந்தாகுலமாக ஏரிக் கரையிலேயே சுற்றிக் கொண்டிருக்கிறார் துரை. மதகால் வெளியேற்றித் தள்ள முடியாத அளவுக்கு ஏரியில் நீர் சேர்ந்து கொண்டே இருக்கிறது. துரையின் உள்ளத்தில் இருள் கப்புகிறது. காரிருளில் அப்போது ஒரு மின்னல் பளிச்சிடுகிறது. துரையின் உள்ளத்திலும் ஒரு மின்னல் பளிக்கிறது. கரு நிற மின்னல் அது! துரை சேற்றில் மண்டியிட்டு வணங்குகிறார். அவர் வழுக்கி விழுந்ததாக எண்ணிச் சேவகன் தூக்கிவிட வருகிறான். "நான் விழவில்லை. விழுந்திருந்தவன் இன்றுதான் எழுந்திருந்தேன். அதோ என்னை எழுப்பியவன்" என்று ஸ்ரீ ராமனைக் கண்டு கூவுகிறார் துரை.

ஏரி காப்பாற்றப்படுகிறது. ஜனகவல்லிக்குக் கோயில் எடுக்கிறார் துரை.

'எந்நாட்டவர்க்கும் இறைவன்' மடலில் இந்த ஓவியம் நாலாவதாக இடம் பெறுகிறது.

எல்லோருக்கும் எங்கள்

மனமார்ந்த தீபாவளி

வாழ்த்துக்கள்





**கலிங்கா ட்யூப்ஸ் லிமிடெட்,**

33, சித்தரன்ஜன் அவின்யு, கல்கத்தா—12.

தொழிற்சாலை:

சௌத்வார், கட்டாக், ஒரிஸ்ஸா

KALPANA.TH.

# யாரை நம்பி வந்தாய்?

ஜி.கே.பொன்னம்மாள்



அந்த ஆலமரத்து நிழலுக்கு வந்ததும் தார் ரோட்டில் நடந்துவந்த அலுப்புத் தீர நின்று தன்னை ஆசுவாசப்படுத்திக் கொண்டான் கடலை முத்து. கண்ணுக்கு எட்டிய தூரம் வரையில் வெள்ளியை உருக்கி ஊற்றியது போல் பளபளக்கும் தார் ரோடும், பளிச்சென்ற வெயிலும் அவன் கண்களைக் கூசச் செய்தன. அவனுடன் வந்த செல்வி பக்கத்தில் இருந்த குழாயடியில் முகத்தைக் கழுவிக் கொண்டு நாலு கை தண்ணீரையும் அள்ளிக் குடித்து விட்டு, ''அப்பாடா! இந்தக் குழாய்த் தண்ணி கூடவா இப்படிக் கொதிக்கணும்?'' என்றபடி அங்கிருந்த ஒரு கல்லில் உட்கார்ந்து புடவைத் தலைப்பால் வியர்வை வழியும் முகத்தைத் துடைத்துக் கொண்டாள்.

''ஏன், குழாய்த் தண்ணி மட்டுமா கொதிக்குது? என் மனசு கூடத்தான் கொதிக்குது. ஒரு பெண்ணின் பேச்சைக் கேட்டு அவளைக் கலியாணமும் செய்து கொண்டு பட்டணத்துக்குப் பிழைக்க வந்து விட்டேன் பாரு, அந்த வயிற்றெரிச்சலை நினைச்சா என் மனசு கொதிக்குது. என் புத்தியைச் செருப்பா லடிக்கணும்'' என்று வெறுப்புடன் பேசிக்கொண்டே மேல் துண்டை விரித்துக் கடலைமுத்துவும் அவள் பக்கத்தில் உட்கார்ந்தான். செல்வி தன் கழுத்தில் மின்னும் மஞ்சள் கயிற்றை ஒருமுறை பார்த்துக் கொண்டாள். என்ன கஷ்டம் வந்தாலும் 'மனத்துக்குப் பிடித்தவனை மணந்து கொண்டு விட்டோம்' என்ற மகிழ்ச்சியே அவள் இதயத்தில் நிறைந்திருந்தது.

''என்ன மச்சான் இப்படிக் கோவிச்சுக்கறே? ஏதோ பட்டணத்துக்கு வந்துட்டோம். இத்தனை ஜனங்கள் பிழைக்கும் இடத்தில் நமக்கு மட்டும் இடமில்லாமல் போய்விடுமா?'' என்று அவனைச் சமாதானம் செய்ய முயன்றாள் அவள்.

''எதையும் பேசி விடுவது சுலபம். பட்டணத்து வாழ்க்கை இங்கு வந்த பிறகல்ல தெரியுது! இரண்டு நாட்களாகப் பட்டினி. கையில் காலணா இல்லே. இங்கு யாரு நமக்கு வேலை வைச்சுக்கிட்டு இருக்கா?'' என்று பொரிந்தான் கடலைமுத்து.

''யாரு தம்பி அப்படி வாழ்க்கையை நொந்து பேசறது?'' என்றது ஒரு குரல். கடலை முத்துவும் செல்வியும் நாலா பக்கமும் திரும்பிப் பார்த்தார்கள். மரத்துக்கு அருகே ஒரு சிறு பிள்ளையார் கோவிலைத் தவிர வேறு எதையும் அவர்களால் பார்க்க முடிய வில்லை. பிள்ளையார் கோவில் என்பதற்கு அறிகுறி யாக எண்ணெய் இல்லாத ஒரு விளக்கும், ஒரு பிள்ளையார் விக்கிரகமும்தான் அங்கிருந்தன. தென்னை ஓலையால் சிறு குடிசை போல் வேயப்பட்டிருந்தது அந்தக் கோவில். அந்த விநாயகரைப் பார்த்ததுமே செல்விக்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை. ''கவலைப் படாதீங்க மச்சான். இதோ இந்தப் பிள்ளையார் அப்பனே நமக்கு வழி காட்டுவாரு. ஏதோ தெய்வ வாக்குப் போல, 'ஏன் வாழ்க்கையை நொந்துக்கிறீங்க?' என்று ஒரு குரல் கேட்டது பாருங்க அதுவே நல்ல சகுனம்'' என்றாள் செல்வி.

''தெய்வ வாக்கு ஒண்ணுமில்லே அம்மா. எல்லாம் மனிசன் பேசற பேச்சுத்தான். இப்படி இந்த மரத்துக்குப் பின்னாலே வந்து பாருங்க. நான் நீங்க பேசிக்கிறதையெல்லாம் கேட்டுக்கிட்டுத்தான் இருந்தேன். எனக்கு எழுந்து நடமாட முடியாது. வாங்க இப்படி'' என்றது அந்தக் குரல்.

மரத்துக்கு மறு பக்கம் சென்று பார்த்த செல்வியும் கடலைமுத்துவும் ஒரு கணம் திடுக்கிட்டுவிட்டார்கள். ஒரு கந்தல் கோணியில் கையையும், காலையும் முடக்கிக் கொண்டு ஓர் உருவம் படுத்திருந்தது. கை கால்கள் குறுகி, முறுக்கிக் கொண்டிருந்தன. எண்சாண் உடம்புக்குச் சிரசும் வயிறுமே பிரதானமாகக் காட்சியளித்தன. ஒரு தகரக் குவளை யில் குடிக்கத் தண்ணீரும் விரித்திருந்த கந்தல் துணியில் நாலு பைசா துட்டுகளும் கிடந்தன. ''ஏன் அப்படி மலைச்சுப் போயி நிக்கிறீங்க? நானும் மனிதன்தான். உட்காருங்க அப்படி. நகர முடியாத நானே வாழ்ந்து கொண்டிருக்கும்போது உடல் பலம், இளமை இத்தனையும் இருக்க, பிழைக்க மூக்கால் அழுறியே தம்பி!'' என்றான். கடலை முத்துவுக்கு எதுவுமே பேசத் தோன்றவில்லை. கிழவன் ஏதேதோ பேசிக் கொண்டேயிருந்தான். கடலைமுத்துவுக்குப் பசி வயிற்றைக் கிள்ளியது. செல்விக்கும் களைப்பு மிகுதியும், ஆலமரத்துக் காற்றும் சேரவே தூக்கம் கண்ணைச் சுழற்றியது. இருவரும் அந்த மரத்தடியில் அசந்து போய்ப் படுத்து விட்டார்கள்.

அவர்கள் எத்தனை நேரம் தூங்கி னார்களோ தெரியாது. ''டேய், யாரடா அது புது ஆள்? நம்ம இடத் திலே படுத்துத் தூங்கறது? எழுந் திருடா'' என்ற குரலைக் கேட்டுத் திடுக்கிட்டுக் கண்ணை விழித்தாள்

செல்வி. அப்பொழுது பொழுது நன்றாகச் சாய்ந்து இலேசாக இருள் பரவ ஆரம்பித்திருந்தது. தெருவில் வண்டியும் காரும் ஓடிக்கொண்டிருந்தன. எங்கும் ஒரே சத்தம். தன்னைச் சுற்றித் தனக்குப் பழக்கமில்லாத யார் யாரோ உட்கார்ந்து பேசிக் கொண்டிருப்பது செல்விக்குத் தெரிந்தது. மூன்று கல்லை வைத்து மூட்டிய அடுப்பில் ஒரு சட்டியில் கஞ்சி கொதித்துக் கொண்டிருந்தது. அடுப்பருகே உட்கார்ந்து பழைய காகிதம், குப்பை, இலைகளைப் போட்டு அடுப்பை எரிய விட்டுக் கொண்டிருந்தாள் ஒரு பெண். அவளைச் சுற்றி நாலைந்து குழந்தைகள். அந்தக் கஞ்சிப் பானையைப் பார்த்தபடி இருந்தன. பீடியைப் புகைத்துக் கொண்டே வந்த பாம்பாட்டி ஒருவன் பாம்புக் கூடையைக் கீழே வைத்துவிட்டு, ''சனியன், இந்தப் பாம்பு என்ன கனம் கனக்கிறது? தோளில் போட்டுக் கொண்டு நாலு தெருவு சுத்தறதுக்குள்ளே தோள் வலி எடுத்து விடுகிறது. வரும்படியாவது கை நிறைய வருதா? இன்னிக்குக் கிடைத்தது நாலணாதான்'' என்று கூறிச் சில்லறையை அடுப்பருகே இருந்த தன் மனைவியிடம் கொடுத்தான்.

''நீ என்னிக்குத்தான் என்னிடம் கை நிறையக் காசு குடுத்திருக்கே. எல்லாம் எனக்குத் தெரியும். மீதித் துட்டுக்கு அந்த ரோசய்ய நாயக்கனுக்கு கிட்டேயிருந்து திருட்டுச் சாராயம் வாங்கிக் குடிச்சிருப்பே'' என்றாள் அவள் குரோதத்துடன்.

அப்பொழுது தள்ளாடியபடி அங்கு வந்த ஒரு கர்ப்பிணிப் பெண் ''அய்யே இது யாரு புது ஜோடி நம்ம இடத்துக்கு வந்திருக்கு? பார்த்தால் கிராமத்து ஆளுங்க போல இருக்கு. வீட்டுக்குத் தெரியாமே இந்தப் பொண்ணு இவன் பின்னாலே ஓடிவந்திருக்கு போலிருக்கு'' என்றாள் கேலிச் சிரிப்புடன்.

இந்தப் பேச்சைக் கேட்ட செல்வியின் மனம் துணுக்குற்றது. அவமான உணர்ச்சி பொங்கி எழுந்தது. துள்ளி எழுந்து உட்கார்ந்து கொண்டு, ''இந்தா பாரு, அப்படியெல்லாம் நாக்கிலே நரம்பில்லாமப் பேசாதே. இவரு என் புருஷன். [illegible] தாலி கட்டியவர். சந்தேகமா இருந்தால் பார்த்துக்க'' என்று கழுத்திலிருந்த தாலிச் சரடை எடுத்துக் காட்டினாள்.

வீடு இல்லாமல் [illegible] அக் கிராமத்துப் பெண் [illegible] ஒருவனைப் [illegible] தான் அந்த [illegible]



பிறகு மெதுவாக வயிற்றில் வைத்துக் கட்டிக் கொண்டிருந்த கந்தல் துணிகளை ஒவ்வொன்றாக எடுத்துக் கீழே போட்டபடியே ''கோவிச்சுக் காதே தங்கச்சி. ஏதோ சந்தேகமா இருந்தது கேட்டேன்'' என்றாள். செல்விக்கு அவள் செய்கை விநோதமாக இருந்தது. கர்ப்பிணி போல் வயிற்றில் கந்தல் துணிகளை வைத்துக் கட்டிக் கொண்டிருக்கிறாள் இந்தப் பெண். எதற்காக இப்படி ஒரு வேஷம்? அவள் நடந்து வரும்போது எப்படிக் களைத்து, முகம் வாடி, தள்ளாடியபடி ஒரு நிஜக் கர்ப்பிணிப் பெண் போல் நடந்து வந்தாள்? எல்லாம் நடிப்பா என்று நினைத்த செல்வியின் வியப்பைப் பார்த்து விட்டு, படுத்திருந்த கிழவன், ''என்ன அம்மா இப்படி அதிசயப்படறே? இதெல்லாம் பிழைக்கும் வழி. இந்திராணி இப்படிக் கர்ப்பிணி வேஷம் போடுவதில் கெட்டிக்காரி. பஸ் ஸ்டாண்டு, சினிமாக் கொட்டகை என்று போய்



நின்று, பார்ப்பவர்கள் உள்ளம் உருகும்படி 'ஐயா, கர்ப்பிணிப் பெண்ணுக்கு உதவுங்களேன். ஆஸ்பத்திரிக்குப் போக பஸ்ஸுக்குக் காசில்லே' என்று கெஞ்சும் போது, எந்தக் கஞ்சனும் காலணா போடாமல் இருக்க மாட்டான். இந்திராணிக்கு அந்தத் திறமை. பார்க்கப் போனால் இந்த மரத்தடியிலே அதிகப் பணம் சம்பாதிப்பது இந்த இந்திராணி தான்" என்று கூறிக் கண்ணைச் சிமிட்டினான்.

வயிற்றில் இருந்து எடுத்த கந்தல் துணிகளை மூட்டையாகக் கட்டி வைத்துவிட்டு, "ஏன் தாத்தா அப்படி வயித்தெரிச்சல் படறே? உனக்கு மட்டும் சம்பாத்தியம் வருவதில்லையா? உன் உருவமே உனக்குச் சாதகமாயிருக்கு. வாயாலே நீ பேசவே வேண்டாம். துட்டு தானாக உன்னைத் தேடி வருது. எனக்கு அப்படியா? பிழைப்புக்கு எத்தனையோ வேஷம் போட வேண்டியிருக்குது. 'அதோ பாரு ரோட்டிலே'" என்று இந்திராணி செல்லியைத் தட்டிக் கூப்பிட்டு, "அந்தக் காரைப் பார்த்தாயா? அதுதான் நீல நிறக் காரு! அதிலே ஒரு அம்மா போறாங்க பாரு. அவங்க ஒரு பிரபல சினிமா நடிகை. ஒரு படத்துக்கு ஆயிரக் கணக்கா வாங்கறாங்க. அவங்களும் வயிற்றுப் பிழைப்புக்கு எத்தனையோ வேஷம் போட்டு நடிக்கிறாங்க. நானும் என் வயிற்றுப் பிழைப்புக்குக் கர்ப்பிணி வேஷம் போடறேன்" என்று கூறிச் சிரித்தாள். இதையெல்லாம் கேட்கக் கேட்கச் செல்லிக்கு விநோதமாக இருந்தது. இந்திராணி புடவைத் தலைப்பால் முகத்தைத் துடைத்துக் கொண்டு, "பசி வயிற்றைக் கிள்ளுகிறது. நாயர் கடைக்குப் போய்ச் சாப்பிட்டு விட்டு வருகிறேன்" என்று சொல்லிப் போய் விட்டாள்.

பொழுது நன்றாக இருட்டி விட்டது. யாரோ ஒருவர் அந்தப் பிள்ளையார் கோயில் விளக்கில் சிறிது எண்ணெயை ஊற்றி ஏற்றி வைத்துவிட்டுப் போனார்.

"இந்தா பொண்ணு! எல்லோரும் சாப்பிடறாங்க. நீயும் உன் புருஷனும் மூணு நாளா பட்டினி எனக்குத் தெரியும். இதோ கந்தல் துணியில் காசு கிடக்கு பாரு. எடுத்துப் போய் நாயர் கடையிலே ஏதாவது சாப்பிட்டுவிட்டு எனக்கு ஒரு தோசையும், ஒரு குவளை டீயும் வாங்கி வாங்க" என்றான் கிழவன். செல்லிக்கு எத்தனை பசி இருந்தாலும் அந்தக் கிழவனின் உதவியை நாட ஏனோ மனம் வரவில்லை. "வேண்டாம் தாத்தா!" என்றாள் தயக்கத்துடன்.

கிழவன் மிகவும் வற்புறுத்தவே அவனிடமிருந்து எட்டணாவை எடுத்துக் கொண்டு இருவரும் நாயர் கடையை நோக்கி நடந்தார்கள். ஆளுக்கு இரண்டு தோசையும் டீயும் சாப்பிட்டுவிட்டுக் கிழவனுக்குப் பலகாரம் வாங்கிக் கொண்டு திரும்பினார்கள்.

வாயில் வாசனைப் பாக்கை மென்று கொண்டே பக்கத்தில் வந்து உட்கார்ந்த இந்திராணி "ஆமாம், பட்டணத்திலே எப்படிப் பிழைப்பதாக உத்தேசம்?" என்று பேச்சை ஆரம்பித்தாள்.

"எங்காவது வீட்டு வேலே செய்வது. இல்லே வீடு கட்டும் இடத்திலே கல்லு மண்ணு தூக்கிக் கையாள் வேலே செய்வது இப்படி ஏதாவது செய்துதான் பிழைக்க வேண்டும்" என்றாள் செல்லி.

இந்திராணி சற்று யோசித்து விட்டு, "உங்களுக்கு இங்கே வீடு கட்டும் மேஸ்திரி யாரையாவது தெரியுமா?" என்று குறுக்குக் கேள்வி கேட்டாள்.

"அதெல்லாம் எங்களுக்கு யாரையும் தெரியாது. இந்தப் பிள்ளையாரப்பனைத் தவிர. இவர்தான் எங்களுக்கு வழிகாட்டி உதவி செய்யணும்" என்றாள். இந்திராணி சிரித்தாள். "இந்தக் கல்லுப் பிள்ளையாரை நம்பி வந்து விட்டாயாக்கும்? இவரே பிறர் கையை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார். யாராவது எண்ணெய் விட்டால்தான் விளக்கு எரியும். இந்தக் கோயில் முற்றத்தில் தண்ணீர் தெளித்துப் பெருக்கிச் சுத்தம் செய்வதற்கும் மனிதன்தான் வேண்டியிருக்கிறது. யாராவது ஒரு முழம் கதம்பம் வாங்கி இவர் கழுத்தில் போட்டால்தான் மாலை போட்டுக் கொள்ளுகிறார். இப்படி இந்தப் பிள்ளையாரே தம் வாழ்வுக்கு மனிதர்களை நம்பியிருக்கும்போது நீ அவரை நம்பி வந்திருப்பது வேடிக்கையாக இருக்கு" என்றாள் அவள். இந்தப் பேச்சு செல்லிக்குப் பிடிக்கவே யில்லை.

மாதா கோயில் மணி எட்டு அடித்தது. இந்திராணி எழுந்து பிள்ளையார் கோயிலுக்குச் சென்று அந்த விளக்கிலிருந்த எண்ணெயை எடுத்துத் தன் தலையில் தடவிக் கொண்டாள். இதைப் பார்த்த செல்லிக்கு இதயம் பிளந்து விடும்போலிருந்தது. கோபத்தை அடக்க முடியாமல் "இந்தா அம்மா! இத்தனை நேரம் கடவுளைப் பற்றி இழிவாகப் பேசி விட்டு அந்தக் கோயில் விளக்கு எண்ணெயை எடுத்துத் தலையில் தேய்த்துக் கொள்ள உனக்கு வெட்கமாக இல்லே? நீதான் எதுவும் கோயிலுக்குச் செய்யல்லே. யாரோ புண்ணியவான் எண்ணெய் ஊற்றி விளக்கு ஏற்றினால் அந்த எண்ணெயை எடுத்துத் தலைக்குத் தேய்த்துக்கொண்டு விளக்கை அணைத்துவிட்டாயே!" என்றாள்.

இந்திராணி கலகலவென்று சிரித்து விட்டு "நீதான் கடவுள் கொடுப்பார் என்று சொன்னியே. எனக்குக் கடவுள் இப்படித்தான் கொடுக்கிறாரு. அவரோ கல்லுப் பிள்ளையாரு. 'இந்தா இந்திராணி, தலைக்கு எண்ணெய்' என்று என் கையிலே கொண்டு வந்து கொடுக்க முடியுமா? மரத்தில் இருக்கும் பழம் 'இதோ நான் இருக்கிறேன், என்னைச் சாப்பிடு' என்று கையில் வந்து விழுமா? நாமாகப் பறித்துச் சாப்பிட வேண்டியது தான். இதே கிரமப்படி கடவுளிடமிருந்து நானே எடுத்துக் கொண்டேன். கவலைப்படாதே. போ, படுத்துத் தூங்கு. நான் செய்யும் காரியங்களில் தலையிடாதே!" என்று கூறினாள்.

சற்றுத் தூரத்திலிருந்து யாரோ மெதுவாகச் 'சீட்டி' அடிக்கும் சத்தம்கேட்கவே இந்திராணி ஜோராக அன்ன நடை நடந்து அந்தப் பக்கம் போனாள்.

"இந்தா பொண்ணு! ஏனம்மா அந்த இந்திராணிகிட்டே வார்த்தையாடறே? அவ பேச்சுக்குப் போகாதே. இந்த மரத்தடியில் அவள் வச்சதுதான் சட்டம். அவளுக்கு ஆள் பலம் அதிகம். இந்தப் பேட்டை ரௌடி நல்லகண்ணு அவளுக்காக எதையும் செய்யக் காத்திருக்கான். இந்திராணியைப் பகைச்சுக்கிட்டா நீ இந்த இடத்திலே வாழ முடியாது!" என்றான் கிழவன்.

எப்பொழுது செல்லி கண்ணயர்ந்தாளோ, தெரியாது. அவள் பொழுது














## வேக்குவம் பிளாஸ்க்

## தீபாவளிக்கு

### ஒரு முதல்தரமான பரிசு!

பின், எதற்காகப் பரிசுப் பொருள் களைத் தேர்ந்தெடுப்பதில் காலத்தை வீணுக்க வேண்டும்.

உங்கள் தீபாவளி நல்வாழ்த்தையும் அன்பையும் தெரிவித்துக்கொள்ள ''ஸன்'' வேக்குவம் பிளாஸ்க்குகள் சிறந்த சாதனம்.



**விக்டர் பிளாஸ்க் கோ., பி. லிட்.**

பம்பாய் - கல்கத்தா - டில்லி - சென்னை

vapl -7-63

விடிந்து கண்ணை விழித்தபோது கடலே முத்து குழாயடிக்குச் சென்று முகத்தைக் கழுவிக் கொண்டிருந்தான். பட்டணத்தில் பணம் இல்லாமல் கிடைக்கும் ஒரே பொருளான குழாய்த் தண்ணீரை அள்ளி அள்ளி முகத்தைக் கழுவிக் கொண்டிருந்த கடலேமுத்துவைப் பார்க்கச் செல்விக்கு இலேசாகச் சிரிப்பு வந்தது. பாம்பாட்டியும் அவன் குடும்பமும் எழுந்து போய் விட்டிருந்தார்கள். இந்திராணி எப்பொழுது திரும்பி வந்தாளோ முகத்தில் வெய்யில் படுவது கூடத் தெரியாமல் புரண்டு புரண்டு தூங்கிக் கொண்டிருந்தாள். செல்வி தண்ணீர் எடுத்து வந்து பிள்ளையார் கோவிலைச் சுத்தம் செய்தாள். பிறகு முகம் கழுவிக் கொண்டு மிழவனுக்குத் தேநீரும் இட்டிலியும் வாங்கிக் கொடுத்து விட்டுக் கணவனுடன் வேலை தேடக் கிளம்பினாள்.

யாருக்காகவும், எதற்காகவும் காத்திராமல் காலம் ஓடிக் கொண்டிருந்தது. கடலேமுத்துவும் பட்டணத்தில் வாழக் கற்றுக் கொண்டுவிட்டான். எப்படியோ கூலி வேலை செய்து தன் வயிற்றையும் தன் மனைவி வயிற்றையும் கழுவலானான். செல்வியும் சளைக்காமல் வேலை செய்தாள். ஒவ்வொரு நாள் இரவும் தன் கணவனுக்குக்கூடத் தெரியாமல் மீதம் வைக்கும் பணத்தைப் பத்திரமாக ஒரு தகர டப்பாவில் போட்டு மூடி, பிள்ளையார் விக்கிரகத்துக்குக் கீழே மறைத்து வைத்து வந்தாள். இரவு எல்லோரும் தூங்கின பின் மெதுவாகத் தகர டப்பாவிலிருந்த பணத்தை எண்ணிப் பார்த்துத் திருப்தியடைந்து வந்தாள்.

பக்கத்துத் தெரு மாயாண்டி நூறு ரூபாய்க்குத் தன் ரிக்‌ஷாவை விற்று விடுவதாகச் சொல்லிக் கொண்டிருந்தான். பணத்தைச் சேர்த்து அந்த ரிக்‌ஷாவை வாங்கிவிட்டால் தன் கணவனை அந்த மரத்தடியிலிருந்து அழைத்துக்கொண்டு வெளியே போய்விடலாம் என்று நினைத்தாள் செல்வி.

அன்று வழக்கம் போல் பிள்ளையார் கோவில் முற்றத்தைப் பெருக்கிக் கொண்டிருந்தாள் செல்வி. யாரும் எதிர்பாராத ஒரு சம்பவம் அப்பொழுது நடந்தது. அங்கு வந்து நின்ற காரிலிருந்து ஒருவர் இறங்கிப் போலீஸ் துணையுடன் வந்தார். "நீங்கள் எல்லோரும் இந்த இடத்தை விட்டு இன்னும் ஒரு வாரத்தில் போய்விட வேண்டும். இந்த நிலத்தை ஒருவர் விலைக்கு வாங்கிவிட்டார். இங்கு வீடு கட்டப் போகிறார். ஒரு வாரம் தந்திருக்கிறேன். அதற்குள் போகவில்லையென்றால் பலவந்தமாகப் பிடித்துத் தள்ளி விடுவோம்" என்று எச்சரித்து விட்டுப் போனார். அவர் போய் இரண்டு நிமிஷங்களுக்கு யாருமே எதையும் பேசவில்லை. மிழவன் மெதுவாக "ஏன் கவலைப்படறீங்க? இது பிறர் இடம். அவுங்க ஏதோ கட்டடம் கட்டப் போறாங்களாம். போகச் சொன்னால் நாம் போக வேண்டியதுதானே! நமக்கென்ன இதை விட்டால் இன்னும் எத்தனையோ மரத்தடி!" என்று சமாதானம் சொன்னான்.

"அதெல்லாம் நாம்ப ஒண்ணும் போக வேண்டியதில்லே. நம்மை யாரு விரட்டுறாங்க பார்க்கலாம். பிடித்துத் தள்ளி விடுவாராமில்லே; அதையும் பார்த்து விடறேன். நான் ரௌடி நல்லகண்ணுவை அழைச்சிட்டு வாரேன். நம்மைக் கிளப்ப வருகிறவங்களுக்கு அவன் பதில் சொல்லுவான்" என்றாள் இந்திராணி.

அன்று இரவு பணத்தை எடுத்து எண்ணிப் பார்த்ததும் இந்த எட்டு மாத காலத்தில் நூறு ரூபாய் சேர்த்து விட்டதை நினைத்துப் பெருமைப்பட்டுக் கொண்டாள் செல்வி. கடலேமுத்து புது ரிக்‌ஷாவைப் பார்த்ததும் எப்படி மனம் மகிழ்வான்? இந்த இனிய நினைவில் லயித்த செல்வி 'பொழுது விடிந்ததும் பணத்தைக் கொடுத்து ரிக்‌ஷாவை வாங்கிவிட வேண்டும்' என்ற முடிவுடன் படுத்தாள். தூக்கத்தில் கனவில் கூட ரிக்‌ஷாவைத்தான் கண்டாள். இரவு இரண்டு மணி இருக்கும். திடீர் என்று "ஐயோ பாம்பு—பாம்பு அடியுங்களேன்" என்ற கூக்குரலைக் கேட்டு விழித்தாள் செல்வி. பிள்ளையார் விக்கிரகத்தருகே கையில், பணம் வைத்திருந்த டப்பாவுடன் ரௌடி நல்லகண்ணு நின்று கொண்டிருந்தான். அவன் காலைச் சுற்றி ஒரு பாம்பு இருந்தது. நல்லகண்ணு பதறியபடி டப்பாவைக் கீழேயே போட்டு விட்டான். அந்த டப்பாவை ஒரு சிறு பூட்டினால் பூட்டியிருந்தாள் செல்வி. அதனால் அவனுக்கு அதைத் திறக்க முடியவில்லை. "அய்யோ! என் பணம். பிள்ளையாரப்பா நீதான் பாம்பைக் காட்டி என் பணத்தைக் காப்பாற்றினாய். இல்லையேல், நான் சாப்பிடாமல் சேர்த்த பணம் திருட்டுப் போயிருக்கும்" என்றபடி டப்பாவைக் கையில் எடுத்துக் கொண்டாள். அவளுக்கு விஷயம் புரிந்து விட்டது. இந்திராணிக்கு எப்படியோ அவள் பணம் சேர்த்து வைக்கும் விஷயம் தெரிந்திருக்கிறது. நல்லகண்ணுவை விட்டுத் திருடச் சொல்லியிருக்கிறாள். அதை நினைக்க அவள் மனம் கொதித்தது.

"பாம்பை அடியுங்களேன்" என்ற கூக்குரலைக் கேட்டு விழித்துக்கொண்ட பாம்பாட்டி, "அடாடா பயப்படாதே, ஐயா! அது என் பாம்புதான். நேற்று அவசரத்தில் சரியாகக் கூடையை மூட மறந்துவிட்டேன் போலிருக்கிறது. அது வெளியே வந்திருக்கிறது. நல்லவேளை! கிடைத்துவிட்டது. இல்லாவிட்டால் என் பிழைப்பிலே மண் விழுந்திருக்கும்" என்றபடி பாம்பை எடுத்துக் கூடைக்குள் போட்டு மூடினான். எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்த இந்திராணி, "அது சரி, அந்தப் பணத்தை இப்படிக் கொடு. அது என் பணம். நான் சேர்த்த பணம். பூனை மாதிரி இருந்துக்கிட்டுப் பணத்தை எடுத்துப் பிள்ளையார் விக்கிரகத்துக்கு அடியிலே மறைச்சு வச்சிருக்கியே; உனக்கு எத்தனை தைரியம் இருக்கணும்? இதுக்குத்தான் பிள்ளையார் கோவிலைச் சுத்தம் பண்ணிக் கும்பிட்டுக்கிட்டிருந்தாயோ?" என்று கடிந்தாள். செல்வி நடுநடுங்கி விட்டாள். "இப்படி ஓர் அபாண்டமா? கடவுளே, கை நோக, உடல் நோக, வயிற்றைக் கட்டி, வாயைக் கட்டி நான் சம்பாதித்த காசு என் புருஷனுக்குக் கூடத் தெரியாமே சேர்த்து வைச்ச காசு" என்று பதறினாள் செல்வி.





கடலைமுத்து நடப்பதை ஒன்றும் நம்ப முடியாமல் சிலையாக நின்றிருந்தான்.

"நன்றாகத்தான் கதை தொடுக்கிறாய்! பணத்தைக் கொடு அம்மே! இல்லேன்னு போலீஸ்காரரைக் கூப்பிட்டுடுவேன்" என்றாள் இந்திராணி மிடுக்குடன்.

நல்லகண்ணு பீடியைத் தூர எறிந்து விட்டு "அம்மே டப்பாவைக் குடுத்திடு. நான் பொல்லாதவன். வீணு வம்புக்கு வராதே" என்று மிரட்டினான்.

இதுவரையில் பேசாமல் இருந்த கடலைமுத்து, "செல்வி! அந்த டப்பாவை அவள் கிட்டே குடுத்திடு. எனக்கு ரிக்ஷாவும் வேண்டாம்; ஒன்னும் வேண்டாம். கோர்ட்டு, போலீசு என்று போகாமே மானமாக வாழ்க்கை நடத்தினால் போதும்" என்றான்.

"எப்படிங்க கொடுப்பேன்? என் உயிரை விட்டுச் சம்பாதிச்ச பணம். என் வாழ்வே இந்தப் பணத்தை நம்பித் தானே இருக்கு? இந்தப் பணம் என்னுடையது என்பதற்கு இந்தப் பிள்ளையாரே சாட்சி" என்று கதறினாள் செல்வி. அதிகப் பேச்சுக்கு இடம் வைக்காமல் நல்லகண்ணு செல்வியின் கையிலிருந்த டப்பாவைப் பறித்தான்.

"புருஷனுக்கு ரிக்ஷா வாங்கணும் என்ற ஆசையிலே திருடவும் துணிஞ்சுட்டே!" என்றபடி வெற்றிலையைக் காறி உமிழ்ந்தாள் இந்திராணி. நல்லகண்ணு டப்பாவை இந்திராணியிடம் கொடுத்தான். செல்வி வயிற்றில் அடித்துக்கொண்டு "கடவுளே! இந்த அநியாயம் எங்காவது நடக்குமா?" என்று புலம்பினாள். இந்திராணி ஒரு கல்லை எடுத்துத் தட்டி டப்பாவைத் திறந்தாள். அதைப் பார்த்ததும் "அய்யோ!" என்று அலறினாள் இந்திராணி. டப்பாவில் காகிதத் துண்டும் ஓட்டாஞ்சல்லியும்தான் இருந்தன. இதைப் பார்த்த செல்வியும் திகைத்து நின்றுவிட்டாள். இந்திராணி ஒரு நிமிஷம் யோசித்தாள். ஏதோ விஷயம் புரிந்தது போல் நல்லகண்ணுவை நோக்கி "என்ன மச்சான்! நாடகத்துக்குள்ளே நாடகமாடறியா? முதல்லே பணத்தை எடுத்துக்கிட்டு வேஷம் போட்டு என்னை ஏமாத்தறியா? எடு பணத்தை" என்று மிரட்டினாள். நல்லகண்ணுவுக்கும் கோபம் வந்துவிட்டது.

"நீதான் என்னை ஏமாத்தினாய். இந்த விளையாட்டெல்லாம் வேண்டாம்" என்றான் நல்லகண்ணு.

இந்திராணி பெண் புலியாக மாறினாள். "அட சீ! நீயும் ஒரு மனுஷனா? நீ மட்டும் என் பணத்தைக் குடுக்கலே, உன்னைச் சும்மா விடமாட்டேன். உன் வண்டவாளங்களைப் போலீசுக்குச் சொல்லி விடுவேன். இந்த இந்திராணியை என்ன என்று நினைத்தாய்?" என்று சீறினாள்.

"எனக்கு அப்பவே தெரியும் பணம் யாரு சேர்த்தாலும் அது பகையிலே தான் முடியும் என்று" என்றான் கிழவன்.

"ஏ கிழவா நீ பேசாமல் இருக்க மாட்டே! உன்னை யாரு கூப்பிட்டாங்க? நடுவே புகுந்து பேசினே, அடித்து நொறுக்கிவிடுவேன்" என்றான் நல்லகண்ணு. பிறகு இந்திராணியிடம் "என்ன அம்மே, என்கிட்ட படிச்ச வித்தையை என்கிட்டேயே காட்டறியா? போலீசுன்னு எனக்குப் பயமா? ஒன்னு நினைக்க நான் போலீசுக்குப் போனால் நீயும் என் பின்னாலே வரவேண்டியது தான். உன் பணத்தைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது" என்றான் கண்டிப்பாக.

"சரி, இந்த இந்திராணியை யாரும் ஏமாத்த முடியாது. உன்கிட்ட பேசிப் பிரயோசனமில்லே. நான் போலீசாரை விட்டு உன்னைக் கவனிக்கச் சொல்றேன்" என்றபடி வேகமாக நடந்தாள் இந்திராணி. கீழே கிடந்த தகர டப்பாவைக் காலால் உதைத்துத் தள்ளிவிட்டு நல்லகண்ணுவும் அவளைப் பின்தொடர்ந்தான்.

"தாத்தா! நான் என்ன செய்வேன்? நீயே சொல்லு. நான் இந்திராணி பணத்துக்கு ஆசைப்படுவேனா?" என்றாள் செல்வி கிழவனிடம். கிழவனுக்கு அவளை எந்த விதத்திலும் தேற்ற முடியவில்லை. அழுது அழுது செல்வியின் கண்கள் கோவைப் பழமாகச் சிவந்து விட்டன. எத்தனை கட்டுப்படுத்தியும் அவளால் துக்கத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லை. கடலைமுத்து பொறுமையாக, "ஏம் புள்ளே இப்படி வருத்தப் படறே? உயிரா போயிடுச்சு? பணம் தானே; போனால் போகட்டும். இனி மேலும் சம்பாதிக்கலாம்" என்றான்.

"இனிமேல் எப்படிச் சம்பாதிப்பது? வேர்வை சொட்ட வேலை செய்த காசைக் காரணமில்லாமல் அநியாயமாக இழப்பதென்றால் அதை என்னால் தாள முடியாது" என்றாள் செல்வி.

நொண்டிப் பிச்சைக்காரன் ஒருவன் அந்த இடத்தை விட்டே போய்விட நினைத்துத் தன் சட்டிப் பானைகளை மூட்டை கட்டிக் கொண்டிருந்தான். கிழவன் எதுவும் பேசாமல் யோசித்துக் கொண்டும், உடல் உபாதை தாள முடியாமல் முக்கி, முனகிக்கொண்டும் படுத்திருந்தான்.

தன் மூட்டை முடிச்சுகளைப் புது இடத்துக்குப் பெயர்த்து எடுத்துச் சென்ற பாம்பாட்டி திரும்ப மேல் மூச்சு, கீழ்மூச்சு வாங்கச் செல்வியிடம் வந்து, "நான் நெனைச்சது சரியாய்ப் போச்சு. நல்லகண்ணுவும், இந்திராணியும் சண்டை போட்டுக்கிட்டாங்க. நல்லகண்ணு கோபத்தில் இந்திராணியை அடித்துவிட்டான். இந்திராணி, நல்லகண்ணு திருட்டுச் சாராயம் காய்ச்சும் இடத்தைப் போலீசுக்குக் காட்டிக் கொடுத்துவிட்டாள். இதை அறிந்த நல்லகண்ணு இந்திராணியை மேலும் உதைத்து அவள் வண்டவாளங்களையும் போலீசுக்குச் சொல்ல, போலீஸ் வண்டி வந்து, இந்திராணி நல்லகண்ணு சாராயம் காச்சும் பானை, துணை ஆட்கள், எல்லோரையும் ஏற்றிக்கொண்டு போய் விட்டது. இனிமேல் குறைந்தது ஆறு மாசம் அவுங்க சர்க்கார் விருந்தாளிதான்" என்றான். யாரும் எதையும் பேசவில்லை. வெகுநேர மௌனத்துக்குப் பிறகு, 'யாரு ஜெயிலுக்குப் போனால் என்ன? என் பணம் போயிற்று' என்றாள் செல்வி உடைந்த குரலில்.

கிழவன் சிரமப்பட்டு எழுந்து உட்கார்ந்தான். "செல்வி! இங்கே வா! இதோ பாரு, நீ உழைச்சுச் சம்பாதித்த பணம் என்றும் போய்விடவில்லை. இதோ என் கந்தல் துணி மூட்டைக்குள் இருக்கிறது. எடுத்துக்கொள். நேற்று இரவு இந்திராணி நல்லகண்ணுவிடம் பணத்தைத் திருடும்படி சொல்லிக் கொண்டிருந்ததை நான் கேட்டுவிட்டேன். உன் பணம் பறிபோவதை நான் விரும்பவில்லை. ஆகையால் அவர்களை முந்திக் கொண்டு பணத்தை எடுத்து மறைத்து வைத்துவிட்டு, காகிதத் துண்டையும் ஓட்டாஞ்சல்லியையும் வைத்து விட்டேன்!" என்றான் கிழவன்.

பணத்தைப் பார்த்ததும் செல்விக்கு மகிழ்ச்சியால் கண்ணீர் வந்துவிட்டது. "தாத்தா! கடைசியாக நான் பாடுபட்டுச் சேர்த்த பணம் கிடைத்து விட்டது. நான் நம்பி வந்த பிள்ளையார் என்னைக் கைவிடாமல் உன் உருவத்தில் வந்து என்னைக் காப்பாற்றியிருக்கிறது. கடவுள் எங்கே என்று தேட வேண்டாம். அவர் நல்லவர்கள் உள்ளத்திலும் இருப்பார் என்று தெரிந்து விட்டது" என்று கூறிய செல்வி, பிள்ளையாரை நோக்கி நன்றிப் பெருக்குடன் கரம் குவித்தாள். அந்த மரத்தடிப் பிள்ளையார் அப்பொழுதும் கல்லாகவே இருந்தார்!







# திபேத்திய அகதிகள்



சீன வெறியர்களின் ஈனச் செயலினால் மூன்றாண்டுகளுக்கு முன் தங்கள் தாய்நாடான திபேத்திலிருந்து தலாய் லாமாவும் 33,000 திபேத்தியர்களும் இந்தியாவுக்கு வந்து அடைக்கலம் புகுந்த விஷயம் நமக்கெல்லாம் தெரியும். தஞ்சம் என்று வந்தவர்களை அஞ்சேல் என்று ஆதரிப்பது நமது உடலோடு பிறந்துவிட்ட பண்பாடுகளில் ஒன்றாயிற்றே! அதன்படி திபேத்திய அகதிகளைப் பராமரிக்கும் பொறுப்பைப் பல்வேறு ராஜ்யங்களுக்கும் பகிர்ந்தளித்தார்கள் நம் பாரத அரசாங்கத்தார். அவர்களுள் சுமார் 4000 திபேத்திய அகதிகளுக்கு மைசூர் அரசாங்கம் தனது ராஜ்யத்தில் வாழ வகை செய்து கொடுத்திருக்கிறது.

மைசூரிலிருந்து சுமார் எழுபது மைல் தூரத்திலிருக்கும் 'பைலகுப்பா' என்ற ஊருக்குப் பக்கத்தில் 3,500 ஏக்கர் நிலப்பரப்புள்ள காட்டுப் பிரதேசத்தை இந்த அகதிகளுக்கு ஒதுக்கினார்கள். இந்தப் புதிய இடத்தில் குடி புகுந்த திபேத்தியர் கொடிய விலங்குகள் வாழும் காடுகளை வாழுவதற்கு ஏற்றபடித் தாங்களே பண்படுத்தியிருக்கிறார்கள். அதற்காக இவர்களுக்குத் தினக் கூலியாக ஆளுக்கு சுமார் இரண்டு ரூபாய் வரையில் கொடுத்து உதவியது மைசூர் அரசாங்கம்.

இவர்களை மொத்தமாக ஒரே இடத்தில் வைக்காமல் சீர்திருத்தம் செய்த காட்டுப் பிரதேசத்தை ஆறு கிராமங்களாக (1) கொல்லரவெராச அள்ளி (2) கைலாஸபுரா (3) அரளி குப்பி–ஒன்று (4) அரளிகுப்பி–இரண்டு (5) குல்லேத அள்ளா–ஒன்று (6) குல்லேத அள்ளா–இரண்டு என்று பிரித்து ஒவ்வொன்றிலும் சுமார் நூறு வீடுகளையும் குடிசைகளையும் அரசாங்கம் கட்டிக் கொடுத்திருக்கிறது. ஒவ்வொரு குடும்பத்துக்கும் ஐந்து ஏக்கர் நிலம் பிரித்துக் கொடுத்திருக்கிறது. அந்தக் காட்டு நிலங்களில் திபேத்தியர் பயிர்த் தொழில் செய்யக் கால்நடைகளையும் அதற்குண்டான கருவிகளையும் கொடுத்திருக்கிறது. இன்று அந்த நிலங்களில் நெல், புகையிலை, கேழ்வரகு, பருத்தி, ஆமணக்கு முதலியவைகளைப் பயிர்செய்து கொண்டு வருகிறார்கள். கொஞ்சம் கொஞ்சமாகக் குடிதண்ணீர், சுகாதாரம், மருத்துவம், கல்வி ஆகிய பல வசதிகளையும் மைசூர் அரசாங்கம் செய்து கொடுத்திருக்கிறது. அவர்கள் சில கைத்தொழில்களும் கற்று வருகிறார்கள்.

வந்த புதிதில் வடகோடிச் சீதோஷ்ண நிலைக்கும் தென்கோடிச் சீதோஷ்ண நிலைக்கும் இடையே உள்ள வேறுபாட்டால் திபேத்தியர்களுக்கு அடிக்கடி உடல்நிலை பாதிக்கப்பட்டது. ஆனால் இன்றோ தகுந்த மருத்துவ வசதிகளினால் ஆரோக்கியமான வாழ்க்கை வாழ்ந்து வருகிறார்கள். இவர்களின் தேவைகளைக் கவனித்து ஆவன செய்ய திரு டி. பாலகோபாலன் (ஐ. ஏ. எஸ்.) என்ற ஒரு தமிழரையும் நியமித்திருக்கிறது மைசூர் அரசாங்கம். அவருக்கு உதவியாக வேறு பல அதிகாரிகளும் இருக்கிறார்கள்.

இருபத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாகத் தென்னிந்திய மலைவாசிகளுடன் நெருங்கிப் பழகி ஆராய்ச்சி நடத்தி வரும் நான் திபேத்தியர்களின் வாழ்க்கை ரகசியங்களையும் அறிய வேண்டும் என்று ஆர்வம் கொண்டேன். அந்த முறையின்படி மைசூர் அரசாங்கத்தாருக்கு என் விருப்பத்தை அறிவித்து



COMPARATIVE TABLE OF BRAHMI AND TIBETAN ALPHABET

# பிலோ இருதய நாத்

அவர்களது அனுமதியையும் ஒத்துழைப்பையும் கோரினேன். அவர்களும் எனக்கு அனுமதி வழங்கி எல்லா ஏற்பாடுகளும் செய்து கொடுத்தார்கள்.

'பைல் குப்பே' என்பது பழைய கன்னட ஊர். அதையே திபேத்தியர் காலனிக்கும் வைத்து விட்டார்கள். இவர்களது குடிசைகளுக்குள்ளும், வீடுகளுக்குள்ளும் நுழைந்து நுழைந்து வந்தேன். அவர்களும் என்னிடம் பணிவன்போடு நடந்து கொண்டார்கள். நான் கேட்டவற்றிற்கெல்லாம் விளக்கம் கூறினார்கள்.

திபேத்தியர்கள் அலுமினியச் சாமான்களைத் தான் அதிகமாக உபயோகப்படுத்துகிறார்கள். திபேத்தில் குளிர் அதிகம். சீக்கிரமாகச் சூடுபிடிக்க வேண்டுமானால் அலுமினியப் பாத்திரம்தான் வசதியானது.

ஆண்களும் பெண்களும் முடியைப் பின்னி விட்டு நீலக் கல் காதணியும் போட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் இன்று சில பெண்கள் கிராப்பு வைத்திருக்கிறார்கள். ஆண்களுக்கும் பெண்களுக்கும் உடையில் அதிக வித்தியாசமில்லை. ஆண்களைப் போல் பெண்களும் உழைக்கிறார்கள். நான்கு ஆண்கள் சேர்ந்து தூக்கிவைக்கும் ஒரு பெரிய பாறையை ஒருத்தியே சுமார் ஐம்பது கஜ தூரத்திலிருக்கும் மற்றொரு மேட்டுக்குத் தூக்கிச் செல்வதைக் கண்டு வியந்து போனேன்.

நாம் யார் வீட்டுக்காவது சென்றால், அவ்வீட்டினர் காப்பி, டீ போன்ற ஏதாவது பானங்கள் தருவதைப் போல், இவர்களுடைய குடிசைக்குச் சென்றதும், ஒரு தட்டில் மிட்டாய்களைக் கொட்டிக் கொண்டு வந்து காட்டுகிறார்கள். அவற்றில் ஒன்றோ இரண்டோ நாம் எடுத்துக்கொண்டால்தான் பேச ஆரம்பிக்கிறார்கள். இதன் உட்கருத்து வந்தவர்களை இனிமையாக வரவேற்க வேண்டும் என்பதாம். ஒவ்வொரு காலனியிலும் புத்த மந்திரம் படிக்கும் இடம் தனியாக உண்டு. ஒவ்வொரு பாடியிலும் பல லாமாக்கள் இருக்கிறார்கள். அவர்களின் மொழியில் இவர்களைக் 'குட்டி லாமா'க்கள் என்று கூறுகிறார்கள்.

திபேத்தியர்களுடைய சம்பிரதாயப்படி மூக்குக் கண்ணாடி அணியக் கூடாதானாலும், 'லாமாவின் அனுமதி பெற்று நான் அணிந்திருக்கிறேன்' என்று ஒரு குட்டி லாமா கூறினார்.

இவர்கள் காலையில் எழுந்ததும் நம்மைப் போல் பல் துலக்குவதில்லை. மலஜலம் கழித்தாலும் சுத்தம் செய்து கொள்ள வேண்டுமென்ற கட்டாயமில்லை. ஒரு திபேத்திய ஆணோ அல்லது பெண்ணோ வளர்ந்து இளம் பருவம் அடைவதற்குள் குறைந்தது ஆறு ஏழு முறைகளாவது தங்கள் பெயரை மாற்றி வைத்துக் கொள்ளுகிறார்கள். யாராவது பெரியவர்களைக் காண நேர்ந்தால் உடனே அவர்களின் நினைவாகத் தங்கள் பெயரை மாற்றிக் கொண்டு விடுகிறார்கள். சமீபத்தில் தலாய் லாமா இவர்களைக் காண விஜயம் செய்தபோது அநேகர் தலையை மொட்டை அடித்துக் கொண்டு புதிய பெயர்களை வைத்துக் கொண்டார்களாம். மேலும், குழந்தைகள் நோய்வாய்ப்பட்டோ, காயங்களோ ஏற்பட்டால் அக் குழந்தைக்குப் புதிய பெயர் கொடுக்கப்படுகிறது. இதனுடைய உட்கருத்து: வாழ்வை முடிக்கப் பெயர்ப் பட்டியலோடு வரும் காலன் இந்தப் புதிய பெயரைக் கண்டு தான் தேடிவந்தது இந்த நபர் இல்லை என்று போய்விடுவானாம். இப்படி ஒரு மூடநம்பிக்கை.

லாமாவின் அன்பளிப்பாகத் திபேத்தியர் எனக்கு ஜெபம் செய்யும் செங்கோல் ஒன்றைக் கொடுத்தார்கள். அப்பொழுது அதை ஒரு சல்லாத் துணியில் மூடிக்கொண்டு வந்தார் ஒருவர். அவர் சும்மா வரவில்லை. தம்முடைய நாக்கை வெளியே நீட்டிக் கொண்டே வந்தார். நம்மிடையே இப்படிச் செய்வதைப் பரிகாசமாக நினைப்போம். ஆனால் இது திபேத்தியர்களிடையே மரியாதையைக் குறிக்கும் செயல். ஆகவே நானும் என் நாக்கை அவர் நீட்டியதை விடச் சற்று அதிகமாகவே வெளியே நீட்டித் தலை வணங்கி, மரியாதையுடன் அதை வாங்கிக் கொண்டேன்.

பெண்கள் எந்த நாட்களிலும் நெற்றியில் திலகமிடுவதில்லை. மைசூரில் உள்ள அகதி முகாமில் இருக்கும் பெண்கள் வீட்டிலிருக்கும்பொழுதும் வயலில் வேலை செய்யும்பொழுதும் 'கட்பனிய'னை அணிந்து கொண்டிருக்கிறார்கள். ஆனால் திபேத்தில் குளிர் அதிகமாகையால் கம்பளிச் சட்டையுடன் தான் இருப்பார்களாம். அவர்களின் கைகளைப் பெரிய வெள்ளிக் காப்புகள் அலங்கரிக்கின்றன. திபேத்தியர்கள் தங்கள் குழந்தைகளை நம் நாட்டுக் குறவர், குறவிக்காரர்களைப் போலத் துணியால் கட்டி முதுகில் தூக்கிக்கொண்டு போகிறார்கள். பெண்கள் சுமார் இருபத்தைந்து முப்பது வயதில்தான் திருமணம் செய்து கொள்ளுகின்றனர். பையனுக்கு இருபத்தைந்து வயது என்றால் பெண்ணுக்கும் இருபத்தைந்து வயது இருக்க வேண்டும். ஆணை விடப் பெண் வயதில் பெரியவளாக இருக்க வேண்டும். திருமணத் தம்பதிகளின் உடைகளெல்லாம் தடித்த ஜமுக்காளங்களைப் போல் இருக்கின்றன. இரண்டு மூன்று மழைக் கோட்டுக்களை ஒன்றாக அணிந்தால் எப்படி இருக்குமோ அப்படி இருக்கிறது அவர்களுடைய திருமண உடையின் கனம். தூக்கவே முடியவில்லை.

திபேத்தியர்கள் சோதிடர் மூலம் நல்ல முகூர்த்த நாளில் திருமணத்தை முடிவு செய்கிறார்கள். திருமணத்தன்று மாப்பிள்ளை பெண் வீட்டுக்குக் குதிரையின் மேல் சென்று ''நான் இறங்க மாட்டேன்'' என்று பிகுப் பண்ணிக்கொள்ளுவாராம். பெண் வீட்டார் அவரிடம் தயவு செய்யும்படி கேட்பார்களாம். மாப்பிள்ளையும் அதற்கு இணங்கிக் குதிரையிலிருந்து இறங்குவாராம். நம்மிடையே உள்ள காசி யாத்திரை போன்ற சடங்குதான் இது. பிறகு மணப் பந்தலில் மணமக்கள் கழுத்திலும், இடையிலும் அணிந்துள்ள ஒரு வகை அணிகலை ஒருவருக்கொருவர் மாற்றி அணிந்து கொள்ளுவார்கள். அதுவே மாலை மாற்றுவதற்கொப்பான மணச் சடங்கின் முக்கிய அறிகுறி. அதற்குப் பின் வணங்குதல், வாழ்த்துதல், ஆசி கூறுதல், மொய் வழங்குதல் முதலியன நடைபெறும். கடைசியாக நடனம், கூத்து, குடி, பாடல் முதலிய வேடிக்கைகளில் திருமணம் முடிவடையும்.



ஒருவர் (தன் நண்பரிடம்): **ஏம்பா, உங்க மாப்பிள்ளே, தீபாவளியும் அதுவுமா மூட்டை முடிச்சுடன் கிளம்பிட்டாரே! வீட்டிலே ஏதாவது கோபமா?**

மற்றவர்: **சேச்சே! அதெல்லாம் ஒண்ணுமில்லே. வருஷம் பூராவும் மாமனார் வீட்டிலே இருப்பதாவது என்று ஒரு மாறுதலுக்குத் தீபாவளிக்கு அம்மாவைப் பார்க்கப் போகிறார்.**

திருமணம் முடிந்த பிறகு பெண் கணவர் வீட்டில் ஒன்றரை மாதமும் தாய் வீட்டில் ஐந்து மாதமும் வாழ வேண்டுமாம். பிறகு மறுபடியும் கணவன் வந்து மனைவியை அழைத்துச் செல்லுவானாம்.

மணப் பெண்ணுக்குச் சகோதரிகள் இரண்டு மூன்று பேர் இருந்தால் அவர்களையும் அந்த மாப்பிள்ளையே மணந்து கொள்ளலாமாம். இதே போல் சில குடும்பங்களில் பல சகோதரர்கள் ஒருத்தியையே மனைவியாக வரித்து வாழ்ந்து வந்தாலும் மூத்தவனுக்கே குடும்பத் தலைவன் என்ற மரியாதை கொடுக்கப்படும். பிறக்கும் குழந்தைகள் அனைத்தும் அந்தக் குடும்பத்தில் பிறந்த குழந்தைகளாகவே கருதப்படுமாம். விதவைகள் கணவன் இறந்த அடுத்த ஆண்டு மறுமணம் செய்து கொள்ளலாம். ஆனால் இவர்களிடையே சாதாரணமாய் விதவைகள் உண்டாவதற்கு இடமில்லையே! சில இடங்களில் ஒருத்திக்கே தன் கணவனின் சகோதரர் அல்லாத அன்னியர் நாலைந்து பேர் கணவன்மார்களாக இருக்கின்றனர். ''பஞ்சபாண்டவர் குலம்'' என்று இந்தியாவின் தென் கோடியில் உள்ள தொதுவர்களைச் சொல்வதுண்டு. தொதுவப் பெண் ஒரு குடும்பத்து நான்கு ஐந்து சகோதரர்களைத் திருமணம் செய்து கொள்வது போல வட கோடியில் வாழ்ந்து வரும் திபேத்தியர்களிடமும் இந்தப் பழக்கம் இருக்கிறது. ஆனால் ஒவ்வொரு கணவனும் அவளுக்கு வேண்டிய ஆபரணங்களைக் கொடுக்க வேண்டும். ஒவ்வொருவனும் அவளுடைய தேக பலம் குறையாமல் இருக்கும்படி கவனித்துக் கொள்ள வேண்டும். ஆண்களை விடப் பெண்கள் நன்றாகச் சாப்பிட்டு நல்ல பலசாலிகளாகவும், தேகக் கட்டுடனும் இருக்க வேண்டுமாம். முதல் பக்கத்தில் இருக்கும் படத்தில் ஒரு பெண் பதக்கம் போன்ற ஒரு அணியுடன் காட்சியளிக்கிறாளே - அதுதான் அவள் திருமணமானவள் என்பதைக் காட்ட அணியும் தாலி. அது உள்ளங் கையை விடப் பெரியதாக இருக்கிறது. அதைத் தனியாகக் கொண்டுவந்து காட்டும்படி கூறினேன். அதற்கு ஒரு திபேத்திய மங்கை எப்படிக் கொண்டு வந்து காட்டினாள் தெரியுமா?

ஒரு பட்டுத் துணியில் அதை மூடி, இரண்டு கைகளிலும் ஏந்திக்கொண்டு மரியாதைக்காகத் தன் நாக்கை நீட்டியபடி வந்தாள். நானும் பதிலுக்கு என் நாக்கை நீட்டிய பிறகு தான் அவள் கைத் துணியைத் திறந்து தாலியை எனக்குக் காட்டினாள்.

திருமணமானதும் ஒரு மூங்கிற் குழாயில் ஐந்து வண்ணங்களைப் பூசி அதை நடு வீட்டில் வைக்கின்றனர். அது அவர்கள் சாகும்வரையில் நடுவீட்டில் இருக்க வேண்டுமாம். அதற்குத் தினமும் தூபம் போட்டு புத்த மந்திரம் சொல்லுகிறார்கள். திருமணத்தன்றும் மற்ற விசேஷ நாட்களிலும் திபேத்தியர்கள் நடன உடை அணிந்து நடனமாடுகின்றனர். அந்த உடையில் கைவிரல்களுக்குமேல் சுமார் அரை அடிக்குத் துணி நீண்டு விரல்களைத் தாண்டித் தொங்கிக் கொண்டிருக்கிறது. நடனமாடும் பொழுது பல வண்ணங்களுடன் கூடிய அந்த உடைகளின் எழிலை வர்ணிக்கவே முடியவில்லை. நடு நடுவே ஆண்களும், பெண்களும் ஒருவர் இடுப்பை ஒருவர் சேர்த்துப் பிடித்து அணைத்துக்கொண்டு நடனமாடுகிறார்கள். சிறுவர்கள் முதல் பெரியவர்கள் வரையில் நடனங்கள் ஒரே மாதிரிதான்.

திபேத்தியப் பெண்கள் ஒவ்வொருவரும் மருத்துவப் பணியைக் கற்று வைத்திருக்கின்றனர். பெண் குழுவான தும் வீட்டு வேலைகளைக் கற்றுக் கொள்வது போல் மருத்துவப் பணியையும் கட்டாயமாகக் கற்றுக் கொள்ள வேண்டுமாம். திபேத்தியப் பெண்கள் மகப் பேறுகாலத்தில் எவ்விதமான கஷாயமும் போடுவதில்லை. குழந்தை பெற்றதும் இரண்டு மூன்று நாட்களுக்குள் மற்ற மங்கையரைப் போலவே வேலை செய்ய ஆரம்பித்து விடுகின்றனர். மேலும் திபேத்திய ஆண்களுக்கும் மருத்துவப் பணி விஷயம் தெரியும் என்று பெருமையுடன் கூறிக்கொள்ளுகின்றனர். பிரசவமானவளுக்குத் திபேத்தில் வாழும் ''யாக்'' என்ற எருமையின் வாலைத் தனியாகச் 'சூப்' செய்து கொடுப்பார்களாம். ஆனால் இங்கோ ஆடு, மாடு இவற்றின் எலும்பை சூப் செய்து கொடுக்கிறார்கள். ஐந்து அல்லது பத்து நாட்கள் ஆனதும் நெய்யைக் கொதிக்க வைத்து 'ஹல்' என்ற மதுவைச் செய்து கொடுப்பார்களாம். குழந்தைகளுக்குத் தாயிடம் பால் குறைவு ஏற்பட்டால் மாட்டுப் பால் அல்லது ஆட்டுப் பால் கொடுக்கின்றனர். பெற்ற குழந்தை இறந்துவிட்டால் தாய்க்கு மார்பில் பால் கட்டிக் கொண்டு வேதனை தராமலிருக்கத் தாய் தன் மார்பகத்தைத் தானே அழுத்தி பால் காலிலும் படாமலிருக்கும் படி கிழக்குப் பக்கம் பார்த்த நிலையிலிருக்கும் சுவரின் மேல் கறந்து விடுகிறாள். சுவரில்லாத இடத்தில் பச்சை மரத்தில் கறந்து பால் கட்டுவதைத் தவிர்ப்பாளாம்.

இவர்களுக்கு அம்மை நோய் கண்டால் பய பக்தியுடன் தேவி பூஜை செய்கின்றனர். இருபத்தொன்றும் நாள் காளி பூஜையும் 'டப்லியாமோ' என்ற தேவி பூஜையும் செய்கின்றனர். டப்லியாமோ தேவி தன் நாக்கைப் பெரிதாக வெளியில் நீட்டிக் கொண்டிருக்கிறாள். அம்மை நோய் கண்டவருக்கு எந்த மருந்தும் குடிக்கவோ, மேலே தடவவோ கொடுப்பதில்லை. மற்ற வியாதிகளுக்கும் பெயரை மாற்றிக் கொள்வது போல் இதற்கும் செய்வதுண்டு.

இறந்த திபேத்தியரை உட்கார வைத்துப் பாடை கட்டுகிறார்கள். பிணத்தை ஒரு வெள்ளைத் துணியால் மூடி விடுகிறார்கள். இறந்தவர்களுடைய வீட்டில் மூன்று நாட்கள் பூஜை செய்த பின் பிணத்தை மயானத்துக்குக் கொண்டு போகிறார்கள். பிணத்துடன் மயானத்துக்குப் போகிறவர்கள் ஐந்து அல்லது ஆறு பேர்கள்தான். அவர்களுள் ஒருவர் பூஜை செய்வார். ஒருவர் முரசை அடித்துக் கொண்டு மந்திரங்கள் படிப்பார். இரண்டு பேர் பிணத்தைத் துண்டு துண்டாக வெட்டுவார்கள். பிறகு அதற்கு உப்பும் மற்ற வாசனைப் பொருள்களும் போட்டுப் பக்குவப்படுத்தி அதை எடுத்துக் கழுகுகளுக்குப் போடுவார்கள். பிறகு எலும்பைக் கூட இடித்துப் பொடியாக்கிப் பறவைகளுக்குப் போடுவார்களாம்.

இதில் ஓர் ஆச்சரியம் என்னவென்றால், ஒரு பெண் பிணமும் ஓர் ஆண் பிணமும் ஒரே நேரத்தில் மயானத்துக்கு வந்தாலும் சரி, அல்லது ஒரே நாளில் ஒரு பாடியில் ஒரு பெண்ணும் ஓர் ஆணும் இறந்தாலும் சரி, அப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் முதலில் பெண் பிணத்தைத்தான் வெட்டிப் போடுவார்களாம். அதைப் பறவைகள் சாப்பிட்ட பிறகுதான் ஆண் பிணத்தை வெட்டிப் போடுவார்கள். ஆண் பிணத்தைச் சாப்பிட்ட பறவைகள் பெண் பிணத்தைச் சாப்பிடாதாம். இது அவர்கள் சம்பிரதாயத்தில் மிகவும் ஆச்சரியம் தரத்தக்கது. பெண் பிணத்தைத் தீட்டு என்று பறவைகள் கருதுகின்றன என்று கூறுகிறார்கள். ஆனால் சில இறைச்சிகளைக் காட்டில் சாப்பிட்டுப் பழக்க முடைய நான் அதை உடனே அவர்களுக்கு விளக்கினேன். ஆட்டு இறைச்சி சாப்பிடும் மக்களுக்கு இது நன்றாகத் தெரியும். பெண் ஆட்டின் இறைச்சியை விட ஆண் ஆட்டின் இறைச்சி தான் ருசியாகவும் மென்மையானதாகவும் இருக்கும். இந்தக் காரணங்களை வைத்துக் கொண்டு பார்த்தால் பெண் பிணத்தைச் சாப்பிட்ட பறவைகள் ஆண் பிணத்தை ருசியாக இருக்கிறதென்று சாப்பிடும் போலும். ஆனால் ஆண் பிணத்தைச் சாப்பிட்ட பிறகு பறவைகளின் வாய்க்குப் பெண் பிணம் 'சப்'பென்று இருப்பதால் ஆணைச் சாப்பிட்ட பின் பெண்ணைச் சாப்பிட மறுக்கின்றது போலும்' என்று அவர்களுக்குச் சொன்னேன். மைசூரில் வந்த புதிதில் இவர்கள் இப்படிச் செய்தார்களாம். இதுபோலச் செய்யக் கூடாதென்று ராஜ்ய அரசாங்கம் கேட்டுக் கொள்ளவே இப்பொழுது பிணங்களைப் புதைத்து விடுகிறார்களாம். சிலர் எரிக்கவும் செய்கின்றனராம்.

இறவு இல்லத்தில் நாற்பத்தொன்பது நாட்கள் நெய் விளக்கோ அல்லது எண்ணெய் விளக்கோ நடு வீட்டில் எரிக்கப்படும். பிறகு திபேத்திய மொழியில் புத்த மந்திரங்கள் சொல்லப்பட்டு ஒரு சடங்கு நடைபெறும். இந்தச் சடங்குடன் கருமாதி போன்ற ஒரு சம்பிரதாயம் முடிந்துவிடும்.

இவர்களுக்குள் உள்ள பஞ்சாயத்துத் தலைவரும் ஒரு லாமாதான். குற்றம் செய்தவர்களுக்கும் கடுமையான தண்டனை கொடுக்கிறார்கள். கசையடிகள், மந்திரத்தால் தண்டனை முதலிய கொடுமையான தண்டனை கொடுக்கப்படுகிறது. திபேத்தில் பெண்களைப் பலவந்தப்படுத்தி மானபங்கம் செய்தால் அதற்குத் தண்டனையாக அவர்களுடைய கையை வெட்டிவிடுவார்களாம்.

பஞ்சாயத்தின் மூலம் பெண்கள் தங்கள் கணவனை விவாகரத்துச் செய்தால் அவர்கள் பெற்ற குழந்தைகளின் வாழ்க்கையைப் பஞ்சாயத்தாரின் முடிவுப்படி நிர்ணயிக்கிறார்கள். பஞ்சாயத்திலுள்ள லாமாக்களுக்குப் பத்து வயதானாலும் அவரை எண்பது வயதுப் பெரியவர் பார்த்தால் உடனே தன் நாக்கை வெளியில் நீட்டித் தலை வணங்கிக் கைகட்டித் தான் பதில் கூறுகின்றார். ஒரு சல்லாத் துணியை லாமா என் கழுத்தில் போட்டார். அதை நான் வணங்கி ஏற்றுக் கொண்டு மறுபடியும் அவர் கழுத்தில் நான் ஒரு துணியைப் போட்டேன். அதுதான் மரியாதையாம்.

திபேத்தியர் எங்காவது சந்தைக்கோ, காட்டில் வேலைக்கோ அல்லது வீதிகளிலோ சென்றாலும் எறும்புகளைப் போல் வரிசையாகவும் ஒழுங்காகவும் செல்கிறார்கள். வண்டிகளுக்கு இடம் கொடுத்தும், தெருவின் ஓரமாகவும் நடந்து போகும் இந்தக் காட்சியைப் பார்ப்பதற்குக் கவர்ச்சியாகத் தான் இருக்கிறது. மேலும் வயல்களில் வேலை செய்யும் போதும் பெண்கள் வரிசையாக நின்று கூட்டமாகச் சேர்ந்து திபேத்திய மொழியில் இயற்கையையும், வருண பகவானையும் போற்றிப் பாடுகிறார்கள்.

நல்ல நாட்களிலும், தலாய் லாமா வந்த அன்றும் சுமார் முப்பதடி நீளமுள்ள 'கொம்பு' என்ற எக்காளத்தை ஊதுகிறார்கள். அதன் மறுபக்கத்தை ஓர் உயரமான பலகையின்மேல் வைத்துத்தான் ஊத முடியும். அதை என்னால் தூக்கவே முடியவில்லை. மேலும் அதை ஊதும்பொழுது அந்த ஓசையைக் காதால் கேட்கவே முடியவில்லை. இடிஇடிப்பது போல் இருக்கிறது. அதன் பெயர் திபேத்திய மொழியில் 'தொஞ்சுறு' என்பது.

இவர்களுடைய ஆகார முறைகளும் விசித்திரமானவை. காலையில் தேநீர் அருந்துகிறார்கள். தேநீர் தயாரிக்கும் விதமோ ஒரு பெரும் ஆச்சரியம். அந்தகைய தேநீரை நம் நாட்டில் ஒருவருமே கண்டும் கேட்டும் குடித்துமிருக்க முடியாது.

முதலில் தங்களுக்கு வேண்டிய தேயிலையை வெந்நீரில் போடுகிறார்கள். சிறிது நேரத்துக்குப்பின் வெந்த தேயிலையை எடுத்து உரல் போல் இருக்கும் சுமார் மூன்றடி மூங்கிற்குழாயில் போடுகிறார்கள். அதில் அளவாக அரைப்படி வெண்ணெயையும், கால் படி சமையல் உப்பையும் போடுகிறார்கள். பிறகு நம் வீட்டில் தயிர் கடையும் மத்துப் போன்ற ஒருவிதப் பெரிய மத்தினால் உரலில் போட்ட தேயிலையையும் உப்பையும், வெண்ணெயையும் ஒன்றாகச் சேர்த்து அரிசி இடிப்பது போல் இடிக்கின்றனர். சிறிது நேரத்தில் ஒரு கஷாயம் வருகிறது. அதை அளவாக எடுத்துக் குடிக்கின்றனர். அதைக் குடித்தால் எப்படி இருக்கிறது என்று கேட்கிறீர்களா? நான் ஒரு டம்ளர் குடித்துப்



''மாப்பிள்ளே! மாப்பிள்ளே! என்ன இது, பாத்திரங்களுக்குப் பத்துத் தேச்சண்டிருக்கே?''

''பாத்திரங்களுக்கு இல்லே. நீங்க போட்ட பதினாறு காரெட் மோதிரத்துக்குத்தான்!''

பார்த்தேன். நீங்களும் அரை டம்ளர் கலந்தும் பார்த்தால்தான் தெரியும்.

இந்தத் தேநீரைக் காலையில் குடித்த பின் சுமார் ஒன்பது பத்து மணிக்கு இறைச்சியுடன் ஆகாரம் சாப்பிடுகிறார்கள். மற்ற நேரங்களில் தேநீர்தான் குடிக்கின்றனர். ஒரு நாளைக்குச் சுமார் நூறு கப் தேநீர்கூடச் சாப்பிடுவார்களாம். நான் நீலகிரியில் தோதுவர்களின் மத்தியில் தங்கி இருந்தபோதும் அவர்களும் அப்படியேதான் தேநீரைத் தயார் செய்வதை நேரில் பார்த்திருக்கிறேன், குடித்துமிருக்கிறேன்.

சாதாரணமாக எல்லா ஆகாரங்களையும் இரண்டு குச்சிகளால் வேகமாகவும், இடுசித்தாமலும் சாப்பிடுகிறார்கள். திபேத்திய மொழியில் அந்தக் குச்சிக்கு 'கொக்சே' என்று பெயர். இவர்கள் காலனியில் நூற்றுக்கணக்கான பன்றிகள் வளர்வதைக் கண்டு "ஏன் இவ்வளவு பன்றிகள் வளர்க்கிறீர்கள்?" என்று கேட்டேன். "நாங்கள் மீன், பன்றி, மாடு, ஆடு, கோழி, வாத்து, மான் முதலிய விலங்குகளை வெட்டிப் பங்கு போட்டுச் சாப்பிடுவோம்." என்று கூறினார்கள். இவர்கள் உலர்ந்த இறைச்சியையும் சாப்பிடுவார்களாம். நான் இவைகளைக் கேட்டதும் ஆச்சரியமடைந்தேன். ஏனென்றால் திபேத்தியர்கள் கொல்லாமையைப் போதிக்கும் புத்த மதத்தைச் சேர்ந்தவர்களாயிற்றே என்று. திபேத்திய வாலிபர்களின் கையில் 'உண்டி வில்' இருப்பதையும் கவனித்தேன். சமயம் கிடைத்தால் பறவைகளையும் வேட்டையாடுவதுண்டாம்.

'தசாம்பா' உணவு என்று ஒன்றை எனக்குக் கொஞ்சம் கொடுத்தார்கள். அதுவும் அவர்கள் உணவு வகையில் முக்கியமானதாம். இது நம் நாட்டுச் சேமியா போல் இருக்கிறது. இதைப் பட்டாணி, கடலை முதலியவைகளை மணலின் மூலம் வறுத்து எடுப்பது போல் இரும்புக் கடாயில் வறுத்து எடுத்து வைத்துக் கொள்கிறார்கள். எப்பொழுது எவ்வளவு வேண்டுமோ அப்பொழுது அதை எடுத்துப் பாலிலோ, தேனிலோ, மதுவிலோ கலந்து அப்படியே குச்சியால் சாப்பிடுகிறார்கள். சேமியாவைச் சமைத்துச் சாப்பிடுவதைப் போல் இருந்தாலும் பசை போல் இருக்கிறது. நாமோ சேமியாவைச் சமைத்துச் சாப்பிடுகிறோம். அவர்கள் வறுத்துச் சாப்பிடுகிறார்கள். 'நாடல்ஸ்' என்னும் ஒருவகைக் கோதுமையால் செய்த அப்பளத்தைச் சாப்பிடுகிறார்கள். விருந்து சாப்பிடும்போது விருந்தினர்களில் யாராவது தங்கள் வயிற்றைத் தடவிக் கொடுத்தால் வயிற்றுக்கு ஆகாரம் போதாது என்பதை அறிவிக்கும் அறிகுறியாம் அது.

ஒவ்வொரு குடிசையைச் சுற்றிலும், வீட்டைச் சுற்றிலும், நடைபாதையிலும் சுமார் நூற்றுக் கணக்கான கொடிகள் காற்றில் படபடவென்று பறக்கின்றன. அவற்றில் புத்த மந்திரமும் ஒரு காளி படமும் இருக்கின்றன. இதற்கு என்ன காரணம் தெரியுமா? பேய், பிசாசு, கெட்ட காற்று, வாந்தி பேதி, அம்மை போன்ற வியாதிகள் அந்தப் புத்த மந்திரத் துணியில் அடிபட்டுத் துணி பறப்பது போல் அவைகள் பறந்து ஓடிவிடும் என்பது அவர்களுடைய கருத்து.

மேலும் காகிதத்தில் மாகாளியின் உருவத்தைச் சித்திரித்து எழுதி அதைச் சுற்றிலும் புத்த பகவானின் ஜெபத்தையும் எழுதித் தங்கள் வீட்டின் வாசற்படியில் அடித்து வைத்திருக்கின்றனர். நவீன காலப் போரின் கொடுமைகளிலிருந்து விடுபட "கெள" என்ற ஒரு குல தெய்வத்துக்கு அடிக்கடி மந்திரம் கூறுகிறார்கள். அதனால் நவீன காலத்தியப் போர்க் குண்டுகளினால் நாசம் விளையாதாம்.

திபேத்தியர்களிடம் பல மூட நம்பிக்கைகளும் பழக்க வழக்கங்களு மிருந்தாலும் நம்மைப் போலவே பஞ்ச பூதங்களில் இவர்களுக்கு நம்பிக்கை அதிகம். இவர்கள் ராசி பன்னிரண்டு என்றும், அவை முயல், யாளி, பாம்பு, குதிரை, செம்மறி ஆடு, கொரில்லா, பறவை, நாய், பன்றி, கண்டெலி, எருது, புலி முதலியவையென்றும் கூறுகிறார்கள். காலனியில் ஒரு தனியான பெரிய குடிசையில் பலவிதப் புத்தகங்களும், புத்தருடைய படங்களும், புத்தர் சிலையும் இருக்கின்றன. அந்தக் குடிசையைச் சுற்றிலும் முப்பது நாற்பது குட்டி லாமாக்கள் உட்கார்ந்து கொண்டு திபேத்திய மொழியில் புத்த மந்திரத்தைப் படிக்கின்றனர். இவர்களுக்குக் கோடி தேவதைகள் இருக்கிறார்கள். குடிசையாக இருந்தாலும் சரி, அதில் ஒரு புத்தர் சிலை இருப்பதைக் கண்டேன். ஓய்வு நேரங்களில் ஜெபம் செய்யும் சக்கரத்தை வைத்துக்கொண்டு 'ஓம் மணி பத்மே ஓம்' என்று சொல்லிக் கொண்டே இருக்கிறார்கள். ஒவ்வொரு வீட்டின் கூரையின் மேலும் உயரமான கம்பத்தில் திபேத்தியர்களின் மொழியில் பல ஜெபங்கள் எழுதி அதன் முனையில் பேய் பிசாசுகளின் முகங்களைப் போல் துணி பொம்மை செய்து, அதிலும் அந்த மந்திரங்களை எழுதி வைத்து உயரத்தில் அதைப் பறக்க விடுகிறார்கள்.



வெளியே நிற்கும் பையன்: "ஏண்டா மணி, எல்லா வாணங்களையும் வெடிச்சுட்டியா?"
வீட்டில் இருக்கும் பையன்: "இல்லே; ஒரு பாதிதான் ஆயிருக்கு. இன்னொருபாதி இருக்கு......"

பொள்ளாச்சி, யானை மலைப் பகுதிகளில் வாழும் ஆதிவாசிகள் மழை வேண்டியிருந்தால் அந்த மங்கையர்கள் தங்கள் கை வளையல்களைத் துண்டு துண்டாக உடைத்து முறத்தில் போட்டுப் புடைப்பார்கள். உடனே மழை வருகிறது. இதை நான் நேரில் கண்டேன். அந்தப் பழக்கத்தைப் போல் திபேத்திய லாமாக்களும் மழை வேண்டியதாக இருந்தால் புத்த மந்திரம் படிக்கின்றனர். மேலும் வயலில் வேலை தொடங்குவதற்கு முன்பும் வெளியில் போகும்பொழுதும் நற்சகுனங்களும், நல்ல காலமும் பார்ப்பதுண்டு. எந்தக் காரியம் தொடங்குவதற்கு முன்னும் ஆண்டவனை நினைக்கின்றனர். இறந்தவர்களில் சிலர் தங்கள் இல்லங்களில் இயேசுவின் படத்தை ஸ்தாபித்து நாள் முழுவதும் எண்ணெய் விளக்கு எரிய விடுவார்கள். அதைப் போலவே சில திபேத்தியர்களின் இல்லங்களிலும் புத்த பகவானுக்கு நாளெல்லாம் எண்ணெய் விளக்கு எரிய விடுவதைக் கண்டேன்.

மலைகளிலும் காடுகளிலும் வாழும் ஆதிவாசிகள் எப்படி மருந்துகளை விட தேவி பூஜையிலும் காட்டுத் தேவதை பூஜையிலும் பயன் அதிகமிருக்கின்றது என்று நம்புகிறார்களோ அப்படியே திபேத்தியர்கள் மந்திரம், குனியம், முதலியவைகளுக்குச் சக்தி அதிகம் என்று நம்புகின்றனர்.

திபேத்திய மொழி கற்றுக் கொள்வதற்கும் உச்சரிப்பதற்கும் கடினமாக இருக்கின்றது. திபேத்தியர் பேசும்போது சீனர்கள் பேசுவதைப் போல் இருந்தாலும் திபேத்திய எழுத்துக்கள் சில எழுத்துக்களை விடப் பெரியவை. ஆனால் இந்திய எழுத்துக்களின் வடிவங்களைப் போல் இருக்கின்றன. திபேத்திய மொழிக்கும் பிராமிய மொழிக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளைக் கட்டுரையின் தொடக்கத்திலுள்ள ஒரு படத்தில் காணலாம்.

திபேத்தியர்களின் தபால் தலைகள் தனிப்பட்டவை. இதில் பிறை, சூரியன், மலை, தர்ம சக்கரம், சிங்கம் (யாளி) முதலிய சித்திரங்களுடன் திபேத்திய மொழியில் 'ப்போஷாங் – காண்டன் போடும் – சோக்லே நாம்க்யால்' என்று எழுதி இருக்கிறது. இதன் பொருள்: சுதந்திரமடைந்த திபேத்தியப் பேரானா அரசாங்கம் என்பதாம். திபேத்தியர்களின் நாகரிகத்தையும், வாழ்க்கை முறைகளையும் பார்க்கும் போது அவர்கள் தனியானதொரு ஆட்சிமுறையுடன் வாழ்ந்து வரும் மக்கள் என்பது நன்கு விளங்குகிறது.

நம் அண்டையிலுள்ள பழம்பெரும் நாடான திபேத்தில் வாழும் மக்களின் பழக்க வழக்கங்களை ஓரளவு தெரிந்து கொள்ள முடிந்ததில் நான் பெருமைப்பட்டாலும் சீன வெறியர்களிடமிருந்து திபேத்தியர்களின் தாய்நாடு மறுபடி விடுதலையடைந்து நம் நாட்டிலுள்ள இந்த அகதிகள் மறுபடியும் தங்கள் தாயகத்துக்கு திரும்பிப் போக வேண்டும் என்று ஆண்டவனை மனதார வேண்டிக்கொள்கிறேன்.



# யந்திரத் தொழில் வளர்ச்சியில் ஒரு புதிய சகாப்தம்

அம்பத்தூர்—சென்னையிலிருந்து 12 மைல் தொலைவில் ஒரு குக்கிராமம். யந்திரத் தொழில் அரங்கில் ஆங்காங்கு உருப்பெற்று வரும் புரட்சிகரமான மாறுதல்களால் சிறிதும் பாதிக்கப்படாமல், சந்தடியற்றுக் கிடந்தது. இந்நிலையில் 1949 நவம்பரில் ஒரு நாள் காலை, உறங்கிக் கிடந்த அம்பத்தூர் விழிப்புற்று எழுந்தது. எங்கு பார்த்தாலும், பிரம்மாண்டமான தொழிற்சாலை உருவாவதற்கான ராட்சத யந்திரங்களும் கனரக எஃகு பொருள்களும் வந்த வண்ணமாய் இருந்தன. ஆம், டி.ஐ. சைக்கிள்ஸ் தொழிற்சாலை உருவாகத் தொடங்கிவிட்டது.

சென்னை, முருகப்பா & ஸன்ஸுக்கும், இங்கிலாந்தின் ட்யூப் இன்வெஸ்ட்மெண்ட்ஸ் ஸ்தாபனத்திற்குமிடையே உண்டான தொழில் கூட்டுறவின் பலனாக நிறுவப்பட்ட ட்யூப் இன்வெஸ்ட்மெண்ட்ஸ் ஆப் இந்தியாவின் முதல் சாதனையாகும் டி.ஐ. சைக்கிள்ஸ் ஆப் இந்தியா. வெகுவாய் வளர்ச்சி பெற்றுள்ள டி.ஐ. ஸ்தாபனம் இன்று இரும்புத் தகடுகள், எஃகு குழாய்கள், சைக்கிள்கள், சைக்கிள் உபகரணங்கள், தொழிற்சாலைகளுக்கான மெஷின்கள்—இவை போன்ற அனேகப் பொருள்களைத் தயாரிக்கிறது.

அம்பத்தூரில் புதியதொரு யந்திரத் தொழில் சகாப்தத்திற்கு முன்னோடியாய் அமைந்தது டி.ஐ. சைக்கிள்ஸ் ஆப் இந்தியா. அன்று அசைவற்றுக்கிடந்த இக்கிராமமும் அதன் சுற்றுவட்டாரமும் இன்று சுறுசுறுப்பும் விறுவிறுப்பும் மிக்கதொரு தொழில் நகராகத் திகழ்கிறது.

**ட்யூப் இன்வெஸ்ட்மெண்ட்ஸ் ஆப் இந்தியா லிமிடெட்**

**52/53, ஜஹாங்கீர் தெரு, மதராஸ்-1**

பின்வரும் கம்பெனிகளின் உரிமையாளர்கள்: டி.ஐ. சைக்கிள்ஸ் ஆப் இந்தியா—"ஹெர்குலிஸ்", "பிலிப்ஸ்" சைக்கிள்கள், 'பிராம்டன்' சைக்கிள் உறுப்புகள் தயாரிப்பாளர்கள்; ட்யூப் ப்ராடக்ட்ஸ் ஆப் இந்தியா—ட்ரு வெல் ERW எஃகு குழாய்கள், கோல்ட் ரோல்ட் எஃகு தகடுகள் (Cold rolled Steel Strips) தயாரிப்பாளர்கள்; லைட் ஸாடில்ஸ் ஆப் இந்தியா—சைக்கிள் ஸீட் தயாரிப்பாளர்கள்; டி. ஐ. மெட்டல் செக்ஷன்ஸ்—கோல்ட் ரோல் பாரம்ட் செக்ஷன்ஸ் (Cold Roll formed Sections) தயாரிப்பாளர்கள். உதவிக் கம்பெனிகள்: டிஐ டையமண்ட் செயின் லிமிடெட்—சைக்கிள்களுக்கும், தொழிற்சாலைகளுக்கும் தேவைப்படும் செயின் தயாரிப்பாளர்கள்; டிஐ மில்லர் லிமிடெட்—டைனமோ விளக்குகள் தயாரிப்பாளர்கள்.

JWT/TI/2163




முத்தையா பிள்ளை பாதிரி மரத்தின் நிழலோரமாக இருந்த குறட்டில் வந்து உட்கார்ந்தார். அந்தக் குறட்டைத் தாண்டித்தான் செல்வப் பிள்ளையாரை சந்திக்கப் போக வேண்டும். வழக்கம் போல் அவர் உள்ளே போகவில்லை; காதுகளைப் பற்றிக் கொண்டு பாவனையாகத் தோப்புக்கரணம் போடவில்லை. நெற்றியிலும் குட்டிக் கொள்ளவில்லை. காரணம் செல்வப் பிள்ளையாரிடம் அவருக்குச் சென்ற சில நாட்களாக மன வருத்தம்.

ஆமாம்; பிள்ளையாரிடம்தான் அவருக்குக் கடும் கோபம்.

அந்தக் கோபம் எப்படித் தணியும் என்று அவருக்கே விளங்கவில்லை. முத்தையா பிள்ளை பாதிரி மரத்தை அண்ணாந்து பார்த்தார். அது பூக்கிற பருவம் இல்லை. அணில்கள் இரண்டு ஒன்றையொன்று துரத்திக்கொண்டு அதன் கிளைகளில் பாய்ந்து ஓடிய வண்ணம் இருந்தன. கோயிலுக்கு நேர் கிழக்கே அழகான தாமரைக் குளம். சந்நிதிக்கு எதிரே கருங்கல் படித்துறை. கைக்கு எட்டுகிற தூரத்தில் இரண்டு தாமரைப் பூக்கள் அடர்த்தியாக மலர்ந்து அசைந்தாடிக் கொண்டிருந்தன. குளத்தைச் சுற்றிச் செழிப்பான தென்னை மரங்கள் இளம் தாய்மார்களைப் போல் இளநீர்க் குலையும் செங்குரும்பையுமாகக் காட்சியளித்தன. எதிர்க் கரையில் ஏழெட்டு மாமரங்கள். ஓரக் கால்களில் செவ்வரளிச் செடிகள். பார்க்கவே பசுஞ்சோலை போல் அந்த இடம் கண்ணுக்குப் பச்சென்று குளிர்ச்சியாக இருந்தது.

கோயிலுக்கு இடதுபுறத்தில் பெரிய அன்னசத்திரம். திண்ணைக்கு நூறு பேர் வீதம் தங்கி விருக்கலாம். அப்படி இரண்டு வாசற்படிகளும், மூன்று திண்ணைகளும் கொண்டு ஒரு தெரு நீளத்துக்கு இருந்தது. வலது புறத்தில் 'ரைஸ்மில்'ன் மதில் சுவர். புழுங்கல் வாடையும் புகைபோக்கியுமாக அது நூறு கஜ தூரத்துக்கு நீண்டிருந்தது.

கோயில் குறட்டில் உட்கார்ந்து கொண்டு முத்தையா பிள்ளை எல்லாவற்றையும் ஒரு நோட்டம் விட்டார். முப்பது ஆண்டுகளுக்கு முன்பு அந்த இடம் பொட்டைத் திடலாகவும், காட்டாமணக்குக் காடாகவும் இருந்தது யாருக்குத்தான் தெரியாது. அதோ கூப்பிடு தூரத்தில் தெரியும் சுந்தல் பனைவிலிருந்து வடக்கே போகிற பெரிய ரஸ்தா வரை வீதும் இப்படி உருத்தெரியாமல் மாறிவிடும் என்று அந்த மூக்கரில் யாராவது நினைத்தாவது பார்த்திருப்பார்களா? அதிலும் மூக்கரில் பண்ணையில் அப்போது எடுபிடி சேவகம் செய்து வந்த வீரப்ப பிள்ளை தம்முடைய மகன் முத்தையா இவ்வளவு பெரிய சொத்துக்கு உரியவனாக வருவான் என்று ஊமைக் கனவேனும் கண்டிருப்பாரா? அந்த வீரப்ப பிள்ளை இன்று இதையெல்லாம் பார்க்க இல்லை என்று அவருக்கு வருத்தமாகத்தானிருந்தது. உயிர்மூச்சு நிற்கிற வரையில் அந்த அப்பாவி மனிதர் ஒரு சுகத்தையாவது கண்டிருக்க வேண்டுமே! ஊரார் வியக்க அவர் ஆறு மக்களைப் பெற்றெடுத்தாரே, அதுதான் அவர் அடைந்த பேறு.

வெளியில் நடவுக்கும் களையெடுக்கவும் வருவதற்கே வெட்கப்பட்டுக் கொண்டு வறுமையிலும் செம்மையிலும் கடைக்குட்டி முத்தையாவைக் கட்டியணைத்துக் கொண்டாள் சொர்ணம். வீரப்ப பிள்ளை எதையும் காதிலே வாங்கிக் கொள்ளவும் இல்லை; வாயைத் திறந்து வழக்காடவும் இல்லை. ஊரில் அங்கொன்றும் இங்கொன்றுமாக மொத்தம் எட்டே வீடுகள்தான். அத்தனை பேருக்கும் அந்தப் பிள்ளை பிறந்தது இளப்பமாக இருந்தது. "எல்லோரும் சிரிக்கிறார்களே. இது ஏன் பிறந்திச்சோ?" என்று நொந்து கொண்டாள் சொர்ணம்.

"எட்டுகுடி முருகன் இருக்கிறான்! வூட்டுத் தள்ளுவியா? பொகப்பு இருக்குது. பொறந்திச்சு! அதுக்கு ஆருதான் என்ன செய்யிறதாம்?" என்றார் வீரப்ப பிள்ளை.

இதெல்லாம் பெற்ற தாய் சொல்லித்தான் பிள்ளைக்கே பின்னால் தெரிந்தது. நிறைசூலியாக இருக்கிற போதே பிள்ளை நீராகக் கரைந்து போகாதா என்றுகூட அந்தத் தாய் நெஞ்சுக்குள்ளேயே எண்ணி மறுகினாளாம்.

முத்தையாபிள்ளை முதல் மூன்று ஏக்கர் நிலம் வாங்கிய போது சொர்ணம் இதைச் சொல்லி விட்டுக் கண்ணுலே நீர் சொரிந்தாள். "எம் வயித்துப் புள்ளையே நானே கரிச்சேனே!" என்று நெட்டி முறித்து விரல்களைச் சொடுக்கினாள்; விசும்பி விசும்பி அழுதாள்.

"இருட்டுப் புள்ளே பெத்தவ கணக்கா தெகச்சேன்டா ராசா! உங்க ஐயா இருந்து பாக்கலியே உன்னே!" என்று ஏங்கிப் போனாள் அந்தத் தாய்.

முத்தையா பிள்ளைக்கு இப்போது அதை நினைத்ததும் கண்கள் இரண்டும் கலங்கிப் பனித்தன. காய்த்துக் காடு தட்டிப் போன கைகளால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு உள்ளங்கையை உற்றுப் பார்த்தார். நாலே நாலு ரேகைகள்! எந்த ரேகை இந்தச் சம்பத்துக்கெல்லாம் காரணமோ, அவருக்கு என்ன தெரியும்? பள்ளிக்கூடம் போய்ப் படித்திருப்பவர்களுக்கு ஒருகால் தெரிந்திருக்கலாம். அவர் நிழலுக்குக் கூட அந்தப் பக்கம் ஒதுங்கியதில்லையே! ஓர் எழுத்துக்கூட அவர் ஒழுங்காகக் கற்றதில்லையே. — தம் பெயரை எழுதுவதற்குக்கூட வெகு நாட்கள் கழித்தல்லவா அரும் பாடுபட்டுக் கற்றுக் கொண்டார்! ஆனால் அவர் முகத்தின் ஒளியைப் பார்த்தால் எழுதப் படிக்கத் தெரியாதவர் என்று துணிந்து கூறவா முடியும்? அவர் பேச்சிலிருந்தும் அதைக் கண்டுகொள்ள முடியாதே !

கட்டை வண்டியை ஓட்டி, நெல் மூட்டைகளைச் சுமந்து, ஓரிடத்தில் உட்காராமல் நாயாக ஓடியாடி அலைந்து, சாண் வயிற்றுக்குச் சம்பாதிக்க எத்தனை கஷ்டப்பட்டிருக்கிறார்? கடைசியில் ஆற்று மடைக் குளத்து அநாதைப் பிள்ளையாரை நம்பித்தான் மூன்றே மூன்று ரூபாய் முதல் போட்டு, சாக்கும் மரக்காலும் வாங்கி நெல் வியாபாரத்தை ஆரம்பித்தார் அவர். அவர் நம்பிக்கை வீண் போகவில்லை. நடுச் சாலையை ஒட்டிய அந்தக் குளத்திலே எத்தனைகாலமாக இப்படி ஒரு பக்தன் கிடைக்காமல் வெயிலிலும் மழையிலும் காய்ந்து நனைந்து தவம் கிடந்தாரோ, செல்வப் பிள்ளையார். மூக்கரிலிருந்து பக்கத்துச் சிறு நகரத்துக்குப் போகும்போதும் வரும்போதும், முத்தையா அவரைப் பார்த்துப் பாவனையாக இரண்டு தோப்புக் கரணமும், நெற்றியில் இரண்டு குட்டுக்களும் போட்டுக் கொண்டு போவார். மற்ற நேரங்களில் அந்தப் பிள்ளையாரைக் கவனிப்பாரும் இல்லை; நினைப்பாரும் இல்லை. ஆற்று மடைக் குளத்தில் ஒரு நாள் தண்ணீர் அள்ளிக் குடித்துத் தாகத்தைத்





தனித்துக் கொண்டபோது திடீரென்று சொந்தமாக நெல் வியாபாரம் தொடங்கினால் என்ன என்ற நினைப்பு முத்தையா வுக்குப் பளிச்சிட்டது. உடனே திரும்பி அந்தப் பிள்ளையாரைப் பார்த்தார். அந்தப் பிள்ளையார் உயிருடன் உட்கார்ந்து தலையை அசைப்பது போல் அவருக்குப் பட்டது. அவ்வளவுதான்; இடுப்பிலே வைத்திருந்த மூன்று ரூபாய்களைக் கொண்டு போய்ச் சாக்கும் நெல் அளக்கும் மரக்காலும் சொந்தமாக வாங்கிக் கொண்டார். நேராக நெல் மண்டி நாகலிங்கம் செட்டியாரிடம் போனார்.

''ஆரு தம்பி, நீ? புதுசா இருக்கு?''

''முக்கூருங்க!''

''முக்கூருப் பண்ணையா?''

''ஆமாங்க.''

''எங்கே வந்தே இப்படி?''

''நெல்லு வியாபாரம் செய்யலா மின்னு நெனெச்சு வந்தேங்க. ஒத்தாசை செய்ய வேணும்.''

''எது, எது? நெல்லு வியாபாரமா? பாத்தா சிறு பிள்ளையா இருக்குறே. உனக்கு என்ன செய்யணும், சொல்லு!''

''அதாஞ் சொன்னேனே—''

''ம்.... ம்.....ம்.....'' என்று சிறிது நேரம் யோசித்தார் செட்டியார். பிறகு வாயைத் திறந்து, ''வியாபாரம் செய்யணுமின்னு, கையிலே ரொக்கம் ஏதுனாச்சம் வச்சிருக்கியா?'' என்றார்.

''இதான் என்கிட்டே இருக்கிற மொதலுங்க. வேறே ஒண்ணும் கெடையாதுங்க.''

வேறு சமயமாக இருந்தால் செட்டியார் இன்னும் ஏதாவது கேட்டிருப்பார். இப்பொழுது என்ன பட்டதோ, தெரியவில்லே. ''அது சரி; நீ ஏதாவது சாமி கும்பிட்டதுண்டா?'' என்று மட்டும் கேட்டார்.

''உண்டுங்க. எங்க ஊருக்குப் போற வழியிலே ஆற்றுமடைக் குளத்துக் கரையிலே ஒரு பிள்ளையார் இருக்கிறாருங்க. போறப்போ வர்றப்போ கும்பிடுவேங்க. நெத்தியிலே குட்டிக்குவேன். வேறு சாமியை நான் கும்பிட்டதில்லே.''

செட்டியார் அவன் எளிய முகத்தைக் கொஞ்ச நேரம் ஊன்றிக் கவனித்தார். அந்த இளம் முகத்திலே என்ன ஒளியைக் கண்டாரோ தெரியாது. ''ம்....ம்.... பிள்ளையாரப்பா! போணி ஆகிற நேரத்துலே மொதல் மொதல் இந்தப் புள்ளே யாண்டானைக் கொண்டாந்து விட்டிருக்கியே, இவனுக்கு என்ன ஒத்தாசையைச் செய்யறது?'' என்று உதட்டுக்குள் முணுமுணுத்துக் கொண்டார். மீண்டும் ஒரு முறை முத்தையாவை மேலும் கீழுமாகப் பார்த்தார்.

பிறகு கல்லாப் பெட்டியைத் திறந்து, ''இந்தா, இதைப் பிடி. இதான் முதல் போணி. நேரே உங்க முக்கூருக்கே போ. உங்க ஊர்ப்பண்ணையிலே எத்தனே வண்டி நெல் இருந்தாலும் அப்படியே விலை பேசிக்க. நெல் மூட்டை வந்து எறங்கின தும் அதுக்கு உண்டான தொகையைக் கையிலே எண்ணி வைக்கட்டுறேன். இந்தத் தொகையை அச்சாரமாகக் கொடுத்துடு. எங்கே, பார்க்கலாம், உன்னுடைய திறமையை!'' என்று நூறு ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்து அவன் கையில் கொடுத்தார்.

முன்பின் தெரியாது. கணக்கிலே பைசாவானாலும் விடாத செட்டியார் எதை நம்பி அவனிடம் அந்த நோட்டைக் கொடுத்தார்? அது அந்தப் பிள்ளையாருக்குத்தான் வெளிச்சம். அந்த நோட்டைக் கை நீட்டி வாங்குகிறபோது உணர்ச்சி மிகுதியால் முத்தையாவின் உதடுகள் படபடத்தன. ஆற்றுமடைக் குளத்துப் பிள்ளையாரே அந்த நோட்டை நீட்டுவது போலிருந்தது.

முத்தையாபிள்ளை நினைத்த காரியம் நிறைவேறியவராக முக்கூருக்குத் திரும்பினார். ஆற்றுமடைக் குளத்தில் அநாதையாக, அநாதியாக வீற்றிருந்த பெயர் தெரியாப் பிள்ளையார், முத்தையாவின் செல்லப் பிள்ளையாராக மாறி, நெல் வண்டியில் ஏறிக் கொண்டு, முக்கூர் பொட்டைத் திடலுக்குக் குடி போய் விட்டார். அன்று முதல் முத்தையாவின் நெல் தரகு வியாபாரத்தில் செல்லப் பிள்ளையார் வீசம் பங்குக் கூட்டாளியு மாகிவிட்டார்!

பிடிபிடியென்று தலைகாட்டித் தூற்ற லாகத் தொடங்கிய தூற்றல் வர வர வலுத்து, பெரு மழையாகப் பொழிவது போல் அன்று மூன்று ரூபாய் முதலுடன் பிடித்துக் கொண்ட வியாபாரம் சக்கைப் போடு போடத் தொடங்கி விட்டது. வெறும் முத்தையனாக இருந்தவர் மெல்ல மெல்ல முத்தையா பிள்ளையாக வளர்ந்து விட்டார். எந்த நேரம் போய்க் கேட்டாலும் இடுப்பு மடியிலேயே இரண்டாயிரம் மூவாயிரம் என்று புரண்டது. கணக்கு வழக்குப் பார்க்கத் தெரியாத முத்தையா பிள்ளைக்குக் கணக்கு வழக்கில்லாமல் செல்வம் வந்து குவியத் தொடங்கி விட்டது. முதலில் குடியிருப்பு மனையை விலை பேசி வாங்கினார். பிறகு அதைச் சுற்றியுள்ள பங்குகளை விலைக்கு வாங்கினார். செல்லப் பிள்ளையாருக்குத் தம் சொந்த மனையை எழுதி வைத்து, சின்னதாக ஒருகொட்டகையும் போட்டு வைத்தார். அவருடைய அன்னை சொர்ணம்மாள் இறந்த வருடத்தில் முக்கூர்ப் பண்ணையே ஏலத்தில் வந்தது. அதைக் குறைந்த தொகைக்கு எடுத்து, ஊர் விலைப்படி ஆகும் பாக்கித் தொகையை ரொக்கமாகக் கொடுத்து விட்டார்.

உள்ளம் கையில் இருக்கும் இந்த நாலு ரேகைகளில் எந்த ரேகை இதற்கெல் லாம் பொறுப்போ, அவருக்குத் தெரியாது. ஆனால் கொரட்டூர் மாமன் மகளை என்றைய தினம் அவர் கைப்பிடித்து அழைத்து வந்தாரோ அன்று முதல்தான் அவருடைய கூரை வீடு கல் வீடாகியது. காட்டாமணக்குக் காடெல்லாம்கொத்தி வெட்டிய பசும் வயற் காடுகளாக மாற் றம் பெற்றன. கொட்டகைக் கோயில் விமானம், கோபுரக் கலசம் வைத்த கற் கோயிலாக உருமாறியது. அதற்கு எதிரே பொருக்கும் வெடிப்புமாக இருந்த பள்ளம், அழகிய தாமரைக் குளமாக, படித் துறையும் பட்டி நிறைச்சலுமாக அந்தம் பெற்றது.

பெரிய சாலையிலிருந்து செல்லப்பிள்ளை யார் கோயில் வழியாக ஒரு தனிச் சாலையே இப்போது தோன்றி விட்டது. இரவு – பகல் எந்த நேரத்திலும் நெல் வண்டிகள் மூட்டைகளை இறக்கி அடுக்குவதும் ஏற்றிச் செல்லுவதுமாக இருந்தன. முத்தையா பிள்ளைக்கு எல்லாம் கண் திதானம்தான். கணக்குகள் எல்லாம் அந்த நிதானத்துக்கு முன்னால் பிச்சை வாங்க வேண்டும்.

மூத்த தமக்கை மகன் சிவகுருதான் வெகு நாட்கள் வரையில் அவருக்கு உதவியாக எல்லாவற்றையும் மேற்பார்வை செய்து வந்தான். இரண்டு மைல் நீளத்துக்கு வண்டிகள் நெல் மூட்டைகளை ஏற்றி நின்றாலும் முத்தையாபிள்ளைக்குக் குத்து மதிப்புப் போடத் தெரியும். பிள்ளையார் உண்டியலை ஒரு முறை கையினால் தூக்கிப் பார்த்து, வண்டிகளையும் ஒரு நோட்டம் விடுவார்.

''ஏ, சிவகுரு! இங்கனே வா, கொஞ்சம்!'' என்பார்.

''என்ன மாமா?''

''வண்டிங்களைச் சரியா எண்ணி வியா?'' என்று கேட்பார்.

''எண்ணிப்புட்டேனே; நூத்தறுபது வண்டி சரியாத்தானே இருக்குது!''

''வண்டியெ எண்ணினே, சரி; உண்டியல் கணக்கிலியே, ஏன்?''

''அதுவா? சில்லறைக்குப் பதிலா நோட்டாப் போட்டிருக்கிறேன் மாமா! அதான் கனம் கொறஞ்சி போச்சி.''

''வண்டிக்குப் பதினறு மூட்டைன்னு, நூத்தறுபதுக்கு நூத்தறுபது ரூபா உண்டியல்லே, சரியா இருக்குமா?''

''எண்ணிப் பாருங்களேன், சரியா இருக்கும்.''

''சரி போ. பிள்ளையாரு பணத்தைக் கொட்டை விட்டுடப்படாது. அதுக் குள்ளே சொல்றேன்!''

அப்படிச் சேர்ந்த பணம்தான் இன்று கோயிலாகவும், குளமாகவும் பூஜைக்குத் தேவையான நிலமாகவும் மாறி யிருந் தது. சொந்தச் செலவுக்கென்று அதி லிருந்து ஒரு பைசாகூட அவர் தொட்ட தில்லை. தென்னை மரங்களிலிருந்து விழு கிற மட்டைகளைக் கூட தனித்துப் படிய வைத்து, ஒழிந்த நேரங்களில் தம் கையால் கீற்றாக முடைந்து விடுவார். கோயிலுக்கு முன்புறம் பாதி மரத்தை வளைத்துப் போட்டிருந்த கொட்டகை முழுதும் அவர் கையாலேயே முடைந்து போட்ட கீற்றுகள்தான். குளத்துத் தாமரை இலைகளை யார் வேண்டுமானா லும் கிள்ளிப் பறித்துக் கொண்டு போக லாமே தவிர, அவர் வீட்டு உபயோகத் துக்கு ஓர் இலை கொண்டு வந்தாலும் சகித்துக் கொள்ள மாட்டார். தேங்கா





வெல்லாம் கோவிலுக்குச் சொந்தமான உடைமை. கோவில் தேவைக்குப் போக மீதி சந்தைக்குப் போய் விற்று, காசாக வந்து விடும் உண்டியலுக்கு. அதனால் தான் அவருக்குப் பதினாறு வேலி நிலம் சேர்ந்த போது செல்லப் பிள்ளையாருக்கு ஒரு வேலி நிலம் சேர்ந்திருந்தது. பிள்ளையாருக்கு வீசம் பங்கு என்றால் கணக்குச் சரிதானே !

கப்பலுக்கு அரிசி ஏற்றுமதி செய்யத் தொடங்கிய போதுதான் அவருக்கு அருணாசலம் பிறந்தான். அதற்கப்புறம் மீனாட்சி பிறந்தாள். முத்தையா பிள்ளை தொட்டதெல்லாம் பொன்னாகிக்கொண்டிருந்தது. 'ரைஸ் மில்'லில் ஒரே வருஷத்தில் பத்தாயிரத்துக்கு மேல் லாபம் கிடைத்தது.

பத்தாயிரக் கணக்கில் பணம் புரண்டிருந்தும் அவருக்குப் பாங்கி எந்தப் பக்கம் இருக்கிறது என்று தெரியாது. அன்னம்மாள்தான் அவருடைய பாங்கி. அந்தப் பாங்கி ஒரு நாள் அவரே திடுக்கிடும்படி தலையைச் சாய்த்து விட்டது. இரண்டு நாள்கூடப் படுக்கையில் கிடக்கவில்லை. முகம் வாடாமல், உடம்பு வாடாமல் தூங்குகிற மாதிரி நெற்றிக் குங்குமத்தோடு படுக்கையில் கிடந்த அன்னம்மாளை வாரிக் கொடுத்து விட்டு அவர் திக்கு — திசை தெரியாமல் திகைத்துப் போய் நின்றார். முழுசாகப் பதினாறு ஆண்டுக் காலம் அவள், அவரோடு வாழவில்லை. மீனாட்சியைப் பார்க்கிற போதெல்லாம் அவர் உள்ளம் மனைவியை நினைந்து ஓலமிடும். அதற்கு இடம் வைப்பானேன் என்பது போல் அந்தச் சின்னஞ் சிறிய பிஞ்சும் கொடியை விட்டு உதிர்ந்து விட்டது. முத்தையா பிள்ளையால் அடி மேல் விழுந்த இந்தப் பெரிய அடியைத் தாள முடியவில்லை. "பிள்ளையாரப்பா! நான் யாருக்கு என்ன தீங்கு செஞ்சேன்? எனக்கு ஏன் இத்தனை கடுமையான தண்டனை!" என்று நெஞ்சம் புலம்பினார்.

விதியின் வழி யாருக்குத் தெரியும்? முத்தையா பிள்ளை வியாபாரத்தை ஒடுக்கிக் கொண்டு உடைந்து நொறுங்கிய உள்ளத்தை ஒட்ட வைப்பது போல் பிள்ளையார் கோவிலுக்கு இடப்புறமாக ஒரு சத்திரம் கட்டுவதில் முனைந்தார். அதைப் பார்வையிடும் போதெல்லாம், 'ஜெலுக் — ஜெலுக்' கென்று கால் மெட்டி ஒலிக்கத் தம் மனைவி கூடவே வந்து பார்வையிடுவது போல் அவருக்கு ஒரு பிரமை தோன்றும். இரவிலே படுக்கையில் அவர் வெகு நேரம் விழித்திருப்பார். சத்திரம் கட்டும் வேலை பூர்த்தியாகி வருவதைக் கண்டு அன்னம்மாள் முகத்தில் புன்சிரிப்பைக் காண்கிற வரையில் அவருக்குத் தூக்கம் வராது. அருணாசலத்தை அருகில் படுக்க வைத்துக் கொண்டு, அதற்கு மேல் தூங்கிப் போவார்.

அவன் மேல் அவர் உயிரையே வைத்திருந்தார். தாம் பள்ளிக்கூடம் சென்று படிக்காத குறையை எல்லாம் அவனைக் கொண்டு தீர்த்துக் கொள்ள அவர் துடியாகத் துடித்தார். அவனை முன்னிட்டே தம் அன்பை இன்னொருவரிடம் பகிர்ந்து தர அவர் விரும்பவில்லை. அன்னம்மாள் இருந்த வீட்டில், இருந்த நிலையில் இன்னொருத்தியா? அதை அவரால் கற்பனை கூடச் செய்து பார்க்க முடியவில்லை. அந்த நினைப்பே அவர் உள்ளத்தைத் தொடவில்லை. அவர் உள்ளத்தில் அருணாசலம் ஒருவன்தான் நிறைந்திருந்தான். அவன்தான் அவருக்கு எல்லாம். அவருடைய எல்லாமே அவனுக்குத்தான்.

அருணாசலம் சிறு நகரத்துக்கு வண்டியில் போய்ப் படித்து வந்தான். அவன் திரும்பி வரும் வரையில் அவர் உயிர் கூட்டிலேயே தரித்திருக்காது. பிள்ளையார் கோவில் குறட்டிலேயே அவன் வண்டி வரும் வழியிலேயே விழியை வைத்துக் காத்திருப்பார். தூரத்தில் வண்டி வருகிற சத்தம் கேட்டால் போதும்; அவர் உள்ளமே துள்ளும். ஒளிந்திருந்த தெம்பும் உற்சாகமும் கரை புரண்டு ஓடும். எதுவுமே லட்சியம் இல்லாதவர் போல் பேச்சும் தொனியும் திடீரென மாறும். எதைக் கேட்டாலும் அந்தச் சமயத்தில் இல்லை என்று பதில் வராது.

"சிவகுரு — சிவகுரு — தம்பி வந்துட்டான்னு அக்காகிட்டே போய்ச் சொல்! பசும் பாலு கறந்திட்டாங்களா, பாரு! வேலையாள் பையனைக் கூப்பிட்டுச் சுடு தண்ணி எடுத்து வைக்கச் சொல்லு! சத்திரத்து ஐயரை நெய்யாப்பம் செய்து வைக்கச் சொன்னேன். அதை வாழை இலையிலே சுத்தி வாங்கிக்கிட்டு வா!" என்று பரபரப்படைவார். வண்டியை எதிர்கொண்டழைக்கப் போவார். அருகில் போனதும் வெட்கம் தடுக்க வேறு எதற்கோ வந்து போவதாய்ப் பாசாங்கு செய்வார். அன்பை இத்தனை வெளிப்படையாகவா காட்டிக் கொள்வது?

"ஏன், தம்பி! இத்தனை நேரம்? சரி, சரி. போய்ப் பலகாரம் வைக்கச் சொல்லிச் சாப்பிடு!" என்று சொல்லி விட்டு, சாலையிலிறைந்து கிடக்கும் வைக்கோலைக் காலினாலேயே ஒருங்குசேர்த்து ஓரமாக ஒதுக்குவார். "படிக்கப் படிக்க, புள்ளே உருகிப் போவுது. பாரேன், பதினாறு வயசுப் புள்ளையாவா இருக்கு?" என்று பக்கத்தில் இருப்பவரிடம் அவர் ரகசியம் பேசுவார்.

அந்தப் படிப்புக்கு மேலே கல்லூரிப் படிப்பு இருக்கிறது என்றதும் அவருக்கு நான்கு நாட்களுக்கு நல்ல சோறே இல்லை. படிப்பை நிறுத்தி விடுவோமா என்றுகூட எண்ணமிட்டார். ஆனால் நெஞ்சுறுதி இல்லாத கோழை என்று பிறர் சொல்ல இடம் கொடுக்கலாமா? தீராப் பொறியாக, முகத்தை வேறுபுறமாகத் திருப்பிக் கொண்டு சிவகுருவின் துணையோடு, மடி நிறையப் பணத்தோடு மகனைத் திருச்சிக்கு அனுப்பி வைத்தார்.

"நாலு வருசத்துப் படிப்பா படிக்கணும்? நாசமாப் போச்சு, போ! ஏன், மூணு வருசம் படிச்சா மோசமா? நல்ல சோறு கிடைக்குமா? குளிக்க, படுக்க, படிக்க எல்லாத்துக்கும் வசதியிருக்கா? தனியா வந்திட்டமேன்னு தம்பி வருத்தப்பட்டுக்கிட்டானே?" என்றெல்லாம் கேட்டுச் சிவகுருவைத் துளைத்தார்.

திருச்சிப் படிப்பு முடிந்து திரும்பிய அருணாசலத்தின் தோற்றத்தையும் ஆடையலங்காரத்தையும் கண்டு அவரே பெரிதும் மலைத்துப் போனார். 'முக்கூர் முத்தையாபிள்ளையின் மகனா இந்தப் பிள்ளையாண்டான்? வீரப்ப பிள்ளையின் வம்சமா இந்தப் பையன்? பக்கத்து டவுன் தாசில்தார்கூட இத்தனை எடுப்புச் சிறப்பாக இருக்க மாட்டாரே! வக்கீல் ஐயா மருமகப் பிள்ளைகூட இத்தனை வடிவாக இல்லையே! உடம்பு நிறம் வெளுத்துப் போயி, தலை மயிர் அலை அலையாக நெளிந்து போயி, கையும் காலும் செழிப்பாக வளர்ந்து, முகத்திலே அரும்பு மீசை கட்டி, தோளும் கழுத்தும் அடிவாழையைப் போல் நிறந்திருப்பு ஏறி, கண்ணிலே அன்னம்மாளின் பார்வை எப்படியோ புகுந்து, — எம் மகன் அருணாசலமா இவன்? இல்லாட்டி முக்கூர் ராசா மகனு?" முத்தையாபிள்ளை சட்டென்று தம் பார்வையைத் திருப்பிக் கொண்டார். தம் கண் பார்வையே மகனைத் தீண்டி விடுமோ என்று அஞ்சி, செல்லப் பிள்ளையாரை மனத்துக்குள் வேண்டிக் கொண்டார். உடுப்பும் சட்டைகளும் கண்ணைப் பறித்தன. முப்பது லட்சம் சொத்தும் பெறுமானவன் மகன் — தண்ணீர்க் காவியேறிய துணியும் சட்டையுமா அணிவது?

அருணாசலத்தின் அருகில் போனாலே பூந்தோட்டத்துக்குள் போனது போன்ற இனிய மணம் ஒன்று வீசுவது. செல்வ போகத்தின் செழிப்பும் இளமையின் காந்தியும் ஒளிரும் முகத்தின் உதடுகள்மட்டும் ஏனோ நீலமாகக் கறுத்திருப்பானேன்?

இரண்டு மாதம் கழித்து அருணாசலம் சட்டப் படிப்பும் படிக்கச் சென்னைக்குப் போவதாகச் சொன்னபோது மீண்டும் அவருக்கு அமைதியில்லாமல் போயிற்று.





''எப்படி என் மத்தாப்பு......?''

அத்துடன் நண்பர்களைச் சாக்கிட்டு, பக்கத்து டவுனிலிருந்து டின் டின்னாகச் சிகரெட்டுகளும் பிஸ்கோட்டுகளுமாக வருவதையும் அந்தச் சிகரெட்டுகளின் புகை மணம் வருவதையும் பார்த்து அவர் சிறிது கலவரமுற்றிருந்தார். 'தம்பி! அப்படி யெல்லாம் இருக்க மாட்டான்' என்றும் தமக்குத் தாமே சமாதானம் சொல்லிக் கொண்டார்.

பட்டணம் சென்று சில மாதங்கள் வரையில் எல்லாம் ஒழுங்காகவே இருந்தன. ஆனால் அதற்குப் பிறகு திடீர் திடீரென்று பெரும் தொகை தேவை என்று தந்தி வந்த போது பையனுக்கு என்னவோ, ஏதோ என்று அவர் துடி துடித்துப் போனார். தந்தி மூலமாகவே பணத்தை அனுப்பி விட்டு, விவரம் கேட்டிருந்தார்.

பணம் சேர்ந்தது என்று மட்டும் விடை கொடுத்திருந்த அருணாசலம் அடுத்த மாதமே மற்றொரு பெரிய தொகைக்குத் தந்தி கொடுத்தான். இந்தத் தடவை இவ்வளவு பெரிய தொகை எதுக்கு என்ன தேவை என்று அவர் கவலைப்பட்டார். இருந்தாலும் பணத்தைக் கேட்டபடி அனுப்பி வைத்தார். மூன்றாம் முறை அவசர ஓலை வந்தபோது முத்தையாபிள்ளை, ''வெகுரு! பணத்தை நீயே எடுத்துக்கிட்டுப் போ! அவசியம் தான் என்றால் கொடு. இல்லாட்டித் திரும்பி வந்துடு'' என்று சொல்லி விட்டு அடுத்த ஊரிலிருந்த அன்னம்மாளின் அண்ணனைப் போய்ப் பார்த்து வரப் புறப்பட்டார்.

''என்ன அத்தான், அதிசயம்! வராத வங்க இப்படி எங்களை ஒரு பொருட்டாக் கிளே!'' என்று விழுந்து விழுந்து உபசாரம் செய்தார் அவருடைய மைத்துனர் நாகுப் பிள்ளை.

''உபசாரமெல்லாம் கெடக்கட்டும். உம் மகளைக் கொஞ்சம் இப்படி வரச் சொல்லு!'' என்றார் முத்தையா பிள்ளை. கையோடு அந்தப் பெண்ணுக்குச் சேலையும் ரவிக்கைத் துண்டும் வாங்கிக் கொண்டு வந்திருந்தார்.

பதினேழு பதினெட்டு வயது இருக்கும் அந்தப் பாவைக்கு. முத்தையா பிள்ளைக்கு அவளைப் பார்த்ததும் தூக்கி வாரிப் போட்டது. அன்னம்மாளின் சாயலாக, அன்னம்மாளையே பழையபடி பார்ப்பது போல வந்து வணங்கினாள் அந்தப் பெண்.

''ஒம் பேரு என்ன, குழந்தே?''

''தங்கம்.''

தங்கத்துடன் தாமிரத்தையும் கலந்து உருக்கி வார்த்தது போலத்தான் அவள் இருந்தாள். தங்கக் கொடிதான் அவள் மேனி. அங்கமெல்லாம் தந்தத்தைக் கடைந்தெடுத்தது போல் கவர்ந்தது. அவளது துடி இடைக்கும் கீழ் தொங்கியது பின்னல் சடை.

''நாகு, எதுக்கு வந்திருக்கிறேன் தெரியுமா?'' என்று புதிர் போட்டார் முத்தையாபிள்ளை.

அவரே சொல்லட்டும் என்று பேசாமல் நின்றார் நாகுப் பிள்ளை.

''இந்தா, எதுக்கும் பரிசமா இதை வெச்சுக்க! அன்னம்மா போட்டிருந்த நகை யெல்லாம் அப்படியே இருக்கு. அதுலே நகை நட்டுலே அதிகமாச் செலவழிக்க வேணாம்! நான் போய்த் தேதி வைக்கத் தோது பார்த்து எழுதறேன்!'' என்று புறப்பட்டு விட்டார்.

''ஏன்டா, வெகுரு, எப்ப வந்தே நீ?'' என்றார் முத்தையா பிள்ளை.

''காலையிலேதான் வந்தேன்.''

''பணம் கொடுத்திட்டியா?''

''கொடுத்திட்டேன்!'' — வெகுரு அதற்கு மேல் ஒன்றும் சொல்ல வில்லை; அவரும் கேட்க வில்லை. 'விசேஷமாக இருந்தால் சொல்லாமலா இருந்து விடுவான்?' என்று அவருக்கு நினைப்பு. வெகுருவுக்கும் அதே மாதிரி நினைப்புத்தான். 'சொல்லக் கூடியதாக இருந்தால் சொல்லாமல் இருப்பேனா?'

''அடே, வெகுரு! அந்தப் பயலுக்கு ஒரு கல்யாணத்தைக் கட்டிப் போடலாம் என்று நினைக்கிறேன். நீ என்ன சொல்லுறே?''

''செய்ய வேண்டியதுதான்!''

முத்தையா பிள்ளை அவன் முகத்தையே கூர்ந்து நோக்கி விட்டு, ''அவசரமாச் செய்துப்புட்டாத்தான் தேவலாம். இல்லையாடா?'' என்றார்.

''ஆமாமாம்......செய்துப்புட வேண்டியதுதான்!''

முத்தையா பிள்ளை முடைந்து கொண்டிருந்த கீற்றைத் தூக்கியெறிந்து விட்டு, ''என்டா, எத்தினி நாளாடா, இந்த வேலே? என்கிட்டயே மறைச்சாப் பேசறே?'' என்று கோபமாக எழுந்து அருகில் வந்தார்.

வெகுரு குற்றவாளியைப் போல் தலையைக் குனிந்துகொண்டு நின்றான்.

''இதுக்குத்தான் உன்னே மெனக்கெட்டு அனுப்பிச்சாங்களோ? இந்தப் பணத்தைத் தபால்லே அனுப்பிச்சாப் போய்ச் சேராதோ! இல்லே, கேக்கறேன்!''

வெகுரு வாயைத் திறக்கவில்லை.

''என்டா, ஊமை கணக்கா நிக்கறே? ஓடிப் போயி ஓமக்குடி ஜோஸியரைக் கையோட அழைச்சிக்கிட்டு வாடா! போறானும்; கொடுத்தானும்; அவசரமாச் செய்துப்பிட வேண்டியதுதானும்! போக்கத்த பய வந்து வெக்கம் இல்லாம சொல்லுறான்!'' என்று எகிறிக் குதித்தார்.

பிறகு படித்துறை வரையில் போய் நின்று, ''இதான் படிப்பாடா? படிச்ச பய லச்சணம் இதானா? காறித் துப்பாமலா வந்தே, கழிசெட்டுப் போவி!'' என்று கத்தினார்.

உடனே திரும்பிப் பிள்ளையார் சந்நிதியில் போய் நின்று, ''ஊ....ஹூம்; இருட்டா, வாதியா, இருக்கிற இடம் தெரியாம குந்தியிருக்காப்பலே இருக்கு. நடக்கிறதெல்லாம் நாயந்தானா? இல்லே கேக்கறேன்! உனக்கே சம்மதந்தானா? இதுக்கு ஒரு வழி செய்யப் போறியா இல்லியா?'' என்று முறையிட்டுப் புலம்பினார்.

பிறகு அவராகவே சமாதானம் அடைந்து, சந்நிதியில் கிடந்த தேங்காய் நார்களைத் தள்ளிவிட்டு ''செல்லப் பிள்ளையாரே நேசமாச் சொல்றேன்! எப்பவும் போல எல்லாத்துக்கும் உன்னைத்தான் நம்பியிருக்கேன். ஒரு குறையும் நேராம ஒழுங்கா முடியணும். உன்னைத் தவிர வேறு யாரு இருக்காங்க எனக்கு?'' என்று உருக்கமாக வேண்டிக் கொண்டார்.

ஓமக்குடி ஜோஸ்யர் மூன்றும் மாதத்தில் முகூர்த்தத்துக்கு நாள் குறித்துக் கொடுத்து விட்டார். பூ வைத்துக் கேட்டதில் பிள்ளையார் உத்தரவு கொடுத்து விட்டார். ஆனால் பட்டணத்திலிருந்து பதில்தான் வரவில்லை.

''அடே, வெகுரு! தங்கச் சிலையிலே தங்கச் சிலே, அது கெட்டுடா அந்தப் பொண்ணுகிட்ட. அத்தனை வடிவா, கனியா இருக்குதடா! போய்ச் சொல்லு இன்னைக்கே போ! படிச்சக் கிழிச்சதெல்லாம் போதும். ஜாகையைக் காலி பண்ணிட்டு அவனைக் கையோட கூட்டி யாந்துடு!'' என்று அவர் முடிவாகக் கூறி அவனை விரட்டினார்.

வெகுரு போய் ஒரு வாரம் ஆயிற்று. ஒரு பதிலையும் காணோம்.

''செல்லப் பிள்ளையாரே! உனக்கு இவ்வளவுதான் தெரியுமா? நானும் மனிசன்தானே? என்னாலே எவ்வளவு தாங்க முடியும்? குருவி தலையிலே பனங்காயையா வெக்கிறது?''

முத்தையாபிள்ளை நிலை குலைந்து போய் விட்டார். அடுத்த ஊரிலிருந்து திடீரென்று நாகுப் பிள்ளை வந்ததும் அவருக்கு என்ன பதில் சொல்வதென்றே புரியவில்லை அவருக்கு.

''என்ன நாகு, எங்கே திடுருன்னு?''

''தேதி வச்சப்பிட்டியளே, சேதி வேறே மாதிரியால்லே காதிலே வுளுது?''

''என்னன்னு விழுவுது?''

"சங்கதியே வேற திஜுசா முடிஞ்சி போயிட்டுதாமே....."

"என்னது, என்னது?"

"பட்டணத்திலே பங்களா, கார் எல்லாம் வாங்கி யிருக்குதாமே!"

"பங்களாவா? காரா? வாங்கினது யாரு? கொடுத்தது யாரு?"

"என்ன அத்தான், அப்படி ஒரேயடியா மறைக்கிறியே. ஒண்ணும் தெரியாத கணக்கா பேசுறே யாரு நம்புவாங்க?"

முத்தையாபிள்ளைக்கு மூச்சே நின்று விடும் போல் இருந்தது. அடுத்த வார்த்தை அவருக்கு இல்லை.

"நாகு! பிறத்தியார் நம்பறது இருக்கட்டும்; நீ நம்புறியா இல்லையா?"

"நம்பாமலா உங்களைப் பார்க்க வந்தேன் ?"

"அப்ப பேசாம திரும்பிப் போ! தங்கத்துக்குக் குறிச்ச தேதியிலே, குறிச்ச முகூர்த்தத்திலே கழுத்திலே தாலிச்சரடு ஏறுதா இல்லையா, பாரு. அதுக்கு மேலே பேச்சு ஏன்? இதையாவது நம்புறீயே ?" என்றார் முத்தையா பிள்ளை.

"ஆனால் சரி; அதுக்கு மேலே என்ன வந்தது?"

நாகும் பிள்ளை ஊரைப் பார்க்கப் போனார். மறு நாள் காலையில் வெகுரு வந்து சேர்ந்தான்.

"செத்துட்டேன்னு இல்லே நினைச்சேன்! ஏன் திரும்பி வந்தே? போயிடு அங்கேயே!" என்று வரவேற்றார் முத்தையா பிள்ளை.

"செத்திருந்தாக்கூடத் தேவலாம்னு தோணுது, மாமா. திரும்பி வந்து உங்க முகத்திலே முழிக்கவே தைரியம் வரலே!" என்றான் வெகுரு.

"என்னடா, சொல்றே? சொல்லித் தொலையேண்டா சனியா!"

"என்னத்தைச் சொல்றது, மாமா! ஏதாவது சொல்லப் பிடிச்சாத்தானே சொல்ல ?"

"என்ன நடந்திட்டுது, இப்ப?"

"ஒண்ணும் நடந்துடல்லே. ஆனா அருணாசலத்தின் போக்குச் சரியாயில்லே. நானும் எவ்வளவோ சொல்லிப் பார்த்துட்டேன்! காதிலே ஏறினாத்தானே ? பங்களா ஒண்ணு வாடகைக்குப் பேசி, கார் ஒண்ணு விலைக்கு வாங்கி...."

"பங்களாவா? காரா? ஏன் பொண்ணு யாரும் அகப்படலியா?"

"அதென்னமோ ஒரு பொண்ணு அடிக்கடி வந்துட்டுப் போகுது. வடக்கத்திப் பொண்ணுட்டம் இருக்கு. அதைப் பொண்ணும், இருக்கிற நிலையைப் பார்த்தா அதுக்கு எக்கச் சக்கமா, செலவு ஆகியிருக்கும் போலத் தோணுது. எல்லாம் தம்பியின் பேச்சிலிருந்தேதான் சொல்றேன். பெரிய ரூபா அம்பதுக்கு ஆரோ ரொம்பத் தெரிஞ்ச இடத்துலே கையெழுத்துப் போட்டுக் கடன் வாங்கி யிருக்காப்பலே தோணுது..."

சிலை போல இடிந்து போய் நின்றார் முத்தையா பிள்ளை.

"இதை யெல்லாம் அங்கேயே இருந்துக்கிட்டுக் கடுதாசியிலே எப்படி எழுதறது? உள்ளந்தரங்கமெல்லாம் தெரிஞ்சிக்காம இங்கனே வந்து என்ன செய்யிறது? அதான் ஆகறது ஆகட்டும்னு தங்கிட்டேன்!"

முத்தையாபிள்ளைக்குத் தலையைச் சுற்றியது. "வெகுரு! இன்னியிலேயிருந்து எனக்கு அவன் மகனில்லே. நான் அவனுக்கு அப்பனில்லே. ஆமாம், இது நிச்சயம்தான். இரண்டு இருந்து என் கண்ணு முன்னுலே போச்சு பாரு, அந்தக் கணக்கிலே இதையும் சேத்துக்கிறேன். இரண்டோட, ஒண்ணு, மூணு... டவுனுக்குப் போயி, நம்ம வக்கீல் ஐயாவை அழைச்சிக்கிட்டு வா! இதைக் கையோட தீர்த்துப்புடுவம்."

"எப்படித் தீர்க்கிறது? இது என்ன தீர்ந்து போகிற சங்கதியா? பெத்த மகன் ஆச்சே!"

"போடா, சரிதான், நீ ஒரு பக்கம்! நான் பெத்த மகனும், பெத்த மகன். தான் படிக்கல்லே, அவனாவது படிக்கட்டும்னு நெனைச்சேன், பாரு. எம் புத்தியைச் சொல்லணும். எம் மகன்னு இந்த மாதிரி நடந்துக்கிட்டா அப்பனுக்குச் செய்கிற மரியாதை, பாரு..... இதைவிட என் தலையிலே ஒரு கல்லைத் தூக்கிப் போட்டுப்பிடலாமே! மகனாமிவன்? நாகும் பிள்ளைக்கு நான் கொடுத்த வாக்கு என்ன ஆகிறது? நம்ம குலத்திலே பொறக்கற பொண்ணு அது? எம் பேச்சுப் பொய்யாவதை விட, என் சொத்தே போயிடலாமே.... இதுவரை நான் ஒரு பேச்சு சொன்ன சொல் தவறியிருப்பேனு? நடு நிசியானாலும் சொன்ன வார்த்தையைக் காப்பாத்த நானே போயில்லே பணத்தைக் கொடுத்திட்டு வருவேன்! எம் மகனு இவன்? இவன் இருக்கிறதை விடச் செத்தான்னு போயிடறது தேவலாமே... போடா நீ! வண்டியை ஓட்டிக்கிட்டுப் போயி வண்டியோட அழைச்சுக்கிட்டு வருவியா? வேதாந்தமா பேச வந்தே?"

"நான் போறேன் மாமா, போறேன். ஆனா வந்து இதொண்ணும் பிரமாதக் காரியமில்லே, மாமா. நீங்க ஒரு முறை நேரே போயிட்டு வந்திங்கன்னு எல்லாம் ஒரு ஒழுங்குக்கு வந்திடும்...."

"சீ...சீ... ரோசம் கெட்ட பயலே மானமிருக்கா ஒனக்கு? இத்தினி சொத்தையும் இருந்த எடத்துலே இருந்து சம்பாதிச்சேண்டா... இந்தப் பயலுக்காகவா நான் போகப் போறேன்? இருந்த எடத்துலே இருந்து இத்தினி சொத்தையும், அதைவிட, இழந்திட மாட்டேன்னு நினைக்கிறே? எங்க அப்பாரு என்னை விட்டுட்டுப் போகப்போ என்னை வச்சிருந்தாப்பலே எம் மகனை வச்சிட்டுப் போனு என்னு மோசம் வந்திடும்? நீக்கட்டுமே சந்நியிலே.....அப்பன் சொத்து வேணுமின்னு அப்பனைக் கேட்டு எந்தக் காரியத்தையும் செய்யணுமின்னு உணக்கை இருக்க வேணும்? கையெழுத்துப் போட்டுக் கடன் வாங்கற பய, நாளைக்கு என்ன செய்ய மாட்டான்? கழுத்தை நெரிச்சுப் போட்டுப் பிட்டுப் போயிடுவானே! ஏன், மாட்டானு?"

முத்தையா பிள்ளையிடம் பேசினுல் கோபம்தான் வளரும் என்று வெகுரு வண்டியைப் பூட்டிக் கொண்டு டவுனுக்குப் போய் விட்டான். 'அவ்வளவும் அவரே தேடிய சொத்து. நினைத்தால் யாருக்கு வேண்டுமானாலும் கொடுக்கலாம். பெற்ற மகனுக்கு இல்லை என்று கூடச் சொல்லலாம். முத்தையாபிள்ளை என்ன செய்வார், என்ன செய்ய மாட்டார் என்று இது மாதிரி விஷயங்களில் யாராலும் சொல்ல முடியாது.....' — இதெல்லாம் வெகுருவுக்கா தெரியாது?

பிள்ளையார் கோவில் மணி அடித்தது. அதைக் கேட்டதும் ஓட்டமாக ஓடிவரும் முத்தையா பிள்ளை கல்லுப் பிள்ளையார் மாதிரி அசையாமல் உட்கார்ந்திருந்தார். கோவில் பூஜைக்கு வருகிற குட்டிக் குருக்களுக்கு அடுத்த ஊரிலும் பூஜைக்குப் போகவேண்டும். எனவே கொஞ்சம் பார்த்துவிட்டுக் குட்டிக் குருக்கள் சோற்றுப் பட்டையைச் சுருட்டிக் கொண்டு போய் விட்டார்.



"என்னுடையதை விட உன் மத்தாப்பு ரொம்ப ஜோரா இருக்குடீ!"

போட்டோ : என். ராமகிருஷ்ணு

தந்தைக்கும் மகனுக்கும் சொத்துக்கள் விஷயத்திலே சம்பந்தம் எதுவுமில்லை என்று பத்திரிகைகளில் விளம்பரம் வந்து ஒரு வாரமாகி விட்டது. மகனுக்குக் கடன் கொடுப்பவர்கள் அவர்களுடைய சொந்தப் பொறுப்பில் கொடுக்கலாமே தவிர, தந்தையின் சொத்திலிருந்து வாங்கிக் கொள்ளலாம் என்று ஊக்கக் காட்ட முடியாது. வக்கீல் ஐயா படித்துக் காட்டியதை அவர் தம் காதால் கேட்டார். அதுக்கப்புறம்தான் முத்தையா பிள்ளையின் வேகமே தணிந்தது. அதுவும் ஒரு வாரமாகி விட்டதே! அதைப் பற்றி ஒரு பேச்சையும் காணோம்.

மாதிரி மரத்திலிருந்த அணில்கள் எங்கேயோ போய் விட்டன. வெயில் தலையுச்சிக்கு ஏறி விட்டது. சத்திரத்துத் திண்ணையில் யாரோ இரண்டு பேர் சொற்

நுக்குக் காத்திருந்தனர். மாமரத்திலே ஒரு குயில் கூவிக் கொண்டிருந்தது. முத்தையா பிள்ளை குறட்டிலேயே உட்கார்ந்திருந்தார்.

''அத்தான்!''

அரை உறக்கத்தில் உட்கார்ந்திருந்த முத்தையாபிள்ளை, அந்தக் குரல் கேட்டு நிமிர்ந்தார்.

''நான்தான் அத்தான், நாகு.''

முத்தையாபிள்ளைக்குக் கண் பார்வை மறைந்தது. காது அடைத்தது. நாக்கு வறண்டது. கையும் காலும் சொரணையில்லாமல் மரத்துப் போயின. அவர் பேசவே முடியாமல் குழறினார். இரண்டு கண்களிலிருந்தும் கண்ணீர் பெருகி வழிந்தோடியது. சின்னக் குழந்தையைப் போல அவர் மைத்துனன் காலைப் பிடித்துக் கொண்டு, கேவிக் கேவி அழுதார். பிள்ளையார் கோவிலைப் பார்த்துப் பார்த்து அழுகைக்கிடையே ஏதோ சொல்ல முயன்றார். பிறகு அப்படியே குறட்டில் சாய்ந்து விட்டார்.

''அத்தான்! அத்தான்! என்ன இது? ஏன் இப்படி?'' என்று நாகுப் பிள்ளை பதறிப் போனார்.

சற்று நேரத்தில் ஒரு சின்னக் கூட்டம் கூடி விட்டது. எங்கேயோ இருந்த சிவகுரு இதைக் கேள்விப்பட்டு ஓடி வந்தான். அவனுடைய அம்மா, முத்தையா பிள்ளையின் தமக்கை, தம்பியின் தலையைத் தூக்கி மடியில் வைத்துக் கொண்டு அழுதாள். பேச்சு மூச்சு இல்லாமல் கிடந்த முத்தையாபிள்ளை மெதுவாகக் கண்ணைத் திறந்து பார்த்த போதுதான் அத்தனை பேரும் நல்ல மூச்சு விட்டனர்.

''நாகு!'' என்று ஈனசுவரத்தில் அழைத்த முத்தையாபிள்ளை கூட்டத்தைப் பார்த்துவிட்டு விருட்டென்று எழுந்து உட்கார்ந்தார்.

''எனக்கு ஒன்றுமில்லே — போ, அக்கா வீட்டுக்கு!'' என்று தடிப்பாய்க் கூறினார். ''ஏன்டா, வேடிக்கையா பார்க்கிறே? கூட்டம் என்னடா இங்கனே?'' என்று சிவகுருவைக் கடிந்து கொண்டார்.

எல்லாரும் போன பிறகு, ''நாகு! உம் மகனோட சாப்பாடுதான் நான் ஒரு வாரமாச் சாப்பிடறது. மூணுலே ஒரு பங்கு அன்னம்மா சத்திரத்துக்கும் பாக்கி ரெண்டு தங்கத்துக்குமின்னு எழுதி வைச்சுப்பிட்டேன். கொடுத்த வாக்குத் தவறிப்புட்டேன். என்னை மன்...னிச்..சுக்க!'' சொல்லிக் கொண்டே வரும் போது கண்ணீர் மீண்டும் மாலையாகப் பெருகியது. ''எல்லாரும் என்னை வேடிக்கை பார்க்கறாங்க; சைன்யில் இருக்கு பாரு. ஐம்பது ரூபாய் பெறும். பெத்த கடன் இருக்கு, பாரு. அதுக்காக அதை வித்து அந்தப் பயல் 'கடனை'த் தீர்த்துப்புடுங்க... இருந்தாலும் போயிட்டாலும் நான் கேட்டுக்கறது இவ்வளவுதான்!'' என்றார்.

நாகுப் பிள்ளை நடு நடுவே குறுக்கிட்டு ஏதேதோ சொல்ல வந்தார். முத்தையா பிள்ளை அவரைப் பேசவே விடவில்லே. சொல்வதைச் சொல்லி முடித்து விட்டு, மெல்ல எழுந்து குளத்துப் பக்கமாகப் போனார். படித்துறையில் இறங்கி மூழ்கினார். பிறகு கரையேறி, ஈரத் துணியைப் பிழிந்து கட்டிக் கொண்டு தயங்கி நின்றார். அப்புறம் என்ன தோன்றிற்றோ, விறுவிறுவென்று பிள்ளையார்

**தரமோ மோதிரம்?**

''வைர மோதிரத்துக்குப் பதிலா நீ கடன் பத்திரங்கள் கொடுத்தியே அப்பா! அதனுடைய பலன்தான் இது!''

சந்நிதிக்கு முன்னால் வந்து இரண்டு தோப்புக் கரணம் போட்டார். நெற்றியில் குட்டிக் குட்டிக் கொண்டார்.

அப்புறம் கண்ணை இறுக மூடிக் கொண்டு, ''ஆற்றுமடைக் குளத்துப் பிள்ளையாரப்பா! எல்லாம் நீ கொடுத்தது. சொத்து, சுதந்திரம், வீடு வாசல், பெண்டாட்டி — பிள்ளை! பாத்துக்க நல்லா. நான் எனக்குன்னு ஒன்னும் எடுத்துக்கல்லே. எனக்கு வேணவும் வேணும். ஆனா ஒண்ணு மட்டும் கேட்டுக்கிறேன். நான் இந்த ஊரிலே பிறந்தேன். இந்த ஊரிலேயே இறந்திடணும். மூச்சு உள்ள வரைக்கும் இங்கேயே இருந்திட மட்டும் கொஞ்சம் விட்டு வை. அது போதும். இதுக்காவது துளி மனமிரங்கிக் கருணை காட்டு!'' என்று தமக்குள்ளாகச் சொல்லிக் கொண்டார். பிறகு பிரமை பிடித்தவர் போல் அந்தப் பிள்ளையாரப்பனையே பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார். அவர் கண்களிலிருந்து மாலைமாலையாக அருவி போல நீர் வழிந்து கொண்டிருந்தது. உடைந்து நொறுங்கி ஆனால் சிதறாமல் பார்வைக்கு முழு உருவத்துடன் இருக்கும் கண்ணாடிப் பாத்திரத்தைப் போல் இருந்தார் முத்தையாபிள்ளை.

அவருடைய மூத்த சகோதரி, நாகுப் பிள்ளை, சிவகுரு முதல் யார் யாரோ வந்து வருந்தி வருந்தி வீட்டுக்கு வரச் சொல்லி வேண்டிப் பார்த்து விட்டார்கள். முத்தையாபிள்ளை துளியும் மசியவில்லை. பாதிரி மரத்திலே துணியைக் கட்டி உலர வைத்துக் கொண்டிருந்த போது, சத்திரத்து ஐயர் நொண்டி நொண்டிக் கொண்டு வேகமாக நடந்தார். முத்தையாபிள்ளையைப் பார்த்ததும் அவருக்குக் கண்ணீர் வந்தது.

''பிள்ளைவாள்! எல்லாம் இருந்தும் இப்படி அநாதை மாதிரி நிக்கலாமா?'' என்று நாத் தழுதழுக்கப் பரிதவித்தார்.

''அநாதை என்ன ஐயா, அநாதை? எல்லாத்தையும் நான் வரப்போ கொண்டுக்கிட்டா வந்தேன்? எடுத்துக்கிட்டா போகப் போறேன்? இதா பாருங்க, சத்திரத்துச் சோறு இருந்தால் அந்தப் பரதேசிங்களுக்குப் போடற கணக்குலே எனக்கும் இத்தினி சோறு கொண்டாந்து போட்டுடுங்க. அது போதும்!'' என்று உறுதியாகச் சொல்லி விட்டார் அவர்.

ஊர் ஜனங்கள் கோவிலைச் சுற்றி நின்று தூரத்திலிருந்தே பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

''அத்தான்! ஊரே ஏங்கிப் போய் நிக்குது அத்தான். உங்க கண்ணுலே படலியா? இது என்ன நீங்க செய்யறது நல்லா இருக்கா?'' என்று கெஞ்சினார் நாகுப் பிள்ளை.

''ஏக்கமாவது, மண்ணாவது! இது எல்லாம் ரெண்டு மூணு நாளைக்கு. நின்னு நின்னு பார்த்துப்புட்டுத் தன்னாலேபோய் விடும், பார்த்துக்கிட்டே இரேன்!'' என்றார் முத்தையா பிள்ளை.

அப்படியேதான் ஆயிற்று. ஒரு வாரம் பத்து நாள். அப்புறம் வரவரச் சிறுகச் சிறுக எல்லாம் குறைந்து போய், கடைசியில் அடியோடு நின்று விட்டது.

சிவகுரு ஒரு நாள் ஓடி வந்தான். ''அருணாசலம் வந்துவிட்டான், மாமா!'' என்றான்.

''சரிதான்டா, போடா. வந்தால் வரட்டும்'' என்றார் அவர்.

அருணாசலமே வந்தான். ஒரு நாள் முழுதும் பிள்ளையார் கோவில் வாசலில் காத்திருந்தான். முத்தையாபிள்ளை, குறட்டோரம் போட்டிருந்த ஓலைக் குடிசையை விட்டு வெளியிலேயே வரவில்லை; கண்ணைத் திறந்து பார்க்கவும் இல்லை.

''நீ வந்துவிடு, அருணாசலம். அவர் ஒரு கவளச் சோறாவது சாப்பிடட்டும்!''— என்று யாரோ அவனை அழைத்துக் கொண்டு போனார்கள்.

மூன்றாவது மாதம் ஒரு நாள் ஓமக்குடி ஜோஸ்யர் ஓடி வந்தார். ''முகூர்த்த நாள் குறிச்சு வாங்கிக்கிட்டாங்களே,— பிள்ளைவாள்! நீங்க வராமல் இருந்திட்டா நல்லா இருக்குமா?'' என்றெல்லாம் நயந்து ஏதேதோ பேசினார்.

''எது?'' என்றார் பிள்ளை.

''முகூர்த்தத்துக்கு வராமல் இருக்கலாமா? பையன் உங்க அருணாசலம் தான்; பொண்ணு உங்க தங்கந்தான். சொன்னபடி கலியாணம் நடக்கப் போகிறது. உங்களுக்கு அப்புறம் என்ன மனக் குறை?'' என்றார் ஜோஸ்யர்.

''ஒரு குறைச்சலும் இல்லே. நல்லா நடக்கட்டும்!'' என்றார் முத்தையா பிள்ளை அமைதியாக.

கொஞ்ச நாட்கள் கழித்து, மாலையும் கழுத்துமாய், பூவும் மஞ்சள் குங்குமமுமாய், ''மாமா! காலில் விழுந்து கும்பிடறோம், மாமா!'' என்று தங்கமே வந்து கெஞ்சினாள்.

முத்தையாபிள்ளை அவள் உச்சந் தலையைத் தொட்டு, ''மஞ்சளும் பூவுமா என்னிக்கும் நீ நல்லா இருக்கணும், குழந்தே!'' என்றார்.

''வீட்டுக்கு வாங்க, மாமா!'' — கண்ணில் நீர் சொரிய அழைத்தாள் அவள்.

''வீடா? எது வீடு?'' என்று சிரித்தார் அவர்.

# தீபாவளித் திருநாள்

இருள் அகன்று ஒளி வீசுகின்றது. காற்றில் மிதந்து வரும்
மெல்லிய இசை எங்கும் இனிமை பரப்புகின்றது.
துயில் களைந்து, புனித நீராடி, புத்தாடை உடுத்தி, புது மகிழ்வு
கொள்கின்றனர் மக்களனைவரும். உள்ளத்தில் உவகை
பூத்துக் குலுங்குகின்றது; உதட்டில் சிரிப்பு மலர்கின்றது.
பார்க்கும் இடமெல்லாம் பரவசத்தின் களியாட்டம். தீபாவளித்
திருநாள், மகிழ்வும் மனநிறைவும் முகிழ்த்திடும் ஓர் நன்னாள்.
இத்தகைய பொன்னாள் ஆண்டுதோறும் வருகிறது.
இத்திருநாளன்று ஏற்றப்படும் மங்கள விளக்கு துன்ப இருளகற்றி,
இன்ப ஒளியை எங்கும் நிரப்புகின்றது. இந்த இன்பம் உங்கள்
வாழ்வில் என்றும் நிலவட்டும். இதற்கு உறுதி கூறும்
அழகிய சின்னம் அணையா சுடரொளியாக
இன்று நாடு முழுவதும் ஒளி வீசிக் கொண்டிருக்கிறது.



## ஆயுள் இன்சூரன்சுபோல ஆதரவு தருவது எதுவுமே இல்லை.

EP-LIC-52-41






"இந்தாய்யோவ்! ரிசர்வ்ட் கம்பார்ட்மெண்ட்! அடுத்த வண்டிக்குப்போ!"

"சந்தானம் காணும்! நான் இப்போ ரிசர்வ் பண்றேன்! நீக்கறதுக்கு ரிசர்வேஷன்னு வைத்துக் கொள்ளுமே! சுந்தரி! குஞ்சு! மணி! ஏறுங்கோன் சீக்கிரம்."

"டி. டி. இ.யைக் கூப்பிடுங்க சார்! கேள்வி கேட்பார் இல்லாமப் போச்சு! நாமளு எதுக்கு வாங்கறுங்க?..."

"டி. டி. ஸ்.ஸையே கூப்பிடுங்கோ! வண்டி அவருக்கும் சொந்தமில்லே! உங்களுக்கும் சொந்தமில்லே! எல்லோருக்கும் சொந்தம்"

"நாமிருக்கும் ரயில் நமதென்ப தறிந்தோம் நமக்கே சண்டையிட உரிமை யென்பதறிந்தோம்."

"ஐயையோ! வண்டி ஊதிட்டதே!... படுக்கையைக் காணோமே!...படுக்கை!"

"ஏன் ஐயா இப்படி அலர்றே! வண்டி ஊதற சப்தம் கார்டுக்குக் கேட்காமல் அவன் கம்மா இருக்கப் போறான்...இதோ நான்தான் அதன் மேலே உட்கார்ந்திருக்கிறேன்! இதுதானே?"

"அட ராமசந்திரா! உன்னே லட்டு பாக்கெட் வைச்சிருக்கேன் சுவாமி!"

"சரி, சரி! பூந்தியாகச் சாப்பிட்டுவிட்டால் போயிற்று! நான் கூடத்தான் லட்டு மாதிரி வண்டியிலே ஏறினேன்!"

"இப்போ அல்வா மாதிரி ஆயிட்டராக்கும்? படுக்கையை இப்படி எடும்."

"ஓய்! பள்ளி கொண்ட பெருமானே! காலை ஒரு இரண்டு இஞ்ச இழுத்துக்கிறீரா?"

"நீர் என்ன சர்வே டிபார்ட்மெண்டோ? ஹூம்! கழுத்தை அறுக்கறுங்கள்!"

"தற்சமயம் காலைத்தான் கொஞ்சம் அறுக்கலாம்னு பார்க்கறேன்!"

"சே! சே!...என்ன தீபாவளிக் கூட்டமோ? காலை மடக்கிக்கிறேன். உட்காரும்!"

"ஆமாய்யா! ஒவ்வொரு மாமனார்கள், தீபாவளியை ஒட்டிப் படப்போற நெருக்கடிக்கு இந்த ரயில் நெருக்கடி எந்தமட்டு?"

"ஏன்? நீர் ஒரு மாமனாரோ?"

"நான் மாமனாராக இருந்தால் என் மாப்பிள்ளையை ஒரு கை பார்த்து விடுவேன்!...."

"அப்படியானால் நீர் தீபாவளி மாப்பிள்ளை எதிர்ப்புக் கழகத்தைச் சேர்ந்தவரோ?"

"என் மாமாவுக்கு ஒரு மாப்பிள்ளைப் பயல் வந்து சேர்ந்திருக்கான் ஐயா! ஹரிச்சந்திரன் காலத்து நட்சத்திரேயன் மாதிரி! தீபாவளிக்கு டெரிலின் சூட், ஒமீகா வாட்ச், ஒற்றைக் கல் வைர மோதிரம்னு புமாண்டு நோட்டீஸ் விட்டிருக்கான். மனுஷன் புதுப் படம் ஆரம்பிக்கிற நாளிலே பத்தரையணு க்யூவிலே நிற்கிற மாதிரி தவிக்கிறார்."

"கல்யாணம் ஆனவுடனே கையைக் கழுவி விட்டுவிட வேண்டும் என்கிற கஞ்சப் பிரபுவாக இருப்பார் உங்க மாமா!"



"இப்படிக் கேட்டுக் கொள்ளைக்கார மாப்பிள்ளைகளைப் பார்த்தால் தர்மப் பிரபுவும் கஞ்சனாகி விடுவான் ஸ்வாமி! எப்படியும் அடுத்தடவை அந்தப் பயலைப் பார்க்கிறபோது நாலு அறை வைத்து விட்டுப் பேச வேண்டுமென்று என் கை துடிக்கிறது."

"இப்போ அந்த வேலையை மேற்கொண்டு தான் போகிறீரோ?"

"வைத்துக் கொள்ளுமேன்!... அந்தத் தீவட்டியின் முகறை எப்படி இருக்கும் என்று இனிமேல்தான் பார்க்கப் போகிறேன். மாமா பெண் கல்யாணத்துக்கு வந்து போக எனக்கு லீவு கிடைக்கவில்லே."

"உங்க மாமா எந்த ஊரிலே இருக்கிறாரோ?"

"தெம்பரத்திலே! அங்கேதான் போயிண்டிருக்கேன்!....நீங்க...."

"தெம்பரமா?...."

"ஆமாம்! தோடித் தெருவிலே ஹெட் மாஸ்டர் சீதாராமன்னு நாலு தலைமுறைகளுக்குத் தெரியும்! மகா சாது! அவருடைய பெண் சக்கவுக்கு ஒரு மகா முரட்டுப் பயல் புருஷனாக வந்து சேர்ந்திருக்கான்!"

"உங்க மாமனார் உங்க உதவியை.....அதாவது தீபாவளிக்கு வர மாப்பிள்ளையை ஒரு கை பார்க்க—நாடுகிறாரோ?"

"அது ஒரு அசடு! கடனோ உடனோ வாங்கிச் சமாளிக்கும்! ஆனால் நான்தான் ஒரு கை பார்க்கப் போறேன்!"

"இப்போ உங்க மாமா வீட்டிலே உம்முடைய கலாட்டா ஒன்று இருக்கு!"

"ஆமாம்... இந்தச் சங்கர் எப்படிப் பட்டவன்று அந்தப் பயல் தெரிந்துகொள்ளுவான்...

"மிஸ்டர் சங்கர்!... காலைக் கொஞ்சம் மடக்கு!...உன் தலைமாட்டில் இருக்கும் பையை இப்படி நகர்த்து."

"ஏன்யா இப்படித் திமிர்று அதட்டறே! காலெல்லாம் மடக்கித்தான் இருக்கு..."

"இந்தாய்யா!... தள்ளு!... பையை எடுத்துக்கறேன்...."

"அப்பாடா! காலை நீட்டிக்கலாம்! இவ்வளவு கிட்டே இறங்கறதுக்குத்தானு காலை மடக்கு, கையை மடக்குன்னு அதிகாரம் பண்ணினே! நின்னுண்டே வந்திருக்கலாமே!...."

"ஆமாம்! வராமலே இருந்திருக்கலாம்!... இந்தாய்யா!... உங்க மாமா சீதாராமன் கிட்டே சொல்லு!... அவருடைய அருமைக் குமாரி சக்கவோட புருஷன் பாதி வழியிலே இறங்கித் திரும்பி ஊருக்குப் போயிட்டான்! அவனுக்குக் கலாட்டா எல்லாம் பிடிக்காது! காலிப் பயல்கள் வாடையும் பிடிக்காதுன்னு சொல்லிவிடு! பையை விடுங்காணும்."

"என்ன! நீதான் மாப்பிள்ளை சேகரு?.... உட்கார் ஐயா!...."

"உன்னோடு என்னையா பேச்சு!....? நீதான் என்னே ஒரு கை பார்க்கப் போறியே?"

"உஷ்! மாப்பிள்ளே! உட்கார்! நீ திரும்பிப் போனால்தான் கலாட்டா ஜாஸ்தி!...பேசாமல் வாரும் இப்படி!"

"நீரும் கூட வரும்போது நான் எப்படி வர முடியும்?"

"நான் எங்க மாமாவுக்கு மூத்த மாப்பிள்ளை ஸ்வாமி!...."

"அடப் பாவி!"

"எனக்கு அவர் உறவு என்ற காரணத்தால் சீர் ஒன்றும் செய்யவில்லே. அந்த ஆத்திரத்தில் ஏதோ சொன்னேன்! நீர் இப்போது வராமல் உம்முடைய ஷூட்கேஸையே காண்பித்துக் கொடுத்தால் உம் மனைவி சக்க உம்மைப் பற்றி என்ன நினைத்துக் கொள்வாள்?"

"கடைசியிலே நீயே எனக்கு ஷட்டகனு வந்துட்டியா?"

"உங்கிட்டே போய்த் தீபாவளி மாப்பிள்ளைகளைப் பற்றிப் பேசினேனே! என் புத்தியை..."

"சரி சரி! நீ கொஞ்சம் எழுந்து உட்காரு! நான் சற்றுப் படுக்கிறேன்!"

"என்ன இருந்தாலும் நீ புது மாப்பிள்ளே! நான் பழைய மாப்பிள்ளே! உனக்குக் காரியம் நடக்கும்!...."

# காதல் கதையும் ஒரு கதாசிரியரும்



ஒரே ஒரு ஊரில் சிவபாதம் என்று ஒரே ஒரு எழுத்தாளர் இருந்தார். அப்படி அந்த ஒரே ஒரு எழுத்தாளர் மட்டும் இருந்ததற்குக் காரணம், அவரைப் போல் இன்னோர் எழுத்தாளர் இருந்தால் அந்த ஊர் தாங்காது என்பதுதான்.

மேற்படி எழுத்தாளர் சிவபாதத்தைத் திடீரென்று ஒரு நாள், அவருடைய சிருஷ்டித் தொழில் பெரும் சோதனை ஒன்றில் சிக்க வைத்துவிட்டது. எழுத்துத் தொழிலைப் பொறுத்த வரையில் சிவபாதத்துக்கு எத்தனையோ சோதனைகள் ஏற்பட்டிருக்கின்றன. ஏன், அவர் எழுத்துலகில் நடமாடுவதே பெரும் சாதனை என்பதாகக் கூடப் பரவலாகப் பேச்சு எழுந்திருக்கிறது. இப்போதெல்லாம்கூட அந்தப் பேச்சு உண்டு. அதைப் பற்றியெல்லாம் சிவபாதம் பொருட்படுத்தியதில்லை. ஆனால் அன்று ஏற்பட்ட சோதனை அவரை ரொம்பவும் திணற அடித்துவிட்டது. இத்தனைக்கும் அது ஒரு ரசமான காதல் விவகாரம்.

காதல் விவகாரம் என்றதும் எழுத்தாளரைத் துள்ளும் பிராய இளைஞராக யாரும் கற்பனை செய்து விடவேண்டாம். மன்மதனும் அநாவசிய அவஸ்தைக்குள்ளாகும் பருவத்தை யெல்லாம் கடந்து, மூன்று பிள்ளைகளுக்குத் தகப்பனாராகக் குடும்பப் பந்தத்துக்குள் மாட்டிக்கொண்டு திணறும் நாற்பது வயது சம்சாரி அவர். எனவே அவரை எந்தக் காதலும் பாதிக்கவில்லை; பாதிக்கவும் முடியாது. இந்த விவகாரம் வேறு விதமான நெருக்கடி.

அன்று காலையில் முன்பின் தெரியாத இளைஞன் ஒருவன் சிவபாதத்தைத் தேடி வந்தான். முதல் பார்வையிலேயே அவனைச் சிவபாதத்துக்குப் பிடித்து விட்டது. காரணம், எடுத்த எடுப்பிலேயே அவன் ''என் பெயர் வேணு. எழுத்தாளர் சிவபாதம் அவர்களுடைய ரசிகன். அவர்களைப் பார்க்க வேண்டும்'' என்று அபூர்வ பக்தி தொனிக்கத் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டதுதான். இந்த வார்த்தைகளுக்கு அப்படியொரு மாயக் கவர்ச்சி இருந்ததற்குச் சில நியாயமான சூழ்நிலைகள் இருந்தன.

தன் இலக்கிய மேதாவிலாசத்தை நாலு பேரும் வீடு தேடி வந்து பாராட்டவேண்டும் என்பது சிவபாதத்தின் நெடுநாளைய அந்தரங்க விருப்பம். ஆனால் நடப்பில் ரொம்ப வித்தியாசமாகவே காரியங்கள் நடைபெற்று வந்தன. ''இந்த வாரம் என் கதை வந்திருக்கிறது, பார்த்தீர்களா?'' என்று தெரிந்தவர்களிடம் விசாரிப்பதும், அவர்கள் தாட்சிண்யத்துக்காகக் கதை மட்டமானது என்றால் 'நடை நன்றாகப் போகிறது' என்றோ, நடை சாதாரணமாக இருந்தால் 'கதை தூக்குகிறது' என்றோ, இரண்டும் மோசமாக இருந்தால் (இது அவர் விஷயத்தில் அடிக்கடி நிகழ்வது) 'பிரமாதமான படமெல்லாம் போட்டுப் பிரசுரம் பண்ணியிருக்கிறார்கள்' என்றோ, பட்டும் படாமலும் அபிப்பிராயம் சொல்வதும் அவருக்கே கேட்டுக் கேட்டு அலுப்பாகி விட்டது. இந்த நிலையில் அவரைத் தேடி முன்பின் தெரியாத ஒருவன், அவருடைய ரசிகன் என்ற உருவில் வந்து நின்றால், எப்படி இருக்கும்? அவனை வெகு உற்சாகமாக வரவேற்று உபசரித்தார் சிவபாதம்.

வந்தவன் அவர் சமீபத்தில் எழுதிய 'காதல் ஒரு பூஞ்சோலை' என்ற நவீனத்தை வானளாவப் புகழ ஆரம்பித்தான். ஆரம்ப வேகமே ரொம்ப அசுரத்தனமாக இருந்தது.

''சார்! உங்கள் 'காதல் ஒரு பூஞ்சோலை' ரொம்ப அற்புதமான படைப்பு சார்! உலக க்ஷேமத்துக்குப் பகவான் கீதையைச் சொன்னதுபோல் இளைஞர்களின் நன்மைக்காக நீங்கள் அதைப் படைத்திருக்கிறீர்கள்....''

புகழ்ச்சி அமிர்தமாக இருந்தாலும், பையனின் உவமான வேகத்தைக் கண்டு சிவபாதம் கொஞ்சம் திணறி விட்டார். எனவே வெகு முன்னெச்சரிக்கையுடன், ''தம்பி! அப்படியெல்லாம் பகவத் காரியங்களை நர ஸ்துதிக்குப் பயன்படுத்தக் கூடாது'' என்று அவனை நிதானப்படுத்தியவர், அதே நேரத்தில் அவனுடைய பாராட்டுக்களையும் கைநழுவ விட மனமில்லாமல், ''ஏதோ உங்களுக்கெல்லாம் திருப்தியளித்தால் அது என் அற்ப முயற்சி செய்த பாக்கியமே'' என்றார் வெகு தன்னடக்கத்துடன்.

அவர் எட்டடி பாய்ந்தால், ரசிகன் பதினாறடி பாய்ந்தான். ''அதென்ன சார், அற்ப முயற்சி என்கிறீர்கள்! அது என் உயிர்க் காவியம். என் வாழ்க்கையே அதில் அடங்கியிருக்கிறது. அவ்வளவு விசேஷம்.''

சிவபாதத்துக்கே சந்தேகம் தட்டிவிட்டது: 'இவன் நம் கதையைப் பற்றித்தான் சொல்கிறானா அல்லது வேறு எதைப் பற்றியுமா?' என்று.

எனவே, வியப்புடன், ''அப்படி என்ன விசேஷம் இருக்கு?'' என்று கேட்டார்.

''நிறைய இருக்கு சார். முதலில் அந்தக் கதை முழுக்க முழுக்க என்னை வைத்தே எழுதியது போலிருக்கு. தொடக்கத்திலிருந்தே அப்படி அப்படியே பொருந்தியிருக்கு'' என்றான்.

சிவபாதத்துக்குத் திடீரென்று உற்சாகம் தளர்ந்தாற்போலிருந்தது. தன் கதைக்கு அவன் அப்படியோர் உறவு பூண்டு வந்ததை அவரால் சகிக்க முடியவில்லை. அந்தரங்க சுத்தியோடு சொல்லப் போனால், அந்தக் கதைக்கு மூல ஸ்தானமே வேறு. எவனோ ஓர் அமெரிக்கப் புண்ணியவான் ஆங்கிலத்தில் எழுதியதை, ஒரு தமிழ்ப் புண்ணியவான் எட்டணாவுக்கு மூர்மார்க்கெட்டில் விற்றான். அதைத் தமிழ்ப் பாணியில் குளிப்பாட்டி, உருத் தெரியாமல் ஒப்பனை செய்து 'அமர இலக்கிய'மாக இங்கு செலாவணி செய்திருந்தார். இப்போது அந்த அசல் அமெரிக்க ஆசாமியே வந்து கேட்டாலும் இரண்டில் ஒன்று பார்க்கலாம் என்று அவர் கதாரித்துக் கொண்டிருக்கும்போது இவன் வந்து புதிய உறவு கொண்டாடுவதென்றால்?

உடனே சற்றுக் காரசாரமான குரலில், ''உன்னை எனக்கு முன்பின் தெரியாது. உன் கதையை நான் எழுதுவதாவது!'' என்றார்.

''ஐயையோ, நான் அப்படிச் சொல்லவில்லை சார்! உங்கள் ஒரிஜினலிட்டி என்ன, கற்பனை என்ன! நான் சொல்ல வந்தது..... உங்கள் கதையில் வந்ததுபோல் என் வாழ்க்கையிலும் நடக்க ஆரம்பித்திருக்கிறது. அது விஷயமாகத்தான் உங்களிடம் சில விஷயங்கள் பேச வந்தேன்.''

'ஒரிஜினலிட்டி' விஷயமாக அவன் கொடுத்த சர்டிபிகேட் எழுத்தாளரைச் சாந்தப்படுத்திவிட்டது. எனவே, பழைய கம்பீரத்துடன், ''அப்படி என்ன நடந்தது?'' என்று விசாரணையைத் தொடங்கினார் எழுத்தாளர் சிவபாதம்.

''உங்க கதையிலே கதாநாயகனுக்கும் கதாநாயகிக்கும் முதல் சந்திப்பு ஏற்படுகிறது, பாருங்கள். அதையே எடுத்துக் கொள்வோம். கதாநாயகி கடற்கரையோரமாகத் தண்ணீர் பக்கமாகத் தற்கொலை செய்து கொள்ளுவதற்காக நின்று கொண்டிருக்கிறாள். அப்போது திடீரென்று கதாநாயகன் அவளைக் காப்பாற்றுவதற்காகக் கையைப் பற்றி இழுத்துத் தள்ளுகிறான். உடனே அவன் கன்னத்தில் அவள் 'பளார்' என்று அறைந்துவிடுகிறாள். அந்தச் சம்பவம் நினைவிருக்கிறதா?''



தாமரை மணாளன்

"அது மாதிரியே இரண்டு நாட்களுக்கு முன் எனக்கும் அந்த அநுபவம் ஏற்பட்டது. ஒரு பெண் கடற்கரையில் தண்ணீர்ப் பக்கம் நின்று கொண்டிருந்தாள். எனக்கு உடனே உங்க கதை ஞாபகம் வந்தது. உடனே அவளைக் காப்பாற்ற உங்க கதாநாயகன் மாதிரியே கையைப் பற்றி இழுத்துத் தள்ளினேன். உடனே அவளும் உங்க கதாநாயகி மாதிரியே பளார் என்று என் கன்னத்தில் அறைந்தாள். ...."

அவன் தன் விருத்தாந்தத்தை முடிக்கு முன் திகைப்புடன், "ஐயையோ! அப்படி ஏன் செய்தாய்? அந்தப் பெண் வேறு ஏதாவது காரியமாக நின்றுகொண்டிருந்தால்....?" என்று கேட்டார் எழுத்தாளர் வேபாதம்.

பையனோ அவருடைய திகைப்பையும் மருட்சியையும் பொருட்படுத்தாதவனாக உற்சாகத்துடன் விவரித்தான். "அப்படித்தான் சார், அந்தப் பெண்ணும் சொன்னாள். 'நான் தண்ணீரில் நனைந்து விளையாடுவதற்காகக் கடற்கரையில் நின்றால், கையைத் தொடுவதற்கு உனக்கு என்ன திமிர்!' என்று என்னென்னவோ சொன்னாள். ஆனால் நான் அதையெல்லாம் நம்பவில்லை. நீங்கதான் உங்க கதையிலே ஓர் இடத்தில், 'கதாநாயகி முதல் சந்திப்பின்போது தன் மன ஆசையைக் காட்டாமல் எதற்கெடுத்தாலும் கதாநாயகனிடம் பொய் தான் சொல்வாள்' என்று விளக்கமாக எழுதியிருக்கிறீர்களே! அதனால் அவள் வார்த்தையை லட்சியம் பண்ணவில்லை!"

காலை நேரத்தில் சரியான பைத்தியத்திடம் சிக்கிக் கொண்டோமோ என்ற சந்தேகம் வேபாதத்துக்கு ஏற்பட்டது. ஆனால் அவனுடைய தோற்றம் அப்படித் தோன்ற வில்லையாதலால், ஒரு வேளை தன்னைப் பைத்தியமாக்க அவன் வந்திருக்கிறானோ என்றொரு புதிய சந்தேகம் ஏற்பட்டது. இந்த இரு சந்தேகங்களுக்குமிடையே அவர் திணறிக் கொண்டிருக்கும்போது அவன் ஒரு புதிய சந்தேகத்தைக் கிளப்பி அவரைப் பைத்தியமாக்க முயன்றான்.

"ஏன் சார்! ஒரு பெண் அப்படிப் பளீர் என்று அறைந்தால் என்ன அர்த்தம்?" என்று வினவி நின்றான்.

உடனே வெகு எரிச்சலுடன், சிறிதும் தாமதிக்காது, "அப்படி அறைந்தால், 'போலீஸ் ஸ்டேஷன் வரை போக விடாமல் மரியாதையாக ஒதுங்கிக் கொள்' என்று அர்த்தம்" என்றார் வேபாதம்.

ஆனால் பையன் விடவில்லை. "என்ன சார், அப்படிச் சொல்கிறீங்க? நீங்க பேசற பேச்சா இது? 'ஒரு பெண் ஒருவனைக் கை நீட்டி அறைந்தால், அவளுக்கு அவன் மேல் அந்தரங்கமாக அன்பு ஏற்பட்டு விட்டது' என்று நீங்கள்தானே உங்கள் புத்தகத்தில் இரண்டாவது அத்தியாயத்தில் எழுதி யிருக்கிறீர்கள். உங்கள் கதாநாயகியும் அப்படித்தானே கதாநாயகனைக் காதலிக்கிறாள்!" என்று ஆதார பூர்வமான புள்ளி விவரங்களுடன் வினவினான்.

ரொம்பத் தர்மசங்கடமாகி விட்டது வேபாதத்துக்கு. கடைசியில், தம் எழுத்தின் பெருமையை விட்டுக் கொடுக்காமல், "நீ சொல்வதும் சரிதான். அப்படியும் இருக்கும். இப்படியுமிருக்கும்" என்று சமரசத்துக்கு வந்தார்.

உடனே அவன் ஆணித்தரமாக, "இப்படித்தான் சார் இருக்கும். எனக்கு அதைப் பற்றிச் சந்தேகமே யில்லை. அதனால் உங்கள் கதாநாயகன் மாதிரியே நானும் காரியங்கள் செய்து அந்தப் பெண்ணின் அன்பை அடையலாம் என்று திட்டம் போட்டு விட்டேன்; என்ன சொல்கிறீர்கள்?" என்றான்.

பாவம், அவர் என்ன செய்வார்? இது தம் கையை மீறிய கேஸ் என்று வேபாதத்துக்குத் தெளிவாகப் புரிந்து விட்டது. எனவே, சனியன் தம் கையை விட்டால்போதும் என்ற நோக்கத்துடன், "பிரமாதமான திட்டம். அப்படியே செய்" என்றார்.

"உங்க ஆசீர்வாதம் கிடைத்தது என் பாக்கியம் சார்! ஆனால் உங்க கதாநாயகனைப் பின்பற்றுவதில் எனக்கு ஒரு சிக்கல் ஏற்பட்டிருக்கிறது. அதையும் நீங்கள்தான் தீர்க்க வேண்டும்!"

"என்ன?"

"உங்க கதாநாயகன் கடற்கரையில் அறை வாங்கிய மறுநாளே அந்தப் பெண்ணுக்குத் தன் மனத்தைத் தெரிவித்துக் கடிதம் எழுதி விடுகிறான். மேலும், கதாநாயகி வீடு எதிர்ப் பக்கத்தில் இருப்பதால் இருவரும் அடிக்கடி ஜன்னல் வழியாகப் பார்த்துக் கொள்கிறார்கள். காதல் பிரமாதமாக வளர்கிறது. ஆனால் எனக்கு அப்படி வசதி யில்லையே!"

"ஏன் அப்படி?"

"என் வீட்டுக்கு எதிராக நகரசபைக் குப்பைத் தொட்டிதான் இருக்கிறதே தவிர, என் கதாநாயகியின் வீடு இல்லை. எனவே, 'கண்ணோடு கண்ணோக்கி'க் காதலை வளர்க்கத் தோதுப்படவில்லை. அவள் வீடு நாலு தெரு தள்ளி யிருக்கிறது. கடிதம் எழுதலாம் என்றாலோ அவளுடைய பெற்றோர் கையில் கிடைத்தால் என்ன ஆவது? அவர்கள் சமாசாரம் எப்படியோ? உங்க கதா



நாயகியின் பெற்றோர் மாதிரி, மகளின் 'தெய்வீகக் காதலை' வாழ்த்தி வரவேற்பார்களா என்று தெரிய வில்லை. இப்போது என்ன செய்யலாம்?''

வேபாரத்துக்குத் தலை சுற்ற ஆரம்பித்தது. நம் வயதுக்கும் அந்தஸ்துக்கும் கொஞ்சமாவது கௌரவம் தேடித் தராத நடவடிக்கையில் சிக்கிக் கொண்டது போல் ஒரு கணம் தோன்றியது. மறுகணம், ஓர் இளைஞனின் தெய்வீகக் காதலுக்குத் துணை நின்றுல் தெய்வ சம்மதமான காரியம் செய்வது போலவும் தோன்றியது. கடைசியில் ஒரு தீர்மானத்துக்கு வந்தார். ஏதோ நம்மையும் நம் எழுத்தையும் மதித்து ஒருவன் யோசனை கேட்கிறான். நமக்குத் தோன்றியதைச் சொல்வோம். அவன் தலையெழுத்து எப்படியோ அப்படி நடக்கிறபடி நடக்கட்டும்!......

''தம்பி! நீ என் 'காதல் விடு தூது' என்ற கதையைப் படித் திருக்கிறாயா?''

''ஆமாம்.''

''அந்தக் கதாநாயகன் மாதிரி செய்துவிடு. அதாவது ஒரு சிறு பையன் மூலம் உன் வருங்காலக் காதலிக்குக் கடிதத் தூது அனுப்பேன்.''

இளைஞன் ஆனந்தத்தில் துள்ளிக் குதித்தான். ''அருமையான யோசனை சார்! மணி மணியாகக் காதல் கதைகள் எழுது கிற உங்களுக்குத் தெரியாத காதல் 'பாயிண்டா'? எனக்குத் தெரிந்த பையன்கூட ஒருவன் இருக்கிறான். அப்படியே செய்கிறேன்.''

தம் யுக்தி அங்கீகாரமானதும் அது சம்பந்தமான முன் னெச்சரிக்கைகளையும் வழங்கினார் 'காதல் ஆசிரியர்'. ''ஜாக் கிரதை! விவரம் தெரியாத பையன் மூலம் கொடுத் தனுப்பாதே! அவன் பெண்ணின் தகப்பனார் கையிலேயே கொடுத்து விட்டு வந்து விடுவான்!''

''சரி, சார்!'' என்று உற்சாகத்துடன் கூறி விட்டுப் புறப்பட்டான் இளைஞன்.

இரண்டு நாட்கள் கழிந்தன. அன்று முதல் முறையாக வந்து தன் 'பிராக்ரஸ் ரிப்போர்ட்'டைத் தெரிவித்தான் வேணு — அதுதான் அவன் பெயர்.

''சார்! உங்க யோசனை ரொம்பப் பிரமாதமாக வேலை செய்கிறது. ஒரு பையன் மூலம் கடிதம் கொடுத்தனுப் பினேன். அவளும் அந்தப் பையன் மூலமே செய்தி சொல்லியனுப்பியிருக்கிறாள். என் கடிதங்கள் அவளுக்குத் தேனாக இனிக்கின்றனவாம். அடிக்கடி, அதாவது காலையில் ஒன்று, சாயங்காலம் ஒன்று. இப்படி நாலு மணிக்கொரு கடிதம் எழுதச் சொல்கிறாள். நானும் இராப் பகலாகக் கடிதங்கள் எழுதித் தள்ளுகிறேன். சார்! இந்த வேகத்தில் போனால் இன்னும் எட்டு நாளைக்குள் முகூர்த்தம் வைக்க வேண்டியதிருக்கும் சார்!''

''நல்லது! வெளுத்துக் கட்டு!'' என்று உற்சாகப்படுத்தினார் வே பாரதம். வயது பேதா பேதங்களைக் கடந்து, இந்த விவகாரத்தில் ஒரு 'ஸ்போர்ட்ஸ்மன் ஸ்பிரிட்' உண்டாகி விட்டது அவருக்கு. அவருடைய யோசனைகளும் உலகத்தில் உருப்படுகின்றனவே!

ஆனால் அடுத்த முறை வரும்போது அழுது வடித்துகொண்டு வந்தான் வேணு.

''பெரிய மோசடி நடந்து விட்டது, சார்!''

''என்ன நடந்தது?''

''அந்தப் பெண் அப்படி அடிக்கடி கடிதம் எழுதச் சொன்னு ளல்லவா? நானும் எழுதி எழுதி யனுப்பினேன். அவளுக்குக் கடிதம் எழுத வெட்கமாக இருப்பதால் பதில் எழுதவில்லை என்று என் தூதுப் பையன் சொன்னான். நானும் 'பரவாயில்லை. நாணம் நங்கையர்க்கழகு' என்று சந்தோஷப்பட்டேன். ஆனால் அவள் நாணத்துடன் என் கடிதத்தை வாங்கும் அழகைப் பார்க்கவேண்டும் என்று தோன்றவே நேற்று அந்தப் பையன் பின்னாலேயே மறை வாகச் சென்றேன். அப்போதுதான், சார், அந்த மோசடி வெளி யாயிற்று'' என்றான் வேணு.

''அப்படி என்ன மோசடி?''

''அந்தப் படுபாவிப் பயல், அவன்தான் என் காதல் தூதன், பெரிய துரோகியாக இருந்திருக்கிறான். அவன் என் கடிதத்தை அந்தப் பெண்ணிடம் கொண்டு சேர்க்கவில்லை. இரண்டு தெரு தள்ளிப் போனதும் ஒரு சாக்கடையில் சுக்கு நூறாகக் கிழித்துப் போட்டு விட்டான்.''

''அவன் ஏன் அப்படிச் செய்தான்?''

''அது பெரிய வயிற்றெரிச்சல் சார்! நான் அவனிடம் தூது போகிற விஷயமாய் ஒரு காண்ட்ராக்ட் பேசியிருந்தேன். அதாவது, ஒரு கடிதம் கொண்டு போகப் பத்துப் பைசா அவனுக்குக் கமிஷன். அதற்காகத்தான் அவன் என்னிடம் இதுவரை 'அந்த அக்கா அடிக்கடி கடிதம் எழுதச் சொன்னாள்' என்று புளுகி, கடிதம் கடித மாக வாங்கிப் பத்துப் பத்து பைசாவாகக் கொள்ளை யடித்திருக் கிறான். ஒரு கடிதம் கூட அவளுக்குப் போய்ச் சேரவில்லை. என் காதல் கடிதங்களை யெல்லாம் சாக்கடைதான் ஏற்றிருக்கிறது. அவனை மிரட்டினதும் என்னைத் திருப்பி மிரட்டிவிட்டான். 'இந்தாங்க!






பெரிய ஆளான நீங்களே அந்த அக்காவிடம் நேரில் பேசப் பயப்பட்டுக் கடுதாசு குடுக்கிறப்போ நான் எப்படித் தைரியமாய்ப் போய்க் கொடுக்கிறது? நான் போய் அடி வாங்கவா? அதெல்லாம் முடியாது. என்னே அடிச்சிங்கன்னு, எல்லார்கிட்டேயும் விஷயத்தைச் சொல்லிப்புடுவேன்' என்கிறான்....''

சிவபாதத்துக்கு மூச்சே நின்று விடும் போலிருந்தது. இந்த உலகத்தில் அவரையும், அவருடைய அருமைச் சீடனையும் தவிர எல்லாருமே ரொம்பப் புத்திசாலிகள் என்று தோன்றியது. இருந்தாலும் இந்த விஷயத்தை அவ்வளவு இலகுவில் கைவிட அவருக்கு மனமில்லே. தம் நூல்களுக்கும் தம் சிஷ்யனின் சாதுர்யத்துக்கும் இசைந்ததாக இன்னொரு யுக்தி அவரிடம் உதயமாயிற்று.

''தம்பி! நீ இனிமேல் கதாநாயக குணசித்திர நடவடிக்கைகளை மேற்கொண்டு காதலில் வெற்றி பெற முடியாது. பேசாமல் உன் பெற்றோர் காலில் விழுந்து அவர்கள் மூலம் அந்தப் பெண்ணைக் கலியாணம் செய்து கொள்ளப் பார். அதுதான் ரொம்பப் பாதுகாப்பான வழி'' என்றார்.

''அதிலும் ஒரு சிக்கல் இருக்கிறது, சார்!'' என்று புலம்பினான் காதல் இளைஞன். ''அதாவது, எனக்கு அப்பா இல்லே. வீட்டில் மாமா வைத்ததுதான் சட்டம். அவருக்கு இந்தக் காதல் விவகாரம் அறவே பிடிக்காது. உங்க கதாநாயகன் அவன் பெற்றோரிடம் முழங்குகிற மாதிரி, 'காதல் என் பிறப்புரிமை. அதை அடைந்தே தீருவேன்' என்று அவரிடம் 'டயலாக்' பேசவும் முடியாது.''

''ஏன்?'' என்று கேட்டார் சிவபாதம்.

''பயமாக இருக்கிறது. ஒரே அறையாக அறைந்து சாகடித்து விடுவார்.''

சிவபாதம் சிந்தித்தார். கொஞ்சம் அதிகமாகவே சிந்தித்தார். முதலாவதாக, மாமாவிடம் ஒரே அறைபட்டுச் சாகும் ஒரு கோழைக்கு என்ன காதல் வேண்டியிருக்கிறது என்று தோன்றியது. பிறகு, காதல் என்பது புழு, பூச்சிகளுக்கும் பொதுவானது என்று அவரே பல கதைகளில் சங்கநாதம் செய்திருப்பது நினைவுக்கு வரவே, அவனுக்கும் அந்த உரிமை இருக்கலாம் என்று திருப்திப்படுத்திக் கொண்டார். ஆனால், மருமகனை ஒரே அறையாக அறைந்து கொல்லக் கூடிய மாமாவைச் சமாளிப்பது எப்படி? அவரை எதிர்த்துக் கொள்வது நல்லதல்ல. சட்டென்று அவருக்கு ஒரு விஷயம் நினைவுக்கு வந்தது. கதை ஒன்று எழுதுவதற்காக இரண்டு நாட்களுக்கு முன் ஓர் ஆங்கிலப் பத்திரிகையிலிருந்து தருவித் தேடி ஒரு 'ஐடியா' சம்பாதித்து வைத்திருந்தார். அதாவது நம்மால் நேரடியாக எதிர்க்க முடியாத எதிரிகளை நம் நோக்கத்துக்குச் சாதகமான புத்தகங்களைப் படிக்க வைத்து அந்த நோக்கத்தை அவர்கள் மனத்தில் பதிய வைத்து, வெற்றியடையலாம் என்பதே. அந்த 'ஐடியா'வைப் பிரயோகித்துப் பார்த்தால் என்ன? இங்கிலீஷ்காரன் பொய்யா சொல்லுவான்?.....

''வேணு! உன் மாமாவுக்குப் புத்தகம் படிக்கும் வழக்கம் உண்டா?'' என்று விசாரித்தார்.

''ஓ! அது ஒரு வெறி சார், அவருக்கு. மிக்சர் பொட்டலம் வாங்கிக் கொடுத்தால், மிக்சரைச் சுற்றியிருக்கும் பேப்பரைப் படித்து விட்டுத்தான் மிக்சரைத் தின்பார்.''

''அப்படியானால் 'காதலே கடவுள்' என்று நான் எழுதியிருக்கிற ஒரு புத்தகத்தை அவரைப் படிக்க வைத்து விடு. உடனே அவருக்குக் காதலின் பேரில் பெருமதிப்பும், அதை எங்கு கண்டாலும் நிறைவேற்றி வைக்க வேண்டிய பரந்த எண்ணமும் வந்து விடும். அச்சமயம் நீ இலேசாக அந்தப் பெண்ணைப் பற்றியும் அவளுடைய பெருமையைப் பற்றியும் அவரிடம் எடுத்துச் சொல்லு. அவர் உன் நோக்கத்தைப் புரிந்து கொள்வார். காரியம் வெற்றியாகி விடும்'' என்று உபதேசித்தார்.

அந்த உபதேசங்களைப் பணிவுடன் பெற்றுக் கொண்டு ஏறு நடையுடன் புறப்பட்டான் காளை.

என்ன ஆச்சரியம்! தம் கதைகளில் இல்லா விட்டாலும், வேணுவின் காதல் விவகாரத்தில் சிவபாதத்தின் உத்திகளும் யுக்திகளும் அபரிமிதமான சூட்டிப்புடன் தான் வேலை செய்தன. இல்லாவிட்டால் வேணுவின் மாமா இப்படி நாலே நாட்களில் மனம் மாறி யிருப்பாரா? வீட்டில் கலியாணப் பேச்சு அடிபட ஆரம்பித்து விட்டதாம். அந்தப் பெண்ணின் தகப்பனாரிடம் பேச்சு வார்த்தை நடத்த வேணுவின் மாமாவே சென்றிருக்கிறாராம்.

''சார்! நீங்கள் காதலர் உலகின் கண் கண்ட தெய்வம்!'' என்று கையெடுத்து வணங்கினான் வேணு.

# என்னிடம் வந்துவிடு!

"மஹி"

நேற்றுக் கனவிடை வந்ததுவும்-உன்றன்
நெஞ்சில் சிறையிட்டுச் சென்றதுவும்

நாற்றும் பறித்து நினைவுகளாய்-என்றன்
நெஞ்சில் பயிரிட்டுக் காத்திடுவேன்.

ஊற்றுப் பெருக்கெனும் சிந்தனையால்-பயிர்
ஓங்கி வளர்ந்திடச் செய்திடுவேன்.

கூற்று வன்வந்து குறுக்கிடா-விடில்
கோடி யுகங்களும் காத்திருப்பேன்.

நெஞ்சினை முற்றும் பரிசளிப்பேன்-என்றன்
நேரம் அனைத்தையும் தந்திடுவேன்.

கெஞ்சி மொழியிலேயே துதிப்பேன்-நாத
கீதத் துணையுடன் பாடிடுவேன்.

பஞ்சைப் பசியைமறந் திருப்பேன்-
பாடிப் பரவசம் ஆகிடுவேன்.

செஞ்சொற் கவிதைகள் யாத்திடவே-கவித்
தேவியே என்னிடம் வந்துவிடு!





## நிலவடிக்குது வெளியிலே......

நிலவ டிக்குது வெளியிலே — அதன்
நிழல டிக்குதுன் விழியிலே!
சிலவ டித்தவடி வழியிலே கலை,
சிறக டிக்குதுன் ஒளியிலே!

பூவி ருக்குது பொழிலிலே — அதன்
பொலிவி ருக்குதுன் எழிலிலே!
காவி யத்தொடும் ஓவியம் பொருள்
கண்டு நிற்பதுன் நிழலிலே!

தேனி ருக்குது பூவிலே — சுவை
தேங்கி நிற்பதுன் நாவிலே!
மானி ருக்கும்இரு மீனிருக்கும் கரு
மையி ருக்கும்விழித் தீவிலே!

அன்பி ருக்குதுன் அகத்திலே — அதன்
அருளி ருக்குதுன் முகத்திலே!
தன் புறும்மனம் இன்புறத் தினம்
துடி துடிப்பதுன் சுகத்திலே!

திருச்சிற்றம்பலக் கவிராயர்

அவனுடைய வணக்கத்தைப் புன்முறுவலுடன் உள் வாங்கிக் கொண்டே, "இது என்ன பிரமாதம்! இதெல்லாம் என் போன்ற எழுத்தாளர்களின் கடமையாச்சே! எப்போது, 'காதல் போயிற் சாதல்' என்று பாரதியார் 'வார்ன்' பண்ணி விட்டாரோ, அதிலிருந்தே காதல் பக்கம் நின்று போராடுறதுங்கிறது எங்க பாலிஸியாச்சே?" என்று பாரதியாரையும் ஊர்ப்பட்ட எழுத்தாளர்களையும் தம் பங்காளிகளாக்கிக் கொண்டு பெருமை கொண்டாடினார் சிவபாதம்.

"இன்னும் இரண்டே நாட்களில் கல்யாணப் பத்திரிகையுடன் உங்களைச் சந்திக்கிறேன், சார்!" என்று மார் தட்டிவிட்டுச் சென்றான் வேணு.

அன்றிரவு படுக்கைக்குப் போகும் போது சிவபாதம் அவர்களை ஆக்கிரமித்திருந்த சிந்தனைகளையெல்லாம் இங்கே விவரித்துக் கட்டுப்படியாகாது. இருந்தாலும் மாதிரிக்குக் கொஞ்சம் சொல்லலாம்....! எழுத்தாளன் என்று எல்லாரும் பேனாவைத் தூக்கிவிட்டால் போதுமா? கற்பனையில்தான் ஆயிரம் காதல் கதைகள் எழுதி விடலாமே! நடைமுறையில் அப்படியொன்றை நடத்திக் காட்ட யாருக்கு முடியும்? பையன் எப்படியும் நாலு நாட்களுக்குள் மாலையும் கழுத்துமாக வந்து நின்று, 'ஐயா! உங்கள் தயவால் கல்யாணம் ஆகி விட்டது. முதல் குழந்தைக்கு உங்கள் பெயரை இடப் போகிறோம்' என்று கேட்பான். அப்போது அவனிடம், 'அந்தப் பெயர் சூட்டு விழாவை நாலு பத்திரிகைக்காரர்களை வைத்து நடத்து' என்று சொல்லி விட வேண்டும். அப்போதாவது நம் கதைகளைச் சுவரில் அடித்த பந்தைப் போல் திருப்பியனுப்புகிற பத்திரிகைக்காரர்கள் நம் சாமர்த்தியத்தைப் புரிந்து கொள்ளட்டுமே!....

மேற்படி சிந்தனைகளில் திளைத்திருந்த சிவபாதம் தூங்குவதற்கு வெகு நேரம் ஆயிற்று.

விடியற்காலைப் பொழுது இருக்கும். சிவபாதம் ஆழ்ந்த தூக்கத்தில் இருந்தார். அப்போது அவருடைய முன்னிரவுச் சிந்தனைகளுக்குச் சற்றும்பொருந்தாத பயங்கரக் கனவு ஒன்று காண, அதைத் தொடர்ந்து யாரோ ஒருவன், "வாலிபர்களே, வாலிபர்களே, காதலை இழந்தோன், கடை அகத்தேன்! துடிபா தவறிய எழுத்தாளர் எங்கே? காட்டுமின், காட்டுமின்!" என்று பெருங் கூச்சலுடன் கத்துவது போல் கேட்கவே, 'ஆ, வலியாத என் பேரு நிப்பும் வகைத்தது! யாரோ எழுத்தாளன்!' என்று அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்தார்.

எழுந்து உட்கார்ந்து ஒரு கணம், கூர்ந்து கவனித்த பின்தான், 'சார்! சார்!' என்று கத்தியவாறு கதவைத் தட்டிக்கொண்டிருந்த வேணுவின் குரலே அப்படியொரு கனவுக் கூச்சலாக உருமாறிக் கேட்டிருப்பது புரிந்தது. பரபரப்புடன் எழுந்து போய்க் கதவைத் திறந்து பார்த்தார். அங்கு பாண்டியன் அவைக்கு வந்த கண்ணகியின் கூந்தலை விட அதிகமாகக் கலைந்து பரட்டையான கேசத்துடன் நின்று கொண்டிருந்தான் வேணு.

அவனுடைய 'நின்ற கோலத்'துக்குக் காரணம் புரியாமல், "என்னப்பா நீ! கல்யாண மாப்பிள்ளை? தலையைச் சீவிக் கொண்டு லட்சணமாய் வரக்கூடாதோ!" என்று கேட்டார்.

அவ்வளவுதான்; பையன் சிலிர்த் தெழுந்து. "தலையையா? சீவுவதா? முடியாது. இனி எண்ணெயைத் தொட மாட்டேன். தலையில் தேய்க்க மாட்டேன். சீப்பை எடுக்க மாட்டேன். கிராப் சீவ மாட்டேன். காதல், காதல், காதல்! அது போயின் போயின் போயின்... இனி என்ன?"

எங்கேயோ ஏதோ சிக்கல் ஏற்பட்டு விட்டது என்று புரிந்து கொண்டார் சிவபாதம். அவனை ஆசுவாசப்படுத்தி வீட்டுக்குள் அழைத்துச் சென்று உட்கார வைத்து விவரத்தை விசாரித்தார்.

வந்த ஆவேசம் தீர்ந்ததும், அழுகையும் வார்த்தையுமாகக் கொட்டினான் வேணு: "சார்! நேற்று என் மாமா அந்தப் பெண்ணின் வீட்டுக்குப் போனார் என்று சொன்னேனல்லவா? என் மாமா போய்க் கல்யாணத்தை நிச்சயம் பண்ணி விட்டு வந்து விட்டார்."

"பிறகு ஏன் நீ அழுகிறாய்?"

"நான் அழாமல் கல்யாணம் செய்து கொள்ளப் போகிற என் மாமாவா அழுவார்?"

"என்னது! உன் மாமா கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போகிறாரா?" என்று திடுக்கிட்டார் சிவபாதம்.

"ஆமாம், சார்! காதலிலே வெறுத்திருந்த என் மாமாவிட்டே உங்க புத்தகத்தைக் கொடுத்தேன். அவருக்கு அதன் மேலே எப்படியோ ரசனை உண்டாகி விட்டது. அப்போது நான் நீங்க சொன்னது போல் அந்தப் பெண்ணைப் பற்றிப் பிரமாதமாகச் சொன்னேன். அந்தப் பெண்ணை அவர் கல்யாணம் செய்து கொள்வதற்காக நான் இப்படியெல்லாம் ஏற்பாடு பண்ணுவதாக அவர் நினைத்துக் கொண்டு, கல்யாணத்துக்கு நிச்சயம் செய்து விட்டார். அப்புறம் என்னிடம் வந்து, 'வேணு! உன் ஆசைப் படி அந்தப் பெண்ணை உனக்கு மாமி




ஒன்றோடு ஒன்று
சேர்த்து இணையும்
டிவிஎஸ்
முன் கூட்டித் தயாரித்த
முழு மெட்டல் பாடி

## இந்தியாவிலேயே பஸ் பாடிகள் கட்டுவதில் மிகப் பெரிய ஸ்தாபனமான டிவிஎஸ், முன்கூட்டித் தயாரித்த 'ப்ரிபேப்' (Prefab) பகுதிகளை ஒன்றோடு ஒன்று சேர்த்து இணையும் வகையில் மிகச் சுலபமாக பஸ் பாடிகள் கட்டும் முறையைக் கண்டு பிடித்து பேடண்ட் உரிமை பெற்றிருக்கின்றனர். ஒவ்வொரு பகுதியும் மற்றப்பகுதியுடன் கச்சிதமாக இணைந்து உருவாகிறது.

### டிவிஎஸ் முன்கூட்டித் தயாரித்த பகுதிகள் சிக்கனமானவை

டிவிஎஸ் முன்கூட்டித் தயாரித்த பகுதிகளை இணைப்பதற்கு பயிற்சி பெற்ற தொழிலாளர்களோ அல்லது விலையுயர்ந்த கருவிகளோ தேவையில்லை. இதனால் வழக்கமாகக்கட்டும் பாடிகளின் விலையை விட 'ப்ரிபேப்' பாடிகள் விலையில் சிக்கனமானவை.

### டிவிஎஸ் முன்கூட்டித் தயாரித்த பகுதிகள் எடை குறைந்தவை, உறுதி மிக்கவை

பாடியின் ஒவ்வொரு பகுதியையும், அது செய்யும் வேலைகளையும் ஆராய்ந்ததன் மூலம், டிவிஎஸ் அவற்றின் கனத்தை மிகவும் குறைத்திருக்கிறது. இதனால் எண்ணெய்ச் செலவும், டயர் தேய்மானமும் குறையும். ஆழ்ந்த முன்யோசனையுடன் திட்டமிட்டுத் தயாரித்த இணைப்புகளால், பலம் குறைவதில்லை.

### ஆட்டம் காணுவதில்லை

விசேஷமாய்த் தயாரித்த ரப்பர் லைனிங் ஒவ்வொரு பானலுக்கும் இடையில் இருப்பதால், பாடி ஆட்டம் காணுவதில்லை.

### ரிப்பேர் செய்வதும் சுலபம்

விபத்துகள் ஏதாவது நேர்ந்தால் பழுதான பகுதிகளை மட்டும் உடனே அகற்றிவிட்டு எப்பொழுதும் சுலபமாகக் கிடைக்கும் புதிய பானல்களை அந்த இடத்தில் பொருத்திவிடலாம்.

### அமைப்பு முறை

கட்டுமானத்தின் முக்கியமான பகுதிகள், அதாவது கிராஸ்பார், பில்லர்கள், ரூப் ஸ்டிக்ஸ் மற்றும் கீ வசத்திலுள்ள எல்லாவற்றையும் ஒன்று சேர்த்து முக்கியமான ஜாயிண்டுகளில் ஒட்டும் முறையைக் கையாண்டு பொருத்தி விடுகின்றனர். எல்லாப் பானல்களிலும் கட்டுமான உருப்புகளுடன் இணைந்துகொள்ளும் வழி வகைகள் அமைக்கப் பெற்றுள்ளன.

### சீக்கிரமான டெலிவரி

உங்கள் சேஸிஸ்களில் முன்கூட்டித் தயாரித்த ஒன்றோடு ஒன்று சேர்த்து இணையும் பஸ் பாடி அமைக்கும் வேலையை சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் மூன்றே வாரத்தில் முடிக்கும்.

### பஸ் பாடி கட்டுவதில் இந்தியாவில் மிகப் பெரிய முன்னேற்றம்—டிவிஎஸ் முன்கூட்டித் தயாரித்த பகுதிகள் ஒரே பேழையில்

உற்பத்தி பெருகும்போது, டிவிஎஸ் முன்கூட்டித் தயாரித்த பகுதிகள் அனைத்தும் ஒரே பேழையில் கிடைப்பதற்கு வசதி செய்யப்பெறும். இந்தியாவிலேயே பஸ் பாடி கட்டும் வரலாற்றில் இது மிகப் பெரிய முன்னேற்றம். ஸ்டேட் டிரான்ஸ்போர்ட் நிர்வாகிகள், ஏராளமாக பஸ் வைத்திருக்கும் சொந்தக்காரர்கள் முதலியோர் இனித் தங்கள் அலுவலகத்திலேயே பஸ் பாடிகளை இணைக்க இயலும்—இதனால் ஒவ்வொரு பாடிக்கும் எவ்வளவோ பணம் மிச்சப்படும். ஒரே பேழையில் வழங்கும் ஒவ்வொன்றிலும், ஆசனங்கள், உள்ளேயுள்ள விளக்குகள் மற்ற உள்ளமைப்புகள் எல்லாம் அடங்கியிருக்கும்.






மற்ற விபரங்களுக்கு தயவு செய்து எங்களுக்கு எழுதவும்

தயாரிப்போர்:

## சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்

மதுரை

யாக்கி விட்டேன். இப்போது உனக்குத் திருப்திதானே!' என்று கேட்கிறீர்!'' என்று ஓலமிட்டான் வேணு.

''என்ன இது, அக்கிரமம்! உங்க பழைய மாமி எப்படி இதற்குச் சம்மதித்தாள்? இரு தார மணத் தடைச் சட்டம் என்ன ஆச்சு?'' என்று கொதித் தெழுந்தார் பேனு வேந்தர்.

''என்ன சார், இப்படிக் கேட்கிறீங்க? நான்தான் என் மாமாவுக்குக் காதல் விவகாரமே பிடிக்காதுன்னு உங்க கிட்டே முன்னமேயே சொன்னேனே! அப்படி யிருக்கும் போது மாமி எப்படி வருவாள்? அவருக்கு இப்போது முப்பது வயதுதான் ஆச்சு. இதுவரை காதல், கல்யாணம் என்றால் பிடிக்காமல் இருந்தார். உங்கள் புஸ்தகத்தால் இப்படிப் பண்ணி விட்டார்.''

''என்னது! இது வரை அவருக்குக் கல்யாணம் ஆகலேயா? உன் மாமா என்றால் கலியாணம் ஆன பெரிய மனிதர் என்றல்லவா நினைத்தேன். நீ எனக்குத் தெளிவாகச் சொல்லக் கூடாதா?'' என்று தலையில் கை வைத்து உட்கார்ந்து விட்டார் வெபாதம்.

இப்படி வேணுவின் மாமாவே வில்லனாக வந்து அவன் காதலுக்குக் குறுக்கே நிற்பார் என்று எழுத்தாளர் வெபாதம் கனவிலும் எதிர் பார்க்கவில்லை.

''சிஷ்யா! நீ உன் பிரும்மச்சாரி மாமனைப்பற்றி முழு விவரங்களும் கூறாததால்தான் இத்தனை எளிதில் நான் ஏமாந்துவிட்டேன். தவறு உன்மேல்தான்!'' என்று பழியை வேணுவின்மீது சுமத்தித் தாம் தப்பிக்கலாமா என்று யோசித்தார். அது சிறந்த கதை எழுத்தாளராகிய தமக்கு அழகாகாது என்று தோன்றியது. பொதுவாகக் கதைகளில், வில்லனை எப்பாடு பட்டாவது ஒதுக்கி ஒழித்துக் கட்டிக் கதாநாயகனுக்கே கதையை முடித்து வைப்பதுதானே மரபா யிருந்து வந்திருக்கிறது. அந்த மரபை மீறி வில்லன் கதாநாயகியைத் திருமணம் செய்து கொள்வதென்றால், அது நியாயமாகுமா? எனவே, வேணுவின் காதலியை அவனுக்கே கல்யாணம் செய்து வைக்க என்ன செய்யலாம்? இப்படியெல்லாம் பலப்பல யோசனைகள் செய்தவருக்கு மூளை குழம்பியதே தவிர உபாயம் தோன்றவில்லை.

''மேலே போறது 'போயிங்' இல்லே மாமா; 'லவ்வர் கான்ஸலேஷன்' விமானமாக்கும்!''

போட்டோ : பி. வி. சுப்ரமணியம்

''சார்! காதல் தோற்றபின் இனி என்ன செய்வது? தற்கொலை செய்து கொள்வது தேவலாமா, அல்லது உலகை வெறுத்துச் சந்நியாசியாகப் போகலாமா?'' என்றுகேட்டான்வேணு.

வழக்கம் போல் வெபாதம் தீவிரமாகச் சிந்தித்தார். அப்போதும் அவருடைய 'ஐடியா'க் களஞ்சியம் வற்றியிருக்க வில்லை. ஆழ்ந்த பரிசீலனைக்குப் பின் சிறந்த கண்ட முடிவுகளை அறிவித்தார்: ''தம்பி! தற்கொலை முயற்சியால் சில சமயங்களில் செத்துப் போகவும் நேரிடலாம். சந்நியாசி யாகப் போனாலும் இந்த ஏழை இந்தியாவில் நேரத்துக்கு நேரம் ஒழுங்காகச் சாப்பாடு கிடைக்கும் என்று 'காரண்டி' இல்லை. எனவே, இந்த இரண்டு வழிகளும் உனக்கு ஒத்துக்கொள்ளாது. வேறொரு அருமையான உபாயம் என் கைவசம் இருக்கிறது. அது மீண்டும் புத்துணர்ச்சியையும் உற்சாகத்தையும், கொடுக்க வல்லது. இதுவரை நூற்றுக் கணக்கான 'காதல் தோல்வியாளர்கள்' கையாண்டு பயனடைந்திருக்கின்றனர். அதுவே நான் எழுதியிருக்கும் 'காதல் வெறும் மாயை' என்ற ஒப்பற்ற புத்தகம். அதில் காதலின் மடமையைப் பற்றியும் அதை மறக்க வேண்டிய முறைகளைப் பற்றியும் பிட்டுப்பிட்டு எழுதியிருக்கிறேன். ஒவ்வொரு இளைஞன் கையிலும் இருக்க வேண்டிய அரிய பொக்கிஷம்! எல்லா உள்ளூர் வெளியூர் ஏஜண்டு களிடமும் கிடைக்கும். விலை இரண்டே ரூபாய்தான். இன்றே இப்பொழுதே வாங்கிப் படி...''

வெபாதம் தம் அறிவிப்பை முடிக்க வில்லை. அதற்குள் 'தடார்' என்று நாற்காலி சாயும் ஒலி கேட்டது.

வேறொன்றுமில்லை. வேணு ஒன்றும் மூர்ச்சையாகி விழ வில்லை. நாற்காலியை அப்படித் 'தடார்' என்ற ஒலியுடன் கீழ் தள்ளி விட்டு வேகமாக எழுந்து வாசலை நோக்கி நடந்தான்.

அவனை நோக்கி, ''தம்பி! பணம் கொடுத்து வாங்க முடியா விட்டால் பரவா யில்லை. என்னிடம் இருக்கும் இலவசப் பிரதி யொன்றைத் தருகிறேன். படித்துப் பயனடை!'' என்று குரல் கொடுத்தார் வெபாதம்.

வேணு சட்டென்று நின்று, இரண்டு கரங்களையும் தலைக்கு மேல் தூக்கிப் பெரிய கும்பிடாக ஒன்று போட்டவாறு, ''ஐயா, வேண்டாம்! ஒரு புத்தகத்தை வீணாக்கி விடாதீர்கள். உலகத்தில் நான் ஒருவன்தான் அசடு என்பதில்லை. என்னையும் மிஞ்சியவர்கள் நிறைய இருப்பார்கள். அவர்களுக் கெல்லாம் தேவைப்படும். வைத்திருங்கள். எனக்கு இப்பொழுது வேறு வேலை யிருக்கிறது. உங்கள் கதா சிட்சையில் அன்று கடற்கரையில் எனக்கு ஏற்பட்ட பைத்தியத்தை, இப்பொழுது நேராகப் போய் அந்தக் கடல் நீரிலேயே முழுகி விட்டு, வீட்டுக்குப் போய் என் மாமாவுக்கும் வருங்கால அத்தைக்கும் மருமகனாகப் புத்தியுடன் பிழைத்துக் கொள்கிறேன்'' என்று கூறி விட்டுப் பதிலுக்குக் காத்திராமல் கிளம்பி விட்டான்.

* * *

இப்போதெல்லாம் கனம் வெபாதம் அவர்களின் கனமான பேனாவிலிருந்து காதல் கதைகள் பிறப்பதில்லை என்று கேள்வி.

முடியாது, முடியவே முடியாது!



சோலையூர்! பெயருக்கேற்ப அழகான ஊர்! கிளிகள் கொஞ்சும் பசுஞ்சோலைகள் நிறைந்த ஊர்! ஊருக்கே நடுநாயகமாக விளங்கும் வீடு கண்ணப்பர் வீடு!

அதோ, சமையலறையில் பாருங்கள்! அடுப்பூதிக் கொண்டிருக்கிறாளே, அவள்தான் சகுந்தலை! கண்ணப்பரின் அருமந்த மகள்! அவள் அம்மா ஆற்றுக்குக் குளிக்கப் போயிருக்கிறாள்; அப்பா அலுவலாக அயலூருக்குப் போயிருக்கிறார்!

எனவே, சகுந்தலை சமையல் பொறுப்பைத் தானே வலிய ஏற்றுக் கொண்டிருக்கிறாள்! ஆனால் இதென்ன, எத்தனை ஊதியும் இந்த அடுப்புப் பற்றிக்கொள்ளவில்லையே, ஏன்? விறகு ஈர விறகும் இல்லையே! இப்படிப் புகைவானேன்?

'உன் முகமலரைத் தேனூறும் தாமரை யென்று நினைத்துத்தான் வண்டு இப்படி உன்னை வட்டமிட்டுக்கொண்டு இருக்கிறது!' என்று கூறிய வண்ணம் வந்த துஷ்யந்த மன்னன் சகுந்தலையின் மன மலரைத் தன் உடைமையாக்கிக் கொண்டானே, அதே கதை இங்கு நிகழ்வதுதான் காரணம்.

கல்லூரி விடுமுறையைக் கழிக்கக் கிராமத்திலுள்ள தாத்தாவின் வீட்டுக்கு வந்திருந்த துஷ்யந்தனின் கருத்தைக் கவர்ந்து விடுகிறாள் சகுந்தலை.

'அவள் எப்பொழுது தனித்திருப்பாள்? நாம் கண்டு நகையாடி உரையாடலாம்?' என்று தருணத்தை எதிர்பார்த்து நின்றவன் சமையலறைக்கே வந்து விடுகிறான். கதவைப் பற்றிக் கொண்டு நிற்பவனுக்கு அவள் கவனத்தைக் கவர ஒரு வழி தோன்றுகிறது. 'கலகல'வென நகைக்கிறான்! ''இந்த அடுப்பு இலேசில் பற்றிக்கொள்ளும் என்று நினைக்கிறாயா?'' என்று கேட்கிறான்.

பெண்ணாய்ப் பிறந்த அவளுக்கு அடுப்பும் பற்ற வைக்கத் தெரியவில்லை என்பதைத்தான் இப்படிக் குத்திக் காட்டுகிறானோ? அதற்குள் அவனே தொடருகிறான்:

''அந்தக் காலத்துச் சகுந்தலையின் முகமலரை வட்டமிட்ட வண்டுபோல, இந்த அடுப்புக்கும் ஓர் ஆசை! உன் உதடுகளிலிருந்து வரும் கலையான மென்காற்றை அநுபவித்துக் கொண்டே இருக்க வேண்டும் என்ற தீராத ஆசை! சட்டென்று பற்றிக் கொண்டு விட்டால் உன் அதர பானம் கிடைக்காமற் போய்விடுமே! எனவேதான் இப்படிப் புகைந்து நிற்கிறது!''

அவள் சிரிக்க, அவன் சிரிக்க அடுப்பும் சேர்ந்து சிரிக்கிறது! காதல் கனா கட்டி விடுகிறது! அன்றையக் காவியம் இன்றைய ஓவியமாகக் காட்சி தருகிறது.



"அம்மா, சகுந்தலே!"

ஐம்புலன்களையும், பொறிகளையும் அடக்கியாண்ட கண்வ மகரிஷியின் குரலே தடுமாறுகிறது.

"அழாதீர்கள் அப்பா!" பிரியா விடை பெற்றுப் பிரியப் போகும் சகுந்தலை தனக்கு வரும் அழுகையை எப்படியோ அடக்கிக்கொண்டு கண்வருக்கு ஆறுதல் கூற முயல்கிறாள்.

பாசத்தை ஊட்டி வளர்த்தவர்களைப் பிரியும் துயரம் ஒருபுறம்! அன்பை அள்ளிச் சொரியப் போகும் அருமைக் கணவனின் நினைவில் எழும் இன்பம் ஒருபுறம்! இப்படி அழுகையும் ஆனந்தமும் ஒருங்கே பின்னிப் பிணைந்த உயர்ந்த கட்டத்தைச் சித்திரிக்கும் காளிதாஸ மகாகவியின் காவியத்தை நினைவுபடுத்துவதே போல் சோலையூர்ச் சகுந்தலையின் வாழ்க்கையும் அமைந்திருக்கிறது.

தங்கள் மகள் இன்பமாக இல்லறம் நடத்தி மகிழவேண்டும் என்ற ஆவலில் அவள் மனத்துக்கு இசைந்த நல்வரனையே மணம் முடித்து வைத்த பெற்றோர்கள் செய்த சீர்வரிசைகளில் இதோ நிற்கும் இந்தக் காரும் அடக்கம்தான்! சகுந்தலையின் சகோதரன் அதோ அவளது சீதனப் பொருள்களைக் காரில் ஏற்றிக் கொண்டிருக்கிறான்!

கரம் பிடித்த கணவனுக்கோ அவசரம்! காரின் அருகிலேயே நிற்கிறான், சகுந்தலை சீக்கிரம் விடைபெற்றுக்கொண்டு வரமாட்டாளா என்று!

அந்தக் காலத்துக் காவியச் சகுந்தலையைக் காட்டிலும் இந்தக் காலத்துச் சகுந்தலைக்கு ஓர் அரிய வாய்ப்பு! கணவனுடனேயே பயணமாகிறாள்!

பெற்றோர்களையும், தனது அருமைத் தம்பி தங்கைமார்களையும் மட்டும் என்ன, தான் அருமையாக வளர்த்த அந்த அச்சு நாயைப் பிரிய வேண்டியிருக்கிறதே என்ற வருத்தமும் மேலோங்கி நிற்க, கணவனுடன் போகப் போகிறோம் என்ற மகிழ்ச்சியிலும் மிதந்து நிற்கிறாள். தாயாருக்கும், தந்தைக்கும் தங்கள் மகள் எத்தனைக்கெத்தனை நேரம் தங்களோடு இருப்பாளோ, அத்தனைக்கத்தனை நல்லது!' என்ற நினைப்பு. எனவே, 'நீ உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள் அம்மா! பிறந்த மண்ணுக்கும் புகுந்த வீட்டுக்கும் புகழ் சேர் அம்மா!' என்று கீறல் விழுந்த கிராமபோன் ரிக்கார்டு போலத் திரும்பத் திரும்பக் கூறிக் கொண்டிருக்கிறார்கள். காவியத்துக்கு உயிர் ஊட்டும் கம்பனின் ஓவியக் கற்பனை மனத்துக்கு இதமும் தருகிறதல்லவா?



“சகுந்தலே!” துஷ்யந்தன் நன்று நடையில் பெயரைச் சொல்லிக் கூப்பிட்டுக்கொண்டே வீட்டுக்குள் நுழைகிறான். “புறப்படு சீக்கிரம். மகாபலிபுரம் போகிறோம்” என்கிறான். அவனுக்குப் பின்னால் அவன் தம்பி விச்சு.

துஷ்யந்தன் வாங்கிக் கொடுத்த புதுச் செருப்பை மாட்டிக்கொண்டு சகுந்தலே புறப்படுகிறாள்.

மகாபலிபுரத்தின் மூலைமுடுக்குகள் ஒன்றையும் விடாமல் சுற்றுகிறார்கள் புதுத் தம்பதிகள்.

இத்தனை நடந்து பழக்கமில்லாதவள் சகுந்தலே. கால் கடுத்து விடுகிறது. அக்கடா என்று சிறிது நேரம் ஓரிடத்தில் உட்கார மாட்டோமா என்று தோன்றுகிறது. புதுச் செருப்பு வேறு அவள் பஞ்சுப் பாதங்களைப் பதம் பார்த்துவிட்டிருக்கிறது. அதோடு தாகமும் சேர்ந்து கொள்ளவே, விச்சுவை ஓர் இளநீர் வாங்கி வரச் சொல்லுகிறாள்!

துஷ்யந்தனுக்கோ இந்தத் தனிமையைப் பயன்படுத்திக் கொண்டுவிட வேண்டுமென்ற துடிப்பு. தனியோர் இடத்துக்குச் சட்டென்று அவளை அழைத்துப் போக விரும்புகிறான். 'குழந்தை விச்சு வரட்டும், சற்றுப் பொறுங்கள்' என்று கூறித் தன் பூப் பாதங்களைப் பார்க்கிறாள் சகுந்தலே.

அதைக் கவனித்துவிட்ட துஷ்யந்தன் பதறிப் போய் அவள் பாதங்களையே வருடிக் கொடுக்கத் துணிந்துவிடுகிறான்! விச்சு எவ்வளவு வேண்டுமோ, அவ்வளவு மெதுவாகவே வரட்டும் என்றுகூட எண்ணுகிறது அவன் மனம்.

எத்தனையோ யுகங்களுக்கு முன் இதிகாச காலத்தில் தோன்றிய இராமன் செய்த காரியத்தையே துஷ்யந்தனும் செய்ய முன் வந்தான் என்றால் வியப்பாயில்லையா?

பதினான்கு ஆண்டுகள் சீதையையும் இலட்சுமணனையும் அழைத்துக் கொண்டு வனவாசம் செய்யப் புறப்பட்ட இராமனுக்கும் சற்றேறக் குறைய இதே நிலை ஏற்பட்டிருக்கிறது.

மேடும், பள்ளமும், கல்லும், முள்ளும் நிறைந்த தரையில் நடந்தேயறியாத சீதையின் பூம்பாதங்கள் முள் குத்திச் சிவந்து விடுகின்றன. களைத்துச் சளித்து நடக்க முடியாமல் நிற்கிறாள். தன் நிலையைச் சொல்லவும் முடியவில்லை. “நீ காட்டுக்கு வரவேண்டாம் என்று அப்போதே சொன்னேனே! கேட்டாயா?” என்று இராமன் கேட்டுவிட்டால்....? எனவே, “லட்சுமணன் சிறு பையன், தண்ணீர் எடுத்து வரப் போயிருக்கிறான், அவன் வரட்டும், போகலாம்!” என்கிறாள்.

குறிப்பறிந்த கணவனான இராமன் அவள் கால்களில் தைத்திருக்கும் முட்களை எடுத்துவிடும் முயற்சியில் நேரத்தை எத்தனை முடியுமோ, அத்தனை அதிகமாகவே போக்கி அவள் களைப்பைப் போக்க முயல்கிறான்.

இரு நிகழ்ச்சிகளையும் ஏககாலத்தில் நினைவுபடுத்தும் இக் காட்சியைக் காணக் கண்களுக்குக் குளுமையாக இல்லை?



**"பார்வதி!"**

உதடுகளில் முறுவல் தேங்க, உள்ளத்தில் இன்பம் கொப்புளிக்கப் பார்வதியைத் தம் அருகில் வருமாறு சமிக்ஞை செய்கிறார் பரமசிவன்.

"அகிலமனைத்துக்கும் அம்மையும் அப்பனுமான பின் இதென்ன ஆசை? வெட்கமாயில்லே?" — கேள்வி கேட்டும் பார்வதியே வெட்கித் தலைகுனிகிறாள்.

அவளது அந்த நாணம் அவரை, 'பார்வதி தானாகத் தம் அருகில் வர மாட்டாளா? வலிய வந்தணைக்கும் சுகம் தமக்குக் கிட்டாதா?' என்று பெருமூச்சு விடச் செய்கிறது. அதே நேரம் கைலாயகிரி கிடுகிடுக்கவே, மலையரசன் மகள் நடுநடுங்கி ஓடிப் போய்ப் பரமசிவனை இறுகத் தழுவிக் கொள்ளுகிறாள்.

பரமசிவனுக்கு ஆனந்தம் பிடிபடவில்லை. ஞானக் கண் கொண்டு பார்க்கிறார். "நம்ம பயல் ராவணன் நூறு ஆயுசு வாழணும். அவன் இப்படி மலையைப் பெயர்க்க முன் வரா விட்டால் நீயாக இப்படி வந்து என்னை அணைத்துக்கொள் வாயா?" என்று கேட்டு இன்புறத் தழுவிக்கொள்ளுகிறார்.

இது அன்றையக் காவியம் கூறும் கதை. இன்றைய ஓவியம் கூறும் கதை இதோ இதுதான்:

நமது கதாநாயகன் துஷ்யந்தனுக்கும் சகுந்தலைக்கும் பரதன் பிறந்து ஆறு ஆண்டுகள் ஓடி விடுகின்றன. தீபாவளிப் பட்டாசுகளுடன் வந்தவனைப் பார்த்து, "குழந்தைக்கு வெடிகள் வெடிக்க வராது. மத்தாப்பு மட்டும் வாங்கி வாருங்கள் என்று படித்துப் படித்துச் சொன்னேனே, கேட்டீர்களா?" என்று கடிந்து கொள்கிறாள் சகுந்தலை.

"அவனுக்கு வெடிக்க வராவிட்டால் என்ன? நீ இருக்கிறாயே!" என்கிறான் துஷ்யந்தன்.

"அப்பப்பா! எனக்கு வெடிகள் என்றாலே பயம்!"

சகுந்தலை இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும்போதே வெடிச்சரம் படபடவென்று வெடிக்கிறது. பதறியடித்துக் கொண்டு ஓடித் தன் கணவனைக் கட்டிக் கொள்ளுகிறாள்.

பின்னால் நின்று பரதன் கைகொட்டிக் கலகலவென்று நகைக்கிறான், "யாரைப் பார்த்துச் சொன்னே? எனக்கா வெடிக்க வராது?" என்று கேட்டவண்ணம்.

சிறுவனின் மழலைப் பேச்சிலும், மனைவி வலிய வந்து தழுவிய ஆனந்தத்திலும் மெய்மறந்து நிற்கிறான் துஷ்யந்தன்!

அன்றையக் காவியத்திலே இன்றைய வாழ்க்கையை ஓவியமாக வடித்திருக்கிறார் ஓவியர் விஜயா.

---

# பொய்மையே நீ வாழ்க!

சாந்தினிக்கு அப்போது பதினைந்து அல்லது பதினாறு வயதிருக்கும். தாவணி கட்டும் பருவம்.

மலர்ந்தும், மலராததுமாகச் செடியில் குலுங்கும் பூவைப் போலப் புன்சிரிப்புக் கோப்பாள். அவள் ஆந்திரப் பெண் ஆகையால் தெலுங்கும், தமிழும் கலந்து பேசும்போது மழலை பேசுவது போலவே இதயத்தை அள்ளும். குறுகுறுவென்ற அவள் பார்வையோ நெஞ்சுக் குருத்து வரை ஊடுருவிப் பாய்ந்து நினைவின் தளிர்களாகத் தழைக்கும்.

ஆரம்பத்தில் அவளை நான் ஏறிட்டுக் கூடப் பார்க்கவில்லை. தெரு விளக்கின் வெளிச்சத்தில் பிச்சைக்காக உட்கார்ந்திருக்கும் ஒருகிழவியையே நான் பார்த்துப் பார்த்து அவளை வர்ண ஓவியமாக வரைவதில் ஈடுபட்டிருந்தேன். கிழவியின் இளமைப் பருவத்திலே ஓடிப் போன அவளுடைய கணவன் இப்போது திரும்பி வந்ததும் அவளுடைய மங்கிய விழிகள் மூப்பையும் காலத்தையும் கடந்து, ஆசையால் சொக்கிச் சொக்கின்றன. — இப்படி ஒரு கற்பனையையும் கிழவியின் கண்களுக்குச் சேர்த்து உயிரோவியமாக உருவாக்குவதில் மூழ்கியிருந்தேன்.



ஒரு நாள் தெருப் பக்க முள்ள என் ஜன்னலின் அருகே ஒரு மெல்லிய ஒலி கேட்டது. அரை மணி நேரம் கழித்து மீண்டும் அந்த ஒலி எழும்பி அது வளையலொலி என்பதையும் உணர்த்தியது. அதோடு 'கம்'மென்ற ஒரு நறுமணமும் என் முகத்தருகே தவழ்ந்து வந்தது.

குனிந்து படம் வரைந்து கொண்டிருந்த நான் வியப்புடன் நிமிர்ந்து, ஜன்னல் பக்கம் திரும்பிப் பார்த்தேன்.

ஜன்னலுக்கு வெளியே, ஜன்னல் கம்பியைப் பிடித்துக் கொண்டு எதிர்வீட்டுப் பெண் சாந்தினி தெருப் பக்கம் நின்று கொண்டிருந்தாள்.

அரை மணி நேரமாக அவள் என்னையே குறுகுறுவெனப் பார்த்துக் கொண்டு நின்றிருக்கிறாள் என்பதும் புரிந்தது.

நான் அந்தப் பெண்ணை ஏறிட்டுப் பார்த்ததும் அவள் சட்டென்று தலைகுனிந்து நாணத்தோடு தன் இரு கைகளாலும் தன் முகத்தைப் பொத்திக் கொண்டாள்.

''என்ன பார்க்கிறாய்?'' என்று நான் கேட்டேன்.

அவள் 'களுக்'கென்று சிரித்தாள். அந்தச் சிரிப்பே அவளுடைய இருதயத்தின் பதிலைச் சொல்லிவிட்டது.

உச்சி வெய்யிலில் தெருவில் ஜன நடமாட்டம் இல்லை. சாந்தினியின் அப்பாவோ ஆபீசுக்குப் போயிருப்பார். அவளுடைய அம்மாவோ அயர்த்தும் வெய்யிலுக்குக் கண்ணயர்ந்து கிடப்பாள். நானோ வாடகை அறையில் தனியாக ஒடுங்கிக் கிடக்கும் ஒண்டிக்கட்டை.

சாந்தினியின் துணிச்சல் எனக்கு அளவில்லாத வியப்பையும் விறுவிறுப்பையும் கலவரத்தால் ஒரு வித வெடவெடப்பையும் ஒருங்கே ஊட்டியது.

கொளுத்துகிற வெய்யிலில் நின்றபடி அந்தப் பெண் அரை மணி நேரமாக என்னைக் குறுகுறுவென்று பார்த்திருக்கிறாள் என்பதை நினைத்ததும் என் இளமை உள்ளம் ஒருவிதப் பெருமிதத்தால் பொங்கியது.

நான் அவளைக் கூர்ந்து பார்த்தேன். பார்த்ததுமே அவளுடைய இளமைப் பூரிப்பில் மெருகேறி நிற்கும் வர்ண ஜோலிப்புகள்தான் என் கண்களை ஆட்கொண்டன. தந்தம் போல் குளுமையான உடம்பு நிறம்; வெந்த கன்னங்கள், சிவப்பான உதடுகள், கருநீலக் கண்கள், மெல்லிய கைகளில் ஓடும் பச்சை நரம்புகள் — இவை அப்படியே என் கருத்தில் பதிந்து விட்டன.

''நான் படம் வரைவதை நீ பார்த்துக் கொண்டிருந்தாயா?'' என்று கேட்டேன்.

''ஆமாம்!'' என்று சாந்தினி தலையாட்டினாள்.

அரு. ராமநாதன்





எதிர் வீட்டுக்கு அவள் குடி வந்த ஒரு மாத காலமாக என் அறையைக் கவனித்து வந்தாளாம். நான் அறையை விட்டு வெளியே எங்கும் போகாமல் சதா குனிந்த தலை நிமிராமல் படம் வரைந்து கொண்டிருந்ததால் அவள் வியப்புற்று அன்று துணிந்து வந்து பார்த்தாளாம். ஒருவேளை என் பார்வை எதிர் வீட்டுப் பக்கமே செல்லாததால் பெண்மையின் வசீகரத்தைப் பற்றிய இயற்கையான கர்வம் துணுக்குற்றும் அப்படி அவள் வந்து பார்த்திருக்கலாம். அதன் பிறகு?....

நான் அவளைக் காதலித்தேன். உயிருக்குயிராய்க் காதலித்தேன்!

சதா அவள் நினைவாகப் பைத்தியம் பிடித்தவன் போல் அறையில் உட்கார்ந்திருந்தேன். எதிர் வீட்டில் அவளது உருவம் தட்டுப்படாதா என்று எந்நேரமும் என் விழிகளை அந்தப் பக்கமே திருப்பிக் கொண்டிருந்தேன்.

ஆனால் சாந்தினியோ?

எப்போதாவது எட்டி எட்டிப் பார்ப்பதோடு சரி. என் கைக்குச் சிக்காமலே குடுகுடுவென்று ஓடி விடுவாள். ஒவ்வொரு நிமிஷமும் அவளை நான் பார்த்துக்கொண்டே யிருக்கத் துடிக்கிறேன் என்பது அவளுக்குத் தெரிந்திருக்கும். இருந்தாலும் அபூர்வமாகவே என் கண்களுக்குத் தட்டுப்பட்டு என்னை அவள் தைப்படவும் ஏங்கவும் வைப்பாள். திரும்பிப் பாராத ஆண் உள்ளத்தைத் திருப்பி வைத்து, அதில் ஆசையைத் தூண்டிவிட்டுப் பிறகு கைக்கு எட்டாதபடி ஓடி ஓடி வேடிக்கை பார்ப்பதிலேயே பெண்கள் திருப்தி அடைந்து விடுவார்கள் போலும்!

என் நெஞ்சு பொருமியது. நான் சாந்தினியைக் காதலிப்பது போல் அதே அளவு ஆசை வேகத்தோடு அவள் என்னைக் காதலிக்கவில்லை. நான் அவளிடம் காட்டும் அபரிமிதமான அன்பையெல்லாம் அவள் என்னிடம் காட்டவில்லை. ஆனால் அதற்காக அவள் மீது நான் குறைப்படவில்லை. பெண்களின் இயல்பு ஓரளவு எனக்குப் புரியும். சாந்தினியைப் போன்ற கன்னிப் பெண் வெட்கப்படுவாள். கன்னியத்தை எண்ணிக் கட்டுப்பாடாக இருப்பாள். என் காதலின் ஆசை வேகம் அபத்தமானது என்றுகூடப் பயப்படுவாள். ஆனால் காலம் வரும்போது 'என்னைக் கல்யாணம் செய்து கொள்கிறாயா?' என்று நான் கேட்டால் சாந்தினி சுலபமாகச் சம்மதித்து விடுவாள் என்பது எனக்குத் தெரியும்! ஆனால் பதினெட்டு வயதில் எனக்கு அந்தப் பொறுமையில்லை. என் காதலின் ஆழத்தையெல்லாம் சாந்தினி மீது நான் கொண்டிருக்கும் ஆசையின் அளவையெல்லாம் அவளிடம் நிரூபித்துக் காட்டி உணர்த்துவதற்கு ஏதாவது நான் செய்தாக வேண்டும் என்று நான் இரவும் பகலும் தவித்துக் கொண்டேயிருந்தேன். மேலும் சாந்தினியை என் அருகிலேயே ஒவ்வொரு நிமிஷமும் வைத்துக் கொண்டு எந்நேரமும் அவளையே பார்த்துக் கொண்டிருக்க வேண்டும் என்று துடித்தேன். ஆனால் அது நடக்கக் கூடிய காரியமா?

அவளுடைய மோகன உருவத்தை அப்படியே உயிரோவியமாக நான் வரைந்தால் அந்தப் படத்தை என் அருகிலேயே வைத்துக் கொண்டு சதா பார்த்துக் கொண்டிருக்கலாம். ஆனால் அவளுடைய மிக்கும் விழிகளை, அவளுடைய கன்னக் கதுப்புக்களின் அழகு சுழிப்புக்களை, சதைப் பிடிப்பான செந்த உதடுகளின் நெளிவுகளை, வெல்வெட் போன்ற அவளது உடலின் மென்மையை, மனோரம்மியமான அவளது அம்சங்கள் அனைத்தையுமே அவளுடைய ஆத்மாவோடு அப்படியே தத்ரூபமாக என் பிரஷினாலோ, வர்ணக் கலவையாலோ வரைந்து உருவாக்கிவிட முடியுமா? அப்படி முடிந்தால் அதுவே என் ஓவியங்கள் அனைத்திலும் தலைசிறந்த ஓவியமாக விளங்கும். அதுவே என் வாழ்வின் ஜீவநாடியாக அமையும்.

ஆனால் சாந்தினியை அப்படித் தத்ரூபமாக வரைய வேண்டுமானால் அதற்கு 'மாடலாக' அவள் என் அறைக்கு வந்து என் கண் எதிரே சில மணி நேரங்கள் இருக்க வேண்டுமே? அதற்கு அவள் சம்மதிப்பாளா....?

நான் மிகவும் கெஞ்சிக் கூத்தாடி விம்மி அழுத பிறகு அவள் அதற்குச் சம்மதித்தாள். போட்டோ பிடித்துக் கொள்ளக் குழந்தைகள் ஆசைப்படுமே அது போல் அவள் தன்னை உயிரோவியமாக நான் வரையப் போவதை நினைத்து ஆசையும் பெருமையும் அடைந்தாள்.

ஒரு நாள் அவள் தன் தாயாருக்குத் தெரியாமல் தன் வீட்டிலிருந்து கிளம்பி வந்து ஓசைப்படாமல் என் அறைக்குள் புகுந்தாள்.

தெருப் பக்கமுள்ள என் அறையின் ஜன்னல் கதவுகளை நான் தயாராகச் சாத்தி வைத்திருந்தேன்.

''சாந்தினி! உன்னைத் தூங்கும் காதலியாகப் படத்தில் வரையப் போகிறேன். நீ கண்ணிமைகள் மூடி, உன் காதலனை நினைத்து உல்லாசப் புன்முறுவலுடன் கட்டிலில் படுத்திருப்பதாகப் பாவனை செய்ய வேண்டும். அப்படிப் படம் வரைந்தால் அற்புதமாக இருக்கும்'' என்று கூறினேன்.

சாந்தினி மிரள மிரள விழித்தாள். பிறகு நான் சொன்னபடி அங்கு ஒரு புறம் கிடந்த கட்டிலில் தன் ஒரு



கையைத் தலையணையாகத் தலைக்கடியில் வைத்துக் கொண்டு ஒரு பக்கமாகச் சாய்ந்து படுத்தாள்.

நான் ஓவியப் பலகையின் முன் நின்று கொண்டு பிரஷில் வர்ணங்களைக் குழைத்துச் சாந்தினியை உயிரோவியமாகத் தீட்ட முயன்றேன்.

அவள் 'போஸ்' கொடுக்கும் கோணத்தின் கவர்ச்சியை இன்னும் அதிகமாக்குவதற்காக நான் அவள் அருகில் சென்று தலைக்கு அடியிலுள்ள அவள் கையை ஒருபுறமாக உயர்த்தி வைத்து அவளது முகத்தை என் பக்கமாக இலேசாகத் திருப்பினேன். மிருதுவான அவள் மலர் முகத்தில் என் ஸ்பரிசம் பட்டதுதான் தாமதம், அவள் மெய் சிலிர்ப்புக் கொண்டு வெட வெடவென்று நடுங்கினாள்.

அதே சமயம் என் அறை வாசலில் யாரோ வீறிட்டலறும் சத்தம் கேட்டது. சாந்தினியின் தாயார்தான் அத்தகைய பயங்கர அலறலுடன் பேயடி போல் குதித்து நின்றாள்!

மறு நிமிஷம்....

என் நெஞ்சில் ஏதோ ஒன்று குத்தியது போல் இருந்தது. என் கைகால்களெல்லாம் உதறலெடுத்தன. என் செய்கையைத் தவறாக மதித்து விடுவார்கள், ஓவியம் எழுதுவதாகக் கூறினும் நம்ப மாட்டார்கள் என்று நினைத்தேன்.

அது போலவே நடந்து விட்டது.

சாந்தினியின் தரப்பில் தாயாருக்குத் துணையாகத் தகப்பனாரும், பக்கத்துக் குடித்தனக்காரர்கள் எல்லோரும் கூடத் திமுதிமுவென்று வந்துவிட்டார்கள்.

என்னைத் தெரு நாய் போல் அடித்துப் போட்டு விட்டுச் சாந்தினியை அவளது பெற்றோர்கள் தங்கள் வீட்டுக்கு இழுத்துக் கொண்டு போனார்கள்.

மறு நாளே சாந்தினியின் பெற்றோர்கள் அந்த வீட்டைக் காலி செய்து விட்டு வெகு தொலைவில் உள்ள ஏதோ ஓர் ஊருக்குப் போய்விட்டார்கள்.

அத்துடன் சாந்தினி என் வாழ்வை விட்டே மறைந்து போனாள். எனக்கு அவமானமும் பழிச்சொற்களும்தான் பெரும் சொத்தாக மிஞ்சின. என்னால் அந்தத் தெருவில் குடியிருக்கவே முடியவில்லை. அறையைக் காலி செய்து விட்டு அந்த ஊரைவிட்டே சென்னைக்குப் புறப்பட்டுவிட்டேன்.

சென்னைக்கு நான் வரும்போது என் கையில் ஓவியப் பலகையையும், பிரஷ்களையும், வர்ணங்களையும் தவிர, என்னிடம் மூலதனம் வேறெதுவும் இல்லை. ஆனால் அச்சாதனங்களுடன் என் கைத்திறனையும், முயற்சியும், கடவுள் அருளினால் வாய்ப்புகளும் இருந்ததால் ஓவியத் தொழிலில் வெகு விரைவில் முன்னேறி, இருபத்தெட்டு வயதுக்குள் பெரும்புகழும், பணமும் சம்பாதித்தேன். என் ஓவியங்களை ரசிப்பவர்களின் தொகையும் பெருகியது. அகில இந்தியாவில் மட்டுமல்ல, அமெரிக்கா, இங்கிலாந்து, தென் ஆப்பிரிக்கா முதலான நாடுகளிலிருந்தும் கூட என் படங்களுக்குப் பாராட்டுக்களும் பரிசுகளும் வந்தன.

எனக்குச் சிரிப்புத்தான் வரும், விரக்தியுடன் வெடிப்பாக!

இத்தனை புகழ், இத்தனை செல்வாக்கு வாழ்க்கைக்குத் தேவையான வசதிகள், அத்தனையும் இருந்து என்ன பயன்?

என் வாழ்க்கையில் மகிழ்ச்சி இல்லை; பிடிப்பும் இல்லை.

கண் முன்னால் காமினியின் அழகையெல்லாம் காட்டி விட்டு அடுத்த கணமே கண் இரண்டையும் பறித்து விட்டால் எப்படி இருக்குமோ அது போலவே என் காதலி சாந்தினியை என்றாவது ஒரு நாள் சந்திக்கலாம் என்ற ஒரு நம்பிக்கை மட்டும் இல்லாதிருந்தால், அந்த நம்பிக்கையுடன் என் ஆத்மா சாந்தினியை நினைத்தே தவிக்காது இருந்திருந்தால், என் இதயம் மரத்துப் போய் எப்போதோ என் வாழ்க்கை அறுந்து போயிருக்கும்...

என் சாந்தினி இந்த உலகத்தில் எந்த மூலையில், எந்த ஊரில் இருப்பாள்? எப்படி இருப்பாள்?

எனக்குத் தெரிந்தவர்களிடமெல்லாம் சொல்லி விசாரித்துத் தகவல் அறிவிக்கும்படி வேண்டினேன். ஒரு பெண்ணைப் பற்றி மற்றவர்கள் விசாரிக்க வேண்டுமானால் நான் ஏதாவது விவரங்கள் கொடுக்க வேண்டுமே? அங்க அடையாளமும் சொல்ல வேண்டுமே! பத்து வருஷங்களுக்கு முன்பு நான் பார்த்த ஒருத்திக்குத் தந்தம் போல் குளுமையான உடம்பு நிறம், சிவந்த கன்னங்கள், சிவப்பான உதடுகள், கருநீலக் கண்கள், மெல்லிய கைகளில் ஓடும் பச்சை நரம்புகள்; இவை இருக்கும் அடையாளத்துக்கு இன்ன இடத்தில் இன்ன விதமான பிறவி மச்சம் இருக்கும் என்று சொன்னால் போதுமா? அவளைப் போல் ஏறத்தாழத் தோற்றமுள்ள ஒவ்வொரு பெண்ணையும் நான் நாடிச் செல்லவோ அல்லது இன்ன இடத்தில் இன்ன மச்சம் இருக்கிறதா என்று கேட்கவோ முடியுமா? மேலும் சாந்தினி இப்போது எப்படியெல்லாம் மாறியிருக்கிறாளோ?... கொழுகொழுவென்று வளர்ந்து நல்ல சதைப் பிடிப்பால் சற்றுப் பருமனாக மாறியிருக்கலாம். அல்லது ஒல்லியாய்ப் பின்னிக் கொண்டு பூங்கொடிமாதிரி இருப்பாள்.



ஒருவேளை...அவளுக்குக் கல்யாணம் ஆகி, குழந்தைகள் பெற்று, குடத்திலிட்ட விளக்காகவும் ஆகியிருக்கலாம். அப்படி அவளுக்குக் கல்யாணமாகியிருந்தால் அவளை ஒருமுறை கண்ணால் பார்த்தால்கூடப் போதும்.

ஒருவேளை என் மனக் குரளி கூறுவது போல் அவள் பிடிவாதமாக வேறு யாரையும் கல்யாணம் செய்து கொள்ள மறுத்து இன்னும் கன்னியாகவே இருந்தால், அவளும் என்னைப் போலவே எங்கள் காதலை நினைத்து ஏங்கிக்கொண்டிருப்பாள்.

அவள் என்னை நினைத்து ஏங்குவாள் என்ற ஒரு நினைப்பே என் இதயத்துக்கு ஓர் இன்பப் பூரிப்பையும், அவளை எப்போதாவது எங்கேயாவது நான் சந்திக்கும்படி விதி கூட்டி வைக்கும் என்ற ஒரு நம்பிக்கையையும் உண்டாக்கிறது.

அந்த நம்பிக்கையும் ஒரு நாள் நிறைவேறியது; ஆனால், எவ்வளவு விசித்திரமான பின்னணியில்!

அகில உலகச் சித்திரப் போட்டிக்கு, என் இதயப் பேழையில் பத்தாண்டு காலமாகப் புதைந்து கிடக்கும் சாந்தினியின் பழைய மோகன உருவத்தையே முடிந்த அளவு என் ஞாபகத்திலிருந்துக் கொண்டு வந்து உயிரோவியமாகத் தீட்டிவிடுவதென்று தீர்மானித்தேன்.

அதற்குத் தேவையான சில பிரஷ்களும், வர்ணங்களும் வாங்குவதற்காக வினன் ஆர்ட்ஸ் ஸ்டோருக்குப் போனேன்.

அங்கே கடைக்காரனிடம் ஒரு பெண்மணி மிகவும் விலையுயர்ந்த பிரஷ் ஒன்று வாங்கிக் கொண்டிருந்தாள். அத்தகைய பிரஷைக் கைதேர்ந்த ஓவியர்தான் வாங்க விரும்புவார்கள். அந்தப் பெண்மணியும் ஓவியக் கலையில் கைவண்ணம் வாய்ந்தவளாக இருப்பாளோ? அவளும் அகில உலகச் சித்திரப் போட்டிக்கு ஏதாவது ஓவியங்கள் வரையப் போகிறாளோ?

தொழிலை ஒட்டி அவளிடம் எனக்கு ஒரு சுவாரஸ்யம் பிறந்தது.

அவளுக்கு இருபத்தெட்டு வயதிருக்கும். நல்ல சதைப் பிடிப்பாக, குண்டாக, இளமைப் பூரிப்புடன் விளங்கினாள்... உள்ளத்தில் என்ன உற்சாகமோ?

பிரஷை வாங்கிக்கொண்ட அந்தப் பெண்மணி ஏதோ ஒரு பொக்கிஷத்தைச் சுமந்து கொண்டிருப்பது போன்ற பெருமையுடன் அதைத் தன் கைப்பைக்குள் பத்திரப்படுத்தி வைத்துவிட்டு அதற்குப் பணம் கொடுப்பதற்காக ரூபாய்களையும், சில்லறைகளையும் ஒவ்வொன்றாக

எடுத்துத் தன் கையால் தடவித் தடவிப் பார்த்துக் கடைக்காரனிடம் எண்ணிக் கொடுத்தாள். அவளுடைய கருவிழிகளின் பார்வை ஒரே நிலையாக இருந்ததே தவிர பணத்தின் மீதோ வேறு எதன்மீதோ பதிவதாகத் தெரியவில்லை.

அப்படியானால்.... அப்படியானால்....

அவள் — இரு கண்களின் பார்வையும் இல்லாத குருடியா?

குருடி என்றால் ஓவியம் தீட்டும் பிரஷ் எதற்காக வாங்குகிறாள்?

ஏதோ ஒரு மர்ம நாவலின் கடைசி அத்தியாயத்தைப் படிப்பது போன்ற விறுவிறுப்பும் திகைப்பும் கலவரமும் எனக்கு ஒருங்கே உண்டாயின.

நான் அந்தப் பெண்மணியிடம் மெல்லப் பேச்சுக் கொடுத்து, "ஏம்மா! உங்களைப் பார்த்தால் எங்கோ எப்போதோ பார்த்த முகம் போல் தோன்றுகிறது. உங்கள் பெயர் என்ன?" என்று கேட்டேன்.

"என் பெயர் சாந்தினி!" என்றாள் அவள்.

"சாந்தினியா?... பத்து வருஷங்களுக்கு முன்னால் திருச்சியில் பிள்ளையார் கோவில் வடக்கு வீதியில் ஏழாம் நம்பர் வீட்டில் சாந்தினி என்று ஒரு பெண் குடியிருந்தாள்....."

"ஆமாம்! நான்தான் அந்தப்பெண்!" என்றாள் அவள் ஒரு புன்முறுவலுடன்.

நான் ஒரு கணம் கல்லாய்ச் சமைந்து நின்றேன். பிறகு அவளை நான் கூர்ந்து பார்த்தேன்.

பத்து வருஷங்களுக்கு முன்பு சாந்தினியிடம் நான் பார்த்த நிறைப்பான அம்சங்கள் — பருவத்தின் பசுமை, தொட்டால் வெல்வெட் போல் ரம்மியமளிக்கும் மென்மை, மெல்லிய கைகளில் ஓடும் பச்சை நிற நரம்புகள், குறுகுறு வென்ற கருநீலக் கண்கள், தந்தம் போல் குளுமையான உடம்பு நிறம் முதலானவை ஏதும் அவளிடம் இல்லை.

ஆனால்.... பத்து வருஷங்களுக்கு முன்பு நான் அவளிடம் கண்டிராத ஒரு புத்தொளியும், ஒருவித நிறைவின் அமைதியும், ஆத்மாவின் பூரிப்பான ஓர் ஆனந்தத் துள்ளலும் அவளிடம் குடிகொண்டிருந்தன. இவை புதிதாக அவளிடம் எப்படி வந்தன....?

என் நெஞ்சு விம்மியது.

"சாந்தினி!... பத்து வருஷங்களுக்கு முன்பு ஆர்டிஸ்ட் மோகன் என்று ஒருவன் உங்கள் வீட்டுக்கு எதிர் வீட்டில் ஓர் அறையை வாடகைக்கு எடுத்துத் தங்கியிருந்தானே உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டேன்.

"தெரியுமா? எப்போதும் எனக்கு அவர் நினைவுதான்!"

உடனே என் உள்ளத்தில் ஆனந்தக் கடல் பொங்கி என்னை வானுலகத்துக்குத் தூக்கிக் கொண்டு போவதுபோல் இருந்தது. 'நான்தான் அந்த ஆர்டிஸ்ட் மோகன்' என்று கூவிவிட நினைத்தேன். ஆனால் ஏதோ ஒன்று என் உள்ளுணர்ச்சியை மீறி என்னை அப்படிக் கூவாதவாறு தடுத்து விட்டது.

நான் அவளோடு பேச்சுக் கொடுத்துக் கொண்டே தெருவில் இறங்கினேன்.

அவள் வந்த சைக்கிள் ரிக்ஷா அவளுக்காகக் கடை வாசலிலே காத்துக் கொண்டிருந்தது.

"தீபாவளிக்கு இன்னும் ரெண்டு நாள் இருக்கு. ஆனாலும் இந்தப் பசங்க வெடிக்கும் வெடிகள் ஏக சத்தமா இருக்கு வீட்டிலே! அதனாலே கொஞ்ச நேரம் நிம்மதியா உங்ககூடப் பேசிக் கிட்டு இருக்கலாம்னு வந்தேன்!"

---

என் குரல் கரகரத்தது. "சாந்தினி! ஆர்ட்டிஸ்ட் மோகனுக்கும் சதா உங்கள் நினைவுதான். நீங்கள் இல்லாமல் அவனுக்கு வாழ்க்கையே இல்லை என்று நினைத்தான்."

"அவர் அப்படியெல்லாம் நினைப்பார் என்பது எனக்கு அப்போதே தெரியும். நானும் கூட அவரில்லாமல் எனக்கு வாழ்க்கையே இல்லையென்று நினைத்தேன். என்னைத் திருச்சியிலிருந்து என் பெற்றோர்கள் பலவந்தமாக வேறோர் ஊருக்கு இழுத்துக் கொண்டு போய் என்னதான் என்னை அடித்து உதைத்தாலும் ஆர்ட்டிஸ்ட் மோகனைத் தவிர வேறு யாரையும் கல்யாணம் செய்து கொள்ள முடியாது என்று பிடிவாதம் செய்தேன். என் பெற்றோர் மனமுடைந்து போய், 'இனி நீ அந்த மோகனை எப்படிக் கண்டுபிடிப்பாய்?' என்று ஆத்திரமாகக் கேட்டார்கள். 'எங்கிருந்தாலும் என் கண்களால் தேடிக் கண்டு பிடிப்பேன்' என்று சொன்னேன்.

"பாவம்! அந்தக் கண்களை ஆண்டவன் பறித்துக் கொண்டுவிட்டான். ஒரு நாள் மின்னல் வெட்டில் என் கண் பார்வை பறிபோய் விட்டது. ஆனால் அதற்காக நான் குறைப்படவில்லை. நான் கண் பார்வையை இழந்த பிறகு என் பெற்றோர்களும் காலமாகி விட்டார்கள். அதற்காகத்தான் வருத்தப்பட்டேன்."

"ஆர்டிஸ்ட் பிரஷை நீங்கள் எதற்காக வாங்கிக் கொண்டு போகிறீர்கள்?"

"என் கணவருக்குத்தான்!..."

"கணவருக்கா...?" என்று கீச்சிட்ட என் உள்ளத்தில் ஏதோ ஒன்று சுட்டு, உடம்பு முழுதும் தீப்பிடித்து எரிவது போல் தகித்தது.

சாந்தினியோ உற்சாகப் பெருக்கோடு, "ஆமாம்! என் கணவருக்கு நாளை பிறந்த நாள். அவருக்கு இந்த ஆர்ட்டிஸ்ட் பிரஷைப் பரிசு கொடுப்பதற்காக நான் வாங்கினேன். அவர் இந்த பிரஷினால் என்னையே உயிரோவியமாக வரைந்து அகில உலகச் சித்திரப் போட்டிக்கு அனுப்புவார். அதாவது கண் பார்வை இழந்த ஒரு குருடிக்குக் காதற் கணவனே கண்களாக இருந்து உலகத்தைக் காட்டுவதாகச் சித்திரிக்கப் போகிறாராம்."

"அவரை.. அவரை... நீங்கள் எப்படிக் கல்யாணம் செய்து கொண்டீர்கள்?"

"அதைத்தான் விதியின் விளையாட்டு என்று சொல்ல வேண்டும். ஒரு நாள் தெருவில் நடந்து செல்லும்போது கால் இடறி ஒரு காரின் முன் விழுந்துவிட்டேன். காரை ஓட்டி வந்தவர் என்னை அழைத்துச் சென்று என்னுடைய பரிதாபக் கதையை யெல்லாம் கேட்டு மனமுருகினார். என்னிடம் கனிவுடன் பேசியது மட்டுமல்ல, கண்ணியமாகவும் நடந்து கொண்டார். ஆண்டவனாலும் டாக்டர்களாலும் தர முடியாத கண்களைக் கூடத் தம்மால் தர முடியும் என்று உறுதி அளித்தார். நான் வியப்புடன் 'நீங்கள் யார்?' என்று கேட்டேன். அதற்கு அவர் சிரித்துக் கொண்டே 'இன்னும் என்னைத் தெரியவில்லையா சாந்தினி? நான்தான் உன் ஆர்ட்டிஸ்ட் மோகன்! உனக்குக் கண் பார்வை இல்லையென்று கவலைப் படாதே! என் கண்களைக் கொண்டே உலகத்தின் இன்பங்களை யெல்லாம் உனக்குக் காட்டுவேன்' என்றார். இதைவிடப் பேரானந்தம் எனக்கு என்ன வேண்டும்? என் வாழ்க்கையே நிறைந்து விட்டது" என்றாள் சாந்தினி ஓர் ஆனந்தப் பெருமூச்சுடன்.

என்ன? — சாந்தினியின் கணவன் ஆர்டிஸ்ட் மோகனா? நான் திடுக்கிட்டுத் திகைப்பில் நின்றேன். என் பெயரை வைத்துக் கொண்டு எவனோ ஒருவன் அப்பேதையை ஏமாற்றி அவளை மணந்து குடும்பம் நடத்தி வருகிறான் என்பது எனக்குத் தெளிவாகப் புரிந்து விட்டது.

என் குரல் தழுதழுத்தது.

"சாந்தினி! உங்கள் மனம் போல ஆர்ட்டிஸ்ட் மோகனே உங்களுக்குக் கணவனாக வாய்த்திருக்கிறான் இல்லையா?"

"ஆமாம், அவர் என்னைக் கல்யாணம் செய்து கொண்டு மூன்று வருஷங்களாகப் போகிறது. இரண்டு குழந்தைகள் கூடப் பிறந்திருக்கின்றன. அக் குழந்தைகளின் அழகையெல்லாம் அவர் தான் என்னிடம் சொல்லிச் சொல்லி ஆனந்தப்படுவார். அவரை என் கண்களால் பார்ப்பதற்கு எனக்குப் பார்வை இல்லையே என்று ஒரு நாள் அழுதேன். அதற்கு அவர், 'சீ! அசடு! உன் கண்ணால் பார்ப்பதை விட உன் மனத்தால் என்னைப் பார்த்து மகிழுகிறாயே, அது தான் பெரிது!' என்றார். அது முதல் அவர் ஒரு நிமிஷங்கூட என்னைப் பிரிந்திருக்கச் சம்மதிக்க மாட்டார். 'போய் ஏதாவது படங்கள் வரையுங்களேன்' என்பேன். அதற்கு அவர் 'நான் முன்பு எழுதிய ஓவியங்களே ஏழு தலைமுறைக்கும் போதும்' என்று சிரிப்பார்..."

"ஓ!"

"அவர் எப்போதாவது பத்திரிகைகளில் வெளிவரும் தம்முடைய ஓவியங்களைப் பற்றிய விளக்கங்களையும்,

## எமது மனமார்ந்த தீபாவளி வாழ்த்துக்கள்!!




கேஷ் பாக்ஸ்

மற்றும் சூட்கேஸ்கள்
யூனிபாரம் டிரங்குகள்

ஆபீஸ்களுக்குத் தேவையான
எல்லா ரக

★ தரத்தில் சிறந்தது
★ ரகத்தில் உயர்ந்தது
★ அழகான கலர்கள்

# திரிலோகா

## ஸ்டீல் டிரங்க் பெட்டிகள்

**திரிலோகா ஸ்டீல் டிரங்க் ஒர்க்ஸ்,**

தந்தி: THRILOKAM 22, பேக்கர் தெரு, சென்னை-1 போன்: 23322.

பிராஞ்சு: பந்தர் மங்களூர்-1 (S.K)

தம்மைப் பற்றிய விளக்கங்களையும் என்னிடம் சொல்லிக் குதூகலப்படு வார். அவர் என் அருகில் இருக்கும் போது எனக்குக் கண் பார்வை இல்லாத குறையை நான் உணர்வதே இல்லை. அவர் என்மீது வைத்திருக்கும் அன்பைப் போல இந்த உலகத்தில் வேறு எந்த ஆடவரும் எந்தப் பெண் மீதும் வைக்க மாட்டார்கள். அவர் என் தெய்வம்!'' என்றாள் சாந்தினி. தெய்விகப் பிரமை யின் ரேகைகள் அவளுடைய முகத்தில் ஆனந்தக் கோலமிட்டன.

என் பெயரைச் சூடிக்கொண்டு என் னைப் போன்ற பாவனையில் அவளோடு குடும்பம் நடத்தி வரும் அந்தத் தெய்வத் தின் மீது எனக்கு ஆத்திரம் வரவில்லை.

ஒரு குருடியின் காதலுக்காக அவ ளுடைய மனம் போல அவளுக்கு ஒரு வாழ்க்கையை அமைத்து ஆனந்தப் படுத்துவதற்காக, ஒரு மனிதன் 'நான்' என்ற நினைப்பையும் மறந்து, தன்னையே இழந்து அவளுடைய அன்பில் ஒன்றி யிருக்கிறான் என்றால், தத்துவ விஞ்ஞானி களின் ஆத்ம யோகத்தைப் போல அவன் அரிய சாதனை படைத்தவனாகவே இருக்க வேண்டும்! மேலும் அவன் சாந்தினியின் உள்ளத்தில் என்னையே இஷ்ட தெய்வமாகக் கொலுவிருக்கச் செய்து, தானே அந்தத் தெய்வமாக மாறி வருகிறான்....

இவ்விரு தெய்வங்களையும் நான் சிதைக்க விரும்பவில்லை.

ஏனெனில் இவை இரண்டும்தான் சாந்தினியின் வாழ்க்கைக்கு அஸ்தி வாரங்கள்.

''சரி, சாந்தினி! நான் போகவேண் டிய தெருவின் திருப்பம் வேறு பக்கம் இருக்கிறது. நான் போகிறேன்'' என்று கூறிக் கிளம்ப முயன்றேன்.

''நீங்கள் யாரென்று சொல்ல வில்லையே? அவருடைய நண்பரா?''

''இல்லை. அவருடைய கற்பனைகளுக்கு ஒரு ரசிகன்.''

''ஒரு முறை எங்கள் வீட்டுக்கு வாருங்களேன்! என் குழந்தைகள் அவ ரைப் போலவே இருக்கின்றனவாம். நீங்கள் பார்த்துச் சொல்லுங்கள்!'' என்று சாந்தினி சொல்லிவிட்டுத் தன் வீட்டு விலாசத்தையும் கூறினாள்.

நான் சிரித்தேன்.

அது எப்படிப்பட்ட சிரிப்பு என்பது எனக்கே புரியவில்லை. அதற்குமேல் நான் அங்கு நிற்கவில்லை. என் வீட்டுக்கு வேகமாக வந்து விட்டேன்.

அதன் பிறகு?

ஒரு மாத காலமாக நான் இரவும் பகலும் கண் விழித்து, சாந்தினியின் உருவத்தை — பத்து வருஷங்களுக்கு முன்னால் நான் பார்த்த சாந்தினியின் பழமையான உருவத்தை ஓர் ஓவியமாக வரைந்து அகில உலக ஓவியப் போட் டிக்கு அனுப்பினேன். ஓவியத்தின் பின் புறத்தில் என் வீட்டு விலாசத்தை எழு தாமல் சாந்தினியின் வீட்டு விலாசத் தையே எழுதியிருந்தேன்.

அந்த ஓவியம் போட்டியில் பரிசு பெற்றாலும், தோல்வியுண்டு திரும்பி வந்தாலும் இரண்டு தெய்வங்களுக்கும் ஒரு நிம்மதி. ஆனால் அதன் அடிப்படை யில் உள்ள பொய்மை...?

அதுதான் தெய்வீக மாயையா?

காரியதரிசிக்கு அழகு கவர்ச்சிகரமாக இருத்தல். அவள் தன் முகத்தை "மேக்கப்" செய்து கொள்வதில் அதிக கவனம் செலுத்த வேண்டும். அது 'செயற்கை அழகாக இருந்த போதிலும் கூட இயற்கையழகைப் போலத் தோற்ற மளிப்பதாயிருத்தல் நல்லது. ஆடை உடலுடன் ஒட்டிக் கொண்டு அவள் அங்குமிங்கும் விரைவாக நடந்து செல்வதற்குத் தொந்தரவு அளிக்காத முறையில் இருக்க வேண்டும். உதடுகளில் புன்னகை தவழ்ந்த வண்ணம் இருக்க வேண்டும் என்று நான் சொல்லத் தேவையில்லை.... எல்லா நாகரிக நாடுகளிலும் பெண் காரியதரிசி வேலைக்குப் பயிற்றுவிக்கப் பள்ளிக்கூடங்கள் இருக்கின்றன. ஜெர்மன் பள்ளிக்கூடங்களில் கண்ணிமைகளின் மேல் பக்கமாகக் கருட்டி விட்டுக் கொள்ளக்கூடச் சொல்லிக் கொடுக்கிறார்கள்....

ஒரு 'ஸ்திரீகள் பத்திரிகை'யில் வெளியாகி யிருந்த இந்தக் கட்டுரையைப் படித்த கண்ணம்மா அதை அப்பால் விசிப் போட்டு விட்டுக் கடிகாரத்தைப் பார்த்தாள். மணி ஒன்பது.

'நான் கட்டிக் கொண்டிருக்கும் புடவை கோணிச் சாக்குப் போன்றது. இந்தக் காலத்து நைலான் புடவையைக் கட்டிக் கொண்டால், நடுவே, நடுவே இடுப்பில் ஏதாவது இருக்கிறதா என்று சந்தேகம் வந்து விடுகிறது. என் ரவிக்கை முழங் கைக்குக் கீழே நீண்டு முன்னங் கையில் பாதி தூரம் வரை வந்திருக்கிறது. காலர் முகவாய்க் கட்டையை இடித்துக் கொண்டிருக்கிறது. கழுத்தில் பழைய காப்பிக் கொட்டைச் சங்கிலி. காரியதரிசி என்றும் காரியங்களை நன்குச் செய்ய வேண்டியதா; சினிமாவில் சேர்வதற்கு 'டெஸ்ட்' செய்துகொள்ளப் போகும் பெண் போல் இருக்க வேண்டியதா?' என்று முணுமுணுத்தவாறே வாசற் பக்கம் வந்தாள். அங்கே தயாராய் நின்றிருந்த சைக்கிள் ரிக்ஷாவில் ஏறிக் கொண்டாள்.

வண்டிக்காரன் வண்டியை நிதானமாக இழுத்துச் சென்றான். வண்டி மௌண்ட்ரோடிலிருந்த ஒரு பெரிய ஐந்து மாடிக் கட்டடத்தின் முன்நின்றது.

வண்டியிலிருந்து இறங்கி, லிப்டில் ஏறிச் சென்றாள். மூன்றாவது மாடியில் லிப்டிலிருந்து வெளியே வந்தாள். 'பிரம் மாண்ட கார்ப்பொரேஷன்' என்று எழுதியிருந்த பலகை மாட்டப்பட்டிருந்த பகுதிப் பக்கம் சென்றாள்.

கண்ணம்மா இரண்டு மூன்று ஹால்களைக் கடந்து சென்று, ஓர் அறைக்குள் நுழைந்தாள். அதில் ஒரே ஒரு மேஜை மட்டும் இருந்தது. அவள் அதனிடம் சென்றாள். அப்போது மணி 9-45.

மேஜை மேல் அவள் பெயர் பொறித்த ஒரு பலகை வைக்கப்பட்டிருக்கும். கண்ணம்மா அதைக் கவனித்தாள். அதில் 'ம்மா' என்ற எழுத்துக்களின் மேல் 'ப்பன்' என்று எழுதிய காகிதம் ஒட்டப்பட்டிருந்தது. கண்ணம்மாவை அந்தக் காரியாலயத்திலிருந்தோர் கண்ணப்பன் என்றுதான் தங்களுக்குள் குறிப்பிடுவது வழக்கம். அவள் ஓர் ஆணுக்குச் சமமாக என், ஓர் ஆணைக் காட்டிலும் திறமையாகக் காரியங்களைச் செய்கிறாள் என்பதால் அப்படிக் காரணப் பெயர் வைத்திருந்தார்கள். கண்ணம்மா அங்கே வந்த சேவகனைக் கூப்பிட்டு, "இரண்டு கழி 'ன'வுக்குப் பதிலாக மூன்று கழி போட்டிருக்கிறாயே? செய்கிற விஷயத்தைச் சரியாகத் தப்பில்லாமல் செய்!" என்று எச்சரித்து அனுப்பினாள்.

கடிகாரத்தில் மணி பத்து அடிக்கத் தொடங்கியது. அப்போது வாட்ட சாட்டமான, கம்பீரமான தோற்றம் உள்ள, ஸூட் உடை அணிந்த ஒரு மனிதர் வந்தார். அவர் தம் எதிரில் வந்த போது கண்ணம்மா தன் ஆசனத்தை விட்டு எழுந்திருப்பது போல் பாவனை செய்து தலை வணக்கம் செய்தாள். அவரும் தம் தலையைச் சற்றுக் குனிந்து பதில் வணக்கம் செய்து விட்டுப் பக்கத்தில் இருந்த அறைக்குச் சென்றார். புன்னகை என்பது அவர்களுடைய உதடுகளின் பக்கம் தலை காட்ட வில்லை. பின்னால் ஒரு சேவகன் ஒரு சிறிய தோல் பெட்டியைத் தூக்கிக் கொண்டு வந்தான். அதன் மீது 'தம்பு' என்ற வார்த்தை எழுதப்பட்டிருந்தது. பிரம்மாண்ட கார்ப்பொரேஷனின் மானேஜிங் டைரக்டரான புகழ் பெற்ற தம்பு அவர்கள்தான் அறைக்குள் சென்றது.

சில நிமிஷங்களுக்குப் பிறகு கண்ணம்மாவின் பக்கத்தில் 'பஸ்' என்று இனிமையான மணி அடிக்கும் சத்தம் கேட்டது. அந்தச் சத்தத்தை எதிர் பார்த்துக் கொண்டிருந்த கண்ணம்மா சில 'பைல்களை' எடுத்துக் கொண்டு முதலாளியின் அறைக்குள் சென்றாள். அங்கே அவருக்கு எதிரே ஒரு பெரிய மேஜை போட்டிருந்தது. அதற்கு அப்பால் இருந்த ஒரு நாற்காலியில் அவள் அமர்ந்து கொண்டாள்.

தம்பு அவளை ஒரு நிஜமாகப் பார்த்தும் புன்னகை புரியவில்லை. "என்ன, என்ன சங்கதி?" என்று கொஞ்சலாகக் கேட்டுக் கொண்டிருக்க வில்லை.

"ஹம்!" என்று கூறி, அவள் சொல்லப் போவதைக் கேட்கத் தயாராக இருந்தார். அவற்றைக் குறித்துக் கொள்வதற்காகவும் பேனாவை எடுத்துக் கொண்டார். அவள் சொல்லலானாள்:

'பிரம்மாண்ட கார்ப்பொரேஷனுக்காகக் கப்பலில் வந்திருக்கும் காகித ஆலை இயந்திரங்களைச் சீக்கிரமே இறக்கச் செய்ய ஏற்பாடு செய்ய வேண்டும்.

'மின்சாரச் சாமான்கள் உற்பத்தி செய்யும் சாமான்களை ஜப்பானிலிருந்து தருவிப்பதற்கு லைசென்ஸ் பெறுவதைப் பற்றி டில்லிப் பிரதிநிதியுடன் 'டிரங்கு' போனில் பேசவேண்டும்.'

கண்ணம்மா இப்படி அவர் அன்று கவனிக்க வேண்டிய முக்கியமான அம்சங்களைப் படித்துக் கொண்டே போகத் தம்பு அவற்றைக் குறித்துக் கொண்டார். பிறகு காரியதரிசியிடம் "பட்டுக் கோட்டையில் மண்ணெண்ணெய்க்காகத் தோண்டிப் பார்க்கிறார்கள். அந்தப்பிராந்தியத்தைச் சுற்றி எத்தனை ஏக்கர் நிலம்



வேலைக்குக் கிடைத்தாலும் வாங்க ஏற்பாடு செய்யும்படி நமது தஞ்சாவூர்ப் பிரதிநிதிக்குத் தெரிவிக்கணும்'' என்றார்.

''சரி!'' என்றாள் கண்ணம்மா.

''எப்படித் தெரிவிக்கணும்?''

''நேரில் தனித்துச் சொல்ல வேண்டும். இதெல்லாம் ரகசியமாக வைத்துக் கொள்ள வேண்டியவை'' என்றாள் கண்ணம்மா.

அவள் கூறியதை அவர் பாராட்டுவது போல் தலையை அசைத்தார். கண்ணம்மா எழுந்து தன்னுடைய அறைக்கு வந்து விட்டாள்.

தம்பு சொந்தத்தில் பெருமளவில் வியாபாரம் செய்து வந்தது மட்டுமின்றிப் பல ஸ்தாபனங்களில் தொடர்பு கொண்டிருந்தார். புதிய கம்பெனிகள் அரம்பிப்பதைப் பற்றிப் பத்திரிகைகளில் வெளியாகும் விளம்பரங்கள் பலவற்றில் 'தம்பு — பாங்கர் — தொழிலதிபர்' வம்புகளுக்கும் புரளிகளுக்கும் மட்டும் குறைவில்லை. 'ஒரு பெண்; வயது இருபத்தைந்து இருக்கும். நல்ல உடல் அமைப்பு. சுமாராக அழகாகவும் இருக்கிறாள். அநேகமாக மானேஜிங் டைரக்டருடன் அவர் அறையில் தான் அவளுக்குக் காரியம் எல்லாம். ஆனால் என்னமோ பெரிய தபஸ்வினி மாதிரி வேஷம் போடுகிறாள்' என்று பேசிக் கொள்வார்கள்.

கண்ணம்மாவைப் பற்றியவரை, அவளுக்கு அந்தத் தம்பு என்பவர் ஒரு முதலாளி. அவ்வளவுதான். அதே மாதிரி தம்புவுக்கு அவள் ஒரு காரியதரிசி. ஒரு மிருகம் வந்து நன்றாக வேலை செய்தால் கூட அவருக்குப் போதும். பெண் காரியதரிசிதான் வேண்டும் என்பதில்லை.

**வ**ருஷம் முந்நூற்று அறுபதுநாளுமே தம்புவுக்கு மிக அதிக வேலை இருந்து கொண்டிருக்கும். ஒரு சமயம் மிக மிக அதிக வேலை செய்ய வேண்டியிருந்தது.

பாய்ந்து சென்று அவரைப் பிடித்துக் கொண்டாள். அவர் கனமான உடலுள்ளவராதலால் அவர் கீழே விழாதிருக்கச் செய்ய மிகவும் சிரமப்பட்டாள்.

அப்போது அறைக் கதவு திறந்திருந்தது. மானேஜர் மனோகரன் உள்ளே வந்தார். அவருக்குத் தம் கண்களை நம்ப முடியவில்லை. அவர்கள் இருவரும் 'ரம்பா' நடனம் ஆடுகிறார்களோ என்று நினைத்தார்.

''மன்னிக்கணும். தெரியாமல் வந்து விட்டேன்'' என்று கூறிக் கொண்டே பின்னால் நகர்ந்து போக முயன்றார்.

''இல்லே, சார்! அவருக்கு மயக்கம்! கீழே விழுந்து விடப் போகிறார். பிடித்துக் கொள்ளுங்கள்!'' என்று கண்ணம்மா கூறித் தவித்தாள்.

இருவருமாக, அவரை மெதுவாகக் கீழே கம்பளத்தின் மீது படுக்க வைத்தார்கள்.

கண்ணம்மா மேஜையின் மீது எப்போதும் தயாராய் வைக்கப்பட்டிருக்கும்



என்று இல்லாதிராது. வியாபார உலகில் அவருக்கு மிக நல்ல பெயர்.

இத்தனைக்கும் அவர் ஒரு பிரம்மசாரி. அவருக்கு வயது நாற்பது நாற்பத்தைந்துக்குள் இருக்கலாம். குடும்ப வாழ்க்கையில் ஈடுபட்டால் வியாபாரத்தைக் கவனிக்க முடியாது என்பது அவரது முடிவு..

கண்ணம்மா தம்புவிடம் வேலைக்கு வந்து ஒரு வருஷம்தான் ஆகிறது. தம்புவுக்கு எட்டிய உறவினரான ஒருவர் சிபாரிசு செய்ததன் மேல் அவளுக்கு அந்த வேலை கிடைத்தது. வந்த சில வாரங்களுக்குள்ளேயே, 'புத்திசாலி,— திறமை வாய்ந்தவள், நம்பிக்கைக்குப் பாத்திரமானவள்' என்று தம்புவின் மனத்தில் நல்ல அபிப்பிராயம் ஏற்படும்படி நடந்து கொண்டாள். அவர் அவளை 'ஒரு லட்சியக் காரியதரிசி' என்று மதித்தார்.

காரியாலயத்தில் நூற்றுக்கு மேற்பட்டவர்கள் வேலை செய்து வந்தனர். சில புதிய தொழில் ஸ்தாபனங்கள் நிறுவுவதற்கு ஏற்பாடு செய்து கொண்டிருந்ததால் ஒரு வார காலம் இராத் தூக்கம் இல்லாமல் பல ஊர்களுக்குச் சுற்றுப் பிரயாணம் செய்து வர வேண்டியதாயிற்று.

ஒரு நாள் அவர் தமது அறையில் காரியதரிசியிடம் ஒரு முக்கியமான பெரிய கடிதம் எழுதுவதற்காக விஷயங்களைச் சொல்லி வந்தார். அவள் அதை நோட்டுப் புக்கில் சுருக்கெழுத்தில் எழுதி வந்தாள். நாற்காலியில் அமர்ந்திருந்த அவருக்குத் தூக்கம் வரும் போல் இருந்தது. எழுந்திருந்து, கண்ணம்மா உட்கார்ந்திருந்த பக்கம் வந்து, அங்குமிங்கும் நடந்து கொண்டே விஷயங்களைச் சொல்லி வந்தார். திடீரென்று சொல்வது நின்றது.

கண்ணம்மா தலை நிமிர்ந்து அவரைக் கவனித்தாள். அவர் தலை சுற்றிக் கொண்டிருப்பதைப் பார்த்தாள்.

அவள் தன் நாற்காலியை விட்டு எழுந்திருந்தாள். அப்பொழுது அவர் உடல் கீழே சாயும் நிலைமையில் இருந்தது.

தண்ணீர் உள்ள கண்ணாடி டம்ளரை எடுத்துக் கொண்டு வந்தாள். தண்ணீரை அவர் முகத்தில் பலமாகத் தெளித்தாள். மறுகணம் தம்பு கண் விழித்தார். ''என்ன இதெல்லாம்?'' என்று கேட்டார்.

''மானேஜர் சார்! இதைப் பற்றிப் பெரிதுபடுத்த வேண்டாம். அவருக்கு உடம்பு சரியாயில்லை என்றால் இந்த நாலைந்து புது ஆலைகள் ஆரம்பிப்பதற்குத் தடங்கல் ஏற்பட்டு விடும். அவரை அவர் வீட்டுக்குக் கொண்டுபோய்ச் சேர்த்து விடுகிறேன். டாக்டரை அழைத்துக் காண்பிக்கிறேன்'' என்றாள் கண்ணம்மா.

மானேஜர், ''சரிதான்'' என்றார், நம்பிக்கையற்ற குரலில்.

'நான் அவர்களை எக்கச்சக்கமான நிலைமையில் பார்த்து விட்டதனால் இப்படி வேஷம் போடுகிறார்களோ?' என்று அவரால் சந்தேகப்படாதிருக்க முடியவில்லை.

சில நிமிஷங்களுக்கெல்லாம் மானேஜிங் டைரக்டர் தமது அறைக்குப் பின்

பக்கமாக உள்ள வேறொரு வழியாக வெளியே வந்து தமது வண்டியில் ஏறிக் கொண்டார். காரியதரிசி கண்ணம்மாளும் அந்த வண்டியில் இருந்தாள். அவள் அவரிடம் வேலை பார்க்க வந்த இந்த ஒரு வருட காலத்தில் அவர் வண்டியில் ஏறியது இதுதான் முதல் தடவை.

தம்புவின் டாக்டர் அவர் வீட்டுக்கு வந்து அவர் உடலை நன்ருகச் சோதனை செய்து பார்த்தார். "உடம்பில் ஒரு கெடுதலும் இல்லை. கொஞ்சம் ஓய்வு எடுத்துக் கொண்டால் சரியாய்ப் போய் விடும்!" என்ருர்.

"ஏகப்பட்ட வேலை. இரண்டு வாரங்களாவது ஓய்வெடுத்துக் கொள்ளச்சொல் லுங்கள்" என்ருள் கண்ணம்மா. காரியாலய சம்பந்தமில்லாத ஒரு விஷயத்தில் தான் இப்படி சிரத்தை கொண்டது கண்ணம்மாவுக்கு ஆச்சரியத்தை அளித்தது.

அந்தக் கடிதத்தில் எழுதப்பட்டிருந்ததைப் படித்துப் பார்த்துத் தம்பு திகைத்துப் போனுர்.

அன்பார்ந்த ஐயா!

நான் என்னுடைய சொந்தக் காரியங்களை உத்தேசித்துத் தங்கள் காரியாலய வேலையிலிருந்து விலகிக் கொள்ள நேர்ந்திருப்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். ஆகையால், இந்த எனது வேலை ராஜிநாமாவைச் சமர்ப்பிக்கிறேன்.

தங்கள் நன்றியறிதலுள்ள
கண்ணம்மா."

தம்பு, கண்ணம்மா நின்றிருந்த பக்கம் தலை திரும்பி அவளை நோக்கினுர். அவள் எங்கோ பார்ப்பது போல் இருந்தாள். அவர் மேலும் சிறிது யோசனை செய்தார். பிறகு கடிதத்தில் ஏதோ எழுதினுர். "ஊம்!" என்று வழக்கம் போல் சொன்னுர்.

என்பது எனக்குத் தெரியும். நேற்று நீ என்னை அணைத்துப் பிடித்துக்கொண்டிருக்க நேர்ந்து விட்ட சம்பவம்தான். யாரும் அபத்துக்கும் பாபமில்லை என்று சொல்வார்கள். ஆனல் எதிலும் மிகவும் கண்டிப்பான நீ அதை ஒப்புக் கொள்ள மாட்டாய். அதற்காக நான் உனக்கு நஷ்டஈடு செய்யக் கடமைப்பட்டவன். இதற்கெல்லாம் எத்தனை லட்சம் ரூபாய் கொடுத்தாலும் போதுமானதாயிராது. ஒரு பெண் விஷயத்தில் நான் ஒன்றுதான் செய்ய முடியும். அதைச் செய்யக் காத்துக் கொண்டிருக்கிறேன். அது உன்னை..... எனக்குச் சொல்லச் சங்கோசமாக இருக்கிறது. அது உன்னைக் கலியாணம் செய்து கொள்வது தானுலும். முடிவைத் தெரிவிக்கவும்."

அவள் பத்து நிமிஷங்களாவெயும் அறையை விட்டு வெளியே வரவில்லை. தம்புவுக்கு அது பத்து யுகமாக இருந்தது.






"தம்பு! உங்கள் காரியதரிசி கேட்டுக் கொள்வது போல் இரண்டு நாளைக்கு ஓய்வு எடுத்துக் கொண்டு விடுங்கள். உங்கள் பொறுப்பை யெல்லாம் அவள் தானே ஏற்றுக் கொள்ள வேண்டியிருக்கிறது. அவள் சொல்கிறபடி கேளுங்கள்" என்ருர் டாக்டர்.

தம்பு முதன் முதலாகக் கண்ணம்மாவைப் பார்த்துச் சிரித்து, "சரி, அம்மா! உன் உத்தரவு!" என்ருர்.

இதைக் கேட்டுக் கண்ணம்மா தலை குனிந்தாள். அவளுக்குக் கோபம்கூட வரப் பார்த்தது.

டாக்டர் சென்று சிறிது நேரமாகி விட்டது. "இதோ வந்து விடுகிறேன்" என்று கண்ணம்மா கூறி விட்டுச் சென்ருள். பிறகு திரும்பி வந்தபோது அவள் கையில் ஒரு கடிதம் வைத்துக் கொண்டிருந்தாள். அதை அவரிடம் கொடுத்து விட்டுச் சற்று ஒதுங்கிப் போய் அப்பால் நின்ருள்.

கண்ணம்மா தம்மைப் பார்த்ததும் கடிதத்தை அவளிடம் கொடுத்தார். அதில்......

"ராஜிநாமா ஏற்றுக் கொள்ளப் பட்டது. அக்கௌண்டெண்ட் கணக்குகளைத் தீர்ப்பார்" என்று எழுதியிருந்தது.

"வந்தனங்கள்" என்ருள் கண்ணம்மா.

தம்பு ஒரு கடிதத்தை எழுதிக் கொண்டிருந்தார். பிறகு அதை மடித்து அவளிடம் கொடுத்து, "இதை நன்ருகப் படித்துப் பாரு. யோசனை பண்ணிப் பதில் சொல்லு. அதோ அந்த அறையில் போய் உட்கார்ந்து கொண்டு சாவகாசமாகப் படி!" என்று கூறினுர்.

கண்ணம்மா அப்படியே மற்றொரு அறைக்குச் சென்று அதைப் படித்தாள். அந்தக் கடிதத்தில் எழுதியிருந்தது:

"அன்பார்ந்த கண்ணம்மா, நீ உன் வேலையை ஏன் ராஜிநாமாச்செய்கிருய்

அவர் எழுந்திருந்து அவள் இருந்த அறைப் பக்கம் சென்ருர்.

"இதோ எழுதிக் கொடுக்கிறேன்" என்று கூறி அந்தக் கடிதத்தின் அடியிலேயே எழுதினுள். அவள் அதைத் தம்மிடம் கொடுக்கும் வரை காத்துக் கொண்டிருக்காமல் தம்பு தாமே அதைப் பிடுங்கி எடுத்துக் கொண்டார். அவள் அளித்திருந்த பதில்:

"நீங்கள் என்னைக் கலியாணம் செய்து கொள்வதாகக் கூறும் யோசனையை ஒப்புக் கொள்கிறேன். ஆனல் ஒரு நிபந்தனை. நான் இனி காரியதரிசி வேலை பார்க்கமாட்டேன்."

* * *

கலியாணம் மிக எளிய முறையில் ஒரு கோயிலில் நடைபெற்றது. "ரிஜிஸ்தர் மணமாகவும் செய்து கொண்டு விடலாம்" என்று கண்ணம்மா கேட்டுக் கொண்டதற்கிணங்கத் தம்பு அன்றிரவும்

செய்து கொண்டார். காரியாலயத்திலுள்ளவர்கள், ''வேஷம் போடுகிறான் என்று நான் அப்போதே சொன்னேனே'' என்று ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டனர்.

யார் என்ன சொன்னால் என்ன?

'பிரம்மாண்ட கார்ப்போரேஷன்' மானேஜிங் டைரக்டர் தம்புவின் காரியதரிசியாயிருந்த மிஸ் கண்ணம்மா, 'மகா மேரு விலாஸம்' பங்களாவின் சொந்தக்காரர் தம்புவின் வீட்டுக் காரியதரிசியான ஸ்ரீமதி கண்ணம்மாவாகி விட்டாள்.

மறு நாள் மாலை தம்பு வீடு திரும்பி வந்தபோது கண்ணம்மா அவரிடம் ஒரு கடிதம் வைத்துக் கட்டப்பட்டிருந்த காகித அட்டையை நீட்டினாள். அதில்,

''நானது மாதத்துக்கு வீட்டுக்குச் செலவழிக்க வேண்டியிருக்கும் உத்தேசத் தொகை ரூ. 800. இது முன் பணமாகப்பெற்றுக்கொள்ள சாங்ஷன் தேவை'' என்றிருந்தது.

'சாங்ஷன் செய்யப்பட்டது' என்று அவர் அதில் எழுதிக்கையெழுத்திட்டார்.

மறு நாள் காலையில் வீடு சுத்தம் செய்யும் வேலைக்காரப் பெண் வந்ததும் கண்ணம்மா ஒரு புத்தகத்தை நீட்டி, ''இதில் கையெழுத்துப் போடு'' என்றாள். அந்தப் பெண்ணுக்கு எழுதப் படிக்கத் தெரியும்.

கையெழுத்துப் போட்டு விட்டு, ''எதுக்குங்க, கையெழுத்து?'' என்று கேட்டாள்.

''இந்தப் புத்தகத்துக்கு 'அட்டெண்டன்ஸ் ரிஜிஸ்தர்' என்று பெயர்'' என்று கண்ணம்மா விவரம் கூறினாள். பிறகு சமையற்காரக் கிட்டனைக் கூப்பிட்டனுப்பி அவனிடம் தமிழில் டைப் அடிக்கப் பட்டிருந்த ஒரு கடிதத்தைக் கொடுத்தாள். அதில் தெரிவிக்கப் பட்டிருந்தது:

திரு கிட்டன்.
சமையற்காரர்.
மிஸ்டர் தம்புவின் இல்லம்.

தங்களை இன்று முதல் இந்த வீட்டில் பிரதம சமையற்காரராக நியமித்திருப்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறோம். தங்கள் சம்பள கிரேட் 50-5-80 (தி. த.) – 100. தாங்கள் இந்த மட்டில் வீட்டில் இரண்டு வருஷ காலமாக இருந்து வருவதால் தங்கள் சம்பளம் 65 ரூபாய் கிரேடிலிருந்து ஆரம்பிக்கப்படும். லீவு, விவரங்களுக்கு அதற்கான தனிப் புத்தகத்தைப் பார்த்துக் கொள்ளவும்.

கண்ணம்மா
(வீட்டுக் காரியதரிசி)

கிட்டன் அதைத் திரும்பத் திரும்பப் படித்துப்பார்த்தான். '''தி. த.' என்று போட்டிருக்கிறதே, அது என்ன?'' என்று கேட்டான்.

'' 'திறமைத் தடை' என்று அர்த்தம். நன்றாக வேலை செய்து வந்தால் மேலே சம்பள உயர்வு கிடைக்கும். இல்லா விட்டால் அத்துடன் தடைப் பட்டு விடும்'' என்று கண்ணம்மா விளக்கிக் கூறினாள்.

''ஓஹோ! அப்படியா!'' என்று கூறி விட்டுப் போய் விட்டான்.

ஒரு நாள் சமையலில் குழம்பில் ஒரே உப்பாயிருந்தது. அன்று கண்ணம்மா அவனிடம் ஒரு அண்டுக் கடிதத்தைக் கொடுத்தாள். அதில்,

''குழம்பில் அதிக உப்பைப் போட்டிருந்ததற்காக அபராதம் ரூ. 0.05.''

கிட்டன் அதைக் கையில் வாங்கிக் கொண்டு, தன் இடுப்பிலிருந்து ஒரு ஐந்து நயா பைசா நாணயத்தை எடுத்து வீசியெறிந்து விட்டுப் போனான்.

அன்று அவனுக்குப் பின்வரும் கடிதம் கிடைத்தது:

''அவமரியாதையாக நடந்து கொண்டதற்காக ஏன் வேலையிலிருந்து நீக்கக் கூடாது என்பதற்குச் சமாதானம் சொல்லவும். இருபத்து நான்கு மணி நேரத்துக்குள் பதில் தேவை.''

குறிப்பிட்ட நேரத்துக்குள் பதில் கிடைத்தது. ஆனால் அது முற்றிலும் எதிர்பாராத விதமாய் அமைந்திருந்தது. மறு நாள் காலை தம்புவும், கண்ணம்மாவும் காப்பியை எதிர்பார்த்துக்கொண்டு அரை மணி நேரமாக உட்கார்ந்திருந்தும் அது வரவில்லை. அதைப் பற்றிச் சமாதானம் கூறும்படி கேட்டு ஒரு கடிதத்தை டைப் அடித்துக் கொண்டு சமையலறைக்குச் சென்றாள்.

அங்கே கிட்டனைக் காணோம். அடுப்பு மூட்டப்பட்டிருக்கவில்லை. சமையல் மேடை மீது காப்பி டிகாக்ஷன் போடும் பில்டர் பாத்திரத்தைக் காணோம். அப்போது வாசற் பக்கமிருந்து ஏதோ கோஷம் கேட்டது. கணவனும் மனைவியும் சென்று பார்த்தனர். வாசல் கேட் பக்கம் ஏழெட்டுப் பேர் நின்றிருந்தனர். அவர்கள் கிட்டன், தோட்டக்காரர்கள், வேலைக்காரிகள் முதலியவர்கள்.

''கண்ணம்மா வீழ்க!'' இந்தக் கோஷம் அவர்கள் காதில் விழுந்த போது இருவரும் சிறிது திகைத்து நின்றனர்.

''வேலை நிறுத்தம் போல் இருக்கிறது'' என்றார் தம்பு.

வாசல் பக்கத்திலிருந்து, ''உத்தரவுகள், கணக்குகள், கட்டளைகள்,– அபராதங்கள் வீழ்க!'' என்ற கோஷம் வந்தது.

''வீட்டில் வேலை செய்கிறவர்களுக்கு இது மாதிரி சட்ட திட்டங்களெல்லாம் சரிப்பட்டு வராது போல் இருக்கிறது'' என்று தம்பு நாசூக்காக எடுத்துக் கூறினார். அவர் மனைவி செய்து வந்தது முதலிலிருந்தே அவருக்குப் பிடிக்கவில்லை.

''ஒன்றும் வேண்டாம் என்று அவர்களுக்குச் சொல்லி விடலாம். இருந்தாலும் உடனேயே நாம் விட்டுக் கொடுத்து விடக் கூடாது. நாம் போய்க் காப்பி போட்டுச் சாப்பிடலாம்'' என்று கண்ணம்மா கூறிப் புடவைத் தலைப்பை இழுத்து இடுப்பில் செருகிக் கொண்டு கிளம்பினாள்.

ஒரு விதமாக அடுப்பை மூட்டி வெந்நீர் போட்டாள்.

''நான் காப்பிப் பொடி எடுத்துக் கொடுக்கிறேன்'' என்று கூறி, அது வைத்திருந்த எவர்ஸில்வர் டப்பாவைத் தேடி எடுத்து வந்தார் தம்பு.

''இரண்டு பேருக்கு எத்தனை பொடி போட வேண்டும், தெரியுமா? நான் நேற்று காப்பி போர்டு கூட்டத்துக்குப் போயிருந்தேன். இந்தியாவில் ஒரு மனிதன் வருஷத்துக்குச் சராசரி இரண்டு கிலோகிராம் காப்பி உபயோகிக்கிறான். அப்படியானால் ஒரு நாளைக்கு ஒருவருக்குக் கிட்டத்தட்ட 6 கிராம் தேவை. இரண்டு பேருக்கும் பன்னிரண்டு'' என்று தம்பு கணக்குப் போட்டுக் கொண்டிருந்த போது கண்ணம்மா சிரித்தபடியே உத்தேசமாகக் காப்பிப் பொடியைப் போட்டாள். ''கொஞ்சம் நிறையவே போட்டிருக்கிறேன். கிட்டன் வந்ததும் காப்பிக்குப் பறப்பான்'' என்றாள்.

அவர்கள் இருவரும் வியாபார உலகம், காரியாலய உலகம் இவற்றை மறந்து மனிதர்களாக இருக்க ஆரம்பித்தது – இந்த 'நெருக்கடி' ஏற்பட்டபோதுதான்.

காப்பி போட்டாகி விட்டது. கண்ணம்மா அதை எடுத்து ஆற்றிக்கொண்டிருந்தபோது டெலிபோன் மணி அடிக்கும் சத்தம் கேட்டது. தம்பு சென்று குழாயை எடுத்துக் கேட்டார்.

''நான் இப்போது காப்பி போட்டுச் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறேன். பேசுவதற்கு அவகாசமில்லை!'' என்று கூறிப் பேச்சை முடித்துவிட்டு வந்தார்.

''என்ன விசேஷம்!'' என்று கண்ணம்மா விசாரித்தாள்.

''ஒன்றுமில்லை. கல்கத்தாவிலிருந்து சௌதரி பேசினார். ஏதோ சணல் ஆலைப் பங்குகள் மலிவாக வருகின்றனவாம். வாங்கிப் போட்டால் இரண்டு லட்சம் லாபம் கிடைக்கும் என்றார். பொழுது விடிந்ததுமே இதுதானா வேலை?''

''அவருக்கா அப்படி அலட்சியமாகப் பதில் சொன்னீர்கள்? சௌதரி உங்கள் பிராண சிநேகிதராயிற்றே. அவரோடு பல லட்சக் கணக்கில் வியாபாரம் நடத்துகிறீர்களே?'' என்று கூறிக் கண்ணம்மா ஆச்சரியப்பட்டாள்.

''ஆம். நான் அந்தச் சௌதரியிடம் தான் அப்படிப் பேசினேன். நான் யார்? பிரம்மாண்ட கார்ப்பரேஷன் மானேஜிங் டைரக்டர். நான் ஏன் அடுப்பங்கரையில் வந்து நின்று கொண்டிருக்கிறேன்? உனக்கு ஏன் சர்க்கரை எடுத்துக் கொடுத்தேன்? ஆமாம், நீ யார்?'' என்றார். தினசரி வாழ்க்கையில் ஏற்பட்ட திடீர் மாறுதலால் தம்புவின் மனம் குழம்பிப் போயிருந்தது.

கண்ணம்மா அவர் பேசியதைக் கேட்டுத் திகைத்துப் போய் நின்றாள்.

'' நீ யார் என்று கேட்கிறேன். ஞாபகம் வருகிறது. நீ என் காரியதரிசி. உனக்கு இந்த அடுப்பங்கரையில் என்ன வேலை?'' என்றார்.

கண்ணம்மா மறு கணம் அந்த அறையை விட்டு வெளியேறினாள். மாடிப் படிகளில் விரைந்து சென்றாள். தம்புவும் எதற்காக அவள் அப்படிச் செல்கிறாளோ என்று பயந்து போய்த் தாமும் பின்னால் சென்றார். கண்ணம்மா இரும்புப் பீரோவைத் திறந்தாள்; அதிலிருந்த ஒரு கடிதத்தை வெளியே எடுத்தாள். தம்பு அதைக் கையில் வாங்கிப் பார்த்து விட்டுச் சிரித்தார்.

''நம்ப இரண்டு பேருக்கும் கல்யாணம் ஆகிவிட்டது இல்லையா?'' என்று கேட்டார். அது கல்யாணப் பதிவு செய்து கொண்ட சர்டிபிகேட்.

''கண்ணு! என் கண்ணம்மா!''- என்று தம்பு கொஞ்சத் தொடங்கினார்.

''அம்மா போட்ட காப்பி ஏ ஒன்!'' என்று கூறிய வண்ணம் கிட்டன் அங்கே வந்து நின்றான்.


Shakti Silks
எடுப்பான ஆடைகள் - எங்கும் அணிந்து செல்லத்தக்கவை! எடுப்பான ஆடைகள் - எங்கும் அணிந்து செல்லத்தக்கவை!

# கல் திறந்தது

வசுமதி ராமசாமி

பெரியசாமியின் வீட்டில் அமைதி நிலவியது. வீட்டுக்கு முன்னுள்ள புளிய மரத்தடியில் எப்போதுமே பாறைகள் குவிந்து கிடக்கும். ஏன், இன்னும்தான் ஏதோ இரண்டொரு பாறைகள் கிடக்கின்றன. அவைகளின் மேல் புளிய மரத்துப் பழுத்த இலையும், புளியம் ஓடும் உதிர்ந்து கிடக்கின்றன. கல்லைச் செதுக்கும் மங்கள ஒலி மறைந்து விட்டது. கல்லை உளி துளைக்கும்பொழுது, பறக்கும் நெருப்புப் பொறிகள் அணைந்து விட்டன.

ஆட்கள் பாறைகளைச் சுமக்க முடியாமல் சுமந்து பாடிக் கொண்டே போவார்களே அந்த ஒலி எங்கேயோ கேட்கிறது. பெரியசாமியின் வீட்டுக்கு அருகில் கேட்கக் காணோம். அவன் வீட்டிலிருந்து எத்தனை எத்தனை தெய்வங்கள் உயிர் பெற்றுக் கோவில்களில் குடிகொள்ளப் போயிருக்கின்றன! எத்தனை எத்தனை சிற்பங்கள் ஆலயங்களின்மேல் மண்டபத்தை அலங்கரித்திருக்கின்றன!

பெரிய பற்களைக் காட்டிக் கொண்டு வாய் திறந்து நிற்கும் சிங்கங்கள், யாளிகள், பின்னங் காலைச் சாய்த்து, முன்னங்காலை நீட்டிக்கொண்டு பாயும் குதிரைகள், அசைந்து வரும் யானைகள் இப்படி எத்தனை எத்தனையோ, பாருள்ள அளவும் விளங்கும் கற் கோவில்களாக இருக்கின்றன! பிரம்மனை வெற்றி கொண்டவனல்லவா பெரியசாமி! பிரமனின் படைப்பிலாவது அழகும் உண்டு, அவலட்சணமும் உண்டு. பெரியசாமியோ எல்லையற்ற அழகுத் தெய்வங்களையே படைத்திருக்கிறான். எத்தனை லிங்கங்கள், அம்பிகை, நவக்கிரகம், கணபதி.... எண்ணி முடியுமா? ஏட்டில் அடங்குமா? அவன் மற்றவர்களைப் போல் கோவில் பிராகாரத்தில் சிலை செய்யவில்லை. தொலைவில் உள்ள மற்றவர்களுக்கும் கூடத் திருப்பணி வேலையை மேற்கொண்டிருந்ததால் அவன் வீட்டு வாயிலில் உள்ள புளிய மரத்தடியே அவனுக்குக் கல் பட்டறையாக இருந்தது.

இன்று சிற்பி பெரியசாமி மறைந்து விட்டானா? அப்படி விருந்தால் பரவாயில்லையே! அது இயற்கையின் நியதிதானே? அதோ பெரியசாமி தளர்ந்த உடலுடன் திண்ணையில் உட்கார்ந்திருக்கிறான். ஊர், உலகமெல்லாம் 'பெரியவர்' 'பெரியவர்' என்று மரியாதை செலுத்தும் பெரியசாமி இன்று சிறியவனாகிவிட்டான். அந்த நிலைமையைப் பெரியசாமியினால் தாங்க முடியவில்லை. 'தனக்கும் இப்படி ஒரு சிறுமையா?'

சென்ற மூன்று மாதங்களுக்கு முன்பு வரையில் அவன் இருபத்தைந்து வயதுக் காளையின் பலத்தோடுதான் இருந்தான். கல்லைக் கடவுளாக வடித்து, வானளாவிய கோயில்களுக்குக் கொடுத்த மேதையாகத்தான் திகழ்ந்தான். தெய்வம் பெரியசாமியைப் படைத்தது. பெரியசாமியோ நூற்றுக் கணக்கான சாமிகளைப் படைத்தான்.

இரும்புப் போய்க் கல்லாக வந்ததைக் கருணை நிறைந்து, கனிந்த கடவுளாக அமைத்துக் கொடுத்த பெரியசாமியின் பெருமை யெல்லாம் எங்கே? எழுபது வயதை எட்டிப் பார்க்கும் அவனுக்கு இத்தனை காலமும் உடல்தளர்ச்சி ஏற்படவில்லை. ஆனால் மூன்றே மாதங்களுக்குள் கல்லைச் செதுக்கி, உருண்டு, திரண்டு, நிமிர்ந்த தோள்கள் சரிந்து விட்டன. கல்லில் கடவுளைத் தேடிய கண்கள் குழி விழுந்து, நீல மணிகள் போல் ஒளி இழந்து இருந்தன. தெய்வத்தை வடித்து, காய்ச்சிப் போன விரல்கள் முரமுரத்துப் போய் விட்டன. மூன்று மாதங்களுக்குள் முப்பது ஆண்டுகளின் முதுமையை அடைந்து விட்டான்!

இன்றையச் சிறுமையான நிலையை அவனால் சிந்திக்க முடியவில்லை. அடுத்துக் கலா காமேசுவரி ஆலயத் திருப்பணி கோலாகலமாக நடக்க விருக்கிறது......ஆனால்...... துயரம் நெஞ்சைப் பிளந்தது. கையால் தடவிக் கொண்டு நிமிர்ந்தான். மனம் எழும்பியது. "நான் வருந்த மாட்டேன். ஏன் இன்பத்தை இழக்க வேண்டும்? உங்களுக்கெல்லாம் என்னைப் போல் இன்பத்தில் லயித்திருக்கத் தெரியாது. எனக்குச் சக்தி யிருக்கிறது" என்று மற்ற உறுப்புக்களைப் பார்த்து மார் தட்டியது மனம்.

மன வேகம் முப்பது ஆண்டுகளுக்கு முன்னால் சென்றது.

கைலாய புரத்தில் ஆலால சுந்தரர் கோவில் திருப்பணி. செட்டியார் குடும்பத்துக் கைங்கரியம். பெரியசாமியின் கைராசி பிரசித்தமானது. முதலில் பூசை செய்து, கற்பூரம் ஏற்றி, பூசணிக்காய் உடைத்து, பெரியசாமி தன் சகாக்களுடன் வேலையை ஆரம்பிப்பதைப் பார்த்தாலே புல்லரிக்கும். பெரியசாமியின் முன்னோர்கள் தமிழ் நாட்டின் கோவில்களைக் கல்லில் செதுக்கிய மேதைகள். அவன் நரம்புகளில் பரம்பரையாக வந்த தொழில் துடித்துக் கொண்டிருந்தது.

ஆலால சுந்தரர் கோவில் நிர்மாணம் பெரியது. ஐந்து ஆண்டுகள் இரவும் பகலுமாகக் கற்கள் சிலைகளாக உருப் பெற்றுக் கொண்டிருந்தன. கல்யாண வயதை அடைந்த தங்கள் ஒரே மகனுக்குக் கால்கட்டுக்கட்ட எண்ணிய பெரியசாமியின் பெற்றோர் பிடிவாதமாக அவன் மாமன் மகள் வள்ளியை மணம் முடித்து வைத்தார்கள். காலம் ஓடிக்கொண்டிருந்தது. ஒன்றுபோக ஒன்று வேலை இருந்து கொண்டேயிருந்தது. தெய்வத்துடன் வாழ்ந்த பெரியசாமிக்குக் குடும்ப வாழ்க்கை நடத்த நேரம் இல்லை. வள்ளியின் முகத்தை ஏறிட்டுப் பார்க்கக் கூட அவனுக்குப் பொழுது இல்லை.

வள்ளி அவன் பின்னும் ஆவல் ததும்ப வந்து நிற்பாள். இளம் உள்ளத்தில் எத்தனை எத்தனை இன்ப நினைவுகளோ?

"இதோ, பாரு, வள்ளி! இந்தக் கல்லு நல்ல வாட்டமாக இருக்குது. முருகப் பெருமானுடைய வள்ளி நாயகியை இதில் செதுக்கப் போகிறேன். அப்புறம், ஷண்முக நாதர். தெய்வயானை அம்மாள் இப்படி. போ, போ வள்ளி. வேலையைப் பாரு. உன்னோடு பேசினால் என் கைவேலை தடுமாறும்." கல்லைப் பார்த்துப் பேசிய வண்ணமே பெரியசாமி வள்ளியைப் பாராமல் அனுப்பிவிடுவான்.

இந்தக் காலத்துப் பெண் இல்லையே வள்ளி! கண்களில் நீர் முட்ட, தலைப்பை வருடிக் கொண்டு போய் விடுவாள். இப்படியே சில ஆண்டுகள் ஓடி விட்டன. திருநீலகண்டர் தாம்பத்தியம்தான்.

புது கண்டாங்கி சேலை. அள்ளிச் சொருகின கொண்டையில் பூ முடித்திருந்தாள். காதிலே தண்டட்டி. காலிலே கொலுசு. கழுத்திலே கருகமணி.

"நான் எப்படி இருக்கேங்க?" இவ்வலங்காரத்துடன் பின்னால் வந்து நின்ற வள்ளி கேட்டாள்.

திரும்பினான் பெரியசாமி.

அப்பொழுதுதான் அவன் கண்களுக்கு வள்ளியின் அழகு தெரிந்தது. ஏற இறங்கப் பார்த்தான்.

"வள்ளி! தவத்தைக் கலைக்கிற மாதிரி நிக்கிறியே! ஓகோ! இன்னிக்குத் தீபாவளி நாளா? ஆறும் நாளு என்னப்பன் சூர சம்ஹாரம் செய்கிற நாள். அதுக்குள்ளார அவன் முழு உருவத்தையும் செதுக்கி விடணும். நீ இப்படித் தடங்கல் செய்யாதே வள்ளி!"

"இல்லிங்க!" வள்ளிக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது. இருந்த தைரியத்தை யெல்லாம் எப்படியோ திரட்டிக் கொண்டு, "என்னங்க, அந்தச் சிங்கார வேலனே கூட எப்பவும் இரண்டு பெண்சாதியுடன் இருக்கிறாரு. நீங்க என்னடான்னா இப்படி என் நெனப்பே இல்லாம இருக்கீங்களே!" என்றாள்.

பெரியசாமி திடுக்கிட்டான். வள்ளி சொல்வது உண்மைதானே? மனத்தில் ஒரு குழப்பம்.

அவனைப் புரிந்துகொண்ட வள்ளி "எனக்கும் வயசு ஏறிக்கொண்டே போவுது. உங்க கையைப் பிடிச்ச மாமாங்கம் ஆச்சுது!" என்றாள்.

"இதோ, பாரு வள்ளி. குன்றக்குடி கோவில் முடிந்து வேலைப் பிரதிஷ்டை செய்த பிறகுதான் எனக்குக் குடும்ப நெனப்பு......"

காய்ச்சி உருக்கிய இரும்பு வார்த்த பிறகு இறுகுவது போல் பெரியசாமியின் இளகின மனம் மறுபடியும் இறுகுவதை உணர்ந்தாள் வள்ளி.

பெரியசாமி சொன்ன பிரகாரம் குன்றக்குடி வேலனும் கோவில் கொண்டான். பிரதிஷ்டை ஆகி விபூதி அபிஷேகம் ஆயிற்று. அர்ச்சகர் விபூதி அபிஷேகம் செய்து கண்களைக் கையால் துடைத்து விட்டார். கண்களில் கருணை வழிந்தது. திருவாயில் புன்னகை மலர்ந்தது.

பெரியசாமி மெய்ம் மறந்தான். அவன் செதுக்கிய சிலை தெய்வ சாந்நித்தியம் பெற்றுத் திகழ்ந்தது.

கிணற்றில் விழுந்து மூழ்கின சாமானைத் தேடி எடுத்து வருபவன் தண்ணீர் மட்டத்துக்கு வந்ததும் ஒரு முறை தலையைச் சிலுப்பிக் கொள்ளுவது போல் அவன் மனம் ஆழ மூழ்கி எழுந்தது. அவன் உடல் சிலிர்த்தது.

"குவா, குவா...."

கரும் கல்லும், இரும்பு உளியும் உராயும் ஒலியைத் தவிர வேறு ஒன்றையும் கேட்டறியாத அவன் செவிகளில் இந்த இனிய குரல் நிறைந்தது. உடம்பு புல்லரித்தது. வானை நோக்கிக் கரம் குவித்தான்.

வழக்கம்போல் சிலையை உருப்படுத்திக் கொண்டிருந்தான். பகல் நேரம். பக்கத்து வீட்டுக் கிழவி, "வள்ளிக்கு ஜன்னி கண்டு விட்டது. வைத்தியரை அழைத்து வா" என்றாள். அவள் குரலில் ஒரே பதற்றம். பெரியசாமி பேந்தப் பேந்த விழித்தான். இவனைச் சொல்லிப் பயனில்லை என்று கிழவி ஊர்க்காரர்களை ஏவி வைத்தியரை வரவழைத்தாள்.

மாலை மங்கும் நேரம். கதிரவன் தன் சிவந்த மேனியை மறைக்கக் கடலும், வானமும் தொடுமிடத்தில் குதித்தான்.

பக்கத்து வீட்டுக் கிழவி பரபரப்புடன் ஓடி வந்து, "பெரியசாமி! உள்ளே வா. குடி முழுகிப் போச்சு! வள்ளி கல்லைப் புரட்டி விட்டாள்!" என்று கத்தினாள்.

"கல்லைப் புரட்டினாளா? ஒவ்வொரு நாளும் நானல்லவா கல்லைப் புரட்டிப் போடுகிறேன் உளியால் அடித்து உருவத்தைப் பொறிக்க? மாற்றி மாற்றிப் புரட்டுகிறேனே!" சிந்தனையுடன் பெரியசாமி உள்ளே நுழைந்தான்.



வெள்ளி போன்ற வள்ளி உடல் வாடிக் கிடந்தாள். பெரியசாமியின் கண்களில் அவளைச் சரியாகப் பார்க்கக் கூட முடியவில்லை. கண்களில் நீர் முட்டியது. அருகில் உட்கார்ந்து நெற்றியில் அலையும் அவள் தலை மயிரைக் கோதினான்.

"என்னுங்க. குழந்தை நீங்க செய்யிற சிலை மாதிரியே அழகாக இல்லே?" அந்த நிலையிலும் இப்படிக் கேட்கும்போது வள்ளிக்கு வெட்கம்!

பெரியசாமி துக்கம் தொண்டையை அடைக்க, "வள்ளி!" என்றான்.

"நான் வந்த வேலை முடிஞ்சு போச்சு. குழந்தையையாவது நல்லா கவனிச்சுக்குங்க" என்றாள் வள்ளி.

வந்த வேலை முடிஞ்சு போச்சா? இது என்ன தத்துவம்? பெரியசாமி ஒரு பக்கம் தூங்கும் குழந்தையை உற்றுப் பார்த்தான்.

கூடியிருந்தவர்கள் பெரிதாகக் கத்திய போதுதான் வள்ளி பறந்து விட்டாள் என்பதை அறிந்தான். அன்று காலையில்தான் ஒரு பூ

மலர்ந்தது. மாலையில் மற்றொன்று வாடி விட்டது. ஒன்றைக் கொண்டு வர இன்னொன்று உயிரை இப்படித் தியாகம் செய்யணுமா? இரண்டையும் சேர்த்து நினைக்கும் போது நினைவிழந்துவிட்டான் பெரியசாமி.

இந்த நினைவிலிருந்து மனம் தாவியது. பிறகு எத்தனை எத்தனை கோவில்கள் நிர்மாணம் செய்தான்? ஆனால் ஒவ்வொரு தடவையும் வேலன் சிலை செய்யும் பொழுது மட்டும் வள்ளியின் நினைவில் உளியை விட்டெறிந்து விட்டு வெகு நேரம் வரையில் ஒன்றும் தோன்றாமல் உட்கார்ந்து விடுவான்.

குழந்தை வேலம்மாள் நடக்கும் பொற்சிலையாக இருந்தாள். நாற்பத்தைந்து வயதுக்கு மேல் பிறந்தவள், தாயில்லாக் குழந்தை என்பதால் மட்டும் பெரியசாமி அவளைச் செல்வமாக வளர்க்கவில்லை. அவளது துறுதுறுத்த முகமும், மாணிக்கப் பரல்கள் உதிர்வது போன்ற மழலைப் பேச்சும், சிலை போன்ற அழகும் பார்ப்பவர் மனத்தைப் பறிப்பவை. பெரியசாமி சிலையைச் செதுக்கும் போது, முழங்காலில் கையை ஊன்றிக் கொண்டு, ஆர்வத்துடன் பார்ப்பாள்.

''தள்ளிப் போம்மா. கல் தூள் கண்ணில் தெறித்து விடும்.''

''உனக்குமட்டும் தெறிக்காதாப்பா?''

பெரியசாமி பதில் சொல்ல மாட்டான். குழந்தையை வாரி அணைத்துக் கொள்வான். ஒவ்வொரு சிலையும் பூர்த்தியானதும் வேளை பார்த்து, நாழி பார்த்துப் பூஜை செய்து கண் திறப்பான்.

பெரியசாமியின் மனம் இன்னும் பின்னோக்கிச் சென்றது. நினைத்ததையே நினைப்பது மனத்துக்குப் பிடிக்காதது தானே? நாற்பது ஆண்டுகளுக்கு முன் அங்கயற்கண்ணி ஆலயத்தின் புனருத்தாரணப் பணி நடந்தது. அப்பொழுது கோபுரத்துப் பொம்மைகளை யெல்லாம் புதுப்பித்தான். இலக்கியங்களெல்லாம் நிறை போட்ட பொற்றாமரைப் படிகளைச் சீர்திருத்தினான். ஏன், மீனாட்சி-சொக்கநாதர் கோவில் நிர்மாணத்தையே தான் செய்யக் கொடுத்து வைத்தது போன்ற பெருமையில் மூழ்கினான். அஷ்டபந்தன கும்பாபிஷேகம் நிறைவேறியது. கோவில் நிர்வாகிகள் அவனுக்குப் பொன்னாடை போர்த்திப் பெருமைப்படுத்தினார்கள். 'மயன் போல் செய்திருக்கிறாய்' எனப் பாராட்டினார்கள். இன்று கூட அந்தப் பொன்னாடை பெட்டியில்தான் இருக்கிறது. மக்கி விடவில்லை. ஏன், அந்த எண்ணமும் பசுமையாகத்தான் இருக்கிறது.

சுமார் எழுபது ஆண்டுகளுக்கு முன் அங்கயற்கண்ணி ஆலயத் திருப்பணியில் பெரியசாமியின் பாட்டனார்தான் சிற்ப வேலைகளெல்லாம் செய்தார். எந்தக் காலத்திலோ, எப்பவோ முக்குறுணிப் பிள்ளையாரைக் கூடப் பெரியசாமியின் முன்னோர்கள் தான் செய்தனர் என்று அவன் பெருமிதம் அடைந்திருக்கிறான்.

ஆனால் இன்று கலாகாமேசுவரி ஆலயம்! செப்பனிடப்பட்டுச் சில மாதங்களில் கும்பாபிஷேகம் நடக்கவிருக்கின்றது. அறுபத்து நான்கு கலைகளும் களியாடும் கலாகாமேசுவரி ஆலயத்தில் தன் கையால் ஒன்றுமே செய்ய முடியவில்லையே! முடியவில்லையா? இரண்டு கைகளையும் ஆத்திரத்துடன் உதறிக் கொண்டான்.

''பெரியசாமி! உனக்கு வயதாகி விட்டது. உன் கையினால் வழக்கம் போல் ஆரம்பம் செய்து விடு. சிற்பக் கலையை முறைப்படி கற்றுத் தேர்ந்த ஓர் இளைஞன் வந்திருக்கிறான் அவன் நம்











கோவில் மூர்த்திகளை அழகாகச் செய்து விடுவான்'' என்றார் கோவில் நிர்வாகி.

''சாமி! என் உடலில் வலு இருக்கிறது. இந்தத் தடவை என் கையாலேயே செய்து விடுகிறேன்.''

''வேண்டாம்பா. உனக்கு எல்லாம் பூர்த்தியானபிறகு சன்மானம் கொடுத்து விடுகிறோம். நீ இனிமேல் இந்த வேலை செய்ய வேண்டாம். வயதாகிக் கைநடுக்கம் கண்ட பிறகு உளியைப் பிடித்து வேலை செய்தால் உருவத்தில் குறை ஏற்பட்டுவிடும். அது ஊருக்குக் கெடுதல். நீ இதுவரையில் செய்ததே போதும்'' என்றார் அந்தக் கோவில் நிர்வாகி.

பெரியசாமியின் மார்பில் சுரீர் என்ற வலி. கண்களிலிருந்து பொங்கிய கண்ணீர் கடுநீர்ச் சொட்டுக்களாகக் கைகளில் உதிர்ந்தன.

வேண்டாம் என்று சொன்னது கூட அவன் மனத்தில் உறுத்தவில்லை. 'உனக்குச் சன்மானத்தைக் கொடுத்து விடுகிறோம். அதைவிட நீ செய்தால் ஊருக்குக் கெடுதல்.' இவை என்ன வெறும் சொற்களா? பொங்கிப் பொங்கி அழுதான். ''ஐயனே! எத்தனை கோவில்களில் நீ குடிகொண்டிருக்கிறாய்? இந்தக் கையால் எவ்வளவு உருவங்களைச் செதுக்கியிருக்கிறேன்? ஊரை வாழ வைக்கும் தெய்வமாக இருக்கிறாயே, அம்பிகே!'' என்றெல்லாம் பொருமினான்.

உச்சி காலம். கோவில் மணி ஒலித்தது. இவ்வளவு காலமாக 'ஓம்', 'ஓம்' என்று ஒலித்த ஒலி இன்று அவனுக்காக அழுதது.

'' அப்பா! இந்நேரமும் உச்சி வெயில்லே உட்கார்ந்திருக்கிறியே. சாப்பிட வாப்பா.'' வேலம்மாவின் குரல் கேட்டு உணர்வு பெற்றான் பெரியசாமி.

'கல், கல்' என்று கல் உளிச் சத்தம் காதுகளில் ரம்மியமாகப் பாய்ந்துகொண்டிருந்தது. வண்டி வண்டியாகப் பெரும் பாறைக் கற்கள் வந்து இறங்கிக் கொண்டிருந்தன. எங்கே? பெரியசாமியின் வீட்டு வாசலிலா? இல்லை, புதிய சிற்பி பாலசுந்தரத்தின் வீட்டு வாசலில்! கலாகாமேசுவரியின் ஆலயத் திருப்பணி மும்முரமாகத் தொடங்கி விட்டது. பெரியசாமி புறக்கணிக்கப்பட்டு விட்டான்.

அந்த ஏக்கமே அவன் கைகால்களைச் சோர வைத்து விட்டது; மனத்தைக் கலங்க அடித்து விட்டது.

இரவு பத்து மணி யிருக்கும். பால் பொழிவது போன்ற முன்னிலவு. அந்த நேரம் கற்பாறையின் மேல் பாலசுந்தரம் உட்கார்ந்திருந்தான். ஆறுமுகன் சிலை முடிந்து விட்டது. கண் திறக்க வேண்டியதுதான் பாக்கி.

''ஐயா....!'' பாலசுந்தரம் திரும்பினான். வேலம்மா இடுப்பில் கையை வைத்துக் கொண்டு மிடுக்காக நின்றாள்.

பாலசுந்தரம் வைத்த விழி வாங்காமல் அவளையே பார்த்தான். அந்தப் பால் நிலவில் அவள் மோகினி போல் தோன்றினாள். கொஞ்ச தூரத்தில் போடப்பட்டிருந்த கல்லின் மேல் இரண்டு பேர் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தார்கள்.

வேலம்மா இரண்டு கைகளையும் இடுப்பில் ஊன்றிக் கொண்டு ''ஏன் அப்படிப் பார்க்கிறே? தலைமுறை, தலைமுறையாச் சிலை செய்த எங்க குடும்பம் இருக்கும் போது இங்கே ஏன் ஐயா வந்தே? பெரியவர் மனசை நோக அடிச்ச பாவம் உன்னை விடுமா?'' என்று கேட்டாள்.

''இதோ, பாரு! நான் இந்தத் தொழிலைக் கற்றுக்கிட்டேன். செய்யறேன். உங்கப்பாவின் மனத்தை நோகச் செய்யணும்கிற நோக்கம் எனக்கு இல்லே. அவர் ஓய்ந்த கிழவர். ஐம்பது வருஷமா, தொழிலே நடத்திட்டாரு. இனிமேல் சின்னவங்க பிழைக்கணும்னு விட்டுக் கொடுக்கலாம் அல்லவா?'' — பாலசுந்தரம் அமைதியாகக் கேட்டான்.

வேலம்மா சீறினாள்: ''என்ன, எங்கப்பா தொழிலா நடத்தினாரு? கல்லை யெல்லாம் கடவுளா ஆக்கினாரு. அவரா ஓய்ந்த கிழவரு? நீயும் சாமி செய்யறியே? எங்கப்பா செய்யறதுக்குக் காலிலே கட்டி அடிக்கணும்!'' ஆத்திரத்தில் வேலம்மா சொற்களைக் கொட்டி விட்டாளே ஒழிய, பாலசுந்தரம் செய்த சிலைக்குத்தான் என்ன குறைச்சல்? அழகு சொட்டுகிறது! அவள் மனத்தில் இப்படி ஓர் எண்ணமும் தலைதூக்கியது.

மறுநாள் முன்னிரவு. காற்று வீசியது. உயர்ந்த தென்னை மரங்கள் ஆட்டமாய் ஆடின. பாலசுந்தரத்தின் மனம் அலை பாய்ந்தது. அன்று ஷண்முகநாதன் கண்கள் திறக்கப்பட்டன. ஆனால் முகம் பயங்கரமாகி விட்டது. ஏற்றத் தாழ்வான விழிகள். கருணை பொங்க வேண்டிய கண்களில் கனல் வீசியது. சிவபெருமானுடைய நெற்றிக் கண்ணைப் போல் இருந்தது.

பாலசுந்தரத்தின் மனத்தில் இனம் தெரியாத சங்கடம். கோவில்காரர்கள் வந்து பார்த்தால் இந்தச் சிலையை ஒத்துக் கொள்ள மாட்டார்களே! நேற்று வரையில் எழில் பொங்கி வழிந்த சிலையில், இன்று இப்படிப்பட்ட அவலக்ஷணமா? உளியை வீசி எறிந்தான். கையைத் தேய்த்துக் கொண்டான். தன்னை மறந்து தனக்குத்தானே பேசினான்.

''முருகன் சிலையா, பத்ரகாளி உருவமா?'' என்ற குரலைக் கேட்டதும் திடுக்கிட்டான். வேலம்மா ஏளனச் சிரிப்புடன் அலட்சியமாக நின்றாள். பாலசுந்தரத்தின் உடல் அவமானத்தினால் குன்றியது.

''நேற்று வரையில் அழகாய்த்தான் இருந்தது. நீ கொடுத்த சாபந்தான் இப்படி ஆகி விட்டது.''

அவன் பேச்சில் இருந்த வேதனையும், குறையும்.... வேலம்மாவின் மனமே கரைந்தது. பாலசுந்தரத்தின் வெற்றியில் தனக்கும் பங்கு உண்டு என்ற உணர்வு முதன் முதலாக ஏற்பட்டது. ஒருவர் கஷ்டப்படும் போது குத்திக் காட்டலாகாது என்று நொண்டிச் சமாதானம் செய்து கொண்டாள். ஆனால் தன் மனம் மாறுகிறது என்பதை அவளால் ஏற்க முடியவில்லை. ''கோவிலில் சிலையைக் கொண்டு வைக்க இன்னும் எவ்வளவு நாள் இருக்கு?''

''இன்னும் ஒரு பொறையில் வைக்கணும். ஏன் நீ செய்து கொடுத்துவிடுவியோ?'' என்று சற்று ஏளனமாகவே கேட்டான் பாலசுந்தரம்.

''ஆமாம். நீங்க நல்லா செய்வதற்கு உதவியாக இருப்பேன்.''

"சாபம் கொடுக்க மாட்டேல்ல? அதுவே போதும்."

"நடக்கிற வேலையைப் பாருங்க. அதோ ஒரு கல்லு தெரியுதே. அதை இப்பவே இந்த நிலவிலேயே செதுக்க ஆரம்பியுங்க."

பாலசுந்தரம் அந்தக் கட்டளைக்குக் கீழ்ப் படிவது போல உளியை எடுத்துக் கொண்டு போய்க் கல்லின் மேல் உட்கார்ந்தான்.

**ப**ன்னிரண்டு நாட்கள் ஓடின. பாலசுந்தரம் இரவு தூக்கத்தைத் துறந்தான். சாப்பாட்டை மறந்தான். கல் செதுக்கும் சத்தம்தான்.

வேலம்மா இரண்டு வேளையும் வந்து பாலசுந்தரம் வேலை செய்வதையே உற்றுப் பார்த்துக் கொண்டிருப்பாள். பாலசுந்தரத்துக்கு வேலம்மா நின்று பார்ப்பதே யானை பலமாக இருக்கும்.

பதிமூன்றாம் நாள் இரவு. சிலை முடிந்து விட்டது. இரவு இருள் கவிந்து கொண்டிருந்தது. அதனிடையே கருங்கல்லே வெண்கல்லாக ஆகி அதிலே முருகனின் திரு உருவம். அழகெல்லாம் உருவெடுத்து வந்தது போல் இருந்தது. "வேலம்மா, நாளைக் காலையிலே கண் திறக்கப் போகிறேன். நீ வந்து பாரு."

"ஆமா. நாளைக்கு நிறைஞ்ச நாளு. அமாவாசை. தேங்காய் உடைக்க, கற்பூரம் ஏத்திப் பூசை செய்து சாமியின் கண்களைத் திற. 'உங்க அந்தக் கருணைக் கண்கள் உலகத்தை யெல்லாம் காப்பாத்தணும்'னு வேண்டிக்குங்க."

"வேலம்மா! அதெல்லாம் எனக்கு நம்பிக்கை யில்லே. கல் கொத்தர்கள் முன் காலத்தில் கண் திறக்கணும்னு ரூபாயை வாங்கிச் சாப்பிடுவார்கள்! இந்த மூடப் பழக்கமெல்லாம் எனக்குப் பிடிக்காது."

"என்ன சொல்றீங்க? அன்று பூசை செய்யாமல் கண் திறந்ததினுல்தான் சிலையே பாழாய்ப் போயிடுச்சு."

பாலசுந்தரத்துக்கு ஒரு நிமிஷம் அது உண்மையாகத் தோன்றியது. ஆனால் அதை மீறி ஆணவம் தலை எடுத்து மறுத்தது. "நான் அவசரப்பட்டுச் செய்துட்டேன். சின்ன உளி வைத்து இலேசாகத் தட்டி விருக்கணும். இந்தத் தடவை பாரு. பூசையும் வேண்டாம். இப்ப அது கல்தானே? கோவில்லே வைத்தால்த் தானே தெய்வம்?" என்றான்.

வேலம்மாளுக்குத் தூக்கிவாரிப் போட்டது. பெரியசாமி சிலையைச் செதுக்கும் போதே எவ்வளவு பக்தியாகச் செய்வான்? அந்தச் சூழ்நிலையில் வளர்ந்த அவளுக்குப் பாலசுந்தரத்தின் பேச்சு வேம்பாக இருந்தது. வேலம்மாவுக்கு இரவு முழுதும் தூக்கம் பிடிக்காமல் புரண்டு புரண்டு படுத்தாள்.

மறு நாள் பகல் வேலம்மா அவனுடன் முருகன் சிலையைப் பார்க்கப் பாலசுந்தரத்தின் வீட்டுக்கு ஓடினாள்.

"வேலம்மா! எவ்வளவு அழகா இந்தச் சிலை அமைந்து விட்டது!" என்று பெருமிதத்தோடு சொன்னான் பாலசுந்தரம்.

"ஆமாங்க. எல்லையற்ற அழகுதான். வேல் முருகன் வீரனல்லவா? கம்பீரமாக இருக்கிறான்."

"வேலம்மா, எனக்கு ஓர் ஆசை. உங்கப்பாவை இன்று பார்த்து ஆசீர் வாதம் வாங்கிக்கணும். எவ்வளவு பெரியவங்க?"

"இத்தனை நாட்களும் இல்லாத திருநாளாக இன்றைக்கு அவர் உங்களுக்குப் பெரியவங்களாகத் தோன்றக் காரணம் என்ன?"

"அது அந்த ஆண்டவனுக்குத்தான் தெரியும்."

ஆணவம் ஒலிக்கப் பேசியவனுக்கு ஆண்டவன் நினைப்பா? வியந்தாள் வேலம்மா.

"வீட்டுக்கு வாங்க. அவரைப் பார்க்கலாம்" என்று அழைத்துச் சென்றாள்.

"அப்பா, அவங்க வந்திருக்காங்க."

"யாரம்மா?"

"அவங்கதான்." — சொல்லாமல் சொல்லிப் புரிய வைத்தாள் வேலம்மா.

"வா, அப்பா! நீதான் பாலசுந்தரமா? முருகன் சிலை முடிந்து விட்டதா?"

பெரியவர் குரலில் இருந்த கனிவு அவன் மனத்தை உருக்கியது.

"ஆமாங்க. எல்லாம் உங்க ஆசீர்வாதம்தான். உங்க வீட்டிலே இருக்கிற உயிர்ச் சிலைதான் அந்தச் சிலையை வடிக்க உதவி செய்தது. சிலையின் கண் திறந்த நேரத்திலே என் கண்களும் திறந்து கொண்டன."

பெரியவர் சிரித்தார். வேலம்மா விழித்தாள்.

"கஷ்டப்பட்டுச் செய்த சிலை பாழாகி விடப் போகிறதே என்று உங்கள் மகள் செய்த பூசைதான்...."

"முருகன் கண்ணைத் திறந்ததாக்கும்!"

"ஆமாங்க. அவள் தவறாமல் என் வீட்டுக்கு வருவதைப் பின்னாலே தொடர்ந்து தொடர்ந்து வந்து வந்து பார்த்துக் கொண்டிருந்த நீங்க எல்லாவற்றையும் புரிஞ்சுக்கிட்டீங்க."

"அதனாலே என் கண் திறந்து கொண்டது! இதைத்தானே சொல்லப் போறே?"

"நீங்க எங்க இரண்டு பேருக்குமே தெரியாம, உங்க ராசிக் கையால் உங்க ராசிக் கையாலே......" என்று சொன்னதையே சொல்லி வாக்கியத்தை முடிக்க முடியாமல் திண்டாடினான் பாலசுந்தரம்.

"போதும், தம்பி போதும்!" பேச்சை மடக்கி நிறுத்திய பெரியசாமியின் குரல் தழு தழுத்தது.

சில நாட்களுக்குப் பிறகு கலா காமேசுவரி ஆலயத் திருப்பணி முடிந்து, மேள, தாளத்துடன் கும்பாபிஷேகம் நடந்தது.

கும்பாபிஷேகத்தை ஒட்டிய அடுத்த நல்ல வேளையிலே வேலம்மா — பாலசுந்தரத்தின் திருமணமும் விமரிசையோடு நடந்தது. அன்று சிற்பிகளுக்குப் பொன்னுடை போர்த்திக் கௌரவிக்க வேண்டிய நேரத்திலே மாமனுக்கும் மருமகனுக்கும் போட்டி. "கண்ணைத் திறந்தவன் மருமகன். எனவே, அவனுக்குத்தான் பொன்னுடை போர்த்த வேண்டும்" என்றார் மாமனார். மருமகனோ, "கண்ணைத் திறந்தவர் மாமனார்தான். அவருக்குத்தான் பொன்னுடை போர்த்த வேண்டும்!" என்றான்.

இருவர் கண்களையும் திறந்த கடவுள் கனிவு மலர்ந்த கண்களோடு, 'கல்லு மெருகு தட்டுவதில்லை. கல்லச் சிற்பங்களைச் சமைப் பவனும் இறைவனுக முடியாது' என்பது போல் முறுவலித்துக் கொண்டிருந்தார்.












# இதோ! டினோபால் புதிய டப்பி நீங்கள் தான் திறக்கலாம்!

டினோபால்—இப்பொழுது கண்ணைக் கவரும் புதிய வண்ண டப்பியில் எங்கும் கிடைக்கிறது!

இந்தப் புதிய அலுமினிய டப்பியை நீங்கள் தான் திறக்கலாம் என்று பிரத்தியேக முறையில் அமைந்துள்ளது.

**வெள்ளைத் துணிகளை மிக வெண்மையாக்க ஒரு சிறிதளவு டினோபால் போதுமானது.**




உபயோகக் குறிப்புக்கு உள்ளே பாருங்கள்.









REGD. TRADE MARK

"சங்கு" மார்க்

கைலி

மற்றும்

சோளி, ஷர்ட்டிங்

கைகுட்டைகள்

உழைப்பில் உயர்ந்தவை



தந்தி: PALAYAKATCO

போன்: 23040

மதராஸ் பளயகாட் கம்பெனி (பிரைவேட்) லிட்.

31, அரண்மனைக்காரத் தெரு - - மதராஸ்-1

CHARI




அனைவருக்கும் எமது தீபாவளி வாழ்த்துக்கள்!

ராதா கோர் ட்ரில்

பல நீர்ப்பாசன திட்டங்களுக்கு
சப்ளை செய்திருக்கிறோம்

பழுது பார்த்தல், மேற்பார்வை
ஏற்றுக் கொள்ளுகிறோம்



தயாரிப்பவர்கள்:

ராதா இண்டஸ்ட்ரீஸ்

கோயமுத்தூர்-12

# RADHA KRISHNA MILLS LIMITED

**PEELAMEDU - COIMBATORE-4**



Manufacturers of

## HIGH QUALITY COTTON
AND
## STAPLE FIBRE YARNS



Counts spun

COTTON YARN - $20^s$ to $100^s$
(Carded & Combed)

STAPLE FIBRE YARN - $20^s$ to $40^s$



Our popular varieties of cloth

**RK 7003 & RK 9003 Mulls & S 42 Longcloth**

யாவரும் விரும்புவது

**மணத்திலும் குணத்திலும் நிகரற்ற**

வி.எஸ்.அண்டு சன்ஸ்

**பெப்பர்மெண்டுகளே !**



சுத்தமானவை! சுவை மிக்கவை!

சத்து நிறைந்தவை! சக்தியுடையவை!

தயாரிப்பாளர்கள்:

**தென்னிந்திய பெப்பர்மெண்ட் தொழிற்சாலை**

ஸ்தாபிதம் 1925 கும்பகோணம்

சென்னை விற்பனை டெப்போ:

2/121, ஆதியப்ப நாயக்கன் தெரு, சென்னை-1

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10 Managing Editor T. Sadasivam.

# பாண்டி நாட்டுச் சிற்பங்கள்

சந்தனப் பொதியச் செந்தமிழ் வரையும்
சவுந்தர பாண்டியன் எனுந் தமிழ் நாடனும்
சங்கப் புலவரும் தழைத்தினிதிருக்கும்
மங்கலப் பாண்டி வள நாடென்ப"

என்று பாண்டிய நாட்டை மங்கலமும் பெருமையும் நிறைந்ததாக வருணித்து மகிழ்ந்திருக்கிறார்கள் பழம் புலவர்கள். பாண்டி நாடு மங்கலமும், பெருமையும், தவிரப் பழைமையும் உடையதென்பதைப் 'பாண்டி நாடே பழம் பதியாகும்' என்ற இலக்கியத் தொடர் விளக்குகிறது. சந்தனப் பொதியவரையும் சவுந்தர பாண்டியனும், சங்கப் புலவரும் இருந்த பெருமையெல்லாம் பாண்டி நாட்டின் பழம் பெருமைகள் — இன்றும், என்றும் நிலவுகிற பெருமையாயிருப்பவை பாண்டி நாட்டுத் திருக் கோவில்களின் சிற்பங்களேயாகும். மதுரை, திருப்பரங்குன்றம் ஆகிய திருக் கோயிற் சிற்பங்கள் சிலவற்றை இங்கு வரைந்தளித்துப் பாண்டி நாட்டுச் சிற்பக்கலைக்குப் புகழ் கூட்டுகிறார் ஓவியர் மணியம். புகழும் பெருமையும் வாய்ந்த பாண்டி நாட்டுக் கலைத் திறனைத் தம்முடைய கைத்திறனால் அற்புதமான ஓவியங்களாக ஆக்கியளித்துள்ள மணியம் அவர்களுக்கு இங்கு வரும் இந்தச் சிலைகளும் வாயிருந்தால் பாண்டி நாட்டின் சார்பில் நன்றி கூறும்.

## 1. பிள்ளையார் பிறக்கிறார்

எந்தக் காரியமும் பிள்ளையார் சுழியோடு பிறப்பது தமிழகத்து மரபு. அந்தப் பிள்ளையார் எப்படிப் பிறந்தார் என்பதையே முகப்புச் சிற்பமாகக் கொண்டுதான் இந்தச் சித்திர மடலே பிறக்கிறது. மதுரை மீனாட்சிசுந்தரர் திருக்கோயில் கொடிமரத்தின் அருகே உள்ள விநாயகர் பிறப்பைச் சித்திரிக்கும் இந்த அழகிய சிற்பங்களோடு பாண்டி நாட்டுச் சிற்ப சித்திர மடல் ஆரம்பமாவது, தானே நேர்ந்து விட்ட மங்கலப் பொருத்தங்களில் ஒன்றாக வாய்த்து விட்டது.

## 2. அன்னபூரணி

மதுரைக்கு அருகில் உள்ள திருப்பரங்குன்றம் கோவிலுக்குச் சென்றிருப்பவர்கள் அங்கு அர்த்தமண்டபத்திலிருந்து மேற்குப்புறம் கீழிறங்கும் படியருகில் உள்ள குகையில் அன்னபூரணியின் சிற்பம் இருப்பதை அறிவார்கள். இதேபோல் கீழ்ப்புறம் கீழிறங்கும் படியருகிலும் ஒரு குகை இருக்கிறது. வழிகளின் இருபுறமும் அண்டராபரணர், பராசரர், வேதவியாசர் முதலியோரின் சிற்பங்கள் உள்ளன. இருபுறத்துக் குகைகளில் — இடதுபுறத்துக் குகையில் அன்னபூரணி சிற்பமும் — பிறவற்றில் குழல் இசைக்கும் பூதகணங்களும் — பார்வதி கோ பூசை செய்யும் சிற்பமும் சந்தியா தாண்டவமும் காணப்படுகின்றன.

அன்னபூரணி சிற்பத்தைக் கோவிலில் மகேசுவரி, புவனேசுவரி என்னும் மற்றப் பெயர்களினாலும் அழைத்து வருகிறார்கள். அன்னபூரணியை நடுநாயகமாகக் கொண்ட குகைச் சிற்பங்களை ஒரு கண்ணுக்கினிய பெருங் காட்சியாக வரைந்தளித்திருக்கிறார் ஓவியர் மணியம்.

## 3. பிள்ளைத் தமிழுக்குப் பரிசு

மதுரை மீனாட்சி சுந்தரர் திருக்கோயிலில் ஆறு கால் மண்டபம் என்ற பெயரில் ஒரு மண்டபம் இருக்கிறது. இந்தப் பெருமை பெற்ற மண்டபத்தில்தான் சில நூறாண்டுகளுக்கு முன் திருமலை நாயக்கர் முன்னிலையில் குமரகுருபர சுவாமிகள், மீனாட்சியம்மை பேரில் தாம் இயற்றிய பிள்ளைத் தமிழை அரங்கேற்றினார். ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பருவமாகப் பிள்ளைத் தமிழ்ப் பாடல்களைக் குமரகுருபரர் பாடி அரங்கேற்றிக் கொண்டிருக்கையில் ஆறுவது நாள் வருகைப் பருவத்தைப் பாடும் போது ஓர் அதிசயம் நிகழ்ந்தது. திடீரென்று இருந்தாற் போலிருந்து நடு அவையில், சந்நிதிக்குள்ளிருந்து புறப்பட்டு வந்த தெய்வீகப் பெண் குழந்தை ஒன்று திருமலை நாயக்கரின் மடியில் அமர்ந்து பாடல்களைக் கேட்டு இரசித்துக் கொண்டிருந்தது. குமரகுருபரர் வருகைப் பருவத்தின் சிறந்த பாடலாகிய, "தொடுக்கும் கடவுட் பழம் பாடல் தொடையின் பயனே" என்ற பாடலை மனமுருகிப் பாடிய போது, நாயக்கர் கழுத்திலிருந்த விலை மதிப்பற்ற முத்து மாலையைக் கழற்றிச் சென்று குமரகுருபரருடைய கழுத்தில் அணிவித்து விட்டுப் புன்னகை பூத்த முகத்துடன் சந்நிதிக்குள் சென்று மறைந்தது அந்தத் தெய்வீகக் குழந்தை. மீனாட்சியம்மையே குழந்தையாக வந்து குமரகுருபரருக்குப் பரிசளித்த அந்த விந்தைக் காட்சியையே இங்கு ஓவியமாகக் காண்கிறோம்.





# குளக்கரைப் பேச்சு

தண்ணீர்க் குடமெடுத்துத்
தளுக்கு நடைநடந்து
எண்ணத்தைக் கொள்ளையிடும் கள்ளியே - நீ
என்னத்தை எண்ணுகிறாய்-செல்வியே
"என்னென்னமோ பேசிவிட்டு
இன்முகத்தைக் காட்டிவிட்டு
கன்னத்தைத் தொட்டுவிட்டு அண்ணியே - அவர்
கருத்தைக்கவர்ந்து போனார் - மதனியே."

தமிழகத்துத் தீர்த்தக் கரைகளிலே சாதாரணமாகக் காணக் கிடக்கும் மனோரம்மியமானதொரு காட்சியையே ஓவியர் இங்கே சித்திரித்திருக்கிறார்.

பெண்கள் இத்தகைய இடங்களில்தான் மனம் விட்டுப் பேசுவார்கள். ஆசை, அபிலாஷைகளை, இனிய கனவுகளை ஒருவருக்கொருவர் கூறிப் பரிமாறிக்கொண்டு மண்ணுலகத்திலிருந்து கொண்டே, கந்தர்வ லோக இன்பங்களைத் துய்ப்பார்கள். சில சமயம் இப் பேச்சுக்கள் கூடலைப் பற்றி இருக்கும்; வேறு சில சமயங்களில் ஊடலைப்பற்றியும் இருக்கும். இரண்டுமே இன்பம் பயப்பவைதான்.

இந்த இளங் காரிகைகள் என்ன பேசிக்கொள்வார்கள் என்று நினைத்துப் பார்ப்பதில், கற்பனை செய்வதில் நமக்கும் ஓர் இன்பம் இருக்கிறதல்லவா?

## வெளுத்துக் கட்டுதல்!




"'என்ன சிஷ்யர்களோ, உருப்படியா ஒரு வேஷ்டி தோய்க்கத் தெரியல்லே'ன்னு அலுத்துப்பியே; பழைய சிஷ்யன் முத்தண்ணு வந்திருக்கான் பாரு. பட்டணத்திலே லாண்டிரி வச்சு வெளுத்துக் கட்டிண்டிருக்கான்!"



FOUNDER LATE SRI T.S. RAJAGOPALA IYENGAR

T. S. R. & CO.,

KUMBAKONAM · S. INDIA

# வண்ணத்தியே! வாழி! வாழி!

வண்ண வண்ண சேலைகட்டி
வானமண்டலம் சுற்றிவந்து
வண்ணமலரைக் கன்னமிடும்
வண்ணத்தியே! வாழி! வாழி!

ஊரெலாம் நீ சுற்றுகையில் — என்
உள்ளம்கொண்டு போனவரை
பார்த்ததுண்டோ சொல்லடிலே — பரம
ரகசியமாய்க் கூறடியே!

இயற்கையின் படைப்பிலே மனம் மிக மிக விந்தையான பொருள். அதிலும் காதல் உள்ளம் இருக்கிறதே. அதன் போக்கை யாராலும் கண்டுபிடித்துச் சொல்ல முடியாது.

சாதாரண நிலையில் அது அஃறிணைப் பொருள் என்று தோன்றலாம். ஆனால் காதல் வசப்பட்ட நிலையில் அந்த அஃறிணைப் பொருளுடன் உயிர்த் தோழமையும் உறவும் கொண்டாடுவார்கள்.

இதோ பாருங்கள். ஒரு வண்ணாத்துப் பூச்சி ஒரு மலருடன் விளையாடுவதைப் பார்த்தவுடன், அவளுக்குத் தன் காதலன் நினைவு வந்துவிட்டது.

அந்நிலையில் அம்மங்கை அந்த வண்ணாத்தியுடன் எப்படிக் கெஞ்சுகிறாள், பாருங்கள்.

இளம் கன்று பயமறியாது என்பார்கள். காதல் உள்ளம் எதையுமே அறியாது போலும்!

கல்கி தீபாவளி மலர் [illegible]

# மகாவீர சரிதம்

## 2500 ஆண்டுகளுக்கு முன்னால்.....

**ப**ழைமையும் பெருமையும் பெற்ற பாரத நாட்டிலே ஒரு பெரிய புரட்சி உருவாகிக் கொண்டிருந்தது. அது அரசியல் புரட்சியல்ல. ஆத்மீகத் துறையிலே ஏற்பட்ட புரட்சி. துலக்காத பாத்திரமாக விளங்கிய இந்து சமுதாயத்திலே படிந்துள்ள அழுக்கைக் கண்டு முகம் சுளித்து வேறு பாத்திரத்தை நாடி ஓடினார்கள் மக்கள். கடைத் தெருவுக்குள் நுழையும் மக்களைத் தங்கள் வாடிக்கைக்காரர்களாக்க முயலும் வியாபாரியைப் போல, வேட்கை கொண்ட மக்களின் கருத்தைத் தங்கள் தங்கள் பக்கமாக இழுத்துக் கொள்ள முயன்றார்கள் சில பெரியோர்கள். இவர்கள் கல்வி கேள்விகளில் வல்லவர்களாகவும் பொது மக்களின் அன்புக்குப் பாத்திரமானவர்களாகவும் நெடுங் காலமாகத் துறவறம் பூண்டவர்களாகவும் அனுபவத்திலே முதிர்ந்து வயதிலே பழுத்தவர்களாகவும் விளங்கினார்கள்.

பெரிய ஆலமரத்திலிருந்து கிளம்பித் தழைத்த விழுதுகள் நெடுந்தூரத்துக்கப்பால் தரையில் வேரூன்றித் தனி மரமாகத் தலை நிமிர்ந்து நிற்பது போல் இந்து மதத்திலிருந்து அதன் கொள்கைகளையே, நியதிகளையே, நெறி முறைகளையே அடிப்படையாகக் கொண்டு பல புதிய மதங்கள் தோன்றின. உடலும் உருவமும் ஒன்றானாலும், உடையாலும் உள்ளத்தாலும் மாறுபட்டிருக்கும் மானிடர்களைப் போலவே இந்தப் புதிய மதங்கள் விளங்கின. அவைகளில் முக்கியமானது பௌத்த மதம். பிறந்த நாட்டிலே வேரூன்றி நிற்க முடியாவிட்டாலும் இன்று வரை நிலைத்து நிற்கும் பெருமையும் வலிமையும் கொண்டதாக விளங்குகிறது பௌத்த மதம். அன்று தோன்றிய அந்த ஆத்மீகத் துறைப் புரட்சியிலே தோன்றியது பௌத்த மதம் ஒன்றுதானா? இல்லை. இன்னும் எத்தனை எத்தனையோ புதிய மதங்களெல்லாம் தோன்றின — தோட்டக்காரரின் கண்காணிப்பில்லாத நிலத்திலே வளரும் குத்துச் செடிகளைப் போல. ஆனால் அவையெல்லாம் நிலைத்து நிற்க வில்லை.

பௌத்த மதத்துக்கு அடுத்தபடியாகப் புகழுக்கும் பெருமைக்கும் உரியதாக விளங்குவது ஜைன மதம். சைவத்துக்குச் சரி நிகராக நின்று வாதிட்ட பெருமை சமணத்துக்கு உண்டே! நீண்ட நாள் வரையில் மேல் நாட்டினர் பௌத்தமும் சமணமும் ஒன்றே என்ற நினைப்பிலிருந்தார்கள். கௌதம புத்தர், வர்த்தமானர் இவர்களின் வாழ்க்கைச் சரித்திரத்திலே காணும் ஒற்றுமையும் சில பெயர்க் குழப்பங்களுமே அவர்களின் இந்தத் தவறான முடிவுக்குக் காரணமாக இருந்தன.

கௌதம புத்தரைவிட வயதில் மூத்தவர் மகாவீரர். புத்தரின் காலத்திலே வாழ்ந்து புத்தருக்கு முன்னால் இவ்வுலகை நீத்தவர் மகாவீரர். கௌதமர் போதித்த கொள்கைகளும், வர்த்தமான மகாவீரரின் உபதேசங்களும் ஏறத்தாழ ஒன்றுதான்.

'நல்லறிவு, நற்கொள்கை, நன்னெறி இவையே மோட்சத்துக்கான வழிகள். நாம் முந்தையக் கருமத்தின் பயனை அநுபவித்து முக்தியடைய துன்பங்களைப் பொறுத்துக் கொள்ள வேண்டும்'' என்பது மகாவீரரின் கருத்து. மக்களிடமிருந்து, இன்பங்களிலிருந்து விலகி வாழ்ந்து வரலானார் அவர். வெயில், மழை, பனி, காற்று எதையும் பொருட்படுத்துவதில்லை, இச்சையே இல்லாதவராக மாதக் கணக்கில் உண்ணா நோன்பு இருந்தார். உடலில் ஏற்படும் நமைச்சலுக்குச் சொறிந்தால் அதில் ஊர்கிற ஜீவன்கள் இறந்து விடுமோ என்று பேசாமல் இருப்பார். உடலில் உள்ள பேனும் பூச்சியும் செத்து விடுமோ என்று குளிப்பதுகூட இல்லை. இப்படி மெய்ஞ்ஞானத்தை நாடிப் புறப்பட்ட பதின்மூன்றும் ஆண்டில் வைகாசி மாதத்து சுக்ில பட்ச தசமியன்று, உத்தரபல்குனி நன்னாளில் ஆலமரம் ஒன்றின் கீழ் அமர்ந்தார். அது ராஜுபாலிகா என்ற ஆற்றின் வடகரையில் சியாமகன் என்ற ஒரு சம்சாரியின் வயலில் இருந்தது. இரண்டரை நாட்கள் தண்ணீர்கூட அருந்தாமல் உபவாசம் இருந்தபின் 'கேவல ஞானம் அடையாமல் இந்த இடத்தை விட்டு எழுந்திருப்பதில்லை' என்ற உறுதியுடன் அந்த மரத்தடியில் தியானத்தில் ஆழ்ந்தார்.

அவர் எண்ணம் சித்தியாயிற்று. முக்காலமும் அறியும் ஆற்றலைப் பெற்றார். மகா வீரர் ஆனார். வர்த்தமான மகாவீரரின் வாழ்க்கையையே பின்வரும் பக்கங்களில் படங்களாகச் சித்திரித்துக் காட்டியிருக்கிறார் ஓவியர் 'ஸாமி' அவர்கள்.



## கானகம் காதலருக்கே!

மனிதனுக்கு ஐம்பது வயதானதும் அவன் சப்தம் நிறைந்த இந்த உலகத்தை விட்டு விட்டுக் கானகத்துக்குத் தனிமையை நாடிப் போய்விட வேண்டும் என்று நூலில் எழுதப்பட்டிருக்கிறது. ஆனால் கவிஞனோ கானக வாழ்வு இளம் பருவத்தினருக்கு மட்டுமே என்று பறைசாற்றுகிறான். ஏனெனில் அது மலர்களின் பிறப்பிடம்; பறவைகளும் தேனீக்களும் வட்டமிடும் இடம். அங்குள்ள மறைவிடங்கள், காதலர்களின் ரகசியங்களைக் கேட்டுச் சிலிர்க்கக் காத்திருக்கின்றன. மாலதி மலர்களை முத்தமிடுகிற நிலவொளியில் ஓர் ஆழமான செய்தி அடங்கியிருக்கிறது: ஆனால் அந்தச் செய்தியைப் புரிந்து கொள்ளக் கூடியவர்கள் ஐம்பதை விட மிகக் குறைவான வயதுடையவர்களே!

அந்தோ! இளமை அனுபவமிக்கதாக இருக்க முடியாதே! அது பிடிவாதத்துடன் நினைத்ததைச் செய்யும் மனப் போக்குக் கொண்டதாயிற்றே! அதனால் வயதானவர்களே குடும்பப் பொறுப்பை ஏற்றுக் கொண்டு விடுவதுதான் நல்லது; இளம் பருவத்தினர் கானக நிழல்களின் தனிமையை நாடி (தவ விரத வாழ்க்கையைப் போல்) காதலுக்குண்டான கடுமையான கட்டுப்பாடுகளை மேற்கொள்வதுதான் பொருத்தம்!

— கவி ரவீந்திரநாத் தாகூர்



# மாதவியின் கடிதம்

தமிழ் இலக்கியத்தில் உள்ள பிரசித்தி பெற்ற கடிதங்களில் சிலப்பதிகாரக் காப்பியத்தில் மாதவி கோவலனுக்கு எழுதிய கடிதம் தலைசிறந்தது.

> "அடிகள் முன்னர் யானடி வீழ்ந்தேன்
> வடியாக் கிளவி மனக்கொளல் வேண்டும்"

என்று தொடங்குகிற அந்தக் கடிதத்தைத் தன் ஆருயிர்க் காதலனும் கடற்கரையில் வரிப் பாட்டுப் பாடும் போது தன்னைப் பிழையாகப் புரிந்து கொண்டு வெறுத்துப் பிரிந்து போய்விட்டவனு மாகிய கோவலனுக்கு எழுதும்போது மாதவி எத்தகைய சூழலில் எவ்வளவு ஆர்வத்தோடு அமர்ந்து இந்தக் காதல் மடலைத் தீட்டியிருப்பாள் என்பதைத் தமது கற்பனைத் திறனால் இங்கு ஓவியமாக வரைந் திருக்கிறார் விஜயா. இந்தக் கடிதத்தை மதுரைக்கு வழிப் பயணம் போகும் போது கோவலன் அடைந்து படிக்க நேர்கிறது. மாதவியின் மன வேதனை தெரிந்து அவனும் அப்போது மனமுருகுகிறான். இத்தகைய தலைசிறந்த காவியக் கடிதம் உருவாகிற காட்சியையே இங்கு ஓவியக் கடிதமாகக் காண்கிறோம்.

பால் கறக்குமா?




மாட்டுக்காரர்: இந்தா சாமி நல்லாப் பாத்துக்க...

வீட்டுக்காரர்: போவ்.......நான் பாக்கறது இருக்கட்டுமப்பா, நீ மாட்டைப் பாத்தியா?

Registered No. M. 4392
Supplement to the Kalki issue Dated 17-11-1963

Registered as a Newspaper in Ceylon

# முதல் ஸ்தானம்!

பிரயாணிகளுக்கான பஸ்கள், சாமான்களை ஏற்றிச் செல்லும் லாரிகள், விவசாயத்திற்கான டிராக்டர்கள், ரோடு ரோலர்கள் மற்றும் இவை போன்ற அதிக சக்தியைக் கொண்டு இயக்க வேண்டிய எல்லா அவசியங்களுக்கும் உலகப் புகழ் பெற்ற பெர்க்கின்ஸ் டீஸல் என்ஜின்களைத்தான் எல்லோரும் விரும்பி வாங்குகிறார்கள்.

நம்பகம் மிக்க பெர்க்கின்ஸ் டீஸல் என்ஜின்கள் எவ்வளவு கடினமான வேலைகளையும் மிகவும் சுலபமாகச் செய்து முடிக்கின்றன. மேலும் இவற்றின் பராமரிப்புச் செலவும் மிகவும் குறைவு. எண்ணெய்ச் செலவையும் பாதிக்குமேல் குறைத்துவிடுகின்றன.

மற்ற எல்லா என்ஜின்களையும் விட, பெர்க்கின்ஸ் டீஸல் என்ஜின்கள் எந்த வேலையையும் மிகவும் துரிதமாகவும், சிக்கனமாகவும், திறம்படவும் செய்து முடிக்கின்றன.

**பெர்க்கின்ஸ் டீஸல் என்ஜின்களையே வாங்குங்கள்!**
















S-302

இந்தியாவில் தயாரிப்பவர்கள்

## பெர்க்கின்ஸ்

## சிம்ஸன் & கோ. லிட்

மதராஸ்-2

கிளைகள்

பெங்களூர் - உதகமண்டலம் - திருச்சிராப்பள்ளி
செகந்திராபாத்

**பெர்க்கின்ஸ் உயர்தர டீஸல் என்ஜின்கள்**

போக்குவரத்து சாதனங்களுக்கும், விவசாய யந்திரங்களுக்கும் தொழிற்சாலைகளுக்கும் இணையற்றவை

**முக்கிய அம்சங்கள்**

* கண நேரத்தில் இயங்கும்
* மிகவும் நம்பகமான உழைப்பு
* வேகம் குன்றாமல் இயங்கும் தன்மை
* சுலபமாகப் பராமரிப்பதற்கு ஏற்றவை எந்த பாகத்தையும் எளிதில் பழுது பார்க்கலாம்
* நீண்டநாள் சேவை புரிகின்றன
* உபரி பாகங்களும், உற்பத்தியாளர்களின் சேவையும் தாராளமாகக் கிடைக்கும்